கழக வெளியீடு: அசுஅ

எட்டுத்தொகையுள்

ஐந்தாவதாகிய

# பரிபாடல்

மூலமும் உரையும்

உரையாசிரியர் :

பெருமழைப்புலவர்,

திரு. பொ. வே. சோமசுந்தரனார்

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

நம் தண்டமிழ் மொழிக்கண் சங்கமருவிய துங்கநூல்களுள், எட்டுத்தொகைக்கண், ஐந்தாவதாக 'ஓங்கு பரிபாடல்' என உயர்ந்தோரால் உயர்த்திக் கூறப்படுவது, பரிபாடல் எனப் பெயரிய இந்நூல்.

இது, தமிழ்மொழிக்கே சிறப்புரிமையாகப் பெற்ற அகப்பொருள், புறப்பொருள் ஆகிய இருபொருள்களையும் தழுவிப் புலமைச் சான்றோரால் ஆக்கப்பட்ட செவ்விய நூலாகும். இதன்கண் முழுமுதற் கடவுளராகிய திருமாலையும், செவ்வேளாகிய முருகப்பெருமானையும், உலகுபுரந்தூட்டும் உயரிய ஒழுகலாற்றைக்கொண்ட வையைப் பேரியாற்றையும் வாழ்த்துதலாக உட்பொருள்கொண்டு, இடையிடையே நம் தமிழகப் பண்பு அன்பு காதல் வீரம் அறம் காவிய ஓவியத்திறங்களை விளக்கிச் சேறும் பெருமை மிக்கது. அதனால் நம் தமிழ்மாநிலத்துச் சிதைந்தன போக எஞ்சிய பாடல்களேனும் உருவுடன் இன்றுகாறும் நம்மிடையே நின்று நிலவுகின்றன.

இத்தகைய அருமைபெருமை மிக்க நூலைப் பல்லிடங்களினும் சென்றுசென்று துருவித்தேடிக்கொணர்ந்து நூலுருவாக ஆக்கித் தமிழ்கூறு நல்லுலக மக்கள் தமிழ்ப் பரிபாடலைக் கூட்டுண்ண உதவிய பெருமை, டாக்டர், உயர்திரு. உ. வே. சாமிநாதையரவர்கட்கே உரித்து. அவர்கட்குத் தமிழுலகு என்றும் நன்றிகூறும் கடப்பாடுடையது.

பரிபாடலாம் இந்நூலுக்கு முன்னரே பரிமேலழகர் உரையுளது. அவ்வுரை, இடையிடையே சிதைந்தும் எழுத்துருவங்கள் நன்கு தெரியாவாறு பிறழ்ந்தும் உளது. நூலிலும் பல்லிடங்களில் அவ்வாறே உள்ளன. இந்நூல், 'திருமாற் கிருநான்கு' என்று தொடங்கும் பழைய வெண்பா வொன்றினால் எழுபது பாடல்களைக்கொண்டது என்பது தெளிவாகின்றது. கறையானும் செல்லும் மண்ணும் உண்டு சுவைத்தனபோக எச்சமாக இன்றிருப்பன இருபத்திரண்டு பாடல்களும், தொல்

காப்பியச் செய்யுளியலில் மேற்கோளாக உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்ட பாடல்கள் நான்கும், நாற்கவிராச நம்பி அகப்பொருள் நூற்கண் மேற்கோளாகக் காட்டப்பெற்ற பாடல் ஒன்றும், புறத்திரட்டில் நகரென்னும் பகுதியில் உள்ள உறுப்புக்கள் ஆறும் ஆக முப்பத்துமூன்று பாடல்களே உள்ளன.

இதற்குப் பழையவுரையாகிய பரிமேலழகர் உரைகொண்டு தெளிந்து பொருளுணர்தல் கற்றுத்துறைபோய முற்றறிவினோர்க் கன்றிப் பிறரால் நுண்ணிதின் ஆய்ந்து பொருள்கோடல் அருமைப்பாடாகும். ஆதலால், கற்றுங்கேட்டும் தெள்ளிதின் உணரும் புலமைச் செல்வமிக்க நல்லாரொருவரைக்கொண்டு உரைப்பொருட் சுருக்க விளக்கமும், சொல்லுரை கருத்துரை இலக்கணக்குறிப்பு சொற்பொருள் முடிபுகளும் இயைந்தவாக ஒரு நல்லுரை வகுக்க எண்ணினோம். அவ்வெண்ணத்தைக் கற்றுங் கேட்டும் அத்துறையிற் கைபோய பேரறிஞரான பெருமழைப்புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனாரவர்கள் தம் அஃகியகன்ற புலமைத்திறத்தால் எழுதி முற்றுவித்து உதவியுள்ளார்கள்.

இவ்வருமையுரை, கற்றுருங் கற்றுத்துறைபோகும் மாணவமணிகளும், ஆய்புல அறிஞரும், கவிநலங் காணுநரும், தமிழ்க் காதல் தழைக்குமுளத்தரும் கற்றுப் பயன்பெறத்தக்கதாகும்.

இச் சீரிய நூலை, அச்சிட்டு நூலுருவாக்கி அழகிய கட்டடத்துடன் நம் செந்தமிழ்த் திருநாட்டின்கண் உலவிவர நம் கழக வழி வெளியிட்டுள்ளோம்.

கற்றுரும் மற்றுரும் வாங்கிக் கற்று ஆய்புலவாணராக அமைந்து, எம்மையும் இத்தகு மும்மைத் தமிழுக்கு முதன்மைப் பணிபுரியும் நல்லாற்றில் ஊக்குவிப்பார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# அணிந்துரை

*மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ
பணியொரீஇ நின்புகழ் ஏத்தி
அணிநெடுங் குன்றம் பாடுதுந் தொழுதும்
அவை, யாமும்எஞ் சுற்றமும் பரவுதும்
ஏம வைகல் பெறுகயாம் எனவே.*

(பரிபா. ௧௭: ௪௮-௫௩.)

## நூல்

"திருந்து மொழிப் புலவர் அருந்தமிழ் ஆய்ந்த சங்கம் என்னும் துங்கமலி கடலுள் அரிதின் எழுந்த பரிபாட்டமுதம்" எனச் சான்றோராற் புகழப்பெற்ற இப் பரிபாடல், பாட்டும் தொகையும் கீழ்க்கணக்கும் ஆகிய முத்திறத்த பழந் தமிழ்ப் பனுவல்களுள் நடுநின்ற தொகைநூல் எட்டனுள் ஐந்தாவதாக நின்று திகழுமொரு தொகைநூல் ஆகும். தொகை நூல்கள் எ[illegible]ணையும்,

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த எட்டுத் தொகை"

எனவரும் வெண்பாவான் உணரலாம்.

இனி, இவ் வெண்பாவின்கண் "ஓங்கு பரிபாடல்" என உயர்த்தோதப்பட்ட இப் பரிபாடலைப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியனார் தமது ஒப்பற்ற நூலிலே விதந்து கூறியுள்ளவற்றைச் சிறிது காண்பாம்.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர்" (அகத்-சூ. ௫௬.)

என்பது தொல்காப்பிய அகத்திணையியலுள் வருமொரு நூற்பாவாகும். இதன்கண், தமிழ்மொழிக்கே சிறந்துரிமையுடைய அகம் புறம் என்னும் இருவகைப் பொருண்மரபு பற்றிப் பாடுங்கால் அகப்பொருளினை நாடக வழக்கத்தானும் உலகியல் வழக்கத்தானும் பாடுதற்குத் தமிழ்ப்பாக்களுள் வைத்துக் கலிப்

பாவும் பரிபாட்டுமே சாலச் சிறந்தனவாம்; ஏனைய அத்துணைச் சிறப்புடையன அல்ல என்று ஆசிரியர் தொல்காப்பியனார் அறிவுறுத்தினாராதல் தேற்றம். இதன்கண் நாடக வழக்கு என்றதற்கு உரையாசிரியர் இளம்பூரண அடிகளார் :—

"சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது :—செல்வத்தானும் குலத்தானும் ஒழுக்கத்தானும் அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போருமின்றி அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினார் எனவும், பிறவும் இந் நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல்" என நுண்ணிதின் விளக்கங் கூறியுள்ளார்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் கூத்தராவார் அரங்கிழைத்து அதன்கட் பன்னிறத் திரைகளும் வீழ்த்து அவ்வரங்கின்கண் வேடந்தாங்கித் தோன்றி ஒருவர்க்கொருவர் வினவும் விடையுமாய் உரையாடல் நிகழ்த்திக் காண்போரை மகிழ்விக்குமாறுபோல, நல்லிசைப் புலவனும் முதல் கரு என்னும் பொருள்களாலே காலமும் இடனும் ஆகிய அரங்கினைப் படைத்து அவ் வரங்கின்கண் தன் உள்ளத்தே தோன்றிய தலைவன் தலைவி தோழி செவிலி பாங்கன் முதலிய உறுப்பினர்களைக் கொணர்ந்து நிறுத்தித் தன் கூற்றன்றி அவ் வுறுப்பினர் கூற்றாகவே வினவும் செப்புமாய் உரையாடல் நிகழ்வித்து ஓதுவோர் அகக்கண் முன்னர் ஓர் இனிய நாடகக் காட்சியினைத் தோன்றுவித்தலைக் கருதியே நாடக வழக்கு என்றார் எனக் கருதுதல் பிழையாகாது. இங்ஙனம் நாடகமாகக் கூறுதற்குக் கலிப்பாவும் பரிபாடலுமே தகுதியுடைய பாடல்கள் ஆதலும், ஏனைய பாக்கள் தகுதியில்லாதனவாதலும் பின்வரும் எடுத்துக் காட்டால் நுண்ணிதின் உணர்க.

## கலியில் ஒரு நாடகம்

இடம்: முல்லை நிலத்திலேயுள்ள காட்டினூடே ஒரு நடைபாதை.

**காலம்:** பிற்பகற்பொழுது.

**உறுப்பினர்:** ஓர் இடைய மங்கையும், ஓர் இடைய ஆடவனும்.

[அவ் விடைமகள் மோர் விற்றுவிட்டுத் தன் வீடு நோக்கிச் செல்கின்றாள். அவ் விளைஞன் எதிரே வந்து அவளைத் தடுத்து நிறுத்திச் சொல்லாடுகின்றான்.]

இ-மகன்:— இகல்வேந்தன் சேனை இறுத்தவாய் போல
அகலல்குல்தோள் கண்என மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற் காமனும் படைவிடு வனப்பினோடு
அகலாங்கண் அளைமாறி அலமந்து பெயருங்கால்
நகைவல்லேன் யானென்றென் உயிரோடு படைதொட்ட
இகலாட்டி நின்னை எவன்பிழைத்தேன்? எல்லா யான்;

இ-மகள்:— அஃதவலம் அன்று மன!
ஆயர் எமரானால் ஆய்த்தியேம் யாம்மிகக்
காயாம்பூங் கண்ணிக் கருந்துவர் ஆடையை
மேயும் நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோர்
ஆயனை யல்லை பிறவோ அமரருள்
ஞாயிற்றுப் புத்தேள் மகன்?

இ-மகன்:— அதனால் வாய்வாளேன்!
முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரமர் உண்கண்ணும்
நல்லேன்யான் என்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்று கிற்பார்யார்?

இ-மகள்:— சொல்லாதி?

இ-மகன்:— நின்னைத் தகைத்தனேன்.

இ-மகள்:— அல்லல்காண் மன்!
மண்டாத கூறி மழகுழக் காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ
பண்டம் வினாய படிற்றால் தொடீஇயநின்
கொண்டது எவன்?

இ-மகன்:— கொண்டது
அளைமாறிப் பெயர்தருவாய் அறிதியோ அஞ்ஞான்று
தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றயல்
இளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினால் என்னெஞ்சம்
களமாக் கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ?

இ-மகள்:— நின்னெஞ்சம்,
களமாக்கொண் டியாம் ஆளல் எமக்கெவன் எளிதாகும்?
புனத்துளான் எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ?
இனத்துளான் என்னைக்குக் கலத்தொடு செல்வதோ?
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ?

இ-மகன்:— அனைத்தாக,
வெண்ணெய்த் தெழிகேட்கும் அண்மையால் சேய்த்தன்று
அண்ணணித் தூராயின் நன்பகற் போழ்தாயின்
கண்ணுேக்கு ஒழிக்கும் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன் விரைந்துசேறி உதுக்காண்
பிடிதுஞ்சு அன்ன அறைமேல நுங்கின்
தடிகண் புரையும் குறுஞ்சுனை யாடிப்
பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழில் எம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய்நும் ஊர்க்கு ;

இ-மகள்:— இனிச் செல்வேம் யாம்
மாமருண் டன்ன மழைக்கண்சிற் றுய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
ஆமுனியா ஏறுபோல் வைகல் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை
நீஎவன் செய்தி பிறர்க்கு ;
யாம்எவன் செய்து நினக்கு.

இ-மகன்:— கொலையுண்கண் கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி
இனைவனப்பின் மாயோய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி
மலையொடு மார்பமைந்த செல்வன் அடியைத்
தலையினல் தொட்டுற்றேன் சூள் ;

இ-மகள்:— ஆங்கு உணரார் நேர்ப ! அது பொய்ப்பாய் நீயாயின்
தேங்கொள் பொருப்பன் சிறுகுடி எம்ஆயர்
வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணுமல்
காஞ்சித்தா துக்கென்ன தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையுள் நின்பெண்டிர் கேளாமை
ஆம்பற் குழலால் பயிர்பயிர் எம்படப்பைக்
காஞ்சிக்கீழ் செய்தோம் குறி. (முல்லைக்கலி-௩.)

என்பதாம்.

அன்பர்களே ! இந் நாடகத்தினைப் பொருளுணர்ந் தோதுந் திருவுடையார்க்கு இதனினும் சிறந்த இலக்கியவின்பம் கெழுமிய உளக்காட்சி நாடகம் பிறிதொன்றுளதாகக் கருதவும் இயலுமோ? இங்ஙனமே நாடக வழக்காகப் படைத்தற்குக் கலியும் பரிபாட்டுமே தகுந்த பாடல்கள் ஆதற்கு அவற்றின் இசைநலம் கெழுமிய யாப்பமைதியே காரணமாகும். இத்தகைய நாடகம் பல, பரிபாடலின்கண் உள்ளன. அவற்றை நூலின்கட் காண்க

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் பரிபாட்டிற்கு இலக்கணம் கூறுங்கால் அது நால்வகைப் பாவினுள் வெண்பா யாப்பிற்று என்றும், மேலும் அஃது ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி மருட்பா என்றோதப்பட்ட எல்லாப் பாவினுடைய உறுப்புக்களையும் பெற்றுப் பொதுவாய் நிற்கும் என்றும், மேலும் கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்து சொற்சீரடி முடுகியலடி என்னும் கலிப்பா உறுப்புக்களும் அதன்கண் வரும் என்றும், அப் பாடல் காமப் பொருள் பற்றியே வரும் என்றும் பாரித்துக் கூறியுள்ளார்.

இதனால் பரிபாடல் ஏனைப்பாடல்களினுங் காட்டில் வான இசையுரிமையுடைத்தாதல் உணரலாம். இக் காரணத் தானே இப் பரிபாடல் இசைவாணர்களாலே பண்வகுத்துப் பாடப்படுவதும் ஆயிற்று.

ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தே அவர்க்கு இலக்கிய மாக விருந்த பரிபாடல் முழுதும் காமப் பொருள் பற்றியே எழுந்தன என்பது, அவர் பொருள் உரிமை கூறுமிடத்துக் காமம் ஒன்றனையே விதந்தெடுத் தோதுதலால் உணரலாம். இப் பொழுது நமக்குக் கிடைத்துள்ள பரிபாடலிற் பெரும்பகுதி கடவுள்வாழ்த்து என்னும் புறத்துறைபற்றிய பாடல்களே யாதல் காணலாம். இக் கடவுள்வாழ்த்துப் பரிபாடலுக்குப் புறனடையாகவேனும் தொல்காப்பியராலே கூறப்பட்டிலது. ஆனால், உரையாசிரியர்கள் இக் கடவுள் வாழ்த்து பரிபாடற்கண் வருதலை இலேசானே தழுவுகின்றனர்.

இனி, இப் பரிபாடல் தொகை கூறுமிடத்து எழுபது என்று கூறப்படுகின்றது. இதனை,

> "திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
> தொருபாட்டுக் காடுகாட்கு ஒன்று—மருவினிய
> வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
> செய்யபரி பாடல் திறம்."

எனவரும் வெண்பாவானும், இறையனார் களவியலின் முதல் நூற்பா வுரையினும் தொல்காப்பியச் செய்யுளியல் கசகூ-ம் நூற்பாவிற்கு இளம்பூரண அடிகளார் செய்த உரையினும் நூற் றைம்பது கலியும் எழுபது பரிபாட்டும் என வருதலானும் உணரலாம்.

அழிந்தொழிந்தன போக எஞ்சியனவாக இற்றைநாள் நம் கைக்கு எட்டியவை இருபத்திரண்டு பாடல்களேயாகும்.

பழைய உரைகளில் மேற்கோளாகப் பயின்ற இரண்டு முழுப் பாடல்களும் சில உறுப்புக்களும் உள்ளன.

இனி, நமக்குக் கிடைத்துள்ள பாடல்களிலே திருமால் மேலனவும் செவ்வேள் மேலனவும் ஆகிய கச பாடல்கள் கடவுள் வாழ்த்து என்னும் துறைபற்றியே உள்ளன. வையையைப் பாடிய பாடல் எட்டு. இனி, இப் பரிபாடல்களில் பாண்டிய நாட்டகத்தனவாகிய திருப்பதிகளும் யாறுமே பாடப்பட்டிருத்தல் நமது சிந்தனையை ஆராய்ச்சியில் தூண்டுகிறது. என்னை?

வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்துள் வைத்து மதுரையையும், அதன் அணித்தாகிய திருப்பதியையும், யாற்றையுமே இப் பரிபாடல் கூறுவனவாக எஞ்சிய இருமுடிவேந்தர் நாட்டிலுள்ள திருப்பதிகளும் யாறுகளும் இப் பரிபாடல் பெறுமைக்குக் காரணம் யாது?

இனி, எழுபது என்று தொகை கூறப்பட்ட பாடலனைத்தும பாண்டிய நாட்டிற்கே உரியன என்றே ஊகிக்க இடனுளது, இது கொண்டு ஆராயின்.

ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தேயிருந்த பரிபாடல்கள் அனைத்தும் அகப்பொருள் பற்றி எழுந்தனவே என்றும், பிற் காலத்தே பழம்பனுவல்களைச் சான்றோர் திரட்டித் தொகை செய்த காலத்திலேயே அப் பழம்பாடல்கள் அவர்கட்கு அகப் படா தொழிந்தன என்றும், ஆசிரியர் தொல்காப்பியர் காலத் திற்குப் பின்னரே பரிபாடல் இசைப்பாடல்களாகவும் கடவுள் வாழ்த்துப் பாடல்களாகவும் கையாளப்பட்டன என்றும், தொகைநூல் தொகுத்த காலத்தில் மதுரையிலும் அதன் அண்மையினும் வாழ்ந்திருந்த இசைப் புலவரிடமிருந்து அரிதிற் கிடைத்த எழுபது பாடல்கள் மட்டுமே அச் சான்றோர் களாலே தொகுத்து வைக்கப்பட்டன என்றும் நினைத்தற்கு இடன் உண்டு.

இனி, காமம் ஒன்றேபற்றி வரும் எனத் தொல்காப்பிய ரானே உணர்த்தப்பட்ட இப் பரிபாடல், அவ்வுரிப் பொருளினும் சிறந்ததாகக் கடவுள் வாழ்த்தினைத் தழுவிக்கொண்ட காலத்திலே தான், தமிழகத்தே ஒரு புத்துணர்ச்சி தோன்றி மக்களைப் பெரிதும் ஆட்கொண்டதென அறிகின்றோம். அவ் வுணர்ச்சி யாவது :

பண்டைக் காலத்துச் செந்தமிழ்ப் புலவர் அறம் பொருள் இன்பம் என்னும் பொருள் பற்றியே பெரிதும் பாடுதலன்றித் தனியே இறைவனைப்பாடி ஏத்தும் வழக்கம் பெரிதும் உடைய

ரல்லர். மக்கள் நுதலிய காமம் பாடுதலினும் இறைவன்பாற் காதலாகிக் கசிந்துகண்ணீர் மல்கிப் பாடல் ஓதுதல், சாலச் சிறந்ததாம் என்னும் ஒரு புத்துணர்ச்சி அக் காலத்தேதான் தோன்றியது. இவ்வுணர்ச்சியின் தூண்டுதலாலேதான் திருமுருகாற்றுப்படை எழுந்தது. பாரதம் பாடிய பெருந்தேவனாரும் தொகை நூல்கட்குக் கடவுள் வாழ்த்துப் பாடியமைத்தனர். அக் காலத்தைத் தொடர்ந்து நிகழ்ந்த காலத்திலேதான் தமிழகத்தே நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றித் தேவார முதலிய தெய்வப் பாடல்களை இயற்றி இசையினாலே இறைவனை மனமுருக ஏத்திப் பரவாநின்றனர். இவ் வுணர்ச்சி தோன்றிய காலத்திலேயே பரிபாடல் முதன்முதல் கடவுட் பாடலாகவும் கையாளப்பட்டது போலும்.

இனி, இப் பரிபாடலின்கண் பண்டைத் தமிழ்ச் சான்றோர் கொண்டிருந்த கடவுளைப் பற்றிய உயர்ந்த கொள்கை பலவற்றையும் காணலாம்.

'கற்றதனால் ஆய பயன் வாலறிவன் நற்றாள் தொழுதல்' என்ற சீரிய கொள்கையுடைய தமிழ்ச் சான்றோர், இசை கெழுமிய இப் பரிபாடலை அவ் வாலறிவனைத் தொழுதற்குச் சாதனமாக்கிக் கொண்டது சாலவும் பொருந்துவதேயாகும். இப் பரிபாடலின்கண், ஆசிரியர் நல்லழிசியார் என்னும் புலவர் பெருமகன் முருகவேளை வணங்கி "இறைவனே எம்போன்ற மானிடரை அணுகி அணுகி அவர் மனநெகிழும்படி பணிமொழி பற்பல புனைந்து பாடுகின்ற புன்செயலை இனி அறவொழித்து என்றென்றும் நின்னுடைய புகழினையே ஏத்தி ஏத்தி வணங்குவேம். அங்ஙனம் வணங்குதல் தான் எற்றுக் கெனின்? பொன்னும் பொருளும் போகமும் பெறுதல் கருதியன்று. இவையெல்லாம் கனவெனத் தோன்றிக் கணத்திடை அழியும் பொய்ப் பொருள்கள் ஆதலால், அவையிற்றை வேண்டேம்; யாம் வேண்டுவது என்றென்றும் அழியாது நிலைபெறும் பேரின்பமாகிய வீட்டின்பமே. அதனை அருள்க! என்னும் பொருள்பட வரம் வேண்டாநிற்பர். இக் கருத்தினை நாயன்மார்களும் ஆழ்வார்களும் பற்பல இடங்களிலே அருளிச்செய்திருத்தலைக் காணலாம்.

இறைவன் ஒருவனே உளன்; அவன் யாண்டும் எப்பொழுதும் எப் பொருளினகத்தும் இடையறாது உறைபவன்; அங்ஙனமாயினும் பற்றற்ற அப் பரம்பொருளைச் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினேமாகிய யாம் மனத்தால் நினைதற்கும் வாயான் வாழ்த்துதற்கும் அவ் விறைவனுக்குத் திருவுருவும் வரலாறுகளும்

படைத்துக்கொண்டு வழிபடுதலே அவன் திருவருட்கு ஆளாதற்குச் சிறந்த வழியாம் எனக்கண்ட அக் காலத்துச் சான்றோர், மாந்தரைத் திருக்கோயில் வழிபாட்டிற்கு ஊக்குதலை இப் பரிபாடலிலேயே நன்கு காணலாம்.

பாண்டியர் பழங்குடியிற் றோன்றிய நல்லிசைப் புலவரும், ஒப்பற்ற இறையன்புடையோருமாகிய இளம் பெருவழுதியார் திருமாலிருஞ் சோலைமலையின்மிசை எழுந்தருளியிருக்கும் கண்ண பெருமானையும், நம்பிமூத்த பிரானையும், அவர்கள் எழுந்தருளியிருக்கும் திருப்பதியையும் வணங்கும்பொருட்டுப் பரிந்து கூறும் (கரு-ஆம்) பாடல் இறைவன்பா லன்புடையோர் உளத்தை உருக்கும் நலம் வாய்ந்ததாகவுளது. இப் பாடலின்கண் அவர் கூறும் உவமைகளும் பிறவும் ஒப்பற்றன.

"நாறிணர்த்துழாயோன் நல்கின் அல்லதை வீறுபெறு துறக்கம் ஏறுதல் எளிதன்று" அவனருளாலே தான் அவன்றாள் வணங்குதல் வேண்டும். அவன்றாள் வணங்கி அவனருளாலே அரிதிற் பெறும் துறக்கத்தை மாந்தீர்! எளிதிற் பெறவும் ஒரு வழியுளது. அதுதான் யாதென்பீரேல் அப் பெருமான் எழுந்தருளியிருக்கும் இத் திருமாலிருஞ் சோலைமலையை வாய்விட்டுப் பாடி வாழ்த்துவதேயாம். மேலும் அம் மலை, காட்சிக்கும் மிக மிக இனியதாகும். அம் மலையின்மேல் இளவெயில் தன்னைச் சூழ்ந்து சுற்ற இருட்பிழம்பொன்று அதனிடையே உயர்ந்தோங்கி நின்றாற் போல, நீலமேனிப் பெருமான் பொன்னுடை புனைந்து நின்றருளுகின்றான். அக் காட்சியை ஒருமுறை கண்டு பின்னர் இடையறாது சிந்தித்திருமின். மாந்தீர்! அத் திருமாலிருஞ் சோலைமலையிடத்தே சுனையெலாம் நீலோற்பலம் மலர்ந்து திகழும்; அச் சுனையைச் சூழ்ந்து நிற்கும் அசோகும் வேங்கையும் பொன்பூத்து மிளிரும்; ஆதலின், அம் மலைக்காட்சியே திருமாலைக் கண்ணாரக் கண்டாங்குக் கழிபேரின்பம் நல்குங் கண்டீர்! ஆண்டுச் சென்று அம் மலையினைக் கண்டு தொழமாட்டாதீர் தூரிய இடத்தின் நிற்பார்க்குந் தோன்றுமதனை நும் இருக்கையிடத்திருந்தே பணியுங்கள். அதன் புகழ் உலகெலாம் பரவியுளதுகாண்; அம்மலையே பிறவிப்பிணியறுக்குமொரு காட்காணும் கடவுள் கண்டீர். ஆதலால் நும்,

"தைய லவரொடும் தந்தா ரவரொடும்
கைம்மக வோடும் காத லவரொடும்
தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்."

அம் மலைமேலே,

"புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்
வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்
எவ்வயின் உலகத்தும் தோன்றி அவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்
அன்பது மேஎ."

இருந்தான்" என்றருளிச் செய்யும் இத் திருப்பாடலை எத்துணை முறை ஓதினும் எளியேமாகிய எம்முள்ளம் உருகி உருகி ஒழுகுவதனை அநுபவத்தால் யாம் உணர்கின்றேம். இன்னும் இறையன்புடைய திருவுடையோர் இப் பாடலை ஓதுங்கால் எய்தும் இன்பநிலை எற்றோ!

இப் பாடலின் அருமையை உணர்ந்துணர்ந்து சுவைத்து இப் பாடலிலேயே திருமாலைக் கண்ட நம்மாழ்வார், இப் பாடலிற் பயின்ற சொல்லையே பொன்போற் போற்றி மகிழ்வதனைக் கேண்மின்.

பரிபாடலில் "திருமாலிருஞ் சோலைமலையை நினைமின் மாந்திர்! தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்" என்றார் இளம்பெருவழுதியார். இனி நம்மாழ்வார். "திருமாலிருஞ் சோலைமலை என்றேன்; என்னத் திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான். தென்னன் திருமாலிருஞ்சோலைத் திசை கைகூப்பிச் சேர்ந்த யான் இன்னும் போவேனே கொலோ என்கொல் அம்மான் திருவருளே" என்று திருவாய்மலர்ந்தருளினர். இவ்வாற்றால் இப் பரிபாடல் பிற்காலத்தே தோன்றிய வைணவ சைவசமயத் தெய்வ நூல்களுக்கெல்லாம் முதலாக நிற்றலை இன்னும் பற்பல ஒப்புமைகளாலே விளக்கக்கூடும் எனினும் விரிவஞ்சி அமைகின்றாம்.

இனி, சங்க காலத்தே தோன்றிப் பின்னர்ச் சான்றோரால் தொகுக்கப்பட்ட தொகைநூல்கள் எட்டனுள்ளும் இப் பரிபாடல் இறையியல்பு உணர்த்துமாற்றால் மிகமிகச் சிறந்ததொரு நூலாகும் என்பது புனைந்துரையன்று. இப் பரிபாடல் தோன்றிய காலத்தும், அதனைத் தொடர்ந்து நிகழ்ந்த காலத்தும் தமிழ்ச் சான்றோர் உள்ளம், இக் கடவுள் வழிபாட்டின்கண் மிக்குச் சென்ற காரணத்தாலே இறைப்பொருளுக்குப் பல்வேறு வடிவங்களும் வரலாறும் கற்பனைசெய்து வழங்கிவந்த வடமொழிப் புராணகதைகளையும் பிறவற்றையும் தம்முடையனவாகவே மேற்கொண்டுவிட்டனர். அதனால் இப் பரிபாடலின் கண் புராணகதைகள் பெருவரவினவாக வந்து விரவியிருத்தலைக் காண்கின்றோம்; மாந்தர்க்கு நலந்தரும் எப்பொருளும் மேற்கொள்ளற்பாலனவேயாகும்; உருவமும் வரலாறும் மில்லாத

கடவுளை மாந்தர் நினைத்தற்கும் வழுத்துதற்கும் அக் கடவுட் கதைகளும் உருவங்களும் இன்றியமையாதனவே என்பது முக்காலும் உண்மையே; எனினும், இப் பரிபாடலின்கண் புராண கதைகளின் ஊடே ஊடே இப்புலவர் பெருமக்கள் கடவுளியல்பினைத் தாம் உணர்ந்தாங்குப் பாடும் பகுதிகள் சாலச் சிறந்த பகுதிகளாம்; அவற்றை ஓதுங்கால் எற்றோ இவர்தம் அறிவுத் தெளிவென எம்மனோர் இறும்பூது எய்துவர் என்பது திண்ணம்; இறைவனாற் படைக்கப்பட்ட இவ்வுலகப் பொருள்களிலே அவ்விறைவனுடைய கைவண்ணமும் அறிவுவண்ணமும் திகழப்பெறுதலை ஆசிரியர் இளவெயினனார் என்னும் புலவர் பெருமகன் கண்டு கூறும் திறத்தினையும் அவர் கூறும் பிற இறை இயல்புகளையும் எடுத்துக்காட்டாகச் சில கூறுதும்.

"அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயும் நீயேநின் னார்வலர்
தொழுதகை யமைதியின் அமர்ந்தோயும் நீயே
அவரவர் ஏவ லாளனும் நீயே
அவரவர் செய்பொருட் கரணமும் நீயே."

எனவரும் இவ்வடிகள் கடலென விரிந்து ஆழ்ந்த கருத்துடையன ஆகும். "சமயமும் கடந்த சமரச நிலை" எனத் தாயுமான அடிகளார் கூறும் நிலையிலே நின்றன்றோ இளவெயினனார் இவ்வடிகளை ஓதுகின்றார். இக் கருத்துணரின் பின்னர்ச் சமயப் பூசல் இவ்வுலகின்கண் இடம் பெறுதன்றோ!

இனி, இப்புலவர் பெருமான் ஆழ்வாரின் நிலையினின்று திருமாலை இரண்டு பாடலானும் (ங - ச) நாயன்மாராகிச் செவ்வேளை ஒரு பாடலானும் பாடி, மேலே "எவ்வயினோயும் நீயே" என்ற தம் கருத்தை வலியுறுத்துகின்றார்.

இனி, இவர் காட்சிப் பொருளிற் கடவுளியலைக் கண்டு கூறும் அழகு பன்முறையும் பயின்று இன்புறும் பண்புடைத்து. ஒருசில வருமாறு:—

"தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்து நீ
வேதத்து மறைநீ பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியுநீ திங்களுள் அளியும் நீ

அனைத்தும்நீ அனைத்தின்உட் பொருளும்நீ ஆதலின்
உறைவும் உறைவதும் இலையே உண்மையு
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை''

என்றும்,

'' நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின், தண்மையும் சாயலும் திங்கள் உள
நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள
நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள
நின், நாற்றமும் ஒண்மையும் பூவையுள
நின், தோற்றமும் அகலமும் நீரினுள
நின், உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின், வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள
அதனால், இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏமமார்ந்த நிற்பிரிந்து
மேவல் சான்றன எல்லாம்''

என்றும் வரும்.

இனி, இறையியல்பாக இவர் கூறும் கருத்துக்கள் ஏற்ற மிக்கன. அவற்றுட் சில வருமாறு :—

'' கடுநவை அணங்கும் கடுப்பும் நல்கலும்
கொடுமையும் செம்மையும் வெம்மையுந் தண்மையும்
உள்வழி யுடையை இல்வழி இலையே
போற்றார் உயிரினும் போற்றுநர் உயிரினும்
மாற்றே மாற்றல் இலையே நினக்கு
மாற்றோ ரும்இலர் கேளிரும் இலரெனும்
வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே''

என்றும்,

'' மனக்கோள் நினக்கென வடிவுவேறு இலையே''

என்றும்,

'' வேலன் ஏத்தும் வெறியும் உள
அவை வாயும் அல்ல பொய்யும் அல்ல
நீயே வரம்பிற்று இவ்வுலகம் ஆதலின்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை''

என்றும்,

'' சிறப்பினுள் உயர்பாகலும்
பிறப்பினுள் இழிபாகலும்
ஏனோர்நின் வலத்தினதே.''

என்றும் வரும்.

இனி, இப் பரிபாடலின்கண் "வேண்டுங்கால் பிறவாமை வேண்டும்" என்றும், "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாராநெறி" என்றும் திருவள்ளுவனார் அருளிச்செய்ததற் கேற்ப, இப் புலவர் பெருமக்கள் இறைவன் பால் இரந்து கேட்கும் வரங்களும் பெருமைசான்றன. இறைவன் திருமுன்னர் நின்று இறைவனே நின்னை யாங்கள் வழிபடுகின்றேம். ஆதலால், நீ எமக்கின்ன நலங்களைத் தந்தருள், தருவாயேல் யாங்களும் கைம்மாறாக நினக்கு இன்ன தரவல்லேம் என வரங்கேட்டல் பொதுமக்கள் இயல்பு. அவ்வியல்பினையும் உலகியல் வழக்கத்தானே இப் புலவர்கள் பரிபாடலிலே கூறியுள்ளனர். செவ்வேளின் திருப்பரங்குன்றத்தை வழிபட்டு, மகளிர் வரம் வேண்டுதலைக் கேண்மின்,

"கனவிற் றொட்டது கைபிழை யாகாது
நனவிற் சேஎப்ப நின் நளிபுனல் வையை
வருபுனல் அணிக!"

என்றும்,

"கரு வயிறு உறுக"

என்றும்,

"செய்பொருள் வாய்க்க"

என்றும்,

"ஐ அமர் அடுக"

என்றும், இங்ஙனமெல்லாம் யாம் வேண்டுவன விளைப்பாயெனின் யாங்களும்,

"வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்
மணியும் கயிறும் மயிலும் குடாரியும்
பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி"

வந்து நினக்கு அளிப்பேம் எனக் கடம்படும் இப்பேதை மகளிரின் ஆரா அன்பும், அதனினும் சிறந்த பேதைமையும் நமக்கு இவர்பால் இரக்கமே காட்டத் தூண்டுகின்றன. இனி, பிறிதோரிடத்தே வையையைத் தெய்வமாகவே மதித்த ஒரு பேதை அவ்வையையை,

"நீ தக்காய்! நிறந் தெளிந்தாய்!"

என முகமன் மொழிந்து பின்னர்க் கேட்கும் வரம் நம்மைப் பெ... வியக்கச்செய்கின்றது. அஃதாவது :—"வையை

மகளே! யானும் என் கணவனும் ஆண்டு முதிராமல் எப்பொழுதும் இன்றிருக்குமளவு இளமையுடையேமாகவே இருக்கும்படி செய்து விடு" என்பதாம்.

இவ்வாறு என்றென்றும் இளமையாக இருக்கும்படி அவ் வையைதான் செய்துவிடுமேல் அந் நங்கையும் பொன்னாற் செய்த "நத்தொடு நள்ளி (நண்டு) வயவாளை" முதலியவற்றை வையையில் புதுநீர் வரும்பொழுதெல்லாம், தவறுமற் கொணர்ந்துவித்தி "விளைக பொலிக" என வாயார நெஞ்சார வாழ்த்தி, மேலும் அப் புனலில் "மாலையும் சாந்தும் மதமும் இழைகளும் கோலங்கொள" ஊட்டிப் பின்னும் அது உண்ணு நறவினையும் ஊட்டுதல் திண்ணமே. இங்ஙனம் உலகியலை இனிதிற் காட்டும் இப் புலவர் பெருமக்கள், தாமே இறைவனை இறைஞ்சி வேண்டுதலைச் சிறிது கேட்டாம். ஒருபுலவர்,

> "பெருமானே! நின்னடி
> தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்
> கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம்
> கடும்பொடும் கடும்பொடும் பரவுதும்."

அஃதெற்றுக் கெனின்,

> "கொடும்பாடு அறியற்க எம்மறிவு எனவே"

என்று அவ்விறைவனும் வியப்ப மெய்யுணர்வு ஒன்றனையே வேண்டாநின்றனர்.

இனி, மற்றொருவர் முருகப்பெருமானை இறைஞ்சி ஏத்தி,

> "பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம் பிகந்தோய்
> நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
> மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
> செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்
> சேரா அறத்துச் சீரி லோரும்
> அழிதவப் படிவத்து அயரி யோரும்
> மறுபிறப்பு இல்லெனும் மடவோரும் சேரார்
> நின்னிழல்; அன்னோர் அல்லது இன்னோர்
> சேர்வர் ஆதலின் யாஅம் இரப்பவை
> பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
> அருளும் அன்பும் அறனும் மூன்றும்
> உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே."

நுகரப்படும் பொருளும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ் விரண்டானும் நுகரும் நுகர்ச்சியும் கனவெனத் தோன்றி

யழிவன ஆதலால், அவை எமக்குப் பொருளன்று. அழிவில்லாத பேரின்ப வீட்டை அளிக்கும் நினது திருவருளும், அதனை எம்பாற் சேர்ப்பிக்கும் புரைபடா அன்பும், அவ் விரண்டானும் வரும் இறைபணியறமும் ஆகிய இம் மூன்றுமே எமக்கு வேண்டும் என, நுண்ணிதின் மூன்று பொருளை விட்டு மற்றொரு மூன்றினை இரக்கும் இப் புலவருடைய மெய்யுணர்வு போற்றத் தக்கதாமன்றோ?

அன்பர்களே! இவ்வாறு இப் பரிபாடலின்கட் பயின்றுவரும் இன்சுவைப்பகுதிகள் பற்பல. அவற்றையும் அவற்றின் நுண் பொருள்களையும் அங்கங்கே உரையானும் விளக்கத்தானும் நன்கு விளக்கியிருத்தலான், அவற்றை ஆண்டுக் காண்க. ஈண்டுரைப்பின் விரியும்.

இனி, இப் பரிபாடலின்கண் ஆண்டாண்டு உவமையாகவும் சீரிய நுணுக்கங்களாகவும் வருவன ஒருசில காட்டுதும்:

## உவமை

நல்லிசைப்புலவர் தாம் கருதிய பொருளை ஓதுவோர் உளத்தே நன்கு பதியும்படி கூறுதற்குரியதொரு சிறந்த சாதனமாக உவமையைக் கையாள்கின்றனர். உவமை கூறுங்கால் தாம் கருதிய பொருட்கும் அதற்கு உவமையாகத் தாம் எடுத்தோதும் பொருட்குமுள்ள பொதுத்தன்மையை நன்கு சிந்தித்து, அப் பொதுத்தன்மையானே உவமையும் பொருளும் பெரிதும் நெருக்கமுடையனவாதலுணர்ந்தே கூறுதல் பண்டைக் காலத் தமிழ்ப்புலவர் வழக்கமாகும். அங்ஙனம் கூறப்படும் உவமை, ஓதுவார்க்குப் பெரிதும் இன்பந்தரும் இயல்புடையதாம். இவ் வழக்கத்தைப் பிற்றைநாட்புலவர் பேணாது கண்மூடி வழக்கமாய் உவமை கூறி யிருக்கின்றனர்.

இனி, இப் பாடலின்கண் ஓதப்படும் உவமைகள் ஓதுவார்க்குக் கழிபேருவகை தருமியல்பின. எடுத்துக் காட்டாகக் கீழே தரும் உவமைகளைக் காண்க.

மதுரைமாநகரத்தினையும், அந் நகரத்து வேந்தன் அரண்மனையையும், அவன் தண்குடைநீழலில் இனிது வாழும் தமிழ்க் குடி மக்களையும், அங்கு வரும் பரிசிலரையும் உவமை கூறி விளக்கப்புகுந்த ஒரு நல்லிசைப்புலவர் கூறும் உவமைநலந் திகழுமொரு பரிபாடலைக் கேளுங்கள்,

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ் சீறூர் பூவின்

இதழகத் தனைய தெருவம் இதழகத்து
அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப
ஏம இன்றுயில் எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியின் எழாதெம் பேரூர் துயிலே.''

என்பதாம்.

உவமை கூறுங்கால் பொருளுக்கும் உவமைக்கும் தொழில் பயன் வடிவம் வண்ணம் என்னும் நான்கனுள் ஒன்றுதல் பலவாதல் பொதுத்தன்மையாதல் தேர்ந்தே கூறப்படும். மேலும் அவ் வுவமைதாம், பொருளினும் உயர்ந்ததாதலும் வேண்டும். மேலும் உவமை, சிறப்பும் நலனும் காதலும் வலியும் என்னும் நான்கனுள் ஒன்றுதல் பலவாதல் நிலைக்களனாகத் தோன்றுதல் வேண்டும் என்ப. இப் பரிபாடலின்கண் எடுத்துக் கூறிய மாயோன் கொப்பூழ் மலர்ந்த தெய்வத்தாமரை சிறப்பும் நலமும் நிலைக்களனாகப் பண்புபற்றிப் பிறந்த உவமையாம். உவமை "உயர்ந்ததன் மேற்றே" என்ற விதிப்படி நோக்குங்கால் இதனினும் உயர்ந்ததோருவமை தேர்தல் அரிதேயாகும். பொதுக்காட்சிக்குத் திருமாலின் திருவுந்தித் தெய்வத் தாமரையை ஒத்துத் திகழும் அம் மதுரைமாநகரத்தே நிரலாக அமைந்துள்ள தெருக்கள், அத் தாமரையின் அகவிதழ்கள் போன்றன என்றும், அத் தெருக்கள் தன்னைச் சூழ நடுவண் அமைந்துள்ள பாண்டியன் அரண்மனை அத் தெய்வத் தாமரை மலரின் அகத்தே அமைந்துள்ள அரிய பொகுட்டை ஒக்கும் என்றும், அந் நகரத்தே வாழும் தண்டமிழ்க் குடிமக்கள் அத் தாமரையகத்தே எண்ணிறந்தனவாய்ச் செறிந்து திகழும் நறுமணப் பூந்துகளை ஒப்பர் என்றும், அந் நகரத்திற்குப் பிறநாட்டினின்றும் வரும் இசைவாணரும் பிறருமாகிய பரிசிலர் அப் பூவின்கண் தாதூத வந்து மொய்க்கும் தேன்வண்டுகளையே ஒப்பர் என்றும் கூறும் இவ் வுவமைகளைச் சிந்தித்துப் பார்க்குமிடத்து எத்துணை இன்பந் தருகின்றன காண்மின்!

பிறர்க்கு ஈத்துவந்து வாழும் இயல்புடைய குடிமக்களையும், பரிசிலரையும், மலர்த்தாதுகளாகவும் அத் தாதுக்களின் நறுமணத்தாலே கவர்ந்திழுக்கப்பட்டுக் களிப்பால் இசைமுரன்று வந்து குழுமும் தாதுண்பறவைகளாகவும் உவமித்த அழகினை எத்தனைமுறை சிந்திப்பினும் தெவிட்டாது தித்திக்குமன்றோ?

இனி, இப் பாட்டின்கண் 'எம்பேரூர் வஞ்சியும் கோழியும் போலக் கோழியின் துயில் எழாது' என்புழி, மதுரைக்கு வஞ்சி நகரமும் உறையூரும் "வேறுபட வந்த உவமத்தோற்றம்" எனப் படும் இதன்கண் நல்லிசைப்புலவன் உணர்த்தக் கருதிய பொருள், மதுரைமாநகரின்கண் அறிவுசான்ற வேதியர் நிரம்பி யுள்ளனர். ஆதலால் அந் நகரம் அறிவுச் சிறப்புப் பெரிதும் உடையதென்பதே. இக் கருத்தினை இவ் வேறுபடு உவமத் தோற்றத்தாலே கூறுங்கால் அக் கருத்துப் பின்னும் எத்துணை அழகாய் ஓதுவோருளத்தே பதிகின்றது உணர்மின். இனி இப் பாடலிலே பயின்றுவரும் செஞ்சொல் இன்பந்தான் எத்துணைப் பெரிது. "மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை," "அண்ணல் கோயில்," "தண்டமிழ்க்குடிகள்," "தாதுண்பறவை," "பரிசில் வாழ்நர்," "பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த நான்மறைக் கேள்வி," "ஏமவின்றுயில்," "வஞ்சியும் கோழியும்." என இப் புலவர் பெருமான் வீறுடைய சொற்களாற் றொடுக்கும் தொடையழகுதரும் தமிழின்பந்தான் எத்துணைப் பெரிது காண்மின்!

இனி, வையையின்கண் பெருகிவரும் வெள்ளம் கட்டுக் கடங்காது அணைகளை உடைத்துப் போயிற்றாக, அதற்கு உவமை தேர்ந்து கூறும் புலவர்,

"வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்டு
உயர்ந்துழி உள்ளன பயம்பிடைப் பரப்பி
உழவர் களிதூங்க முழவு பணைமுரல
ஆடல் அறியா அரிவை போலவும்
ஊடல் அறியா உவகையள் போலவும்
வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது."

ஆடலியல்பு அறியாத கூத்தியொருத்தி கூத்திலக்கணத்தி லமையாது தான் வேண்டிய இடங்களிலே நடந்தும், ஊடலின் இயல்பறியாத பேதையொருத்தி, காமக்களிமயக்கத்தாலே தனக் குப் பாதுகாவலாகிய கணவன் கருத்திற்கேற்ப அமைந்து ஒழுகாமல் அவனைக் கடந்து நீங்குமாறும்போலப் போயிற்று என உவமை எடுத்துக் கூறுதலும், பிறிதோரிடத்தே,

வெள்ளத்திற் கஞ்சாதாராய் விலாப்புடை மருங்குல் விசிப்ப வுண்டு அவ் வெள்ளத்தினூடே தந்தொழில் கருதிச் செல்லும் உழவர்,

"சினைவளர் வாளையின் கிளையொடு கெழீஇப்
பழன உழவர் பாய்புன"வில்

சென்றனர் என்றலும், மற்றோரிடத்தே,

புதுநீர் ஆடற்கு மதுரைமாந்தர் விருப்பத்தொடு விரைந்து குழுமிச் செல்லுதற்கு வழிபெறாராய் மெல்ல மெல்லச் செல்லுந் தோற்றத்திற்கு,

" அதிர்குரல் வித்தகர் ஆக்கிய தாளம்
விதி கூட்டிய இய மென்னடை போலப்
பதி எதிர் சென்று."

என, இன்னிசையின் மூவகைத்தாள நடையினுள் மென்னடையை நுண்ணிதின் உவமையாக எடுத்துக் கூறுதலும்; மற்றோரிடத்தே, நீலமேகவண்ணப் பெருமானாகிய திருமால் ஒருபக்கத்தே ஒளிமிக்க ஆழிப்படையினையும், மற்றொரு பக்கத்தே சங்கினையும் உடையனாய் நின்றருளும் திருக்கோலத்திற்கு, நெடிய முகில் ஒன்று தன்னிரு பக்கத்திலும் ஞாயிறுந் திங்களும் நின்று விளங்க நிற்றலை உவமையாக எடுத்து

" மால்
பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த
இருவேறு மண்டிலத்து இலக்கம் போல
நேமியும் வளையும் ஏந்தி."

எனக் கூறுதலும், மற்றோரிடத்தே,

திருமாலிருங்குன்றத்தில் பொன்னுடை பூண்டு நிற்கும் திருமாலை, இருட் பிழம்பொன்று இளவெயில் தன்னைச் சூழ்ந்து சுற்ற வளர்ந்து நின்றாற்போன்று நின்றான், எனவும்,

நிறத்தாலே மாறுபட்டு உருவத்தாலே இருவராய்த் தொழிலாலே ஒன்றுபட்ட கண்ணபெருமானுக்கும், பலதேவனுக்கும் உவமையாக,

" கல்லறை கடலும் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம், வேறுவேறு உருவின் ஒருதொழில் இருவர்."

என ஓதுதலும்,

இனி, ஒருத்தி வெள்ளியாலாய வள்ளத்தை (கிண்ணத்தை) உறையினின்றும் எடுத்தாளாக, அத்தோற்றம் முகிலினூடிருந்து வெளிவரும் முழுத்திங்களை ஒத்தது என்றும், அவ் வெள்ளி வள்ளத்தை அம் மடந்தை விரல்களாலே பற்றியிருந்ததற்குப் பாம்பாலே பற்றப்பட்ட திங்களை உவமை கூறுதலும், மேலும் அம் மடந்தை அவ் வள்ளத்திலே நறவினைப்பெய்து தனது மலர் வாயின் வைத்துப்பருகினளாக, அவள் முழுத்திங்களின் கலையினை வாய்மடுத்துண்ணும் ஒரு தெய்வமகளை ஒத்துத் தோன்றினள்

என இயம்புதலும், வியத்தகும் உவமைகளாம். இனி, இப் பரிபாடலின்கண் ஆண்டாண்டு பயின்றுவரும் இன்னோரன்ன இனிய உவமைகள் சாலப்பல. அவையிற்றை நூலின்கட் காண்க.

இனி, இந் நூலின்கண் அங்கங்கேவருஞ் சுவையுடைய செய்திகள் சிலவற்றைக் காண்பாம்.

ஐம்பெரும் பூதங்களாகவும் பிறவுமாகவும் நம்மாற் காணப்படும் இப் பேருலகம், நுண்ணிதாகியதொரு அறிவு வெளியினின்றும் தோன்றியதாகும். பலவாகப் பார்க்கப்படும் இவ்வுலகப் பொருள்கள் அனைத்திற்கும் மூலமாகவுள்ள பொருள் ஒன்றேயாம். அவ்வொரு பொருளே இங்ஙனம் காலப் பேரெல்லையிலே பரிணமித்து விரிந்தது. விரிந்தவாறே இவ்வுலகம் மீண்டும் ஒடுங்கும் இயல்பிற்று என, நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர் நன்கு அறிந்திருந்தனர். பூதங்களைப்பற்றிய அறிவு சிறந்தோங்கிய இற்றை நாளினும் அம் முன்னையோர் முடிபு மறுக்கப்படவில்லை. இக் காலத்துப் பூத நூலறிஞர் அம்முன்னையோர் எய்திய முடிவினைக்காண இன்னும் பெரிதும் அறிவுவளர்ச்சி பெறுதல் வேண்டும் என்பதே குறை. அஃதாவது இப்பேருலகம் ஒரே முதலினின்றும் தோன்றுவது என்பதும், அழியுங்கால் அவ்வொரே முதலாய்ச் சென்றடங்கும் என்பதும் நம் முன்னோர் கண்ட முடிபொருள். இற்றைநாட் பூதநூலோர், இப் பேருலகத்திற்கு முதலாகச் சில அணுக்கள் உள்ளன என்பர். இச்சில அணுக்களும் காரியப்பொருளேயல்லது காரணம் அன்று. இவ்வணுக்களுக்கும் காரணமாய்ப் பிறிதொன்றுளது என்னும் உண்மையை இவர் உணர இன்னும் பல நூற்றாண்டுகள் வேண்டும் போலும் என்பது. இனி வியத்தகும் இக்கொள்கையினை ஆசிரியர் நன்னாகனார் இப் பரிபாடலின்கட் கூறும் அழகினைக் கேண்மின்:

"தொன்முறை இயற்கையின் மதியொ......
................................மாபிற் றாகப்
பசும்பொன் உலகமும் மண்ணும் பாழ்பட
விசும்பில் ஊழி ஊழூழ் செல்லக்
கருவளர் வானத்து இசையிற் றோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்
உந்துவளி கிளர்ந்த ஊழூ ழூழியும்
செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்று
உண்முறை வெள்ள மூழ்கி ஆர்தருபு
மீண்டும் பீடுயர்பு ஈண்டு அவற்றிற்கும்

உள்ளீ டாகிய இருநிலத்து ஊழியும்
நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி யீட்டம் கழிப்பிய வழிமுறை.”

எனவரும்.

மிகமிகப் பழங்காலத்திலேயே இப் பேருண்மையை நம் முன்னோர் எப்படித்தான் உணர்ந்துகொள்ள முடிந்ததோ! என்று யாம் வியக்காமலிருத்தல் இயலாது.

காட்சிப்பொருளா மிவ்வுலகப் பொருளனைத்தும் கண் காணப்படாததொரு பரவெளியினின்றும் நமக்கு நன்கொடையாக வந்தவையே என்னுமிது, எத்துணை வியத்தகு கருத்தாகும். சிவானுபூதிச் செல்வராகிய தாயுமான அடிகளார் இக் கருத்தினையே

“வடிவனைத்துந் தந்த வடிவில்லாச் சுத்த
வான் பொருள்.”

என்றும்,

“பெருவெளியாய் ஐம்பூதம் பிறப்பிடமாய்ப்
பேசாத பெரியமோனம் வருமிடம்.”

என்றும் அழகுற விளம்புவர்.

இனி, சு-ஆம் பாடலின்கண் நாடக வழக்கத்தானே கூறப்படும் ஒரு தலைவனுக்கும் காதற் பரத்தைக்கு மிடையே நிகழும் உரையாடல் மிகவும் இனியதாம் :

தமிழ் வையையில், தண்ணம் புனல் வெள்ளமாகப் பெருகிற்று; ஒரு தலைவன் தன் காதற் பரத்தைக்குக் கையுறையாக இனிய தளிர் பலவற்றைக் கொய்துகொண்டு அவள் தயவினைப் பெறுதற்கு அவள்பால் வருகின்றான்; ‘குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்’ என்றபடி முகமழுங்கிவரும் அவனை ஏற்றுக் கொள்ளாமல் அப் பரத்தை அவனைச் சீறுகின்றாள்.

“ஏடா! இத் தழையைப் பார்! இவை எவ்வளவு துவண்டு கிடக்கின்றன; இவை என்பொருட்டு நீ கொய்தவையல்ல; வேறு மகளிர்க்குக் கொடுக்கவே கொய்தனை; அவர் நின்னை ஏற்க மறுத்தனர்; அதனால் இவற்றை இப்பொழுது என்பால் கொணர்ந்தனை; ஐயோ பாவம்! நீ இதனை வினைகெட்டுக் கொய்த அருமையைத் தாமும் அவர் கருதிற்றிலர் போலும்!” என்றாள்.

அதுகேட்ட தலைவன் "நங்காய்! வையை காமப்பெருக்கன்றோ அதனாற் புணையேறி வரக் காலந்தாழ்த்தது" என்றான்.

குற்றமே காணும் நோக்கமுடைய அப்பரத்தை தலைவன் கூறியதற்கு, அப்பிறமகளிர் காமப்பெருக்கம் வையைப் பெருக்கினை ஒத்ததென்று தலைவன் கூறியதாகப் பொருள்கொண்டு பின்னும் பெரிதும் புலந்து, அத் தலைவனோடு சொல்லாடுகின்றாள். இவர்தம் சொல்லாட்டம் கற்போர்க்குக் கழிபேருவகை அளிப்பதாக உள்ளது.

இனி, இக் காதற் பரத்தை அளவின் மிக்கு ஊடுகின்றாள்: அதனாலே, இத்தலைவன் இவளைப்பிரிந்து போயினும் போவான் என்றஞ்சிய முதுபரத்தையர்; அவட்குக் கூறும் அறிவுரைகளைக் கேளுங்கள்:

"ஏடி! நீ மிகையாக அவனை வெகுள்கின்றாய்; அவனோ உன் சினத்திற்குப் பெரிதும் அஞ்சுகின்றான்; ஊடல் மிகுந்து துனியாயவிடத்துக் காமவின்பம் பதனழிந்து கெடும்; 'உப்பமைந்தற்றால் புலவி அதுசிறிது மிக்கற்றால் நீள விடல்' பிழையாகும். நீயோ பெண்ணாகப் பிறந்தவள்; இங்ஙனம் நீ அவன் உளமிறுகி வெறுக்கும்படி சினப்பாயேல் அவன் நின்னை வெறுத்து நீத்து அகலுதல் ஒருதலை; நீயோ அவன்பாற் கன்றிய காமமுடையை; அவன் சென்றுவிட்டால் நீ அவனைத் தேடி இருளிலே நீந்திக் கொண்டு கிடக்கவேண்டியதுதான்; ஆதலால் வெகுளற்க! அவனை ஏற்று அவனோடு ஆடல்தொடங்குக."

மிகுதிக்கண் மேற்சென்றிடிக்கும் இப் பெரியார் மொழி வருமாறு:

"சினவல் நின் உண்கண் சிவப்பு அஞ்சுவாற்குத்
துனிநீங்கி ஆடல் தொடங்கு! துனி நனி
கன்றிடில் காமம் கெடூஉம் மகள்! இவன்
அல்லா நெஞ்சம் உறப்பூட்டக் காய்ந்தே
வல்லிருள் நீயல்! அது பிழையாகும்."

என்பதாம். இலக்கிய இன்பந்தரும் பகுதியில் இஃது எத்துணைச் சிறப்புடையது உணர்மின்.

இனி கசுஆம் பாடலின்கண் இங்ஙனமே தலைவி தோழியர் முதுமகளிர் பரத்தை ஆகிய இவர்களுள் வினாவும் செப்புமாய் நிகழும் உரையாடல் சிறந்த இன்பந்தருவதாம்.

தலைவியறியாதபடி ஒரு தலைவன் அவள் அணிகலன்களிற் சிலவற்றை ஒரு பரத்தைக்குக் கொடுத்திருந்தான்; இவை களவு

வகையாலே தலைவன் தனக்குத் தந்தவை என அப் பேதை அறி யாள்போலும். வையையில் வெள்ளம் கரைபுரண்டோடியது; அதன்கண் நீராடும் விருப்பம் மக்கள் மனத்தே கரைபுரண் டோடியது; மதுரையிலுள்ளோர் அனைவரும் வையையை எய் தினர்; பிறமகளிர் எத்தகைய ஆடையுடுத்துள்ளனர்! எத்த கைய அணிகலன் அணிந்துள்ளனர்? என்று கூர்ந்து காணும் தம்மியல்புக் கேற்ப அத் தலைவியின் தோழியர் பிறர்பிறர் ஆடை யணிகலன்களை நோக்கி வந்தனர்; அக் கூட்டத்திலே முற் கூறப்பட்ட பரத்தையும் தனக்குத் தலைவன் தந்த அணிகலன் களை அணிந்துகொண்டு வந்து நின்றாள்; கூர்த்த நோக்குடைய அத் தோழியர் அவ்வணிகலன் தலைவியினுடையவாதலை அறிந்து கொண்டனர்; அத் தோழியர் தம்முள் அவளைச் சுட்டிப் பேசிக் கொண்டிருந்தனர்; இந் நிகழ்ச்சியை ஆண்டு நின்ற தலைவனும் அறிந்துகொண்டான்; அவனே திருடன் என்பதை அவன் சமழ்த்த முகம் தோழியர்க்குக் காட்டிக்கொடுத்துவிட்டது; இஃதுணர்ந்த பரத்தை மெல்ல நகர்ந்து கூட்டத்துட்புக்கு மறைந்தாள்; அத் தோழியரும் அவளைப் பின்தொடர்ந்து சென்றனர்; அதுகண்ட பரத்தை அவரை எதிர்த்துப் பேசத் தொடங்கினாள்; இந் நிகழ்ச்சியைத் தொடர்ந்து நிகழும் உரை யாட்டங்கள் மிகமிக இன்பமுடையனவாகும்; அவற்றை ஆண்டுக் காண்க.

இனி, கூ-ஆம் பாடலின்கண் முருகவேளுக்கும் தேவசேனைக் கும் இடையே நிகழும் சொல்லாடலும், பின்னர் வள்ளியின்பா லகப்பட்டுச் செவ்வேள் படும்பாடும், மண்ணவர் மகளாகிய வள்ளியின் படையும் வானவர் மகளாகிய தேவசேனையின் படை யும் எதிர்ந்து செய்யும் போரும் பிறவும் மிகமிகக் களிப்பூட்டு வனவாம்.

இனி, கூ-ஆம் பாடலின்கண் ஆசிரியர் குன்றம்பூதனார் "நான்மறை விரித்து நல்லிசை விளக்கும் வாய்மொழிப் புலவீர்" என வடமொழி வாணரை விளித்துத் தமிழ்மொழிக்கே சிறந் துரிமையுடைய தள்ளாப் பொருளியல்பில் அகப்பொருட் பகுதியாகிய களவு கற்பென்னும் இருவகை ஒழுக்கத்தினும் களவே சாலச் சிறந்தது என ஏதுக்களானே நிலைநிறுத்தி, அத் தமிழை ஆராய்ந்தமையான், கடவுளரில் வைத்து முருகன் சிறந்தவாறும், தேவசேனையினும் களவானே மணக்கப்பட்ட வள்ளியம்மை சிறந்தவாறும் எக்கழுத்தம்பட எடுத்துரைக்கும் பகுதி இன்பமிக்கது.

இனி, ஆசிரியர் நல்லந்துவனார் கக-ஆம் பாடலின்கட் கூறும் ஒளிநூல் (சோதிடம்) பகுதியவாகிய கோள்நிலை நாணிலைகள்

ஆராய்ச்சிக்குரியதாம். இப்பாட்டின்கண் இவர்கூறும் கோணிலை நாணிலைகளை நுண்ணிதின் ஆராய்ந்த திருவாரூர் சோமசுந்தர தேசிகர் என்பார், அதன்கட் கூறப்பட்டபடி கோணிலை நாணிலை நிகழ்ந்த காலம் கி. மு. ௧௬௧, ஆகிய கலி - ௨௯௪௧, பிரமாதி யாண்டு ஆவணித் திங்கள் ௧௨-ஆம் நாளாகிய வியாழக் கிழமை என்று முடிவு செய்துள்ளனர். இம் முடிவு இற்றை நாள்காறும் பலரானும் ஒப்புக்கொள்ளப்பட்டதொன்றாம். இதனால் இப் பரிபாடலின் தொன்மை நலம் உணரற்பாலதாம்.

இனி, இப் பரிபாடலின்கண் ௧௯-ஆம் பாடலாலே அந் நாளிலே தமிழ் மக்கள் திருக்கோயில் வழிபாடு செய்த முறையும் திருக்கோயில் விழா நிகழ்ச்சிகளும் திருக்கோயில் நிலைமைகளும் நன்குணரப்படும்.

மதுரைவேந்தன் தனது அரசவைச்சுற்றம் சூழத் திருப்பரங் குன்றம் சேர்தலும், மக்கள் துறக்கம் புகுவார்போன்று பெரு மகிழ்ச்சியுடையராய்த் திருப்பரங் குன்றத்திற்கு விரைதலும், அரசன் சிறந்த அமைச்சர் முதலியோரொடு திருமலை மீதேறிச் செவ்வேளின் திருக்கோயிலை வலம்வரும் காட்சியும், அம் மன்னனோடு வந்த யானை குதிரை தேர் முதலியன அம் மலையடி யில் குழுமி நிற்றலும், விழாக் காண வந்தோர் குரங்குகளுக்குப் பண்ணிகாரம் வழங்குதலும், யானைகட்குக் கரும்பு வழங்கு தலும், ஆடல் பாடல் முதலியன நிகழ்தலும், அம் மலையின் கண் இராமாயணம் முதலிய கதைகளைப் பற்றிய எழிலோவியம் தீட்டப்பட்ட சித்திரச்சாலை திகழ்ந்திருத்தலும், அதனுட் புகுந்த காதலர்கள் அவ் வோவியங்கள் பற்றிய செய்திகளை ஆர்வத்துடன் வினவுதலும் விடையிறுத்தலும், கண்கூடாகக் காட்டப்படுகின்றன

பேதைச் சிறுமி ஒருத்தி பிறங்கலிடைப் புகுந்து வழி தவறி அலமந்து நிற்றலும், சுனையின்கட் கிடக்கும் உதிர்ந்த தளிரை ஐந்தலை அரவெனவும் அதன் குட்டிகளும் என எண்ணி மடவார் மயங்குதலும், முருகப்பெருமான் திருக்கோயிற்குக் கொடியேற்றும் களிற்றுயானை உண்ட மிச்சிலை மகளிர் கடவுட் டன்மையுடையதாகக் கருதி உண்ணலும் பிறவும் அறியலாம்.

இனி ௧௧-ஆம் பாடலின்கண், மார்கழித் திங்களில் திரு வாதிரை நாளில் சிவாகமங்களை யுணர்ந்த சான்றோர் அந் நாளிற்குத் தெய்வமாகிய சிவபெருமானுக்குத் திருவிழாத் தொடங்குதலும், அவ்வமயம், அம்பா வாடும கன்னிமகளிர் சடங்கறிந்த முதுபார்ப்பனிமார் நோற்கு முறைமை காட்டப் பனியையுடைய வைகறைப் பொழுதிலே வையையின்கண்

நீராடிக் குளிர்வாடை வீசுதலான் கரையின்கண் உறையும் அந்தணர் வேத நெறியால் வளர்த்த தீயினைத் தொழுது வணங்கி அத்தீயின் அருகில் நின்று தமது ஈரஆடையைப் புலர்த்துதலும், மேலும் அம்மகளிர் தைத் திங்களிலே தத்தம் தாயர் மருங்கே நின்று தவமாகிய தைந்நீராடுதலும் அறியலாம்.

இவ்வாறாக இப் பரிபாடலின்கண் பண்டைத் தமிழக மாந்தர் பழக்க வழக்கங்கள் பற்பலவும் உணரலாம்.

இனி, இப் பரிபாடலின்கண் பண்டைக் காலத்துத் தமிழர்கள் ஆடல், பாடல், சிற்பம், ஓவியம் முதலிய கலைநலத்திற் சிறந்து திகழ்ந்தமைக்குச் சான்றுகள் பற்பல ஆண்டாண்டுக் காணப்படுகின்றன.

மதுரையில் புதுநீர் வந்து பெருகிற்றாக; அச் செய்தியை அறிந்த மதுரையிலுள்ள மகளிரும் மைந்தரும் அணிகலன்களாலும், நறிய மலர் மாலைகளானும், தம்மை ஒப்பனை செய்து கொண்டு அம் மூதூரின் தெருக்களிலே வந்து நெருங்கிப் புது நீராட்டிற்குச் செல்லாநிற்ப, அப்பொழுது களிற்றுயானையிற் சில காளையர் ஏறிச் சென்றனர்; அக் களிற்றுயானை மடந்தையர் ஊர்ந்து வருமொரு பிடியானையினைக் கண்டு மையலுற்றுப் பாகர் சொற் கேளாது ஒரு நெடிய மாடமாளிகையின் அருகே சென்று நின்றுவிட்டது; அப் பிடிதானும் அக் களிற்றின்மேற் கழிகாமமுடைத்தாய்ப் பாகர்க் கடங்காது அம் மாடத்தினை அணுகிற்று; அம் மாடத்தின் முகப்பே பாய்கின்ற நிலையிலே உள்ளதொரு புலியுருவம் சிற்பநூல் வல்லோராற் செய்து வைக்கப்பட்டிருந்தது; அது சிற்பப் புலி என்பதனை உணராமல் பிடியானை அதனை மெய்ப்புலியே என்றும், அது தன் காதற் களிற்றைப் பாய்ந்து கொல்லும் என்றும், அஞ்சிக் கையை உயரத் தூக்கிப் பிளிறிச் சிதைத்தது. இச் செய்தியால் அக் காலத்தே உயிருடைய மெய்யுருவம் போன்றே கண்டோர் கருதத் தகுந்த சிற்ப உருவங்களைச் சமைத்த சிற்பநூற் புலவர் இருந்தமை புலனாகின்றது.

இனி, ௧௯-ஆம் பாடலின்கண் நாண்மீன்களையும் தாரகைகளையுமுடைய சுடர்ச் சக்கரம் சித்திரச் சாலையிலே தீட்டப்பட்டிருந்த செய்தியும், இந்திரன் அகலிகையைக் காமுற்றுச் சென்று கவுதம முனிவன் சாபத்திற்கிலக்கான செய்தியை அவ் வோவியச் சாலையிலே தீட்டப்பட்டிருந்த செய்தியும், இரதி காமன் உருவங்கள் தீட்டப்பட்டிருந்த செய்தியும் அறியப்படுதலானே அக் காலத்தே ஓவியக்கலை சிறந்திருந்தமை உணர்கின்றோம்.

"என்றூழ் உறவரும் இருசுடர் நேமி
ஒன்றிய சுடர்நிலை உள்படு வோரும்
இரதி இவள் காமன் இவன் எனாஅ
விரகியர் வினவ வினா இறுப்போரும்
இந்திரன் பூசை இவள் அகலிகை இவன்
சென்ற கவுதமன் சினன்உறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்
இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்
துன்னுநர் சுட்டவும் சுட்டறி வுறுத்தவும்."

என வருதல் காண்க.

இனி,

"தெய்வப் பிரமம் செய்கு வோரும்
கைவைத் திமிர்புகுழல் காண்கு வோரும்
யாழின் இளிகுரல் சமங்கொள் வோரும்
.....................................
கூர நாண்குரல் கொம்மென ஒலிப்ப
ஊழுற முரசின் ஒலிசெய் வோரும்."

எனவும்,

"ஒருதிறம், பாணர் யாழின் தீங்குரல் எழ
ஒருதிறம், யாணர் வண்டின் இமிர் இசையெழ
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபெழ
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத
ஒருதிறம், மண்ணார் முழவின் இசையெழ
ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப."

எனவும் வரும் இன்னோரன்ன பகுதிகளானே அக்காலத்தே, இசைக்கலை சிறந்திருந்தமையும்,

"சுடுபொன் ஞெகிழத்து முத்தரி சென்றார்ப்பத்
துடியின் அடிபெயர்த்துத் தோள் அசைத்துத் தூக்கி
அடுநறா மகிழ்தட்ப ஆடுவாள்."

எனவும்,

"மணிமருள் தேன்மகிழ் தட்ப வொல்கிப்
பிணிநெகிழப் பைந்துகில் நோக்கஞ் சிவப்பூராப்
பூங்கொடி போல நுடங்குவாள் ஆங்குத்தன்
சீர்தகு கேள்வன் உருட்டுந் துடிச்சீராற்
கோடணிந்த முத்தாரம் ஒல்க ஒசிபவள் ஏர்

ஆடை யசைய அணியசையத் தான் அசையும்
வாடை உளர் கொம்பர் போன்ம்."

எனவும்,

"வாளி புரள்பவை போலும் துடிச்சீர்க்குத்
தோள்ஊழ் பெயர்ப்பவள் கண்."

எனவும் வரும் இன்னோரன்ன பகுதிகளானே அக்காலத்தே கூத்துக்கலை நுண்ணிதாய்ச் சிறந்திருந்தமையும் உணரப்படும்.

இங்ஙனமாக இப் பரிபாடல் பல்வேறு துறைகளினும் ஓதுவார்க்கு இன்பந்தருமியல்பிற்று.

இங்ஙனம்:

பெர. வே. சோமசுந்தரன்.

உரையாசிரியன்,

# நூலாசிரியரும் இசைவகுத்தோரும்

இப் பரிபாடலின்கண் இற்றைநாள் நமது கைக்கெட்டியுள்ள பாடல்களில் முதற் பாடலையும் இறுதிப் பாடலாகிய உஉ-ஆம் பாடலையும் இயற்றியவர் இன்னாரென அறிதற்கிடனில்லை. பழைய உரைப்பகுதியிலிருந்து கிடைத்த பாடல்களும், பாடல் உறுப்புக்களும், இயற்றினோர் யார் எனவும் அறிதற்கு வழியில்லை. இனி, எஞ்சிய பாடல்களை இயற்றினோராகப் பதின்மூன்று நல்லிசைப் புலவர்கள் பெயர் காணப்படுகின்றன. அவை வருமாறு :

## க. ஆசிரியன் நல்லந்துவனார்

இப் புலவர் பெருமான் செவ்வேட்குரிய அ-ஆம் பாடலும், வையையின் மேலவாகிய சு, கக, உ0, ஆகிய மூன்று பாடலும் ஆக நான்கு பாடல்களை இயற்றியவராவார்.

கற்றோரேத்துங் கலித்தொகையினைத் தொகுத்து அந்நூற்கு, "ஆறறி அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து," என்று தொடங்கும் ஒப்பற்ற கடவுள் வாழ்த்தினை இயற்றியவரும், அக் கலித்தொகையில் நெய்தற்கலி கங பாடல்களையும் யாத்துத் தந்தவரும் இவரே. இதனை,

"நாடும் பொருள்சான்ற நல்லந் துவனுசான்
சூடும்பிறைச் சொக்கன் துணைப்புலவோர்—தேடுவார்
கூட்டுணவே வாழ்த்தொடு கொங்காங் கலியினையே
கூட்டினான் ஞாலத்தோர்க் கு"

எனவும்,

"பெருங்கடுக்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழன்
நல்லுத் திரன்முல்லை நல்லந் துவன்நெய்தல்
கல்விவலார் கண்ட கலி."

எனவும் வரும் வெண்பாக்களான் உணர்க.

இனி, இப் புலவர் பெருமான் அகநானூற்றின்கண் "கடல் முகந்து கொண்ட" (சங) என்று தொடங்கும் பாடலையும், நற்றிணையில் "யாம்செய் தொல்வினைக்கு" (அஅ) என்று தொடங்கும் பாடலையும், திருவள்ளுவமாலையில் "சாற்றிய பல்கலையும்" என்று தொடங்கும் வெண்பாவினையும் இயற்றியவர் ஆவார்.

எனவே, இப் புலவர்பெருமான் தொகைநூல் எட்டனுள் வைத்து நான்கு நூல்களிலே இடம்பெற்ற பெருஞ்சிறப்பினை யுடையராதலறிக.

இனி, இப் புலவர் பெருமான், இப் பரிபாடலின்கண் முருக வேளைப் பாடிய (அ)பாடலின்கண், திருப்பரங்குன்றின்கண் செவ் வேளைக்கண்டு மகிழத் திருமால் முதலிய தேவரெல்லாம் வந்து கூடுதலாலே அப் பரங்குன்றம் இமயக்குன்றம் நிகர்க்கும் என்றும், அப் பரங்குன்றில் உள்ள சுனை இமயத்தின்கண் உள்ள சரவணம் என்னும் ஒருநிலைப் பொய்கையினையே ஒக்கும் என்றும், இன்னும் பலவேறு வகையானும் அப் பரங்குன்றினைப் பாடிய அருமையை அவரோடு ஒருகாலத்து வாழ்ந்த புலவர் பெருமான் மதுரை மருதனிளநாகனார் பெரிதும் பாராட்டிச் "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல் சீர்மிகு முருகன் தண்பரங்குன்றத்து அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை இன்றீம் பைஞ்சுனை" (அகநா - ௫௯) எனப் புகழ்ந்துள்ளார்.

இவர் பெயர் முன்னர் 'ந' என்னும் சிறப்படைச் சொல் புணர்த்து வழங்கப்படுதலானும் இவர் சிறப்புணரலாம். இவர் இயற்பெயர் அந்துவனார் என்பதாம். கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோர் பெயர்முன் அச் சிறப்பிற் கறிகுறியாக 'ந' என்னும் சிறப்படைச்சொல் புணர்த்து வழங்குதல் அக்காலத்து வழக்கமாகும். இச் சிறப்படைச்சொல் 'ந' என்னும் ஓரெழுத் தொருமொழியே என்பாரும், அற்றன்று 'நன்மை' என்னும் பண்புச்சொல்லே இயற் பெயரோடு சிறப்பாகப் புணர்க்கப்படும், அப் பண்புச் சொல் இயற்பெயரின் முதலெழுத்து உயிராகவாதல் மெல்லினமாகவாதல் இடையினமாகவாதல் இருப்பின் 'நல்' என நின்றும் அம் முதலெழுத்து வல்லின மாயவிடத்து லகர வொற் றுங் கெட்டு ந என்று நின்றும் புணரும் என்பாருமாக இரு திறத்து ஆசிரியர் உளர்; நல்லுருத்திரன், நல்லெழினியார், நல்லிறையனார், நன்னாகனார், நல்வழுதியார் எனவும், நக்கீரனார், நச்செள்ளையார், நத்தத்தனார், நப்பண்ணனார் எனவும் வருதல் காண்க.

## ௨. இளம் பெருவழுதியார்

இப் புலவர் பெருமான் திருமாலின் மேற்றாய் வரும், ௧௫-ஆம் பாடலியற்றியவராவார். பத்திச்சுவை சொட்டச் சொட்டக் கனிந்து திகழும் அவ்வொரு பாடலே இவர் தம் பெருமைக்குப் போதிய சான்றாகும். இவரை இறையன்புடைமையானும் சால்புடைமையானும் ஆழ்வார்களில் நம்மாழ்வாரையே ஒப்பார் என்பது மிகையன்று.

வழுதி என்னும் இவர் பெயரானே இவர் பாண்டி மன்னர் மரபினிற்றோன்றியவர் என்று உணரலாம். இப் புலவர் பெருமான் புறநானூற்றிலுள்ள 'உண்டாலம்ம' என்று தொடங்கும் ஒப்பற்ற பாடலை யாத்தவரும் ஆவர். இவர் மறைவிற்குப் பின்னர் இவரைக் 'கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதி' என்று உலகினர் வழங்கினர் என்று தோன்றுகின்றது. இவ் வடைமொழியானே இவர் தம் மறைவு மரக்கலத்திற் சென்றபொழுதோ, கடலுள் நீராடிய பொழுதோ நேர்ந்திருக்கலாம் என்று தோன்றுகின்றது. இவருடைய சால்புடைமை நம்மனோரான் அளந்து கூறும் எளிமைத்தன்று. "உண்டால் அம்ம உலகம்........தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர் உண்மையானே" என்னும் பாடற்கு இவரே எடுத்துக்காட்டாகவும் திகழ்கின்றனர்.

## ௩. கடுவன் இளவெயினனார்

இப் புலவர் பெருமான், சமயங் கடந்த சமரச நிலையை எய்திய சான்றோர் என்பது இவர் பாடலானே உணரப்படும். இவர். திருமால்மேலவாகிய ௩-ஆம், ௪-ஆம் பாடலையும், செவ்வேட்குரிய ௫-ஆம் பாடலையும் இயற்றிய சான்றோர். சமயப்பூசல் சிறிதும் மருவாத தூய உள்ளம் படைத்தவர். இறையியல்பினை நுண்ணிதின் இவர் இயற்கையினின்றும், தத்துவங்களானும் நன்கு பற்பல விடங்களிலே விளக்கியுள்ளனர். இவர் புராணக் கதைகளைப் பெரிதும் தழுவிப்பாடியுள்ளார்.

## ௪. கரும்பிள்ளைப்பூதனார்

இவர், வையைக்குரிய ௧௦-ஆம் பாடலை இயற்றியவர் ஆவர். இவர், மதுரை மக்கள் வையையின்கண் புதுநீர் வருதல் கண்டு பொங்கிய உவகையராய் அணிகலன்களானும் மாலைகளானும் புனைந்து கொண்டு,

> "புகவரும் பொங்குளைப் புள்ளியன் மாவும்
> மிகவரினும் மீதினிய வேழப் பிணாவும்
> அகவரும் பாண்டியும் அத்திரியும் ஆய்மாச்
> சகடமும் தண்டார் சிவிகையும் பண்ணி
> வகைவகை யூழூழ் கதழ்பு மூழ்த்து ஏறி."

செல்லும் காட்சியினையும்,

சிற்பப் புலியைக்கண்டு பிடியானை சிதைந்து ஓடுதலையும், புதுநீரிற் புக்கு அம் மாந்தர் பலவிதமாக ஆடல் நிகழ்த்துதலையும், கைம்மாறு கருதாமல் நல்லறம் பல விரும்பிச் செய்தலை

யும், பிறவற்றையும் கற்போர்க்குக் கண்கூடாகப் பொருள் புலப்படும்படி இனிய உவமை பல எடுத்துக்கூறி விளக்கியுள்ளார்.

## ரு. கீரந்தையார்

திருமாலுக்குரிய உ-ஆம் பாடலை இப் புலவர் பெருமான் இயற்றியருளினர். திருவள்ளுவமாலையில் இவர் பாடிய செய்யுள் ஒன்றுளது.

உலகம் அறிவுப் பெருவெளியினின்றும் தோன்றி யொடுங்கும் முறையை இவர் அழகாகப் பாடியுள்ளார். இவர் இறைவனுக்கு உருவும் உண்டியும் வெளிப்பாடும் கூறும் பகுதி மிகவும் ஆழ்ந்த கருத்துடையதாம். அது,

"கேள்வியுட் கிளந்த ஆசா னுரையும்
படிநிலை வேள்வியுட் பற்றியாடு கொளலும்
புகழியைந் திசைமறை உறுகனன் மூட்டித்
திகழொளி ஒண்சுடர் வளப்பாடு கொளலும்
நின்னுருபுடன் உண்டி
பிறர் உடம்படுவாரா
நின்னொடு புரைய
அந்தணர் காணும் வரவு."

எனவரும்.

இனி, இவர் இறைவன்பால் வரம் வேண்டுதல் மிகவும் சிறப்புடையதொரு பகுதியாகும்.

## சா. குன்றம்பூதனர்

இப் புலவர் பெருமான், செவ்வேட்குரிய கூ-ஆம் பாடலையும் கஅ-ஆம் பாடலையும் இயற்றியருளியவராவர்.

இவர் அயனாலே வீழ்த்தப்பட்ட ஆகாய கங்கையைச் சிவபெருமான் தமது செஞ்சடைப்பாரத்தை விரித்து உதிர்ந்து விழுமொரு மலரைத் தாங்கும் அத்துணை எளிதாகத் தாங்கிய தனிப் பெருஞ் சிறப்புடையோன் என அழகாகக் கூறியுள்ளார்.

இனி, வடமொழியாளர்க்குத் தமிழர்க்கே சிறந்துரிமையுடைய தள்ளாப் பொருளியல்பினையும், அதன்கண் அகப்பொருள் பற்றிய களவு கற்பென்னும் கைகோள் இரண்டனுள் களவு சிறந்தவாறும், அத் தமிழை ஆராய்ந்தமையானே முருகன் சிறந்தவாறும், அக் களவிற் புணர்ச்சியுடைமையான் வள்ளி சிறந்தவாறும் ஓதும் பகுதி மிகமிக இன்பந்தருவதாகும்.

இனி இப் புலவர்பெருமான், குறிஞ்சி நிலக்கிழவனாகிய முருகவேளுக்கும், தேவசேனைக்குமிடையே நிகழ்த்தும் சொல்லாடலும் வள்ளி அம் முருகவேளை இனி அத் தேவசேனை

"குறுகல் என்று கோதை கோலாக
இறுகிறுக யாத்துப் புடை"த்தலும்,

பின்னர், வள்ளியின் மயிலும், தேவசேனை மயிலும், கிளி, வண்டு முதலியனவும் செய்யும் பூசலும், இருவர் தோழியரும் எதிர்த்துப் பொருதலும், (இப் புலவர் மண்ணவர் மகளாகிய வள்ளியின் சார்பினின்று) தேவசேனையின் தோழியரைத் தோற்றோடுமாறு செய்தலும், பிறவும் மிக மிக இன்பந்தரும் முறையில் விளம்பியுள்ளார்.

இனி, இவர் கஅ - ஆம் பாடலில் ஒருகானவன் ஒள்ளொளி ஆல் மஞ்ஞை ஒன்றன் எழிலில் மனம் போக்கித் தன்னை மணிப்பொறி மறந்து நிற்றலும், அவன் காதலி அச் செயலேதுவாக அவனோடு ஊடிப் பேசுதலும், அவன் அவட்கு நயமாகப் பணிமொழி கூறி உணர்த்துதலும்,

தலைவன்பானின்று வரும் பாணன் ஒருவனைத் தலைவி அசதியாடிப் 'பாணா நின்பாட்டுப் பொய்வளம்பூத்தன' என்று நகுதலும் பிறவும் நயம்படக் கூறியுள்ளார்.

குன்றம் பாடுதலில் வல்லவர் ஆதல் கருதியே இவர் 'குன்றம் பூதனார்' என்று வழங்கப்பட்டனர் போலும்.

## எ. கேசவனார்

இப் புலவர்பெருமான் கசு-ஆம் பாடலை யாத்தவர். மேலும், அப் பாட்டிற்கு இவரே இசை வகுத்துள்ளனர். எனவே, இப் பெரியார் இயலிற்போன்றே இசையினும் வல்லுநர் என்று தெரிகின்றது.

இவர், "சூர்மருங் கறுத்த சுடர் வேலோயே!" "பாட்டமர்ந்தோயே!" "நறுமலர் வள்ளிப் பூநயந்தோயே!" "திருவுடையோயே!" "அறனமர்ந்தோயே!" என நயம்பட விளித்து, 'நின்னைத் துன்னித்துன்னி வழிபடுவதன் பயம் இன்னும் இன்னும் அவ் வழிபாடு நின் தொன்முதிர் புகழினும் பலவாகுக' என வேண்டுதல், இவர் அப் பெருமான் சேவடியைக் கூடுமென் பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா மேம்பாடுடையார் என்பதைப் புலப்படுத்தும்.

## அ. நப்பண்ணனூர்

செவ்வேள் மேலதாகிய கஅ-ஆம் பாடல் இவரால் இயற்றப் பட்டது. இவராலே கூறப்படும் இனிய செய்திகள் பல இம் முன்னுரையிலேயே முன்னும் எடுத்துக் காட்டப்பட்டன.

## கூ. நல்லச்சுதனூர்

இவர் செவ்வேட்குரிய உக-ஆம் பாடலை இயற்றியவர் ஆவர். இவர், இப் பரிபாடலின்கண் கசு, கஎ, கஅ, உ0 ஆகிய பாடல் களுக்கு இசைவகுத்தவருமாவார். ஆகவே, இவரும் இயலினும் இசையினும் புலமை வாய்ந்தவர் என்று தெரிகின்றது. மேலும், இவர் கூத்தியற் கலையினும் வல்லவர் என்பது (உக) இப் பாடலில் கஅ - ஆம் அடிதொடங்கி உஅ - ஆம் அடி முடியவும், ௫௪-ஆம் அடிதொடங்கி சு௫-ஆம் அடி முடியவும் கூறும் கூத்துச் செய்தி களான் அறியலாம்.

## க0. நல்லழிசியார்

இவர், வையையைப்பற்றிய கசு-ஆம் பாடலையும் செவ்வேட் குரிய கஎ-ஆம் பாடலையும் இயற்றியவராவார்.

## கக. நல்லெழினியார்

இவர் கங-ஆம் பாடலை இயற்றியவராவர். இவர், சுத்துவை நூலில் வல்லவர் என்பது இவர் பாடலால் உணரப்படும். இவர் திருமாலை வண்ணித்திருக்கும் பகுதி சிறப்புடையது.

## கஉ. நல்வழுதியார்

இவர், வையைபற்றிய கஉ-ஆம் பாடலை இயற்றியவர். இவர், வையையின்கண் புதுநீர் பெருகிவரும் காட்சி கற்போர்க்குக் கண்கூடாப் புலப்படும்படி ஓதியுள்ளார். இவர் இசைச் செய்திகளையும் நீராடுவோருள் நிகழும் சுவைமிக்க சொல் லாட்டங்களையும், தன் கணவனை மற்றொருத்தி பார்த்ததன் பொருட்டு அவனோடு பிணங்கும் பேதையின் சொல்லையும், பிழை யிலாத அத் தலைவன் அவளைத் தொழுது 'என் பிழைப்பறி யேன் இயம்புக!' என்று நயத்தலும், இன்னோரன்ன பிறவும் இன்பம் கெழும இயம்பியுள்ளார். வழுதி என்னுமிவர் பெயர் இவர் பாண்டியர் பழங்குடித் தோன்றல் என்பதனை உணர்த்தும்.

## கங. மையோடக்கோவனூர்

இவர், வையைக்குரிய எ - ஆம் பாடலை யாத்தவர். இவர், மகளிரின் நீர்விளையாடலை மாண்புற விளக்கியுள்ளார்.

கடவுள் துணை

# பரிபாடல்

## மூலமும் உரையும்

### முதற்பாடல்

### திருமால்

பொருட் சுருக்கம்

(கக) சேவலங் கொடியோய்! (உஎ) அண்ணலே!! (உஅ) இலங்குபூண் மாலே! (ஙசு) திருமறு மார்ப! (சுரு) வாய்மொழிப் புலவ!

க - ரு: நீ, ஆதிசேடனுடைய ஆயிரந்தலைகளும் நின் திருமுடிக்கு மேலே விரிந்து நிழற்று நிற்ப மார்பினிடத்தே திருமகள் வீற்றிருப்ப விளங்காநின்றனை; மேலும் பலதேவனாக வும் இருக்கின்றனை.

சு - கங: நீ, தாமரைமலரை ஒத்த கண்களை உடையை; காயாம்பூவை ஒத்த திருமேனியை உடையை; திருமகள் விரும்பியுறையும் மார்பினை உடையை; அந்த மார்பினிடத்தே விளங்குகின்ற கௌத்துவமணி அணியை உடையை; பொன்னுடையை அணிந்துள்ளனை; நினது பெருமையை அந்தணருடைய வேதம் விளங்கக் [illegible].

கச - உரு:

உசு - ஙஉ: நீ, நின்னோடு பகைத்தெழுந்தவருடைய வலிகெடவென்று போரிடத்தே மேம்பாடுடைய தலைவனாக விளங்கா நின்றனை; நீ காமனும் சாமனுமாகிய இருவருக்கும் தந்தை

யாவாய்; மயக்கமற்ற முனிவர்க்குங்கூட நின் வரலாறறிதல் அரிதேயாம்; அங்ஙனமாதலின் எளியேங்கள் நின்னியல்பினை உணர்ந்து கூறுதல் எங்ஙனம் கூடும்?

**௩௩ - ௩௬ :** நின் பெருமையின் அருமையினை யாங்கள் உணர்ந்து வைத்தும் யாங்கள் நின்பால் வைத்த ஆர்வம் பெரிதாகலின், அவ் வார்வம் காரணமாக யாங்கள் கூறுபவற்றைச் சிறுமையுடையன என்றிகழ்ந்து விடாமல் திருவருள் புரிதல் வேண்டும்.

**௩௭ - ௪௮ :** அந்தணர் ஓம்பும் அறமும், நின் அன்பர்க்கு நீ அருளும் அருளும் நீயே! தீயோரைத் திருத்தும் மறமும் நீயே! நீ பகைவர்க்கியற்றும் துன்பமும் நீயே! திங்களும் ஞாயிறும் தீயும் நீயே! அழிக்கும் ஆற்றலுடைய சிவனும் நீ, அவன் செயலும் நீயே! வேதமும் நீயே! அதனை ஓதும் பிரமனும் அவன் படைத்தற் றொழிலும் நீயே! முகிலும் விசும்பும் நிலமும் நிலத்தினின்றுயர்ந்த இமயமலையும் நீயே!

**௪௯ - ௫௪ :** நீ இவ்வாறு எல்லாப் பொருளும் தொழிலும், பிறவுமாக இருத்தலானே, நினக்கு உவமையாவாரை யாங்கள் காண்கின்றிலேம். நீ மன்னுயிர்க்கெல்லாம் தலைவன் ஆகலின், அங்ஙனம் தலைமைபூண்டோர் பிறரின்மையின் அத்தகைய புகழோடே பொலிந்து நீ நின்னையே ஒத்திருக்கின்றனை.

**௫௫ - ௬௦ :** மேலும், நின்னையே ஒக்கும் புகழினையும் உடையை; பொன்னுடையை உடையை; கருடக் கொடியுடையை; சங்கமும் சக்கரமும் உடையை; நீலமணி போன்ற நிறமுடையை: அளவற்ற புகழினையும் உடையை; அழகு மிக்க மார்பினையுடையை.

**௬௧ - ௬௫ :** இவ்வாறு நின் புகழ்களை யாமறிந்த அளவானே கூறி, யாம் எம்முடைய சுற்றம் சூழ நினது திருவடிக்கண் எய்தி இன்புறு நெஞ்சினேமாய், நின் தாள்நிழல் தொழுது நாள்தோறும் பரவுவோம்.

ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை
தீயுமிழ் திறனொடு முடிமிசை அணவர
மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்
சேயுயர் பணைமிசை எழில்வேழம் ஏந்திய
வாய்வாங்கும் வளைநாஞ்சில் ஒருகுழை யொருவனை;
(இது தரவு)
எரிமலர் சினைஇய கண்ணை பூவை
விரிமலர் புரையு மேனியை மேனித்

திருஞெமர்ந் தமர்ந்த மார்பினை மார்பில்
தெரிமணி பிறங்கும் பூணினை மால்வரை
எரிதிரிந் தன்ன பொன்புனை உடுக்கையை
சேவலங் கொடியோய்நின் வலவயி னிறுத்து
மேவலுட் பணிந்தமை கூறும்
நாவல் அந்தணர் அருமறைப் பொருளே;

(இது கொச்சகம்)

* இணைபிரி யணிதுணிபிணி மணியெரிபுரை
விடரிடு சுடர்படா
பொலம்புனை வினைமலர தெரிதிரடேரி
யுருளிகனமிகு முரணமிகு
கடறருமணியொடு முத்தியாத்த நேரணி
நெறிசெறி வெறியுறு
முறலவி றலஙகண ஙகு
விரருரணி துணிமணி
வெயிலுற ழெழிலபுகழலா மலாமார்பின
னெரிவயிர நுதிநுதி
யெறிபடை யருதது மலையிவாஙவை
யினிறறணி படலினமணி
யியலெறு ழெழிலினிசை யிருளகல
முறுகிறகு புரியொருபுரி
நாணமலா மலரிலகின வளாபருதியி
ஞொளிர மணிமார பணிமண
மிகநாறுருவின விரைவளிமிகு கடுவிசை
யுடுவுறுதலை நிரையித
ழுணிவயிரிய வமாரைப் பொரெழுந்
துடனறிரை ததுரைஇய
தானவாசிரமு மிழபுனலபொழி பிழிந்துர
முதிரபதிர பலஙதொ
டாவமா வென்றகணை;

(இவை நான்கும் அராகம்)

பொருவேம் என்றவர் மதந்தபக் கடந்து
செருமேம் பட்ட செயிர்தீர் அண்ணல்

* கச-ஆம் முதல் உரு-ஆம் அடி முடியவுள்ள அராகங்கள் நான்கும் உருக்காண முடியாதபடி சிதைந்து கிடக்கின்றன.

இருவர் தாதை இலங்குபூண் மாஅல்
தெருள நின்வர வறிதல்
மருளறு தேர்ச்சி முனிவர்க்கும் அரிதே;
(இஃது ஆசிரியம்)

அன்ன மரபின் அனையோய் நின்னை
இன்னனென் றுரைத்தல் எமக்கெவன் எளிது;
(இது பேரெண்)

அருமைநற் கறியினும் ஆர்வ நின்வயிற்
பெருமையின் வல்லா யாமிவண் மொழிபவை
மெல்லிய எனாஅ வெறாஅ தல்லியந்
திருமறு மார்பநீ அருளல் வேண்டும்;
(இஃது ஆசிரியம்)

விறன்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும்
அறனும் ஆர்வலர்க் களியு நீ
திறனிலோர்த் திருத்திய தீதுதீர் சிறப்பின்
மறனும் மாற்றலர்க் கணங்கு நீ
அங்கணேர் வானத் தணிநிலாத் திகழ்தரும்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ
ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
மைந்துடை யொருவனு மடங்கலு நீ
நலமுழு தளைஇய புகரறு காட்சிப்
புலமும் பூவனு நாற்றமு நீ
வலனுயர் எழிலி மாக விசும்பும்
நிலனு நீடிய இமயமு நீ;
(இவை ஆறும் பேரெண்)

அதனால்,
(இது தனிச்சொல்)

இன்னோர் அனையை இனையை யாலென
அன்னோர் யாமிவண் காணா மையின்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னுயிர் முதல்வனை ஆதலின்
நின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே.
(இது சுரிதகம்)

நின்னொக்கும் புகழ்நிழலவை
பொன்னொக்கும் உடையவை
புள்ளின் கொடியவை புரிவளை யினவை

எள்ளுநர்க் கடந்தட்ட இகனே மியவை
மண்ணுறு மணிபாய் உருவினவை
எண்ணிறந்த புகழவை எழின் மார்பினவை;
(இவை சிற்றெண்ணும் பேரெண்ணும் இடையெண்ணும்)
ஆங்கு,
(இது தனிச்சொல்)
காமரு சுற்றமொ டொருங்குநின் அடியுறை
யாம்இயைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழிப் புலவநின் தாள்நிழல் தொழுதே.
(இது சுரிதகம்)

இது கடவுள் வாழ்த்து

## உரை

க - ரு: ஆயிரம்....................ஒருகுழை யொருவனை

(**இதன் பொருள்**) *அணங்கு உடை விரித்த ஆயிரம் அருந்தலை - எவ்வுயிர்க்கும் அச்சந்தரும் இயல்பினையுடைய படம் விரிக்கப்பட்ட ஆதிசேடனுடைய நோக்குதல் அரிய ஆயிரந் தலைகளும், தீ உமிழ் திறனொடு - சினத்தீயைச் சொரிகின்ற தன்மையோடே, முடிமிசை அணவர - நினது திருமுடியின் மேலிடத்தே உயர்ந்தெழுந்து நிழற்றுநிற்ப, மா உடை மலர்மார்பின் - திருமகள் வீற்றிருத்தலுடைய அகன்ற திருமார்பினையுடையையாய் இருத்தலோடும், மைஇல் வால்வளைமேனி - குற்றமில்லாத வெள்ளிய சங்கினை ஒத்த நிறத்தினையும், சேய் உயர்பணைமிசை எழில்வேழம் உயர்த்திய - மிக உயர்ந்த மூங்கிற் கோலின் உச்சியிலே கட்டப்பட்ட அழகிய யானைக்கொடியை உயர்த்தியவனும், வாய்வாங்கும் வளைநாஞ்சில் - கூர்மை செய்யப்பட்ட வளைந்த கலப்பைப் படையுடையவனும், ஒருகுழை ஒருவனை - ஒற்றைக் குழையை உடையவனுமாகிய பலதேவனாகவும் திகழாநின்றனை;*

(**விளக்கம்**) *விரித்த - விரிக்கப்பட்ட. அணங்கு - அச்சம்; துன்பம் எனினுமாம். ஆயிரம் அருந்தலையும் எனவேண்டிய உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. என்னை?,*

> *"இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு*
> *வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்."*
>
> *(தொல் - சொல்-சூ - ௩௩)*

*என்பது விதியாகலான் என்க.*

*அருந்தலை என்றது காண்டற்கரியதலை என்றவாறு. "பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்" என்னும் முதுமொழியும் காண்க.*

தீ - சினத்தீ என்க. திறன் - தன்மை. மார்பின் என்புழி மார்பினையுடையையாய் இருத்தலோடும் எனச் சில சொற் பெய்து கூறுக.

மா - திருமகள். மாவுடை என வகரவுடம்படு மெய் பெறுதலே பெரும்பான்மையாயினும் வகரமே பெறல் வேண்டும் என்ற வரையறை யின்மையால் 'மாயுடை' என யகரவுடம்படு மெய்பெற்று முடிந்தது, 'ஆயிருதிணையின்' என்புழிப்போல.

மலர்மார்பு: வினைத்தொகை. மை - குற்றம். வளை - சங்கு. சேயுயர்: ஒரு பொருட் பன்மொழி. வேழம்: கொடிக்கு ஆகுபெயர். மேனி ஒருவனை, ஏந்திய ஒருவனை, நாஞ்சில் ஒருவனை, ஒருகுழை யொருவனை எனத் தனித்தனிக் கூட்டி முடித்துக் கொள்க. வாய் வாங்குதல் - கூர்செய்தல். கூர்வாங்குதல் என்னும் வழக்குண்மையும் உணர்க. நாஞ்சில் - கலப்பை. ஒருகுழை யொருவன் - பலதேவன்; "ஒருகுழை யொருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்" (கலி-௨௬; க) எனப் பிறரும் ஓதுதல் காண்க. ஒருவனை என்புழி ஐகாரம் சாரியை.

இது, திருமாலே! நீ திரு வைகுந்தத்தே திருமகளோடும் அரவப் பாயலில் அறிதுயில் கொண்டிருக்கும்பொழுதே பலதேவன் முதலிய திருவவதாரமூர்த்திகளாகவும் இருந்து திருவிளையாடல் புரிகின்றனை என வியந்தவாறாகக் கொள்க.

௬ - கரு: எரிமலர்................அருமறைப் பொருளே

(இ - ள்.) (கக) சேவல் அம் கொடியோய் - கருடச் சேவல் எழுதப்பட்ட அழகிய கொடியை உடைய பெருமானே!, எரிமலர் சினை இய கண்ணை - நீ தாமரைமலரை வென்ற அழகிய கண்களை உடையை, பூவை விரிமலர் புரையும் மேனியை - நீ காயாவினது மலர்ந்த நாண்மலரின் நிறத்தை ஒக்கும் திருமேனியை உடையை, மேனி - அத் திருமேனியின்கண், திரு ஞெமர்ந்து அமர்ந்த மார்பினை - திருமகள் மிகவும் விரும்பி உறைந்த மார்பினை உடையை, மார்பின் - திருவீற்றிருந்த அம் மார்பினிடத்தே, தெரிமணி பிறங்கும் பூணினை - நினக்கே உரியதெனா அறியப் பட்ட கௌத்துவமணியாகிய திகழும் அணியை உடையை, மால்வரை எரிதிரிந்தன்ன பொன்புனை உடுக்கையை - கரிய மலையைச் சூழ்ந்து தீப்பிழம்பு சுற்றினாற் போன்றதொரு பொன் னிற ஆடையும் அணியப்பெற்றனை, நாவல் அந்தணர் அருமறைப் பொருள் - நாவன்மையுடைய அந்தணர்களுடைய உணர்தற்கரிய வேதப் பொருள், நின் வலவயின் நிறுத்தும் மேவலுள் - நீ நினது அருளுடைமையானே நினது வலப் பக்கத்தே நிலைநிறுத்தப்பட்ட உயிர்கள் நினது அருட் டமுவுத லுள்ளே அமர்ந்து, பணிந்தமை கூறும் - நின்னை வழிபடும் தன்மையை விரித்துக் கூறுநிற்கும்; யாங்கள் கூறவல்லேம் அல்லேம்.

(வி - ம்.) எரிமலர் - தாமரைமலர். எரிமலர் என்றது, தீப் போன்ற மலர் என உவமை குறியாது உவம ஆகுபெயராகித் தாமரை என்னும் பொருண் மாத்திரையே குறித்து நின்றது. ஆகலின் எரி போன்ற தாமரைமலர்போன்ற கண் என விரித்து அடுக்கிய தோற்றம் என்னும் உவம வழுவாக்காதொழிக. சினைஇய - சினந்த; உவம வுருபின் பொருட்டு. கண்ணை, மேனியை, மார்பினை, பூணினை, உடுக்கையை என்பன முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்றுக்கள். நீ நின் வலவயின் நிறுத்தும் உயிர் நின் மேவலின்கண் இருந்து பணிந் தமை எனச் சில சொற்கள் வருவித்துமுடிக்க. மேவல் - விரும்பி அணைத்துக்கோடல். இதனாற் கூறியது நீ உயிர்களை நின் திருவடி நீழலில் அமைத்து அருளாற் றழுவிக்கொள்வதும், அத் தழுவலின்கண் என்றுமிருந்து அவ்வுயிர்கள் நின்னை வழிபடுதலால் எய்தும் நிரதிசய இன்பமும் முதலியவற்றை வேதப்பொருள் கூறும் யாங்கள் அவை யிற்றை உணர்ந்து கூறும் தன்மையுடையேம் அல்லமாகலின் கண்ணை! மேனியை! என்பனபோன்ற கூறி வழிபடுவேமாயினேம் என்ற படியாம்.

ஞெமர்தல் - பதிதல்; பரவுதலுமாம். ஞெமர்ந்தமர்ந்த என்ற தற்குப் பதிந்திருந்த எனினுமாம். தெரிமணி - அடையாளந்தெரிந்த மணி; இது திருமாலுக்குரிய மணி என யாவரும் தெரிந்த மணி என்க. அஃதாவது கௌத்துவமணி.

[குறிப்பு: கச - ஆம் அடிமுதல் உடு - ஆம் அடிமுடியவுள்ள பகுதி உருக்காணவியலாதபடி பெரிதும் சிதைந்து கிடக்கின்றமையால் ஈண்டு அப் பகுதி உரை வரையப்படாமல் விடப்பட்டது.]

உசு - நஉ: **பொருவேம்......................எளிது**

(இ - ள்.) பொருவேம் என்றவர் மதம் தபக் கடந்து - தமது அறியாமையாலே நின்னோடு போர் செய்வேம் என்று துணிந்து வந்து எதிர்ந்த அவுணர்களுடைய வலி கெடும்படி வென்று, செரு மேம்பட்ட செயிர்தீர் அண்ணல் - போரின் கண்ணே மேன்மை எய்திய குற்றமற்ற தலைமையினை யுடையோனே!, இருவர் தாதை - காமனும் சாமனுமாகிய இருவருக்கும் தந்தையாகியவனே!, இலங்கு பூண் மாஅல் - விளங்காநின்ற அணிகலன்களையுடைய திருமாலே!, நின்வரவு தெருள அறிதல் - நினது வரலாற்றினை விளக்கமாக அறிந்து கொள்ளுதல், மருள் அறு தேர்ச்சி - மயக்கம் தீர்ந்த தெளிவினை யுடைய, முனைவர்க்கும் அரிது - முனிவர்களுக்கும் அரிதே யாகும்; அன்ன மரபின் அனையோய் நின்னை - அப்படிப்பட்ட இயல்பினையுடைய அத்தகைய நின்னை, இன்னன் என்று உரைத்தல்-இன்ன தன்மையுடையன் என்று கூறுதல், எமக்கு- எளியேமாகிய எம்மனோர்க்கு, எவன் எளிது - எங்ஙனம் எளி தாகும்; ஆகாதன்றே.

(வி - ம்.) பொருவேம் - போர்செய்வேம். பொருவேமென்று எழுந்தவர் அவுணர் என்க. மதம் - வலிமை. தப - கெட. செரு

வின்கண் மேம்பட்ட என்க. அஃதாவது வாகைசூடுதல். செயிர் - குற்றம். அண்ணல் - தலைமைத்தன்மையுடையோன். இருவர் - காமனும் சாமனும் என்க. நின்வரவு தெருள அறிதல் என மாறுக. மருள்-மயக்கம். தேர்ச்சி - தெளிவு. மருளறு தேர்ச்சி முனைவர் என்றது வினையினீங்கி விளங்கிய அறிவுடையோரை; இவரைச் சீவன் முத்தர் என்ப. சீவன் முத்தர்க்கும் இறைவனியல்பு அறிதல் கூடாமையின் 'முனைவர்க்கும் அரிதே' என்றார். உம்மை: உயர்வு சிறப்பு. 'அன்னமரபின் அனையோய்' என்றது, முனைவர்க்கும் அறியவியலாத மரபினையுடைய அத்தகையோய் என்றவாறு. இன்னன் - இவ் வியல்புடையோன். "யாரும் ஓர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்." (திருவாய். ங : ங) எனப் பெரியாரும் ஓதுதல் காண்க. எமக்கு என்றது, சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினேமாகிய எங்களுக்கு என்பதுபட நின்றது.

> " பொன்ஆனாய் பொழிலேழும் காவல்பூண்ட
> புகழானாய் இகழ்வாய தொண்டனேன்நான்
> என்னானாய்! என்னானாய்! என்னின் அல்லால்
> என்அறிவேன் ஏழையேன்,"
> (திருநெடுந்தாண்டகம் - கூ)

எனவரும் திருமங்கையாழ்வார் மெய்ம்மொழியை ஈண்டு நினைக.

ஙங - ஙசு: அருமை.................அருளல்வேண்டும்

(இ - ள்.) அருமை நற்கு அறியினும் - நின் வரலாறு அறிதற்கரிதாதலை யாங்கள் நன்றாக அறிந்திருப்போமாயினும், நினவயின் ஆர்வம் பெருமையின் - அடியேங்கட்கு நின் திருவடிக்கண் எழுந்த அன்புடைமை சாலப் பெருமையுடையதாகலின், யாம் இவண் வல்லா மொழிபவை - யாங்கள் இவ்விடத்தே கூறமாட்டாதனவாய்க் கூறுகின்ற மொழிகள், மெல்லிய எனாஅ - சிறுமையுடையன என்று கருதி, வெறாஅது - வெறுத்துவிடாமல், அல்லி அந் திருமறு மார்ப - தாமரையின்கண் வீற்றிருக்கும் அழகிய திருமகளாகிய மறுவினையுடைய மார்பையுடையோனே!, நீ அருளல்வேண்டும் - நீ எமக்குத் திருவருள் புரிதல் வேண்டும்;

(வி - ம்.) நற்கு - நன்கு; வலித்தல் விகாரம். ஆர்வம் - அன்பு, வல்லா - மாட்டாத. வன்மையற்றனவாய் என்க. மெல்லிய - மென்மை. ஈண்டுச் சிறுமைப்பண்பு குறித்து நின்றது. எனா - என்று. திருமறு: பண்புத்தொகை. திருவாகிய மறு என்க. மறு-களங்கம். 'திருமறுமார்ப' என்றது திருமகளாகிய களங்கம் அல்லது பிறிது களங்கம் இல்லாத மார்பனே என்றபடியாம். அல்லி - அகவிதழ்: ஈண்டுத் தாமரைக்கு ஆகுபெயர். அந்திரு - அழகிய திருமகள்.

ஙஎ - சஅ: விறல்மிகு.....................இயமரும்நீ

(இ - ள்.) விறல்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும் அறனும் - வெற்றி மிகுந்த பெரும் புகழினையுடைய அந்தணர்களாலே காக்கப்படும் அறமும், ஆர்வலர்க்கு அளியும் நீ - நின்

அன்பர்களுக்கு நீ அருள்கின்ற திருவருளும் நீயே, திறன் இலோர்த் திருத்திய தீது தீர் சிறப்பின் மறனும் - நன்னெறியிற் செல்லும் திறனில்லாதவரை அந் நெறிக்கட் செல்லும்படி திருத்திய குற்றந்தீர்ந்த சிறப்பினையுடைய மறமும், மாற்றலர்க்கு அணங்கும் நீ - இவ்வாற்றால் நினக்குப் பகையாயினாரை வருத்தும் துன்பமும் நீயே, அங்கண் ஏர் வானத்து அணிநிலாத் திகழ்தரும் திங்களும் - அழகிய இடத்தையும் எழுச்சியினையு முடைய வானத்தின்கண் அழகிய நிலவொளியோடே விளங்கா நின்ற திங்களும், தெறுகதிர்க் கனலியும் நீ - சுடுகின்ற சுடரினை யுடைய ஞாயிறும் நீயே, ஐந்தலை உயரிய அணங்கு உடை அருந்திறல் மைந்து உடை ஒருவனும் - ஐந்து தலைகளைத் தனக்குத் தோன்றுவித்துக்கொண்ட கொல்லும் தொழிலை யுடைய கடத்தற்கரிய திறமையையும் வலிமையையும் உடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானும், மடங்கலும் நீ - அவனாற் செய்யப்படுகின்ற ஒடுக்கத் தொழிலும் நீயே, நலம் முழுது அளைஇய புகர்அறு காட்சிப் புலமும் - நன்மை முழுதும் பொருந்திய குற்றமற்ற மெய்யுணர்வினை அளிக்கும் வேதமும், பூவனும் - மலரின்மேலிருப்பவனாகிய பிரமனும், நாற்றமும் நீ - அப் பிரமனாலே செய்யப்பட்ட படைப்புத்தொழிலும் நீயே, வலன்உயர் எழிலியும் - வானின்கண் வலமாக எழுந்து உயரும் முகில்களும், மாகவிசும்பும் - மாகமாகிய வானமும், நிலனும் - அவ் வானத்தாலே ஏந்தப்பட்ட நிலவுலகமும், நீடிய இமயமும் நீ - அந் நிலத்தின்கண் நின்று உயர்ந்த இமயமலையும் ஆகிய அனைத்தும் நீயே காண்.

(வி - ம்.) 'விறல்மிகு விழுச்சீர் அந்தணர்' என்றது, பார்ப்பன வாகைகொண்டு புகழ்பெற்ற அந்தணர் என்றவாறு. அவர்காக்கும் அறன் என்றது, எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண் டொழுகுதலாகிய அருளுடைமையை என்க; எனவே, அந்தணரிடத்துக் காணப்படும் அருளும், நீ ஆர்வலர்க் கருளும் அருளுமாகிய இருவகையருளும் நீயே என்றபடியாம். திறன் - நன்னெறிக்கட் செல்லும் ஆற்றல். மறன் - வீரச்செயல்கள். மாற்றலர் - பகைவர். அணங்கு - துன்பம். மாற்றலர்க்கு நீ செய்யும் துன்பம் என்க. தெறுகதிர் : வினைத்தொகை. கனலி - ஞாயிறு. சிவபெருமான்தானே தனக்கு ஐந்து தலைகளை உண்டாக்கிக்கோடலின் 'ஐந்தலை உயரிய' என்றார். மடங்கல் - உலகு உயிர்கள் ஒடுங்குதல். புலம் - வேதம். பூவன் - பிரமன்; பூவிடத் துள்ளோன். நாற்றம் - நாறுதல் : அஃதாவது தோன்றுதல். தோன்று வித்தற் றொழில் என்க.

எழிலி - முகில். மாகவிசும்பு : இருபெயரொட்டு. ஞானவெளியும் மனவெளியும் உளவாகலின், மாகவிசும்பு எனப்பட்டது.

அறமும் அளியும் மறனும் அணங்கும் திங்களும் ஞாயிறும் அரனும் அயனும் அவர்செய் தொழிலும் விசும்பு முதலிய பூதமும் பிறவுமாகிய

எல்லாப் பொருளும் நீயே என்பது இப் பகுதியின் கருத்தாகக் கொள்க. இக் கருத்தினை,

" திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்துளங்கும் பரந்துளன்."
(திருவாய்மொழி - க : எ)

எனவும்,

" அரன் அயன்என உலகழித்து அமைத்துளனே."
(திருவாய் - க : அ)

எனவும் வரும்,

நம்மாழ்வார் கருத்தோடு ஒப்பிட்டுணர்க.

[குறிப்பு: இவ் வுரை பெரும்பாலும் பரிபாடலுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள பழைய உரையின் கருத்தினைத் தழுவியே எழுதப் படுகின்றது. பரிமேலழகர் உரையிற் காணப்படும் இன்றியமையாத குறிப்புக்களையும் ஆங்காங்கே விளக்கவுரையின் கீழே (பரிமே.) என்னும் அடையாளத்தின் பின் எடுத்துக் கூறப்படும்.]

(பரிமே) ௪௪. மடங்கல் - அவனிருகிய உலகுயிர்களினது ஒடுக்கம்.

௪எ. மாகமாகிய விசும்பும்; மாகமாவது பூமிக்கும் சுவர்க்கத்துக்கும் நடுவ.........

௪கூ - ருச : அதனல்.......................பொலிந்தே

(இ - ள்.) அதனுல் - இவ்வாறு எப்பொருளும் அவற்றின் பண்புகளும் தொழிலும் நீயேயாக இருத்தலாலே, இன்னோர் அனையை இனையை என - நீ இன்னவரை ஒப்பாவை இத்தகைய பண்பும் தொழிலும் உடையை என்று உவமங்காட்டிக் கூறுதற்கு, அன்னோர் யாம் இவண் காணுமையின் - நினக்கு உவமமாகுந் தகுதியுடையாரை யாங்கள் இவ் வுலகின்கண் காண மாட்டாமையானும், பொன் அணி நேமி வலங்கொண்டு ஏந்திய மன்னுயிர் முதல்வன் - மேலும் நீ பொன்னின் அழகினைக் கொண்ட சக்கரப்படையினை எல்லா வுலகினையும் ஆள்வதற்கு அடையாளமாக வலப்பக்கத்தே ஏந்திய நிலைபெற்ற உயிர்கட்குத் தலைவனும் ஆக இருத்தலானும், நின் புகழொடு பொலிந்து நின்றோரனையை - நீ நினது புகழோடே விளங்கி நின்னையே ஒத்தவனாக இருக்கின்றாய் என்பேம்;

(வி - ம்.) இன்னோர் - இன்னவர். இனையை - இவ் வியல்புகளை உடையை. அன்னோர் - உவமங் கூறத்தக்கவர். காணாமையானும் முதல்வனாகலானும் என ஈரிடத்தும் உம்மை விரித்துக் கூறுக. உவமங் காணாமையானும் உயிர்த்தலைவர் நின்னையன்றிப் பிறரின்மையானும்

நீயே நினக்கு நிகராவை என்பது கருத்து. உயிரும் அழியாப் பொரு ளாதல் பற்றி 'மன்னுயிர்' என்றார். முதல்வனை என்புழி ஐகாரஞ் சாரியை.

## ருரு - சுக : நின்னொக்கும்...............மார்பினவை

(இ - ள்.) நின் ஒக்கும் புகழ் நிழலவை - நின்னை ஒப்பார் பிறர் இலர் எனினும் நின்னையே ஒக்கும் புகழினையும் நீ உடையை, பொன் ஒக்கும் உடையவை - பொன்னை நிறத்தானே ஒக்கின்ற ஆடையினை உடையை, புள்ளின் கொடியவை - கருடக்கொடியை உடையை, புரி வளையினவை - முறுக்குடைய சங்கினையுடையை, எள்ளுநர்க் கடந்து அட்ட இகல் நேமியவை - இகழ்வாராகிய பகைவரை வென்று கொன்ற மாறுபாட்டினை யுடைய சக்கரப்படையினையுடையை, மண்ணுறு மணி பாய் உருவினவை - கழுவப்பெற்ற நீலமணியினது ஒளி பரந்தா லொத்த திருமேனியை உடையை, எண்ணிறந்த புகழவை - அளவிறந்த புகழ்களையுடையை, எழின் மார்பினவை - அழகிய மார்பினையுடையை, ஆங்கு - என இவ்வாறு கூறி;

(வி - ம்.) நிழல் - ஒளி. புகழாகிய ஒளி என்க. புள் - கருடப் பறவை. புரி - முறுக்கு. எள்ளுநர் - பகைவர். மண்ணுறு - கழுவப் பட்ட. மணி - நீலமணி. பாய் - பரவினுலொத்த என்க.

நிழலவை, உடையவை, கொடியவை, வளையினவை, நேமியவை, உருவினவை, புகழவை, மார்பினவை என்பன எட்டும், முன்னிலை ஒருமைக் குறிப்புவினை முற்றுக்கள் என்றுணர்க. இவை பெரும் பான்மையும் நிழலினை உடையினை என இன்சாரியை பெற்று வருதலே யன்றி இங்ஙனம் வருதலில்லை. இவற்றுள் இன்சாரியையன்றி அகரச் சாரியை வந்துள்ளமை காண்க. இவ் வகரம் இசைநிறை என்று பரிமேலழகர் கூறியுள்ளனர். இப் பரிபாடலின்கண் பிறண்டும் பற்பல சொற்கள் இங்ஙனமே வந்துள்ளன; அவையிற்றை உணர்ந்து கடைப் பிடிக்க.

## சுஉ - சுரு : காமரு..........................தொழுதே

(இ - ள்.) எம் உறு நெஞ்சத்தேம் யாம் - இன்பமுறுகின்ற நெஞ்சையுடையேமாகிய யாங்கள், காமரு சுற்றமொடு - யாங்கள் விரும்புகின்ற எம் சுற்றத்தாரோடு, வாய்மொழிப்புலவ நின் அடி யுறை ஒருங்கு இயைந்து ஒன்றுபு - வேதத்தை அருளிச்செய்த வித்தகனே! நினது திருவடியாகிய புகலிடத்தின்கண்ணே ஒருசேரக் கூடிப் பொருந்தி நின்று, நின் தாள்நிழல் தொழுது - நினது திருவடி நீழலைக் கைகுவித்துக் கும்பிட்டு, வைகலும் பொலிகெனப் பரவுதும் - என்றென்றும் அத் திருவடி விளங்குவ தாக என்று வாழ்த்துவேம்.

(வி - ம்.) நிழலவை.........மார்பினவை என இவ்வாறு யாம் அறிந்த அளவானே புகழ்ந்து கூறி யாம் ஒன்றுபு நின்தாள் நிழல் தொழுது, அது வைகலும் பொலிகென வாழ்த்துவேம் என இயைத்துக் கொள்க.

காமரு - விரும்புகின்ற. காமம் வருதற்குக் காரணமான சுற்றம் எனினுமாம். காமம்வரு என்பது காமரு என மருவிற்று என்ப. சுற்றம் என்றது, அடியார் கூட்டத்தினை என்க. நின் திருப்பெயரை ஓதுதலே எமக்குப் பேரின்பம் என்பார், 'ஏமுறு நெஞ்சத்தேம்' என்றார்.

"பச்சைமா மலைபோன் மேனிப் பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே ஆயர்தங் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே."

எனவரும் அநுபவமுடைய ஆழ்வார் மொழியும் காண்க. புலமையுள் வைத்து வேதம் கூறுதல் தெய்வப்புலமையே ஆதல்பற்றி திருமாலின் சிறப்புக்களில் வேதத்தை அருளிச்செய்தது சிறந்த பெருமையாகக் கருதி 'வாய்மொழிப் புலவ!' என்று விளித்தார். வாய்மொழி - வேதம். "அன்னமாய் அருமறைகள் அறைந்தாய் நீ அவை உன்னை முன்னம் யார் ஓதுவித்தார்? எல்லாரும் முடிந்தாரே?" எனக் கம்பநாட்டாழ்வாரும்,

"சூதென்று களவு சூதுஞ் செய்யாதே
வேதம்முன் விரித்தான் விரும்பிய கோயில்
மாதுறு மயில்சேர் மாலிருஞ் சோலை
போதவிழ் மலையே புகுவது பொருளே!"

(திருவாய்மொழி உ : கo - கo)

என, நம்மாழ்வாரும் ஓதுதல் காண்க. வேதம் அநாதியே ஆயினும் சிற்றறிவினவாகிய உயிர்கள் உணரும்பொருட்டு விரித்தருளிய தெய்வப்புலவனே! என்றவாறு.

## இரண்டாம் பாடல்

---

# திருமால்

பொருட் சுருக்கம்

**க - ச :** ஒன்றற்கொன்று மாறிவரும் இயல்புடைய திங்களும் ஞாயிறும் கெட்டு, விண்ணுலகமும் வெறும் பாழாகி விடப் பின்னர், வானமும் கெட்டு இல்லையாகச் சிதைந்தொடுங்கிய ஊழிக்காலங்கள் பற்பல முறைமுறையாகக் கழிந்தனவாக;

**ரு - கஉ :** அவ் வூழிகளின் பின்னர், அப் பாழினின்றும் வானந்தோன்றிய முதற்பூதத்தின் ஊழியும், அவ் வானத்தினின்றும் காற்றுத் தோன்றிக் கிளர்ந்து வீசாநிற்கும் இரண்டாம் பூதத்தின் ஊழியும், அந்தக் காற்றினின்றும் தீத்தோன்றிச் சுடர்வீசிய மூன்றும் பூதத்தின் ஊழியும் அந்தத் தீயினின்றும் பனியும் மழையும் தோன்றிப் பெய்த நான்காம் பூதத்தின் ஊழியும் ;

**கங - கக :** ஒடுங்குங்காலத்தே நீரினுள் முழுகி யொடுங்கிய பெரிய நிலமாகிய ஐந்தாம் பூதம் மீண்டும் அவ் வெள்ளத்தினூடே பீடுபெற்றுத் திரண்டு செறிந்த ஐந்தாம் ஊழியும், பற்பல எண்ணிறந்தனவாகக் கழிந்தபின்னர், இந் நிலத்தின் கண்ணே உயிர்கள் தோன்றும் பொருட்டுத் திருமாலே! நீ பன்றி உருவங்கொண்டு நீரினுள் முழுகிக்கிடந்த நிலத்தினை மேலே கொணர்ந்து தந்த காரணத்தாலே இந்த ஊழிக்காலம் 'வராக கற்பம்' என நின்பெயரடுத்து நின்றது. இப் பெயர் நீ பல்வேறு ஊழிகளிற் செய்த செயல்களுள் வைத்து ஒரு செயலையே உணர்த்தாநிற்கும். இச் செயல்போன்று நீ செய்த செயல்களை யாவரே அறியவல்லார்? அறிவாரிலராகலான் நினது பழமைக்குரிய ஊழிகள் உணரப்படாவாயின. ஆழி முதல்வனே! நின் திருவடிகளை வணங்கி வாழ்த்துவோம்.

**உ0 - உஎ :** பெருமானே ! நின்னை இளையன் என்பார்க்கும் பிறப்பாலே நீ பலதேவனுக்கு இளையனாதலின், இளையனாகவும் கருதப்படும் நிலைமை உடையை ; நினது பண்டை நிலைமை கருதி நீ யாவரினும் முதியை என்பார்க்கும் முதியனாகவும் உள்ளனை, இனி நின்னை ஞானக்கேள்வியான் ஆராயுமிடத்து நீ எங்கும் பரந்து எவ்வுயிர்க்கும் உள்ளுயிராயிருத்தல் புலனும்; இங்ஙனம் இளையனாதலும் முதியனாதலும் யாண்டுமிருத்தலுமாகிய இம்மூரண்பட்ட நிலைமைகள் நினக்கே யுரிய நினது பழைமையான சிறப்புக்களேயாம் ;

**௨௮ - ௩௫ :** *திருமகள் சேர்ந்த நின் குற்றமற்ற மார்பு, நீ பன்றியாகி நிலத்தை எடுத்தமை கருதி, நீ நிலமகளை மணஞ் செய்தனை என்பாருடைய சொல்லோடு (நின் மார்பின்கண் முன்னரே திருமகள் இருத்தலானே) பொருந்திற்றில்லை;*

**௩௬ - ௫௧ :** *போரின்கட் பகைவரைக் கொன்றழிக்குந் தலைவனே! நீ ஏந்திய ஆழிப்படை அவுணர்கள் தலைகளைப் பனங்காய்போல உதிரும்படி செய்து அவர்களை அழிக்கும்; அதன் உருவம் கூற்றத்தை ஒக்கும்; அதன் நிறம் பொன்சுடும் அழற்கொழுந்தையே நிகர்க்கும்;*

**௫௨ - ௫௭ :** *நின் மேனி நீலமணியையும் நின் கண்கள் இணைத்த தாமரைமலரையும், நினது வாய்மை தப்பாது வரும் நாளையும், நினது பொறை நிலத்தையும், நின் அருள் முகிலையும் ஒக்கும் என்று அந்தணர் அருமறை கூறுநிற்கும்;*

**௫௮ - ௬௮ :** *கருடக் கொடியை உடையோனே! வேள்வி யாசிரியன் கூறும் மறைமொழி நினது உருவமாகும்; வேள்வித் தூண் நீயே ஆகலான், அதன்கட் பிணிக்கப்படும் பசு நினது உணவாகும்; அவ் வேள்வியின்கண் வேதமுறைப்படி அந்தணர் வளர்க்கும் வேள்வித்தீ நீ அவ் வந்தணர் கண்கூடாகக் காணும்பொருட்டுத் தோன்றும் வெளிப்பாடாகும்;*

**௬௯ - ௭௬ :** *பெருமானே! நீ தேவர்களுக்கு அமிழ்தம் வழங்கவேண்டும் என்று திருவுளத்திற் கருதிய அளவானே அதன் பயனாகிய மூவாமையும், அழிவில்லா ஆற்றலும், சாவாமையும் அவர்களை எய்தின; அத்தகைய பெரியோனே! எம்முடைய அறிவு கொடும்பாடு அறியாமல் மெய்யுணர்வே பெறுக என்று யாம் எம் சுற்றத்தாரோடு நின் திருவடியைப் பலகாலும் தலையுற வணங்கி வாழ்த்தாநின்றேம்.*

தோன்முறை இயற்கையின் மதியோ .....
................ ............... மரபிற் றாகப்
பசும்பொ னுலகமு மண்ணும் பாழ்பட
விசும்பில் ஊழி ஊழூழ் செல்லக்
கருவளர் வானத் திசையில் தோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்
உந்துவளி கிளர்ந்த ஊழூழ் ஊழியும்
செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்
றுண்முறை வெள்ள மூழ்கி ஆர்தருபு

மீண்டும் பீடுயர் பீண்டி அவற்றிற்கும்
உள்ளீ டாகிய இருநிலத் தூழியும்
நெய்தலுங் குவளையும் ஆம்பலுஞ் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமு நுதலிய
செய்குறி யீட்டங் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்(கு)
ஊழி யாவரும் உணரா
ஆழி முதல்வநிற் பேணுதுந் தொழுதும்;
நீயே, வளையொடு புரையும் வாலி யோற்கவன்
இளையன் என்போர்க் கிளையை ஆதலும்
புதையிருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு
முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும்
வடுவில் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த
கெடுவில் கேள்வியுள் நடுவா குதலும்
இந்நிலைத் தெரிபொருள் தேரின் இந்நிலை
நின்னிலைத் தோன்றுநின் தொல்நிலைச் சிறப்பே
ஓங்குயர் வானின் வாங்குவிற் புரையும்
பூணணி கவைஇய வாரணி நித்தில
நித்தில மதாணி அத்தகு மதிமறுச்
செய்யோள் சேர்ந்தநின் மாசில் அகலம்
வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்
வைவான் மருப்பின் களிறுமணன் அயர்பு
புள்ளி நிலனும் புரைபடல் அரிதென
உள்ளுநர் உரைப்போர் உரையொடு சிறந்தன்று
ஒடியா உள்ளமொ டுருத்தோருங் குடனியைந்து
இடியெதிர் கழறும் கால்உறழ் பெழுந்தவர்
கொடியறு பிறுபு செவிசெவிடு படுபு
முடிகள் அதிரப் படிநிலை தளர
நனிமுரல்வளை முடியழிபிழிபு
தலையிறுபு தாரொடு புரள
நிலைதொலைபு வேர்தூர்மடல்
குருகு பறியா நீளிரும் பனைமிசைப்
பல்பதி னுயிரங் குலைதரை யுதிர்வபோல்

நில்லா தொருமுறை கொய்பு கூடி
ஒருங்குருண்டுபிளந்து நெரிந்துருள்புசிதறுபு
அளறுசொரிபு நிலஞ்சோரச்
சேரார் இன்னுயிர் செகுக்கும்
போரடு குரிசில்நீ ஏந்திய படையே
ஒன்னார் உடங்குண்ணுங் கூற்றம் உடலே
பொன்னேர் பவிரழல் நடக்கதன் நிறனே
நின்னது திகழொளி சிறப்பிருள் திருமணி
கண்ணே, புகழ்சால் தாமரை அலரிணைப் பிணையல்
வாய்மை வயங்கிய வைகல் சிறந்த
நோன்மை நாடின் இருநிலம் யாவர்க்கும்
சாயல் நினது வானிறை என்னும்
நாவல் அந்தணர் அருமறைப் பொருளே
அவ்வும் பிறவும் ஒத்தனை உவ்வும்
எவ்வயி னோயும் நீயே
செவ்வாய் உவணத் துயர்கொடி யோயே
கேள்வியுட் கிளந்த ஆசான் உரையும்
படிநிலை வேள்வியுள் பற்றியாடு கொளலும்
புகழ்இயைந் திசைமறை உறுகனல் முறைமூட்டித்
திகழொளி ஒண்சுடர் வளப்பாடு கொளலும்
நின்உரு புடன்உண்டி
பிறர்உடம் படுவாரா
நின்னொடு புரைய
அந்தணர் காணும் வரவு
வாயடை அமிர்தநின் மனத்தகத் தடைத்தர
மூவா மரபும் ஓவா நோன்மையும்
சாவா மரபின் அமரர்க்காச் சென்றநின்
................ ................ மரபினோய் நின்னடி
தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்
கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம்
கடும்பொடுங் கடும்பொடும் பரவுதும்
கொடும்பா டறியற்க எம்மறி வெனவே.

கீரந்தையார் பாட்டு; [1]நன்னுகனர் இசை; [2]பண்ணுப் பாலையாழ்

(பாடம்.) 1. மருத்துவனல்லச்சுவனரிசை.
2. பண்ணுக் குறிஞ்சி யாழ்.

## உரை

க - ச: தொன்முறை......................ஊழ்ஊழ்செல்ல

(இ - ள்.) தொல்முறை இயற்கையின் மதியொ.............. மரபிற்று ஆக - தொன்று தொட்டு ஒன்றற்கொன்று மாறி வரும் இயல்பினையுடைய திங்கள் மண்டிலமும் ஞாயிற்று மண்டிலமும் அழிந்தொழிதலானே அழகழிந்த இயல்பினையுடைய தாய் மேலும், பசும்பொன் உலகமும் மண்ணும் பாழ்பட - தன்னகத்திருந்த விண்ணுலகமும் நில உலகமும் பாழ்பட்டொழியா நிற்ப இறுதியில், விசும்பில் ஊழி - அவ்வானமும் இல்லையாய் ஒழிந்த ஊழிகள், ஊழ் ஊழ் செல்ல - முறையே முறையே கழிந்தனவாக;

(வி - ம்.) இப் பாடலின் முதல் நான்கு அடிகளில் உலகத்தின் ஒடுக்கமுறை மிக அழகாகக் கூறப்படுகின்றது. இப் பகுதியில் அழிந்துபோன சொற்றொடர் "ஞாயிறும் கெடுதலால் அழகிழந்த" என்னும் பொருளுடையது என்பது பரிமேலழகர் உரையாலே உணரப் படும்.

தொல்முறை - தொன்றுதொட்டு நிகழும் முறைமை. உலகம் ஒடுங்குங்கால் நிலம் நீரினுள் ஒடுங்க, நீர் தீயினுள் ஒடுங்க, தீ காற்றினுள் ஒடுங்க, காற்று வானத்தில் ஒடுங்க, வானம் பிரகிருதியில் ஒடுங்க, இம் முறையே ஊழிகள் பலவும் கழிய என்பார், 'விசும்பில் ஊழி ஊழ் ஊழ் செல்ல' என்றார். ஊழ் - முறை.

உலகம் ஒடுங்குங்கால் திங்கள்மண்டிலமும் ஞாயிற்றுமண்டிலமும் ஒளியிழந்து துகளாகி வானவெளியிலே சிதறிப்போக நிலமுதலிய உலகங்கள் பின்னர்ச் சத்தி கெட்டு நொறுங்கித் துகள்பட்டொழியும் எனவரும் இக்கருத்து இக்காலத்துப் பூத நூலோரும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாதல் உணர்க.

பசும் பொன்னுலகம் என்றது, துறக்கவுலகத்தினை.

ரு - கக: கருவளர்.........................பேணுதும் தொழுதும்

(இ - ள்.) இசையின் தோன்றி - அவ்வாறு ஊழிகள் கழிந்த பின்னர் மூலப்பிரகிருதியினின்றும் தன் குணமாகிய ஒலியுடனே தோன்றி, கருவளர் உருவு அறிவாரா வானத்து ஒன்றன் ஊழியும் - காற்று முதலிய ஏனைப் பூதங்களின் நுண்ணணுக்கள் வளர்தற்கு இடமாகி யாதோர் உருவமும் காணப்படாத வானத்தினது முதல் ஊழிக்காலமும், உந்து வளி கிளர்ந்த ஊழ் ஊழ் ஊழியும் - அந்த வானத்தினின்றும் பொருள்களை இயக்கும் காற்றுத் தோன்றிக் கிளர்ந்து வீசிய முறைமுறையாகிய இரண்டாம் பூதத்து ஊழியும், செந்தீச் சுடரிய ஊழியும் - அந்தக் காற்றினின்று சிவந்த தீத்தோன்றிச்

சுடர்வீசித் திகழ்ந்த மூன்றாம் பூதத்து ஊழியும், பனியொடு தண்பெயல் தலைஇய ஊழியும் - அத்தீயினின்றும் நீர்தோன்றிப் பனியும் குளிர்ந்த மழையும் பெய்த நான்காம் பூதத்தின் ஊழியும், அவையிற்றுள் முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு - அந் நான்கு பூத அணுக்களினூடே பின்பு பண்டு முறையாக வெள்ளத்தே முழுகிக் கரைந்து ஒழிந்த நில அணுக்கள் ஆண்டே கிடந்து, மீண்டும் பீடு உயர்பு ஈண்டி - மீளவும் தாது சிறப்பாகிய ஆற்றல் மிக்குச் செறிந்து திரண்டு, அவற்றிற்கும் உள்ளீடாகிய இருநிலத்து ஊழியும் - முற்கூறப்பட்ட நான்கு பூதங்களின் உளளீடாகிக் கிடந்த ஐந்தாவதாகிய பெரிய நிலத்தூழியும் என்று கூறப்பட்ட இவ்வூழிகள், நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும் மைஇல் கமலமும் வெள்ளமும் நுதலிய கழிப்பிய வழிமுறை - நெய்தல் முதலிய பேரெண்களாற் குறிக்கப்பட்ட காலங்களின் ஈட்டங்களையும் கடந்தபின்னர், கேழல் கோலமொடு திகழ்வரப் பெயரிய ஊழி - நீரினுள் முழுகிக் கிடந்த நிலத்தை நீ பன்றியாகி மேலே கொணர்ந்து அந்நிலத்தின்கண் உயிர்கள் தோன்றி வாழத் தருந்ததாகச் செய்த காரணத்தால் நீ மேற்கொண்ட அப்பன்றியினது அவதாரத்தோடு புணர்த்தப்பட்ட பெயரோடு திகழாநின்ற 'வராக கற்பம்' என்னும் இந்த ஊழிக்காலம், ஒருவினை உணர்த்தலின் - நினது எண்ணிறந்த திருவிளையாடலில் ஒரு திருவிளையாட்டை மட்டுமே உணர்த்தாநின்றது ஆகலின், முதுமைக்கு ஊழி யாவரும் உணரா - இவ்வொரு திருவிளையாட்டிலேயே எண்ணிறந்த ஊழிகள் கழிந்துள எனின் இத்தகைய திருவிளையாடல் எண்ணிறந்தன இயற்றிய நினது பழைமைக்குள்ள ஊழிகள் யாவரானும் அறியப்படாதனவன்றோ?, ஆழி முதல்வ - சக்கரப்படையை உடைய தலைவனே!, நின் பேணுதும் தொழுதும் - அத்தகைய நின்னைப் போற்றி வணங்குவேம்;

(வி - ம்.) கரு - பூதங்கள் தோன்றுதற்குக் காரணமாகிய பரமாணுக்கள். இசையில் - இசையினோடு என்க; இனி இசையாகிய தன்மாத்திரையினின்றுந் தோன்றி எனினுமாம். இசையிற்றோன்றி உருவறிவாரா ஒன்றன் ஊழியும் என மாறுக. வானத்து : அத்துச்சாரியை அல்வழிக்கண் வந்தது. வானமாகிய முதற் பூதத்தினது ஊழி என்க. காற்று முதலிய ஏனைப் பூதங்களின் கருவளர்தற்கு இடமானதும் யாதொரு உருவமும் அறியப்படாததுமாகிய வானத்தூழி என்க. உந்துவளி: வினைத்தொகை. வளி - காற்று. ஒன்றன் ஊழியும் என்றமையால், இரண்டன் ஊழியும், மூன்றன் ஊழியும், நான்கன் ஊழியும், ஐந்தன் ஊழியும் என அங்கங்கே ஒட்டுக. சுடரிய - சுடர்விட்டெரிந்த. நீர் தோன்றிப் பனியும் மழையும் பெய்த என்க. தலைஇய - பெய்த. அவையிற்று - அந் நான்கு பூதங்களினது. ஆர்தருபு - கிடந்து. வானமுதலிய நான்கு பூதங்களின் அகத்தே கிடந்து நிலந்திரளுதலானே அவற்றிற்கும் உள்ளீடாகிய

இரு நிலத்தூழி என்றார். ஈண்டி - செறிந்து திரண்டு என்க. நெய்தல் குவளை ஆம்பல் சங்கம் கமலம் வெள்ளம் என்பன, பேரெண்ணுப் பெயர்கள். இவற்றானும் எண் குறித்துக் கூறப்படாமல் கடந்த ஊழிகள் என்க. வழிமுறை - பின்னர். கேழல் - பன்றி. கேழற் கோலமொடு திகழ்வரப் பெயரிய ஊழி என மாறுக. அஃதாவது 'வராக கற்பம்' என்பது. உணரா - உணரப்படாதன.

(பரிமே.) கு. வானத்து என்புழி அத்து அல்வழிக்கண் வந்தது. கக. முன் அழிகின்ற காலத்தும் வெள்ள மூழ்குதலான், மீண்டும் வெள்ளம் மூழ்கி என்றார். உள்ளிடப்பட்டதனை 'உள்ளீடு' என்றார், ஆகுபெயரான்.

பரம்பொருளினின்றும் ஆகாயந்தோன்றி, அதனினின்றும் காற்றுத்தோன்றி அதனினின்றும் தீத்தோன்றி, அதனினின்றும் நீர் தோன்றி, அதனினின்றும் நிலந்தோன்றிற் றென்று வேதத்துள்ளும் கூறப்பட்டது.

உ௦ - உஎ: நீயே..............................சிறப்பே

(இ - ள்.) நீயே - அவ்வாறு யாவரானும் உணரப்படாத ஊழிகளைக் கடந்து முதியனாயிருக்கின்ற நீயே, வளையொடு புரையும வாலியோற்கு அவன் இளையன் என்போர்க்கு - நினது பிறப்புமுறை ஒன்றனையே கருதிச் சங்கின் நிறத்தை ஒக்கும் வெண்ணிறமுடையனாகிய பலதேவனுக்கு அவன் இளையவன் என்று கூறுவார்க்கு அம்முறை பற்றி, இளமை ஆதலும் - நீ இளமையையே ஆகியிருத்தலும், புதை இருள் உடுக்கைப் பொலம் பனைக் கொடியோற்கு - எப்பொருளையும் மறைக்கும் இருள் போன்ற நிறமுடைய ஆடையை உடைய பொற்பனைக் கொடியுயர்த்திய அப் பலதேவனுக்கு, முதிமை என்போர்க்கு முதுமை தோன்றலும் - நினது சிறப்பு முறையே கருதி முதியவன் ஆகுவை என்பார்க்கும் அம் முறை பற்றி முதுமையாகவே இருத்தலும், வடுவில் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த கெடு இல் கேள்வியுள் தேரின் - இங்ஙனமன்றிக் குற்றமற்ற கொள்கையினை உடைமையாலே உயர்ந்தோராகிய ஞானிகள் ஆராய்ந்த தீமையில்லாத ஞானக்கேள்வியாகிய வேதத்தின் வாயிலாய் நின்னை அறிந்து தெளியுமிடத்தே, தெரிபொருள் நடு ஆகுதலும் இந்நிலை இந்நிலை - நீ இளமையும் முதுமையுமாதலேயன்றி உயிர்தொறும் உயிர்தொறும் உள்ளுயிராய் நிற்றலும் ஆகிய இந்நிலைமையும் ஆகிய ஒன்றனோடொன்று முரணிய இந்நிலைமைகளும், நின்னிலை தோன்றும் நின் தொல் நிலைச் சிறப்பே - நின்னிடத்தே காணப்படுகின்ற நினது பழைய நிலைபோல நினக்கே உள்ள சிறப்புக்களேயாம்.

(வி - ம்.) வாலியோன் - வெண்ணிறமுடைய பலதேவன். பிறர் கூற்றை அநுவதித்துக் கூறலின், அவன் எனப் படர்க்கைப் பெயராற்

சூட்டினூர். இளையை மூதியை என்பன, முன்னிலை ஒருமை. புதை யிருள்: வினைத்தொகை. புதைத்தல் - மறைத்தல். பலதேவனுக்கு யமுனை நீல ஆடை நல்கிற்று என்பது புராணக்கதை. பொலம் - பொன். பொற்பனை என்க. பனைக்கொடியோன் - பலதேவன்.

கேள்வியுள் தேரின் தெரிபொருள் நடுவாகுதலும் ஆகிய இந்நிலை யும் என மாறி ஆக்கச் சொல்லும் உம்மையும் வருவித்துக் கூறுக.

தெரிபொருள் - உயிர். தெரியும் இயல்புடைய பொருள் என்ற வாறு (சித்துப் பொருள்). இளையையாகும் நிலைமையும் முதியை ஆகும் நிலைமையும் நடுவாகுதலாகிய இந்நிலைமையும் ஆகிய இம் மூன்றுபட்ட நிலைமைகளும் என்க. நின்னிலை - நின்னிடத்தே. தொன்னிலைச் சிறப்பே என்புழி, தொன்னிலைபோன்ற சிறப்பே என்றபடியாதலின் உவம வுருபு தொக்கது.

(பரிமே.) என்றது யாவரும் உணரா முதுமையும் ஒருவற்குப் பின் பிறத்தலும், அவற்கு முன் பிறத்தலும் எக்காலத்தும் எவ்விடத்தும் உள்ள உயிர்ப்பொருட்கு உட்பொருளாதலுமாகிய இவ்விரோதத்தின் கண்ணே உள்ளதென்றவாறு.

௨௬. 'தெரிபொருள்' என்னும் வினைத்தொகை தெரியும் பொரு ளென நிகழ்காலத்தான் விரிக்கப்படும், உயிர்ப்பொருட்கு உணர்தற் பண்பு இயற்கையாதலின். இந்நிலைமையும் என்றும் உம்மை விகாரத் தால் தொக்கது.

௨௭. நின்னிலைத்தோன்றும் என்புழி நிலை என்பது இடப்பொருட் டாய் நின்றது.

௨௮ - ௩௫: ஓங்குயர்...........................சிறந்தன்று

(இ - ள.) ஓங்கு உயர்வானின் வாங்குவில் புரையும் - மிக உயர்ந்த விசும்பிடத்தே இடப்பட்ட வளைந்த இந்திர வில்லை நிகர்த்த பல்வேறுநிற ஒளிகளையுடைய, பூண் அணி கவைஇய - பூணப்படுவனவாகிய பிற அணிகலன்களாலே அழகுபெறப்பட்ட, வார் அணி நித்தில நித்தில மதாணி அத்தகுமதி மறு - நெடிய அழகிய முத்துமாலைகளாலே இயற்றப்பட்ட நித்திலமதாணி எனனும் அழகிய திங்களுக்குற்ற களங்கம்போன்று, செய்யோள் சேர்ந்த நின் மாசு இல் அகலம்-சிவந்த நிறமுடைய திருமகள் வீற் றிருத்தலேயன்றிப் பிறிதொரு களங்கம் இல்லாத நின்னுடைய மார்பு, வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண் வைவான் மருப்பின் - வளருகின்ற அலைகளையுடைய கடலின்கண்ணே மூழ்கி எடுத்தலாலே அவ் வலைகளாலே கழுவப்பட்ட விளக்க முடைய புள்ளிகளை இடையிலே உடைய கூர்த்த வெள்ளிய தனது கொம்புகளானே நிலமகளை, களிறு மணன் அயர்பு - ஆதிவராகம் மணஞ்செய்தலாலே, புள்ளி நிலனும் புரைபடல் அரிது என - இந் நிலத்தின்கண் ஒரு புள்ளி அளவிற்றாகிய நிலந்தானும் அவ் வெள்ளத்தாலே வருந்தியதில்லை என்று

உள்ளுநர் உரைப்போர் - வேதத்தின் பொருளைக் கருத்திற் கொண்டு கூறுவோருடைய, உரையொடு சிறந்தன்று - கூற்றோடே பொருந்திற்றில்லை.

(வி - ம்.) நின் அகலம், களிறு நிலமகளை மணந்தது என்று கூறுவோருடைய கூற்றோடு பொருந்தவில்லை என இயைபு காண்க. நீ எப்பொழுதும் திருமகளை மார்பிற்கொண்டு அவளை மணந் திருத்தலானே நிலமகளையும் மணத்தல் கூடாமையின் அக் கூற்றுப் பொருந்திற்றில்லை என்றவாறு. இதனை,

"அரவாகிச் சுமத்தியால் அயில்எயிற்றின் ஏந்துதியால்
ஒருவாயின் விழுங்குதியால் ஓரடியால் ஒளித்தியால்
திருவான நிலமகளை இஃதறிந்தாற் சீறுளோ!
மருவாருந் துழாயலங்கன் மணிமார்பின் வைகுவாள்"

(விராதன்வதை. செ - ருஅ)

எனவரும் கம்பநாடர் செய்யுட்கருத்தோடு ஒப்புநோக்குக.

உள்ளுநர்: முற்றெச்சம். வேதப்பொருளை உட்கொண்டு கூறுவோர் என்க.

ஓங்குயர்: ஒருபொருட்பன்மொழி. வாங்கு - வளைந்த. வில் - இந்திரவில். புரையும்: உவமவுருபு. பூண்அணி - பூணப்படும் அணிகலன். நித்திலம் - முத்து. நித்திலத்தாற் செய்த நித்திலமதாணி என்க. நித்திலமதாணியாகிய மதிக்கு மறுப்போல திருமகள் சேர்ந்த நின் அகலம் என்க. திருமறுவன்றிப் பிறிதொரு மறுவில்லா அகலம் என்பார், 'மாசிலகலம்' என்றார். அகலம் - மார்பு. களிறு - பன்றி; ஆதிவராகம்.

மண்ணிய - கழுவிய. வை - கூர்மை. வான் - வெண்மை. அயர்பு என்னும் செய்பு என்னும் எச்சத்தைச் செயவெனெச்சமாய்த் திரித்து ஏதுப் பொருட்டாக்குக. புள்ளிநிலன் - புள்ளி அளவிற்றாகிய நிலம். புரை - வருத்தம். அரிது: இன்மைப்பண்பு குறித்துநின்றது. சிறந்த தன்று எனற்பாலது தகரம் செய்யுள் விகாரத்தாற் கெட்டுச் சிறந்தன்று என நின்றது.

(பரிமே.) ௩௫ - ஒருத்தியொடு மணமாயபும்வழிப் பிறளொருத்தி அகலத்தைச் சேர்தல் கூடாமையிற் சிறந்ததன்றென்றார்.

௩௬ - ௪0: ஒடியா.......................வளை

(இ - ள்.) (௪௬) போர் அடு குரிசில் நீ ஏந்திய நனிமுரல் வளை - போரின்கண் பகைவரைக் கொல்லுந் தலைமைத்தன்மை யுடையோனே! நீ ஏந்தியுள்ள மிகாது மிக்குமுழங்கும் சங்கு, ஒடியா உள்ளமொடு உருத்து - கெடாத மனவெழுச்சியோடே சினந்து, உடன் இயைந்து - ஒன்றுகூடி, கால் உறழ்பு எழுந் தவர் - சூறைக்காற்றைப் போன்று நின்மேற் போர்செய்தற்கு எழுந்துவந்த அவுணர்களுடைய, கொடி அறுபு இறுபு -

கொடிகள் அற்று முறிந்து (வீழவும்), செவி செவிடுபடுபு - அவ்வவுணர்களின் செவிகள் செவிடுபட்டுப் (போகவும்), முடிகள் அதிர - அவர் முடிகள் அதிரவும், படிநிலை தளர - நிலத்தின்கண் நிற்கும் நிலை தளர்ந்து நடுங்கவும், (ங௯) இடி எதிர் கழறும் - இடிபோல முழங்காநிற்கும்;

(வி - ம்.) கால் - காற்று. உறழ்பு - ஒத்து. எழுந்த அவுணர் என்க. எழுந்தவர் கொடி அற்று இற்றுச் செவி செவிடுபட்டு முடிகள் அதிரும்படியும் நிலைதளரவும் முழங்கும் என இயைக்க. படிநிலை - படியின்கண் நிற்கும் நிலை என்க. படி - நிலம். நணிமுரல்வளை: இயற்கையடைகள். மிக்குமுழங்கும் இயல்புடைய வளை இடிபோல முழங்கும் என்க. வளை - பாஞ்சசன்யம். இடி எதிர் கழறும் என்புழி, எதிர் என்பது உவமவுருபுப் பொருளது. கழறும் - முழங்கும்.

(பரிமே.) ங௯. 'எதிர் கழறும்' என்பது உவமப்பொருட்டு ச0, 'முரறல்' உயிருள்வழி அடையாய் வந்தது.

ச0 - சகூ : முடி........................படையே

(இ - ள்.) (சகூ) போரடு குரிசில் நீ ஏந்திய படை - போரின்கண் பகைவரைக் கொல்லுந் தலைமையுடையோயே! நீ ஏந்திய ஆழிப்படையோ (சஅ), சேரார் - நின் பகைவராகிய அவுணர்களுடைய, முடி அழிபு இழிபு தாரொடு புரள - தலைகள் வலியழிந்து சாய்ந்து தரித்த மாலையோடு புரளும்படியும், நிலை தொலைபு - தாம் நின்ற நிலைகெட்டு; வேர்தூர் மடல் குருகு பறியா நீள் இரும் பனைமிசை - வேரும் தூரும் மடலும் குருத்தும் பறிக்கப்படாத நீண்ட கரிய பனைகளின் உச்சியில் உள்ள, பல பதினுயிரம் குலை - பற்பல பதினுயிரம் குலைகள், தலைஇறுபு - அப் பனைகளின் தலைகளினின்றும் இற்று, தரை உதிர்வபோல் - நிலத்தின்கண் உதிர்வனபோல, நில்லாது ஒருமுறை கொய்பு கூடி - ஒன்றும் தத்தம் உடன்மேல் நில்லாமல் ஒருமுறையிலேயே கொய்தல் பெற்று, ஒருங்கு உருண்டு பிளந்து நெரிந்து உருள்பு சிதறுபு அளறு சொரிபு நிலம் சேர - உடனே ஒருசேர உருண்டு பிளந்து நெரிந்து பின்னரும் தனித்தனியே உருண்டு சிதறிக் குருதிச் சேற்றைச் சொரிந்து நிலத்தின்கண் சோர்ந்துகிடக்கும்படியும், இன் உயிர் செகுக்கும் - அப் பகைவருடைய இனிய உயிரை அழித்தொழிக்கும்;

(வி - ம்.) நீ ஏந்தியபடை நின் சேரார் தலை தாரொடு புரளும்படியாகவும் பனங்குலைகள் உதிர்வனபோல் உதிர்ந்து நிலத்தின்கண் சோர்ந்து கிடக்கும்படியும் செய்து அப் பகைவர் உயிரைச் செகுக்கும் என இயைபு காண்க.

குருகு - குருத்து. பறியா - பறிக்கப்படாத என்க. அழிபு இழிபு இறுபு கொய்பு உருள்பு சிதறுபு சொரிபு என்பன செய்பு என்னும் வினையெச்சங்கள். சேரார் - பகைவர்.

நின் வளை இடிபோல முழங்கும்; நின்படை உயிர்செகுக்கும் என இயைத்துக் கொள்க.

(பரிமே.) சுரு. பறியாப்பனை எனச் சினைவினை முதன் மேனின்றது.

## ருo - ருக : ஒன்னார்.......................நிறனே

(இ - ள்.) ஒன்னார் உடங்குண்ணும் அதன் உடல் - பகைவரை ஒருசேர அழிக்கும் அந்த ஆழிப்படையின் உடல், கூற்றம் - கூற்றுவனையே ஒக்கும், அதன் நிறம் - அப் படைக் கலத்தின் நிறம், பொன் ஏர்பு அவிர் அழல் - தன்னகத்தே இட்டுச் சுடுகின்ற பொன்னோடே எழுந்து விளங்காநின்ற நெருப்பினது கொழுந்தின் நிறத்தை ஒக்கும்;

(வி - ம்.) அதன் என்பதனை உடல் என்பதனோடும் கூட்டுக. இரண்டிடத்தும் உவமவுருபு செய்யுள் விகாரத்தாற் றொக்கது. பொன் சுடுங்கால் அப் பொற்குழம்போடு கூடி எழும் தீக்கொழுந்து சிறிது பசுமை கலந்த நிறமுடையதாய்த் திகழ்தல் கண்டறிக. நுடங்கி எரிதலின் தீக்கொழுந்தினை நுடக்கு என்றார்.

பொன் - தன்னகத்திடப்பட்டுச் சுடப்படும் பொன் என்க. ஏர்பு - எழுந்து.

## ருஉ - ருஎ : நின்னது.......................பொருளே

(இ - ள்.) நின்னது திகழ் ஒளி சிறப்பு இருள் திருமணி - உன்னுடைய விளங்குகின்ற ஒளி சிறப்பினையுடைய இருண்ட நீலமணியின் ஒளியை ஒக்கும், கண்புகழ்சால் தாமரை அலர் இணை பிணையல் - நின்னுடைய கண்கள் யாவரானும் புகழ்தல் அமைந்த தாமரைப் பூக்கள் இரண்டைப் பிணைத்து வைத்ததனை ஒக்கும், வாய்மை வயங்கிய வைகல் - நின்னுடைய வாய்மைப்பண்பு தப்பாமல் வருகின்ற விளக்கமுடைய நாளினை ஒக்கும், சிறந்த நோன்மை நாடின் இருநிலம் - நினது சிறந்த பொறுமையை ஆராயின் பெரிய நிலத்தையே ஒக்கும், நினது சாயல் யாவர்க்கும் நிறை வான் - நின்னுடைய அருள் சிலரை வரைந்து பெய்யாது எல்லோர்க்கும் கைம்மாறு கருதாமற் பொதுவிற் பெய்யும் நீரான் நிறைந்த முகிலை ஒக்கும், என்றும் நாவல் அந்தணர் அருமறைப் பொருள் - என்று கூறுநிற்கும் நாவன்மையுடைய அந்தணர்க்குரிய வேதத்தினது பொருள்;

(வி - ம்.) இருள்திருமணி - இருண்ட அழகிய நீலமணி. வைகல் - ஞாயிறு எனினுமாம். தப்பாது வருதலானே ஞாயிற்றை ஒக்கும் என்றும் அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல இகழ்வாரையும் பொறுத்தலானே நினது பொறை நிலத்தை ஒக்கும் என்றும், கைம்மாறு கருதாமல் யாவர்க்கும் பொதுவாகப் பெய்தலானே நினது

அருள் வானையும் ஒக்கும் என்றும் பொதுத்தன்மை விரித்து உவம வுருபும் யாண்டும் வருவித்துக் கூறுக. நோன்மை-பொறுமை. சாயல் - மென்மை; ஈண்டு அருள் என்னும் பொருட்டாய் நின்றது. நிறைவான் என மாறுக. வான் 'முகிலுக்கு' ஆகுபெயர். நீரான் நிறைந்த முகில் என்க.

"அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும்" நிறைமொழி கூறும் நாவுடை அந்தணர் என்பார், 'நாவல் அந்தணர்' என்றார். வேதம் உணர்தற்கரிய பொருள் உடைத்தாகலின், அருமறை எனப்பட்டது. மறையின்கண் உள்ள பொருள் அம் மறையோதுவார்க்கு உணர்த்துமாகலின் அதன் தொழிலாக்கி அருமறைப் பொருள் கூறும் எனப்பட்டது.

(பரிமே.) ௫0 -௫. ஒக்கும் என்னும் உவமச்சொல் வருவித்துரைக்கப்பட்டது.

௫அ - சுஅ : அவ்வும்..........................வரவு

(இ - ள்.) (சுO) செவ்வாய் உவணத்து உயர்கொடியோயே-சிவந்த அலகினையுடைய கருடன் எழுதப்பட்ட உயர்ந்த கொடியை உடைய பெருமானே, அவ்வும் பிறவும் ஒத்தனை - யாங்கள் எடுத்துக்கூறிய மணி முதலிய அப்பொருள்களையும எம்மாற் கூறப்படாத ஏனைப் பொருள்களையும் பண்புகளானும் தொழில்களானும் நீ ஒத்திருக்கின்றாய், உவ்வும் - இப் பொருள் களிடத்தும், எவ்வயினோயும் நீயே - ஏனைப் பொருள்களிடத்தும் உட்பொருளாய் உறைபவனும் நீயே ஆகின்றாய், கேள்வியுள் கிளந்த ஆசான் உரையும - வேதத்திலே கூறப்பட்ட வேள்வி முதல்வனது சொல்லும், படிமுறை வேள்வியுள் - படிப்படியாக ஒன்றற்கொன்று உயர்ந்த வேள்வியினிடத்தே வேள்வித் தூணுகி நின்று அதன்கட் பிணிக்கப்படும், ஆடு பற்றிக் கொள லும்-யாகப் பசுவினைப்பற்றிக் கொள்ளுதலும், புகழ் இயைந்து இசை மறைமுறை உறுகனல் மூட்டி - அநாதியாய் உள்ளது என்னும் புகழோடே பொருந்த ஓதப்படுகின்ற வேதத்தின்கட் கூறப்பட்ட முறைப்படியே அவ்வியாக குண்டத்தின்கண் மிக்க தீயை மூளச்செய்து, திகழொளி ஒண்சுடர் வளப்பாடு கொள லும் - அத் தீயின்கண் நெய் முதலியன சொரிந்து விளங்கும் ஒளியினையுடைய அவ்வொள்ளிய சுடரினது பெருக்கத்தைச் செய்து கொள்ளுதலுமாகிய இம்மூன்றும், நின் உருபுடன் உண்டி - நிரலே நினது உருவமும் உணவும், பிறர் உடம்படு வாரா - கடவுள் இல்லை என்பாரும் உடன்படும்படி, நின்னொடு புரைய - நினது பெருமைக்குப் பொருந்தும்படி, அந்தணர் காணும் வரவு - அந்தணர் காண்கின்ற நினது வெளிப்பாடும் ஆகும்;

(வி - ம்.) அவ்வும் - அப்பொருளும். உவ்வும் - உவையும். அங்கிங்கெனுதபடி யாண்டும் எப்பொருளிடத்தும் உறைபவனும் நீயே

என்றவாறு. எவ்வயினேயும் - யாண்டும் இருப்பவனும். உவணம் - கருடப்பறவை. ஆசான் - வேள்வி முதல்வன். வேள்வி முதல்வன் இத்தகையனுதல் வேண்டும் என வேதத்தாற் கூறப்பட்ட ஆசான் என்க. ஆசான் உரை - மறைமொழி (மந்திரம்). படிநிலை - படிப்படியாக ஒன்றற்கொன்று உயர்ந்த வேள்வியுள் என்க. ஆடு - யாகப்பசு, வேள்விக்களத்தே நடப்படும் வேள்வித் தூணத்தை இறைவனுகக் கருதப்படுதலின் அதன்கட் பிணிக்கப்படும் யாகப்பசு அவ்விறைவன் உண்டியாகக் கூறப்பட்டது. புகழியைந்து என்புழிச் செயவெனெச்சத்தைச் செய்தெனெச்சமாகத் திரித்துக் கொள்க. இசைமறை: வினைத்தொகை. உறுகனல் - மிக்க நெருப்பு மறைமுறை மூட்டி என மாறுக. சுடர் வளப்பாடு - தீயினது பெருக்கம். ஆசான் உரை நினது உருவம், ஆடுகொளல் உண்டி, வேள்விக்கண் மறைமுறைப் படி சுடரைப் பெருக்குங்கால் ஆண்டுத் தோன்றும் அச்சுடர் நின் வெளிப்பாடு என நிரல் நிரலாகப் பொருள் கூறுக. நின்னுருபு உடன் உண்டி என்புழி உடன் என்பது ஒடு உருபின் பொருட்டாய் வந்தது. அதனை ஏனை இரண்டிடத்தும்

பிறர் - கடவுளில்லை என்பார். பிறரும் எனற்பால உம்மை செய்யுள் விகாரத்தாற் ழெருக்கது. நின்னெடு புரைய - நினது பெருமைக்குப் பொருந்துமாறு என்க. வரவு - வெளிப்பாடு.

(பரிமே) ௨௨: படிகால் முறையான் ஒன்றற்கொன்று உயர்ந்த விகுருதி வேள்வியுள் யூபமாய்ப் பசுவைப்பற்றிக் கோடலும்.

௨௩. செய்தாரின்மையின் உலகச்சொல் அன்றெனை.........தீதியிசைக்கின்ற மந்திரங்கள்.

௨௪. கேள்வியுட் கிளந்த என்பது 'ஆடு கொளல்' 'வளப்பாடு கொளல்' என்பவற்றோடு மியையும், அவையும் அதனுட் சொல்லப் பட்டமையின்.

வேள்விக்கிறைவனை 'ஆசான்' என்ருர் தலைமைபற்றி. அவனுரை யாவது: வேதத்துள் நான்காம் வேற்றுமையை ஈருகவுடைய தெய்வப் பெயர்ச்சொல். அதனை உத்தேசத்தியாகம் என்ப; அச்சொல்லே கடவுட்கு உருவென்பது சயிமினியாற் செய்யப்பட்ட வைதிக நூற்றுணிபாகலின் அதனை 'உருபு' என்றும்; யூபமாவது மாயோனுகச் சொல்லப்படுதலால் பசுக்களைப் பிணித்துக் கொள்கின்ற அதனை 'உண்டி' என்றும்,

ஊன்சஞர்க்குப் படிமையினும் அந்தணர்க்கு வேள்வித் தீயினும், யோகிகட்கு உள்ளத்தினும், ஞானிகட்கு எவ்விடத்தும் வெளிப்படுதலாற் சுடர்வளப்பாடு கோடலை 'அந்தணர் காணும் வரவு' என்றுங் கூறினர்.

௨௬ - ௪௬: வாயடை......................எம்மறிவெனவே

(இ - ள்.) வாயடை அமிர்தம் நின் மனத்தகத்து அடைதர - தேவர்களுக்கு உணவாகிய அமிழ்தத்தைப் பாற்கடலினின்றும் கடைந்து அத்தேவர்களுக்கு வழங்கவேண்டும் என்று நினது திருவுள்ளத்தில் நினைந்தபொழுதே, மூவா மரபும் ஓவா நோன்மையும் சாவாமரபின் அமரர்க்காச் சென்ற - அவ்வமிழ்

தத்தின் பயனாகிய மூத்தலில்லாத முறைமையும் ஒழியாத ஆற்றலும் அவருடைய இறவாத முறைமையே போல அத் தேவர்களைச் சென்றடைந்தன, நின்..........மரபினோய்-(ஆகவே நினது பலவாகிய புகழ்களும் பரவாநின்றன) அதனால் அத் தகைய உணர்தற்கரிய முறைமையினை உடைய பெருமானே; நின் அடி - நினது திருவடியினை, கலியில் நெஞ்சினேம் யாமும்-துளக்கமில்லாத நெஞ்சையுடைய யாங்களும், பண்மாண் தலையுற வணங்கினேம் - பலகாலும் எம்தலை நிலத்திலே பொருந்தும்படி விழுந்து வணங்கி, ஏத்தினேம் வாழ்த்தினேம் - ஏத்தி வாழ்த்தி, எம் அறிவு கொடும்பாடு அறியற்க என - எளியேங்களுடைய அறிவு பொருளல்லவற்றைப் பொருளாகக் கருதாமல் மெய்ப்பொருளையே உணருவதாக என்று, கடும்பொடும் கடும்பொடும் பரவுதும் - எம்முடைய சுற்றத்தார் பலரோடும் வேண்டிக்கொள்வோம்;

(வி - ம்.) வாயடை - உணவு. மனத்தகத் தடைத்தர - நினைத்த அளவிலே. மூவாமரபு - உடல் முதிர்தலில்லாத முறைமை. ஓவா - ஒழியாத. நோன்மை - ஆற்றல். சாவா மரபு - இறவாத முறைமை. நினைத்த மாத்திரையானே அமிழ்தம் உண்ணலால் உளதாம் பயனாகிய இறவாமையும் மூவாமையும் அழியாத வலிமையும் தேவர்களை எய்தின என்க. சாவாமரபுபோல ஏனை இரண்டும் சென்றெய்தின என்க.

'சென்றநின்.........மரபினோய்' என்புழி விடுபட்டுப்போன சொற்கள், 'நின் பல்புகழ் யாண்டும் பரந்தன' என்னும் பொருளுடையன என்பது பரிமேலழகர் உரையினின்றும் உணரப்படும். வணங்கினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம் என்பன முற்றெச்சங்கள். வணங்கி ஏத்தி வாழ்த்தி என எச்சமாக்கிப் பரவுதும் என்னும் வினைமுற்றானே முடித்திடுக.

கடும்பு - சுற்றம். ஈண்டுச் சுற்றமாவார் இறைவனடியார் என்க. பரவுதல் - வேண்டிக்கொள்ளுதல். கொடும்பாடு - பொய்யை மெய்யென்றுணரும் மருள். கொடும்பாடறியற்க எனவே மெய்யினையே உணர்வதாக என்றவாறாயிற்று.

(பரிமே.) சுக: வாயின்கண் அடுக்கப்படுதலின் உணவிற்கு 'வாயடை' என்று பெயராயிற்று.

எஙி: 'கடும் பொடும் கடும் பொடும்' என்னும் அடுக்குப்பன்மைக் கண் வந்தது.

எசு: 'எம்மறிவு கொடும் பாடறியற்க' என மெய்யுணர்வையே வேண்டினார் வீடு அதனாலல்லது எய்தப்படாமையின்.

---

## மூன்றும் பாடல்

# திருமால்

பொருட்சுருக்கம்

க - ௩ : *திருமாலே ! திருமாலே ! அன்பராயினோர் பிறவிப் பிணியை அறுக்கும் மருந்தாகிய திருவடிகளையும், நீலமணி மேனியினையும் உடைய திருமாலே !;*

ச - கச : *நெருப்பு, காற்று, வானம், நிலம், நீர் என்னும் ஐம்பெரும் பூதங்களும், திங்களும், வேள்வித் தலைவனும், செவ்வாய் முதலிய கோள்கள் ஐந்தும், அசுரரும், ஆதித்தர் பன்னிருவரும், வசுக்கள் எண்மரும், உருத்திரர் பதினொருவரும், அச்சுவினிதேவரும், இயமனும், கூற்றுவனும், மூவேழுலகும், அவற்றுள் உயிரினங்களும் ஆகிய இவையெல்லாம் நின்னிடத்தே தோன்றி நின்னுள்ளேயே விரிந்தன என்று வேதங்கள் கூறுகின்றன. அதனால், எளியேமும் கூறுகின்றேம். பிரமதேவனும, அவன் தந்தையும் நீயே என்று அந்தணர் அருமறை கூறுகிற்கும் ;*

கரு - ௩௦ : *அமரரிடமிருந்து அமிழ்தம் கொணர்ந்து தன் அன்னையின் அல்லல் அகற்றிய அணி சிறைக் கருடனை ஊர்தியாக உடையை ; அக் கருடனையே கொடியாகவும் உயர்த்தனை ; நினது திருவடியைத தொழாதார் இலர். ஈரேழுலகமும் ஒருங்கே அளந்த திருவடியினை உடையை. ஊழிமுடிவில் கடலிலே அழுந்துகின்ற நிலமகளை வராகமாகிக் கொம்பினாலே உயர எடுத்தாய் எனவும், அவ்வூழியிலே பொழியா நின்ற மழைநீரை அன்னச் சேவலாகிச் சிறகாலே வறளச் செய்தோய் எனவும், முனிவரும் தேவரும் நின்னைப் புகழ்வர் ; எளியேமும் அவர் முறையைப் பின்பற்றியே நின்னைப் புகழாநின்றேம்;*

௩க - சரு : *கேசி என்ற அசுரனைக் கொன்றொழித்தவனே! நின்புகழ் போலவே நின் கைகளும் எண்ணிறந்தன. அவற்றுள், பாற்கடல் கடைந்த அமரர்க்கும் அசுரர்க்கும் அமிழ்தத்தை ஒப்ப வழங்காமல் அமரர்க்கு மட்டுமே வழங்கிய நடுவு நிலைமையில்லாத கையும் ஒன்றுளது. எண்ணிறந்த கைகளையும், யாக்கைகளையும் உடையோய்! நினது பெருமை நீயே உணர்வதல்லது பிறரால் உணரப்படுவதோ ?*

**சஎ - ரு). :** அநாதியாய் வருகின்ற மரபினையுடைய வேதத்திற்கு முதல்வனே ! விரிந்தகன்ற ஆகமங்கள் அனைத்தானும், அகங்காரத்தானும், மனத்தானும், உணர்வினானும், மற்றும் எல்லாவற்றானும் நினக்கு வனப்பும், எல்லையும் அறியப்படாத மரபினோய் !;

**ருக - சுக :** அமரர்களுக்கு முதல்வன்நீ ; அவுணர்களுக்கும் நீயே முதல்வன்; அதனால், நினக்குப் பகைவரும் நண்பரும் உளரோ. கருடன் தனது செருக்கடங்கி ஊழிகள் பல ஓ என்று கதறுவதற்குக் காரணமானவனும், அவ்வூழி முதல்வனும் நீயே ;

**சுஉ - எஉ :** நின் தன்மைகளை மெய்ந் நூல்கள் கூறுதலானே, யாங்களும் அவற்றை இவ்வாறு அறிந்துள்ளோம் :—

"தீயினுள் தெறல் நீ ; பூவினுள் நாற்றம் நீ ;
கல்லினுள் மணியும் நீ ; சொல்லினுள் வாய்மை நீ ;
அறத்தினுள் அன்புநீ ; மறத்தினுள் மைந்து நீ ;
வேதத்து மறைநீ ; பூதத்து முதலும் நீ ;
வெஞ்சுடர் ஒளியும் நீ ; திங்களுள் அளியும் நீ ;
அனைத்தும் நீ ; அனைத்தின் உட்பொருளும் நீ."

நீ உறைவதும இல்லை ; உறையும் இடமும் இல்லை. மறவியுடையார் மறவியில் சிறப்புப் பெறுதல் காரணமாக அவை நினக்கு உளவாந் தன்மையும் பொய் ; நீ மேற் சொல்லிய தன்மை உடையை ஆதலின். படைத்தல் முதலிய தொழில் வேற்றுமை பற்றி நீ பிறவாப் பிறப்பில்லை ; நின்னைப் பிறப்பித்தோரும் இலர்;

**எ௩ - அ) :** காயாமலர் மேனியோனே ! அருள் குடையாகவும், அறம் காம்பாகவும் கொண்டு, பொதுமை நீக்கித் தனி நின்று உலகினைக் காக்கும் தொழிலை உடையை. நிலமுதலாகப் புருடன் ஈறாகவுள்ள இருபத்தைந்து தத்துவங்களானும் ஊழிதோறும் மெய்க்காட்சியாளரான் ஆராயப்படும் பெருமையுடையை நீ ;

**அக - கூச :** வாசுதேவனே! சங்கருடணனே ! பிரத்தியும்நனே ! அநிருத்தனே ! கூத்தாடுங்கால் ஆய்ச்சியரின் இடமும் வலமும் ஆயினோய்! குடக் கூத்திற்கு எடுத்த குடத்தையுடையோனே ! கலப்பையுடையோனே ! கோவலனே ! காவலனே ! யாவரானும் அறியப்படாதவனே ! அன்பர் நினைவின்கண் இருப்போனே ! அழிவில்லாதவனே ! அரசனே ! புலவனே ! பாணனே ! துளவமணிந்தோனே ! சங்கையுடையோனே !

*பொன்னுடை யுடையோனே! வலம்புரிவண்ணனே! ஆழிப் படையோனே! மல்லனே! திருமகள் கணவனே! மறவனே நினது ஆழியே உலகிற்கு நிழலாவது.*

மாஅ யோயே மாஅ யோயே
மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி
மணிதிக ழுருபின் மாஅ யோயே
தீவளி விசும்பு நிலனீ ரைந்து
ஞாயிறுந் திங்களு மறனு மைவரும்
திதியின் சிறரும் விதியின் மக்களும்
மாசி லெண்மரும் பதினொரு கபிலரும்
தாமா இருவருந் தருமனு மடங்கலும்
மூவே ழுலகமும் உலகினுள் மன்பதும்
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்
மாயா வாய்மொழி யுரைதர வலந்து
வாய் மொழி யோடை மலர்ந்த
தாமரைப் பூவினுட் பிறந்தோனுந் தாதையும்
நீயென மொழியுமா லந்தணர் அருமறை
ஏஎர், வயங்குபூண் அமரரை வெளவிய வமிழ்திற்
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளினை
பயந்தோ ளிடுக்கண் களைந்த புள்ளின்
நிவந்தோங் குயர்கொடிச் சேவ லோய்நின்
சேவடி தொழாரு முளரோ அவற்றுட்
கீழே ழுலகமு முற்ற வடியினை
தீசெங் கனலியுங் கூற்றமு ஞமனும்
மாசிலா யிரங்கதிர் ஞாயிறுந் தொகூஉம்
ஊழி யாழிக்க ணிருநில முருகெழு
கேழலாய் மருப்பி னுழுதோ யெனவும்
மாவிசும் பொழுகுபுனல் வறள வன்னச்
சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோ யெனவும்
ஞாலத் துறையுள் தேவரும் வானத்து
நாலெண் தேவரும் நயந்துநிற் பாடுவார்
பாடும் வகையேயெம் பாடல் தாமப்
பாடுவார் பாடும் வகை
கூந்தல் என்னும் பெயரொடு கூந்தல்

எரிசினங் கொன்றோய்நின் புகழுரு வினகை
நகையச் சாக நல்லமிர்து கலந்த
நடுவுநிலை திறம்பிய நயமி லொருகை
இருகை மாஅல்
முக்கை முனிவ நாற்கை அண்ணல்
ஐங்கைம் மைந்த அறுகை நெடுவேள்
எழுகை யாள எண்கை ஏந்தல்
ஒன்பதிற்றுத் தடக்கை மன்பே ராள
பதிற்றுக்கை மதவலி நூற்றுக்கை யாற்றல்
ஆயிரம் விரித்தகைம் மாய மள்ள
பதினா யிரங்கை முதுமொழி முதல்வ
நூறா யிரங்கை ஆறறி கடவுள்
அனைத்து மல்லபல வடுக்க லாம்பல்
இனைத்தென எண்வரம் பறியா யாக்கையை
நின்னைப் புரைநினைப்பின் நீயல துணர்தியோ
முன்னை மரபின் முதுமொழி முதல்வ
நினக்குவிரிந் தகன்ற கேள்வி யனைத்தினும்
வலியினு மனத்தினு முணர்வினு மெல்லாம்
வனப்புவரம் பறியா மரபி னோயே
அணிநிழல் வயங்கொளி யீரெண் தீங்கதிர்ப்
பிறைவளர் நிறைமதி யுண்டி
அணிமணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வனீ
திணிநிலங் கடந்தக்காற் பிரிந்தயர்ந் தகன்றோடி
நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணிநெகிழ் பவிழ்தண்டார்
அன்னவர் படவல்லா அவுணர்க்கு முதல்வனீ
அதனால், பகைவ ரிவரிவர் நட்டோ ரென்னும்
வகையு முண்டோநின் மரபறி வோர்க்கே
ஆயிர வணர்தலை அரவுவாய்க் கொண்ட
சேவ லூர்தியுஞ் செங்கண் மாஅல்
ஓவெனக் கிளக்குங் கால முதல்வனை
ஏஎஇன கிளத்தலின் இனைமைநற் கறிந்தனம்
தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றநீ
கல்லினுள் மணியுநீ சொல்லினுள் வாய்மைநீ
அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ

வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுடர் ஒளியுநீ திங்களுள் அளியுநீ
அனைத்துநீ அனைத்தினுட் பொருளுநீ ஆதலின்
உறைவு முறைவது மிலையே யுண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை
முதன்முறை யிடைமுறை கடைமுறை தொழிலிற்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே
பறவாப் பூவைப் பூவி னோயே
அருள்குடை யாக அறங்கோ லாக
இருநிழல் படாமை மூவே ழுலகமும்
ஒருநிழ லாக்கிய ஏமத்தை மாதோ
பாழெனக் காலெனப் பாகென ஒன்றென
இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
ஆறென ஏழென எட்டெனத் தொண்டென
நால்வகை ஊழியெண் நவிற்றுஞ் சிறப்பினை
செங்கட் காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்
இடவல குடவல கோவல காவல
காணா மரப நீயா நினைவ
மாயா மன்ன உலகாள் மன்னவ
தொல்லியற் புலவ நல்லியாழ்ப் பாண
மாலைச் செல்வ தொலாக் கோட்ட
பொலம்புரி யாடை வலம்புரி வண்ண
பருதி வலவ பொருதிறன் மல்ல
திருவின் கணவ பெருவிறன் மள்ள
மாநில மியலா முதன்முறை அமயத்து
நாம வெள்ள நடுவண் தோன்றிய
வாய்மொழி மகனொடு மலர்ந்த
தாமரைப் பொகுட்டுநின் னேமி நிழலே.

கடவுள் வாழ்த்து

கடுவனிள வெயினனார் பாட்டு; பெட்டனாகனார் இசை;

பண்ணுப் பாலையாழ்.

## உரை

க - ௩ : மாஅயோயே......................மாஅயோயே

(இ - ள்.) மாஅயோயே மாஅயோயே - திருமாலே! திருமாலே!, மறு பிறப்பு அறுக்கும் மாசு இல் சேவடி - அடியார்களது பிறவித்துன்பத்தை ஒழித்து வீட்டின்பத்தை நல்கும் குற்றமற்ற சிவந்த திருவடிகளையும், மணிதிகழ் உருபின் - நீலமணிபோலும் திருமேனியையும் உடைய திருமாலே;

(வி - ம்.) மாயோன் என்பது கருநிறமுடையன் என்னும் பொருள் குறியாமல் திருமால் என்னும் பெயரளவானே நின்றது; மறுபிறப்பு என்றது ஈண்டுப் பிறவிப்பிணி என்பதுபட நின்றது; அன்பாலே நினைந்து வழிபடுவார் பிறவிப்பிணியை அகற்றி வீடு நல்குவது திருவடியே ஆதலின், அதனையே முன்னர் நினைந்தோதினர்; பிறப்பற்றவிடத்து வீடே ஆகலின் பிறப்பறுத்து வீடுநல்கும் சேவடி என விரித்துக்கூறுக; அத் திருவடியைப் பெறுதற்கு முகம் புகுதலானே பலகாலும் விளித்து எதிர்முகமாக்குகின்றார்.

ச - கச : தீவளி.......................அந்தணர் அருமறை

(இ - ள்.) தீ வளி விசும்பு நிலன் நீர் ஐந்தும் ஞாயிறும் திங்களும் அறனும் - நெருப்பும் காற்றும் வானமும் நிலமும் நீருமாகிய ஐம்பெரும் பூதங்களும் ஞாயிறும் திங்களும் வேள்வி முதல்வனும், ஐவரும் - கோள்களில் ஒழிந்த செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி என்னும் ஐவரும், திதியின் சிறாரும் - அசுரர்களும், விதியின் மக்களும் - விதியின் மக்களாகிய ஆதித்தர் பன்னிருவரும், மாசு இல் எண்மரும் - குற்றமில்லாத வசுக்கள் எண்மரும், பதினொரு கபிலரும் - பதினோர் உருத்திரர்களும், தாமா இருவரும் - அச்சுவனி தேவர் இருவரும், தருமனும் - இயமனும், மடங்கலும் - அவன் ஏவலனாகிய கூற்றுவனும், மூவேழ் உலகமும் - முத்திறத்து இருபத்தோர் உலகங்களும், அவ்வுலகின் மன்பதும் - அவ்வுலகினுள் வாழும் உயிர்க்கூட்டங்களும், ஆயோய் - ஆகி விரிந்தவனே!, நின்வயின் பரந்தவை மாயா வாய்மொழி உரைதர வலந்து உரைத்தேம் - இங்ஙனம் நின்னிடத்தினின்றும் விரிந்த பொருள்களை அழியாத வேதங்கூறுதலானே யாங்களும் முறைப்படி கூறுது முன்னும் பின்னுமாக மாறிமாறிக் கூறுகின்றேம், வாய்மொழி ஓடை மலர்ந்த - அவ்வேதமாகிய நீரோடையில் மலர்ந்த, தாமரைப் பூவினுள் பிறந்தோனும் - தாமரை மலரிற் பிறந்த பிரமதேவனும், தந்தையும் - அவனுடைய தந்தையும், நீ என - நீயே என்று, மொழியுமால் அந்தணர் அருமறை - கூறுநிற்கும் அவ்வந்தணருடைய வேதம்;

(வீ - ம்.) இனி, அவ்விறைவனிடமிருந்து தோன்றிய உலகத் தோற்றம் கூறத்தொடங்குகின்றார். தொடங்குபவர் முதலின் இறைவன் வடிவங்களாகத் திகழும் எண்வகை வடிவங்களையும் கூறுகின்றார். அவையாவன: வானம், காற்று, தீ, நீர், நிலம் என்னும் பூதங்கள் ஐந்தும்; ஞாயிறு திங்கள் வேள்வி முதல்வன் (இயமானன்) ஆகிய மூன்றும் ஆம். இவ்வெட்டினையும் **"அட்டமூர்த்தங்கள்"** என்ப. இனிக் கோள்கள் ஒன்பதனுள் ஞாயிறுந்திங்களும் எண்வகை வடிவங்களுள் அடங்குதலானும், இராகு கேதுக்கள் காணப்படாதனவாகலானும், எஞ்சியவற்றைப் பெயர் கூறாது ஐவரும் எனத் தொகை கூறியொழிந்தார். ஐவர் என்றது, செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி என்னும் கோள் ஐந்தனையும் என்க. திதியின் சிறார் என்றது அசுரர்களை. காசிபன் என்னும் முனிவனுக்குத் திதி என்பாளிடத்து அசுரர் தோன்றினர் என்பது புராணகதை, இதனை,

"தக்கனனி வயிற்றுதித்தா ரைம்பதின்மர்
தடங்கொங்கைத் தைய லாருள்
தொக்கபதின் மூவரையக் காசிபனும்
புணர்ந்தனனத் தோகை மாருள்
மிக்க அதிதிப் பெயராள் முப்பத்து
முக்கோடி விண்ணோர் ஈந்தாள்
மைக்கருங்கண் திதிஎன்பாள் அதினிரட்டி
அசுரர்தமை வயிறு வாய்த்தாள்."

(கம்ப - சடாயுகாண்-உ௫.)

எனவருஞ் செய்யுளானும் உணர்க.

விதியின் மக்கள் என்றது ஆதித்தர் பன்னிருவரையும்; பதினொரு பிரமர்களுள் ஒருவனாகிய காசிபன் ஈண்டு விதி எனப்பட்டான்; ஆதித்தர் பன்னிருவரும் காசிபன் மக்கள் என்பது புராணகதை. எண்மர் - வசுக்கள்; கபிலர் - உருத்திரர். இவர் கபிலநிறமுடையராதல் பற்றிக் கபிலர் எனப்பட்டார். தாமா - தாவும் குதிரை. அச்சுவனிதேவர் குதிரை வயிற்றிற் பிறந்தவர் ஆதலான் குதிரை என ஆகுபெயராற் குறித்தார்.

மன்பது - நிலைபெற்ற உயிர்க்கூட்டம்.

(பரிமே.) ௫. வேட்கின்ற வடிவு தருமமாதலின் அஃது அறன் எனப்பட்டது.

அ. தேவ மருத்துவரைத் தாவும் மாவின்கண் தோன்றிய இருவர் என்றார்; உருப்பசி குதிரைப்பெட்டை யாகியாளைக் கண்டு நயந்து, தானும் குதிரை வடிவினனாய் அவள்பாற் செல்கின்ற ஆதித்தனுடைய நாசிகைத் துளைகளால் இரண்டு வீரிய விந்துக்கள் வீழ, அவர் அங்கே இரட்டைகளாய்த் தோன்றினராதலின்.

தருமன் - யமன்; மடங்கல்-அவன் ஏவல் செய்யும் கூற்றம்.

௯. மூவேழுலகம் - ஒரோவொன்று எழுவகைப்பட்ட மூன்றுலகம். மன்பது - ஒழிந்த உயிர்ப்பன்மை.

௧௦. மாயோய் இவையெல்லாம் நின்கண் தோன்றிப் பரந்தவை யாகத் தொடுத்துக் கூறினேம், வேதஞ் சொல்லுதலான்.

நித்தமாகிய வேதம் தேவரும் மூவேழுலகுகளும் உயிர்ப்பன்மையும் நின்கண் தோன்றியவாறு அறிந்து கூறும்; சிற்றறிவினேமாகிய யாம் அவற்றுட் சிலவற்றை முறைபிறழக் கூறுவதல்லது அவ்வாறு எல்லாம் கூறுதற்கு உரியமல்லமென்பார் 'வலந்துரைத்தே' மென்றார்.

திணைவிராய் எண்ணப்பட்ட பெயர் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற்கொண்டு முடிதலின் 'பரந்தவை' என்றார்.

௧௨. தாமரைப்பூ படைப்பிற்கு முதலாக வந்து மலரும் என்பதற்கு வேதம் ஞாபக வேதுவாகலின் அதற்கு அதனை ஓடையாக உபசரித்தார்.

உபநிடதத்தின் பொருள் பொருந்தும் கூற்றாற் கூறுகின்றாராகலின் 'வாய்மொழி ஓடை' என்றார். ஓரோவழி அவ்வருமறைதானும் அவனை அவ்வாறு கூறுமாதலின் அதன் கூற்றெனவும் அமையும்.

**௧௫ - ௧௬: ஏஎர்......................தொழாருமுளரோ**

(இ - ள்.) ஏஎர் வயங்கு பூண் அமரரை வௌவிய அமிழ்தின் - அழகு விளங்காநின்ற அணிகலன்களையுடைய தேவரிடத்தினின்றும் கவர்ந்து கொண்டுவரப்பட்ட அமிழ்தத்தாலே, பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளினை - தன்னையீன்ற தாயாகிய விநதையினது துன்பத்தை அகற்றிய கருடனை ஊர்தியாக உடையை; நிவந்து ஓங்கு உயர் கொடி - மிக ஓங்கி உயர்ந்த கொடியினிடத்தே, பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின் சேவலோய் - தாயினது துன்பமகற்றிய அக் கருடச்சேவலை உடையோய், நின் சேவடி தொழாரும் உளரோ - நின் சிவந்த திருவடிகளைத் தொழாதவரும் உளரோ?;

(வி - ம்.) ஏஎர் - அழகு: அமிழ்தத்தைக் காத்திருந்த அமரரை ஓட்டி அவரிடத்தினின்றும் வௌவிய அமிழ்தினாலே, என்க. பயந்தோள் - தாய்; விநதை என்பவள். விநதை உற்ற இடுக்கணுவது - இந்திரனுடைய குதிரையின் வால் தூய வெள்ளை நிறமுடையதென்று விநதை கூறினள். அதுகேட்ட கத்துரு வென்பவள் அக் குதிரையின் வால் கரிது என்றாள். கரிதாயின் உனக்கு யான் அடிமையாவேன் என விநதை கூறினள். கத்துரு பின்னர்த் தன் மக்களால் அக் குதிரையின் வால் கரிதாகத் தோன்றும்படி ஒரு சூழ்ச்சி செய்து விநதையை அழைத்துக் காட்ட விநதை கத்துருவுக்கு அடிமையாயினள். பின்னர்க் கத்துரு, தேவாமிழ்தத்தைக் கவர்ந்து எனக்குத் தருவாய் எனின் உன்னை விடுதலைசெய்வேன் என்றாள். இச் செய்தியை விநதை தன் மகனாகிய கருடனுக்குக் கூற, அவன் சென்று அமிழ்தத்திற்குக் காவலிருந்த அமரரை ஓட்டி அதனைக் கவர்ந்துவந்து கத்துருவிற்குக் கொடுத்துத் தன் தாயின் அடிமைத்தளை யறுத்து மீட்டான் என்பதாம்.

கருடனை ஊர்தியாகவும், கொடியாகவும் உடையை, என்பது கருத்து. நிவந்தோங்குயர்: ஒருபொருட்பன்மொழி; மிக ஓங்கி உயர்ந்த என்க.

## கக - உக: அவற்றுள்..................பாடும்வகை

(இ - ள்.) அவற்றுள்-நினது அச் சேவடிகளுள் வைத்து, கீழ் ஏழ் உலகமும் உற்ற அடியினை - கீழேயுள்ள ஏழுலகங்களை யும் நீ அளக்கின்ற காலத்துச் சிறிதும் எஞ்சாமல் பொருந்திய ஒரு திருவடியினையும் உடையை, தீ செங்கனலியும் கூற்றமும் ஞமனும் - உலகத்தைத் தீய்த்தழிக்கும் சிவந்த ஊழித்தீயும் இயமனும் அவன் ஏவலனாகிய கூற்றுவனும், மாசு இல் ஆயிரம் கதிர் ஞாயிறும் தொகூஉம் ஊழி - குற்றமில்லாத ஆயிரங் கதிர்களையுடைய பன்னிரண்டு ஞாயிறுகளும் ஒன்றுகூடாநின்ற ஊழிக்காலத்திலே, தொகூஉம் ஆழிக்கண் இருநிலம் உருகெழு கேழலாய் மருப்பின் உழுதோய் எனவும் - ஏழும் ஒன்றுகூடிய கடலின்கண் முழுகிய பெரிய நிலத்தை அச்சம்பொருந்திய பன்றியாகிக் கொம்பாலே குத்தி மேலே எடுத்து வந்தோனே என்றும், மா விசும்பு ஒழுகுபுனல் வறள - பெரிய விசும்பி னின்றும் இடையறாது ஒழுகாநின்ற மழைநீர் வறண்டொழியும் படி, அன்னச்சேவல் ஆய் - அன்னச்சேவலாக வடிவங்கொண்டு, சிறகர்ப் புலர்த்தியோய் எனவும் - சிறகுகளாலே புலரச் செய்தோனே என்றும், ஞாலத்து உறையுள் தேவரும் வானத்து உறையுள் நால்எண் தேவரும் - இந் நிலவுலகத்தை வாழுமிட மாகக் கொண்ட முனிவர்களும் வானுலகத்தை வாழிடமாகக் கொண்ட நால்வகை எண்ணினையுடைய முப்பத்துமூன்று வகைப்பட்ட தேவர்களும், நின் நயந்து பாடுவோர் பாடும் வகையே - நின்னை விரும்பிப் பாடுவார் அவர்களும் பாடுவதும் தம் முன்னோர் பாடும் வகையே ;

(வி - ம்) சுவர்க்கம் மத்தியம் பாதலம் என மூன்று கூறுபட்ட ஓரோவொன்று ஏழுவகைப்பட்ட உலகங்களுள் வைத்துக் கீழ்உலகம் ஏழனையும் என்க. நிலத்தை அளக்கின்ற காலத்துக் கீழேழுலகங்களில் ஒன்றேனும் எஞ்சாது ஓரேயடியிற் பொருந்துமாறு அளந்த திருவடி யினையுடையை என்க. அவற்றுள் என்றதற்கு முற்கூறிய மூவேழுலகி னுள் எனக் கூறினும் பொருந்தும். தீ செங்கனலி: வினைத்தொகை. ஞமனும் கூற்றமும் என மாறுக; கனலியும் இயமனும் கூற்றமும் ஞாயிறுகளும் ஒன்றுகூடி அழிக்கும் ஊழிமுடிவிலே என்க. தொகூஉம் என்பதனை ஆழியோடும் கூட்டி ஏழும் ஒன்றுகூடிய ஆழியின்கண் என்க.

உருகெழு - அச்சம் பொருந்தின; கண்டோர் அச்சமுறுதற்குக் காரணமான கேழல் என்றவாறு. மாவிசும்பு: கரியமேகத்திற்கு ஆகு பெயர். ஊழிமுடிவின்கண் ஏழுமேகமும் ஒன்றுகூடி இடையறாது பெய்து நிலத்தை முழுகச்செய்யும்பொழுது அவ் ஊழிமழையால் மீண்டும் நிலம் முழுகாதவாறு இறைவன் அன்னமாய் அந் நீரைச் சிறகரால் புலர்த்துவன் என்பது கருத்து. ஞாலத்துறையுட்டேவர் - முனிவர் ; வானத்துறையுள் தேவர் எனப் பின்னரும் கூட்டுக.

நின்னைப் பாடுவோராகிய முனிவரும் தேவரும் பாடுவதும் தம் முன்னோர் பாடும் வகையே என்க. எனவே நினது பழைமையை முனிவரும் தேவருங்கூட அறிந்து பாடவல்லாரல்லர் என்றபடியாம்.

நால் எண்தேவர் - ஆதித்தன் உருத்திரன் வசு மருத்துவன் என்னும் ஒரோவோர் பொருள்கள் பலவாகப் பகுக்குங்கால் பன்னிருவர் பதினொருவர் எண்மர் இருவர் என நால்வேறு எண்ணின்கண் அடங்கிய முப்பத்துமூவரும் என்க.

(பரிமே.) உடு. புட்கல முதலிய மேகங்கள் பொழிய விசும்பி னின்று வீழ்கின்ற நீரை.

உகூ - ௩௦ : எம்பாடல்தாம்....... ...........பாடும்வகை

(இ - ள்.) எம்பாடல்தாம் - யாங்கள் பாடுவதும், அப் பாடுவார் பாடும்வகை - அம் முனிவரும் தேவரும் பாடுவது போன்ற வகையேதான் ;

(வி - ம்.) முனிவரும் தேவரும் நின்னை உணர்ந்துபாட மாட்டுவார் அல்லர் எனின், யாங்கள் நின்னை அறிந்து பாடுதல் எங்ஙனம்? யாங்களும் அம் முனிவர் முதலியோர் போன்று முன்னோர் நின்னைப் பாடும் முறையைப் பின்பற்றியே பாடாநின்றேம் என்றவாறு.

௩க - சரு : கூந்தல்...................யாக்கையை

(இ - ள்.) கூந்தல் என்னும் பெயரொடு - கூந்தல் மாவாகிய குதிரை வடிவத்தோடு வந்த, கூந்தல் எரிசினம் கொன்றோய் - கேசி என்பானது கனல்கின்ற வெகுளியை அடக்கிக் கொன்றவனே !, நின் கை புகழ் உருவின - நின் னுடைய கைகள் நினது புகழை ஒத்தன, நகை அச்சாக நல் லமிர்து கலந்த நடுவுநிலை திறம்பிய நயம் இல் ஒருகை - அவற் றுள் நீ மோகினியாகிய பொழுது நின்னைக் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியே இறுதியில் அவுணர்க்கு அச்சமாய் முடிய அமரர் களுக்கு மட்டுமே நல்ல அமிழ்தத்தினைப் பகுத்து வழங்கிய காரணத்தானே செப்பத்திற் றப்பிய நலமில்லாத ஒரு கையினை யும் உடையை ஆயினை, இருகை மாஅல் - இரண்டு கைகளை யுடைய திருமாலே !, முக்கை முனிவ - மூன்று கைகளையுடைய முனிவனே !, நால் கை அண்ணல் - நான்கு கைகளையுடைய தலைவனே !, ஐங்கை மைந்த - ஐந்து கைகளையுடைய வலியுடை யோனே !, அறுகை நெடுவேள் - ஆறு கைகளையுடைய நெடிய வேளே !, எழுகையாள - ஏழுகைகளை யுடையவனே !, எண்கை ஏந்தல் - எட்டுக் கைகளையுடைய பெருமானே !, ஒன்பதிற்றுத் தடக்கை மன் பேராள - ஒன்பது பெருங்கைகளையுடைய நிலை பெற்ற புகழோனே !, பதிற்றுக்கை மதவலி - பத்துக் கைகளை யுடைய பேராற்றலுடையோனே !, நூற்றுக்கை ஆற்றல் -

நூறுகைகளையுடைய ஆற்றலுடையோனே!, விரித்த ஆயிரம் கைமாய மள்ள - விரித்த ஆயிரங் கைகளையுடைய மாயம்வல்ல மறவனே!, பதினுயிரங்கை முதுமொழி முதல்வ - பதினுயிரங் கையினையுடைய வேத முதல்வனே!, நூறுயிரங்கை ஆறு அறி கடவுள் - நூறுயிரங்கையினையுடைய ஆறுவதனுல் அறிதற்குரிய இறைவனே!, அனைத்தும் அல்ல பல அடுக்கல் ஆம்பல் இனைத்து என எண் வரம்பு அறியா யாக்கையை - மேற்கூறப் பட்ட எண்கள் எல்லாம் கிடக்கப் பலவாக அடுக்குதலையுடைய ஆம்பல் என்னும் பேரெண்ணுலும் இவ்வளவு என்று எண்ணின் வரம்புகூற அறியாத உடலினையுடையவனே!;

(வி - ம்.) நகை - மகிழ்ச்சி; அமிழ்தம் பங்கிட்ட காலத்தே திருமால் மோகினியாக வடிவங்கொண்டு வந்தாராக, அவ் வடிவத்தைக் கண்ட அளவிலே அவுணர் மயங்கி அமிழ்துண்ணலை மறந்து மகிழ்ச்சியுற்றனர்; அம் மகிழ்ச்சியே பின்னர் அவர்க்கு அச்சமாய் மாறிவிட என்பார், 'நகையச்சாக' என்றூர். அச்சு-அச்சம். அவுணரும் அமரரும் சேர்ந்து கடைந்தெடுத்த அமிழ்தம் இருசாரார்க்கும் பகுத்துக் கொடுக்கப்படுதலே நடுநிலைமை ஆகவும் அவருள் ஒருதிறத்தாராகிய அவுணர்க்குக் கொடாமல் அமரர்க்கே வழங்கிய செயல் நடுவுநிலை திறம்பிய செயலாகும் என்க.

இனி, இறைவன் எண்ணிறந்த செயல்களை இடையறுது செய்து கொண்டிருத்தலால் இவ் வியல்பினைச் செயல் செய்தற்குரிய கையின் மேலிட்டு எண்ணிறந்த கைகளையுடையோய் என்பார் 'மூக்கை முனிவ .................நூறுயிரங்கை ஆறு அறிகடவுள்' என்றூர். எல்லாப் பொருளும் இறைவன் வடிவமே ஆதலான் அவையும் எண்ணிறந்தன என்பார், 'இனைத்தென எண்வரம்பு அறியா யாக்கையை' என்றூர். முனிவ! அண்ணல்! மைந்த! நெடுவேள்! ஏந்தல்! மன்பேராள! மதவலி! ஆற்றல்! மாயமள்ள! முதுமொழி முதல்வ! ஆறறி கடவுள்! என்னும் விளியேற்ற பெயர்கள் இறைவனுடைய பல்வேறு தன்மைகளையும் குறித்து நிற்றல் உணர்க. முனிவ என்றற்குப் பற்றில்லாதவனே என்றும், அண்ணல் என்பதற்குத் தலைமைத் தன்மையுடையவனே என்றும், இங்ஙனமே அனைத்திற்கும் பொருள் விரித்துக்கொள்க. ஆறு-ஆறுவதாகிய மனனுணர்ச்சி-மனனுணர்ச்சியா லுணர்தற்குரிய கடவுளே! என்க. என்னை?, "பொங்கியமுற்றியவால் உணர்வினுக்கு அணுகுங் காட்சியான்" எனப் பிறரும் கூறுதல் காண்க. (எனவே ஐம்பொறிகளாலும் உணரப்படாதவன் கடவுள் என்பதும் கொள்க.) எண்களின் இறுதியினின்ற ஆம்பல் என்னும் பேரெண்ணை ஆம்பல் ஆம்பல் என ஊழிபல நின்றடுக்கினும் இறைவ னுடைய யாக்கைக்கு எண்வரம்பிடலாகாது என்றவாறு.

(பரிமே.) ௩௧. கூந்தலையுடைய மாவை 'கூந்தல்' என்றும், பெயரினையுடைய வடிவைப் 'பெயர்' என்றும் கூறினர் ஆகுபெயரான்.

கேசி - குதிரையாய் வந்து பொருதானேரசுரன். இப் பெயர் கேசமென்னும் வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன் பொருண்மைபற்றிக் 'கூந்தல்' என்றூர்.

௩உ. எண்ணிறந்தமையான் நின் கைகள் நின்புகழை ஒத்தன, கடந்தன, கழிந்தன, என்பனபோல உருவின என்பது ஈண்டு உவமச் சொல்லாய் நின்றது.

௩௬ - ௪௪. தனக்கோர் வடிவும் பெயரும் இன்றி அன்பராயினோர் கருதிய வடிவே வடிவாகவும், அவர் இட்ட பெயரே பெயராகவும் உடையனாதலின் 'முக்கைமுனிவ' என்பது முதலாக 'நாறுயிரங்கை ஆறறிகடவுள்' என்பது ஈறாக வடிவு வேற்றுமையும் பெயர் வேற்றுமையுஞ் சொல்லப்பட்டன.

௪௬ - ௫௩: நின்னைப்புரை.........................முதல்வனி

(இ - ள்.) நின்னைப் புரை நினைப்பின் நீ அலது உணர்தியோ - பெருமானே நின்னை உயர்வு கூறக் கருதில் அதனை நீயே உணரினல்லது பிறரான் உணரப்படுவாயோ?, முன்னை மரபின் முதுமொழி முதல்வ - அநாதியாய் வருகின்ற முறைமையினையுடைய வேதத்திற்கு முதல்வனே!, விரிந்து அகன்ற கேள்வி அனைத்தினும் - பற்பல கிளைகளாக விரிந்து பரந்த ஆகமங்கள் எல்லாவற்றானும், வலியினும் - அகங்காரத்தானும், மனத்தினும் - நெஞ்சத்தானும், உணர்வினும் - அறிவானும், எல்லாம் - இன்னோரன்ன பிற கருவிகளானும், நினக்கு வனப்பு வரம்பு அறியா மரபினோய் - நின்னுடைய வனப்பும் எல்லையும் அறியப்படாத முறைமையினையுடையோய், பிறைவளர் நிறை மதி - பிறையாகத் தோன்றி நிறையும் இயல்புடைய திங்களினது, அணி நிழல் வயங்கு ஒளி ஈரெண் தீம் கதிர் உண்டி - அழகிய குளிர்ச்சியோடு விளங்கும் ஒளியாகிய பதினாறுகலைகளாகிய இனிய நிலவாகிய உணவினையும், அணி மணிப் பைம் பூண் அமரர்க்கு முதல்வன் நீ - அழகிய மணிகளாலியற்றிய பசிய அணிகலன்களையும் உடைய தேவர்களுக்குத் தலைவன் நீ!;

(வி - ம்.) நினக்கு உயர்வு கூறக் கருதின் நீயே அதனை உணரக் கூடுமல்லது பிறர் உணரக்கூடாத உயர்வினையுடையை நீ என்பது கருத்து. புரை - உயர்வு; "உரு உட்காகும் புரை உயர்வாகும்" (சொல் - உரி: ௪) என்பது தொல்காப்பியம். முன்னைமரபு - அநாதியாய் வரும் முறைமை. முதுமொழி - வேதம். கேள்வி - ஆகமங்கள். ஆகமங்கள் அனைத்தும் வேதத்தினின்றே விரிந்து பரந்தன ஆகலான், 'விரிந்து அகன்ற கேள்வி' என்றார். நான் என முனைத்தெழுதலின் அகங்காரத்தை 'வலி' என்றார். வலி: ஆகுபெயர். மனம் - உட்கருவிகளுள் ஒன்று. உணர்வு - அறிவு. வனப்பு என்றது, இலக்கணத்தை. இறைவனது இலக்கணத்தையும் எல்லையையும் கேள்வி முதலிய கருவிகளால் உணரவியலாது என்பது கருத்து. பிறைவளர் நிறைமதி - பிறையாய்ப் பிறந்து நாடோறும் வளர்ந்து நிறைகின்ற திங்கள் என்க. நிறைமதி அணிநிழல் வயங்கொளி யீரெண்டீங்கதிர் உண்டி என மாறுக. தேவர்கள் திங்களின் கலைகளை நாடோறும் உண்பர் என்பது புராணம்.

௫௪ - ௫௮ : திணிநிலம்..................மரபறிவோர்க்கே

(இ - ள்.) அயர்ந்து திரிந்து - மயங்கி மாறுபட்டு நினக்குப் பிழைசெய்து பின்னர், திணி நிலங் கடந்தக்கால் - நீ மண் செறிந்த உலகத்தை அளந்த பொழுது நின் பெருமைகண்டு, நின் அஞ்சி அகன்று ஓடி - நினக்கு அஞ்சித் தம்பதிப் பெயர்ந்து போய், கடல் பாய்ந்த - கடலிலே புக்கொளித்த, பிணிநெகிழ்பு அவிழ் தண்தார் - கட்டவிழ்ந்து மலர்ந்த குளிர்ந்த மாலையினை யுடைய, அன்னவர் பட அல்லா அவுணர்க்கும் முதல்வன் நீ - அத்தன்மை யுடையரும் உட்பட அவரல்லாத ஏனை அவுணர்க்கும் தலைவன் நீயே காண், நின் மரபு அறிவோர்க்கு - நின்னுடைய இயல்பினை அறியும் ஞானியர்க்கும், அதனால் - நீ அமரர்க்கும் அவுணர்க்கும் ஒத்திருத்தலானே, இவர் பகைவர் இவர் நட்டோர் என்னும் வகையும் உண்டோ - இவர் எமக்குப் பகையாயுள்ளோர் இவர் எமக்கு நண்பராயுள்ளோர் என்று கூறுதற்கு வகையும் உளதோ? இல்லையன்றோ?;

(வி - ம்.) பெருமானே! இருவேறு பண்புடைய அமரர்க்கும் அவுணர்க்கும் நீயே தலைவனாக இருக்கின்ற நின்னியல்பினை அறியும் ஞானியர்க்கும் 'யாவருங்கேளிர்' என்பதல்லால் இவர் பகைவர் இவர் நட்டோர் எனக் கூறுதற்கு வகையும் உளதோ என்பது கருத்து.

நினக்கு யாவரும் அடியராதலின் நின் அடியார்க்கும் (யாவரும் கேளிரே யாவர்) பகைவரும் நட்டோருமிலர் என்க. அயர்ந்து - மயங்கி; திரிந்து - பகைப் பண்புடையராய்ப் பிறழ்ந்து என்க. பிழை செய்து எனவும் நின்பெருமை கண்டு எனவும் சிலசொற்கள் வருவித்து முடிக்க.

௫௯ - ௬௨ : ஆயிர.............................அறிந்தனம்

(இ - ள்.) ஆயிரம் அணர் தலை அரவு - ஆயிரமாகிய கிளர்ந்த தலைகளையுடைய ஆதிசேடனாகிய பாம்பினையும், வாய்க் கொண்ட - தன் வாயிடத்தே பற்றிக் கொண்டுள்ள, ஊர்தி சேவலும் - நின் ஊர்தியாகிய கருடச் சேவலும், செங்கண் மாஅல் ஓ எனக் கிளக்கும் - சிவந்த கண்களையுடைய திருமாலே யான் அறியாது கெட்டேன்! என்னை உய்யக் கொண்டருள்க என ஓவென்று அலறி நெடுங்காலம் கூப்பிட்டழைக்கும்படியான, கால முதல்வனை - காலத்திற்கு முதல்வனும் நீயே!, இனை எ‍ன கிளத்தலின் - நீ இத்தன்மையினை என்னும் இவற்றைச் சாமவேதம் விதந்து கூறுதலானே, இனைமை நற்கு அறிந்தனம் - யாங்களும் இத்தன்மைகளை விளங்க அறிந்தோம்;

(வி - ம்.) இவையெல்லாம் சாமவேதங் கூறுதலானே, யாங்களும் அறிந்து கூறுநின்றேம் என்பது கருத்து.

அணர் - கிளர்ந்த; ஆயிரந்தலையரவு - ஆதிசேடன். அரவு என்புழி உயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. நிலந்தாங்கும் பேராற்றலுடைய ஆதிசேடனையும் தன் வாயிற்கொண்ட ஆற்றலுடைய நின் ஊர்திச் சேவலும் என்க.

'காலமுதல்வன்' என்றது, ஏனை எப்பொருட்கும் முதலாகிய காலத்திற்கும் முதல்வன் நீ என்றபடியாம். முதல்வனை என்புழி, ஐ: சாரியை.

ஏஎ - சாமவேதம் : ஆகுபெயர். ஏஎ என்னும் இசையினையுடையது என்பது பொருள். இனைமை - இத்தன்மை. நற்கு - நன்கு.

(பரிமே.) ௩௧ - ௬௧: என்றது நீ இந்திரற்கு இளையோனாய் அசுரரை வெல்கின்ற காலத்து 'இவ்வெற்றி யெல்லாம் இவனின் ஆயவல்ல; இவனைத் தாங்கிச் செல்கின்ற என்னின் ஆய' என்று கருடன் தன்னை வியந்திருப்ப, அக் கருத்தை ஒழித்தற் பொருட்டு 'நீ என் மெய்ம்முழுதும் தாங்கல் வேண்டா! ஒருகையிற் சிறு விரற்றுணை தாங்கினை எனில் நீ கூறியவாறே யாகும்' என்று அத்துணை அவன் மேல் வைப்ப, அவ்விரற்கு ஆற்றாது பாதலத்து வீழ்ந்து நெடுங்காலம் கிடந்து துதித்தான்; அத்தன்மைத்தாய வலி தாழக்கொண்ட மெய் களினுமுடையை என்றவாறு.

௬௨. உபசார வழக்கால் ஏஎ என்னும் இசையுடையதனை 'ஏஎ' என்றார்.

௬௩ - ௭௨: தீயினுள்...............பிறப்பித்தோரிலையே

(இ - ள்.) தீயினுள் தெறல் நீ - நெருப்பின்கண்ணமைந்த வெம்மை நீ, பூவினுள் நாற்றம் நீ - மலரின்கண் நீ மணமாக இருக்கின்றனை, கல்லினுள் - மணிகளுள், மணியும் நீ - அம்மணியாந் தன்மை நீ, சொல்லினுள் வாய்மை நீ - சொற்களுள் நீ வாய்மைத் தன்மையாக இருக்கின்றனை, அறத்தினுள் அன்பு நீ - அறச் செயல்களிலே நீ அன்புடைமையாக இருக்கின்றனை, மறத்தினுள் மைந்து நீ - மறச் செயல்களிலே நீ வன்மைப் பண்பாக இருக்கின்றனை, வேதத்து மறை நீ - வேதத்தின் கண் நீ அரும் பொருளாகவுள்ளனை, பூதத்து முதலும் நீ - பூதங்களில் நீ அவற்றின் முதற் பொருளாய் விளங்குகின்றனை, வெஞ்சுடர் ஒளியும் நீ - ஞாயிற்றின்கண் நீ ஒளியாக இருக்கின்றனை, திங்களுள் அளியும் நீ - திங்களின்கண் உளதாகிய குளிர்ப்பண்பும் நீயேகாண், அனைத்தும் நீ - ஈண்டுக் கூறப்படாத எப்பொருளும் நீயே, அனைத்தின் உட்பொருளும் நீ - எல்லாப் பொருளிடத்தும் அவ்வவற்றின் உட்பொருளாய் இருக்கின்றவனும் நீயே, ஆதலின் - நீயே பொருளும் அவற்றின் உள்ளீடுமாயிருத்தலானே, உறையும் உறைவதும் இலே - நீ உறைதலும் இல்லை நீ உறைதற்கு நின்னின் வேறாய் உறையுமிடமும் இல்லை, மறவியில் சிறப்பின் உண்மையும் மாயம் - மறவியுடையார் மறதி

யில் நின்னைச் சிறப்பித்தல் காரணமாகக் கூறப்பட்ட அவை நினக்கு உளவாம் தன்மையும் பொய், அனையை - நீ மேற் சொல்லிய தன்மையை உடையை ஆதலான், முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலில் - உலகின்கண் முதலினும் இடையினும் இறுதியினும் படைப்பு அளிப்பு அழிப்பு என்னும் தொழில்களைச் செய்யும் பொருட்டு, பிறவாப் பிறப்பு இலை - நீ பிறவாத பிறப்பில்லை, பிறப்பித்தோர் இலை - அங்ஙனம் நீ பிறப் பாயாயினும் நின்னை அவ்வாறு பிறக்கும்படி செய்தோரும் இல்லை;

(வி - ம்.) தெறல் - அழிக்கும் பண்பு; அஃதாவது வெப்பம். நாற்றம் - மணம். மணி - மணியாந் தன்மை. மறை - அரும்பொருள். மைந்து - வலிமை. வெஞ்சுடருள் ஒளி என்க. அளி - குளிர்ப்பண்பு. வெஞ்சுடர் - ஞாயிறு.

உறைவு - உறைதற்றொழில். உறைவது - உறையுமிடம். உண் மையும் - நினக்கு அவை உளவாந் தன்மையும். மாயம் - பொய். மறதி யுடையோர் தம் மறதியாலே நின்னைச் சிறப்பித்தல் காரணமாக கூறப் பட்ட நினது உறையும் இடம் உறைதற்றொழில் ஆகியவை நினக்கு உளவாந் தன்மையும் மாயம் என இயைபு காண்க. ஆர் : அசை. அனையை - அத்தன்மையினை. மறதியுடையோர் என்றது, மறக்கும் இயல்புடைய மாணிடர் என்றவாறு. மறதியினாடேயும் நின்னை நினைந்து சிறப்பித்தல் காரணமாகக் கூறப்பட்ட அவை என்க.

முதலில் படைத்தற்கும் இடையே காத்தற்கும் இறுதியில் அழித் தற்கும் நீ பிறவாப் பிறப்பில்லை என்க.

நீ அங்ஙனம் பிறப்பினும் நின் திருவுளத்திற்கியையப் பிறத்தலல் லால் எம்மைப் பிறப்பிக்கும் வினையும் பிரமனும்போல நின்னைப் பிறப் பிப்போர் ஒருவரும் இலர் என்றவாறு.

எ௩ - எசு : **பறவாப்பூவை................ஏமத்தைமாதோ**

(இ - ள்.) பறவாப் பூவைப் பூவினேய் - காயாம் பூவினது நிறத்தினையுடையோனே !, அருள்குடை ஆக அறம் கோல் ஆக - நீ திருவருளே வெண்கொற்றக் குடையாக அக் குடைக்கு அறமே காம்பாக, மூவேழ் உலகமும் இருநிழல் படாமை - சுவர்க்க மத்திய பாதலம் என்னும் முக்கூற்று இருபத்தொரு உலகத்தையும் இரண்டாவதாக வேறோர் குடை நிழல் யாண் டும் படாதபடி, ஒரு நிழல் ஆக்கிய ஏமத்தை - நினது ஒரு குடை நிழலின்கண் ஆக்கிய இனிய காவலினையுடையாய்;

(வி - ம்.) பறவாப்பூவை - காயா. வெளிப்படை; பறவாக் கொக்கு; பாயா வேங்கை என்பனபோல. பூவினேய் - பூவினது நிறம்போன்ற மேனியை உடையோய் என்க. இனி அறங்கோலாக என்பதற்கு அறமே செங்கோலாக எனினும் பொருந்தும். மாதோ: அசை.

எள - அ/0: பாழெனை ......................சிறப்பினை

(இ - ள்.) பாழ் என-புருடதத்துவமும், கால் என-வானம் முதலிய ஐம்பெரும் பூதங்களும், பாகு என - வாக்கு முதலிய தொழிற் கருவிகள் ஐந்தும், ஒன்று என - ஓசையும், இரண் டென - ஊறும், மூன்றென - ஒளியும், நான்கென - சுவையும், ஐந்து என - நாற்றமும் ஆகிய ஐம்புலன்களும், ஆறு என - மெய் வாய் கண் மூக்குச் செவி மனம் என்னும் அறிகருவிகள் ஆறும், ஏழு என - அகங்காரமும், எட்டு என - புத்தியும், தொண்டு என - மூலப்பகுதியும், எண் - ஆகிய இவ்வெண் களானே, நால்வகை ஊழி - நால்வகை ஊழியின்கண்ணும், நவிற்றும் சிறப்பினை - ஆராய்ந்து கூறப்படும் பெருமையினை யுடையோய்;

(வி - ம்.) தன்னிடத்தினின்றும் பிறிதொன்று தோன்றுத லின்மையான் புருடதத்துவத்தைச் சாங்கியர் மதம்பற்றிப் பாழ் என்றார். கால் - முளை. பூதங்கள் ஐந்தும் தாம் பிறவற்றினின்றும் முளைத்தலானும் தம்மிடத்தினின்றும் பிற முளைத்தலானும் கால் என ஆகுபெயராற் கூறப்பட்டன. கால் அப்பொருட்டாதல் "நிலத்திற் கிடந்தமை கால் காட்டும்" (திருக்குறள். ௯௫௯) என்புழியும் காண்க.

எனவென்னும் இடைச்சொல்லெல்லாம் எண்ணும்மைப் பொரு ளன. பாகு - பாகுபாடு. சொல்லல் இயங்கல் கொடுத்தல் விடுத்தல் இன்புறுதல் என்னும் தொழிலானே பாகுபட்டமையில் வாக்கு கால் கை பாயுவு உபத்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்தனையும் பாகு என் றார். கூறுபட்டவற்றைக் கூறு என்றாற்போல.

ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஏழு எட்டு தொண்டு என வரும் எட்டு எண்களும் பூரணப்பொருளன. அஃதாவது: இரண்டு முதலிய எண்ணுப்பெயர்கள் பன்மைப்பொருள் உணர்த்தாமல் தம்மால் உணர்த்தப்படும் இறுதிப்பொருள் ஒன்றனையே உணர்த்தி நிற்பதாம். எடுத்துக்காட்டு: இரண்டு யானை மூன்று யானை என்புழிப் பன்மைப் பொருள் குறித்தலும், அவற்றுள் இரண்டு பரியது மூன்று நெடியது என்புழி இரண்டாவது மூன்றாவது எனவும் பொருள்படுமன்றே அங்ஙனம் பொருள்படுங்கால் இவ்வெண்கள் தமக்குரிய பன்மைப் பொருள் குறியாது தம்மாற் குறிக்கப்படும் ஒரு பொருளையே முழுதும் குறித்து அதற்குப் பெயராய் நிற்றல் என்க.

ஒன்று—முதற் பூதமாகிய வானத்தின் சிறப்புப் பண்பாகிய ஓசை.

இரண்டு—இரண்டாம் பூதமாகிய காற்றின் சிறப்புப்பண்பாகிய ஊறு.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மூன்று - | மூன்றும் | ,, | தீயின் | ,, | ,, | ஒளி |
| நான்கு - | நான்காம் | ,, | நீரின் | ,, | ,, | சுவை |
| ஐந்து - | ஐந்தாம் | ,, | நிலத்தின் | ,, | ,, | நாற்றம் |

ஆறு - மனத்தையும் கூட்டி ஞானேந்திரியம் ஆறும் என்றார். ஏழு—ஏழாவதாகிய அகங்காரம். எட்டு - எட்டாவதாகிய புத்தி. ஒன் பது - ஒன்பதாவதாகிய மூலப்பகுதி. நால்வகை ஊழி - கிருதயுகம் திரேதயுகம் துவாபரயுகம் கலியுகம் என்பன.

(பரிமே.) ௮௦. என்றது பூதங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஐந்தும் புலனைந்தும் மனமுதலிய அந்தக்கரணங்கள் மூன்றும் மூலப் பகுதியும் புருடனுமெனப்பட்ட தத்துவம் இருபத்தைந்தனுலும் எக் காலத்தும் ஆராயப்படும் பெருமையை உடையை என்றவாறு.

௮௧ - ௯௦: செங்கண்........................மள்ள

(இ - ள்.) செங்கண் காரி - சிவந்த கண்ணையும் கரிய உடம்பினையும் உடைய வாசுதேவனே, கருங்கண் வெள்ளை - கரிய கண்ணையும் வெள்ளிய உடம்பையுமுடைய சங்கருடணனே, பொன்கட் பச்சை - சிவந்த உடம்பினையுடைய பிரத்தியும்நனே, பைங்கண் மால் - பசிய உடம்பினையுடைய அநிருத்தனே, இட வல - ஆய்ச்சியரோடு குரவைக் கூத்தாடுங் கால் அவர்க்கு இடமும் வலமும் ஆகியவனே, குட - கூத்தாட எடுத்த குடத்தினையுடையோய், அல - பகைவரைக் கொல்ல எடுத்த கலப்பைப் படையினை உடையோய், கோவல - பசுநிரை மேய்க்கும் ஆயனே, காவல - உயிர்களைக் காத்தற்றொழிலை யுடையோனே !, காணா மரப - காணப்படாத முறைமையினை யுடையோய், நியா நினைவ - அன்பரது விடாத நினைவின்கண் உள்ளாய், மாயா மன்ன - அழியாத நிலைபேறுடையோனே !, உலகு ஆள் மன்னவ - உலகினை ஆளும் அரசாகியவனே!, தொல் இயல் புலவ - பழைமையான இயலறி புலவனே !, நல் யாழ்ப்பாண - நல்ல யாழ் வல்ல இசைப்புலவனே, மாலைச் செல்வ - வனமாலை அணிந்த செல்வனே, தோலாக்கோட்ட - தோல்வியறியாத வெற்றிச்சங்கினை (இடப்பக்கத்தே) உடையோனே!, பொலம்புரி ஆடை - பொன்னுடையினையுடையோய்!, வலம்புரி வண்ண-வலம்புரிச் சங்கையொத்த நிறத்தை யுடையோனே, பருதி வலவ - ஆழிப்படையை வலப்பக்கத்தே உடையாய், பொருதிறல் மல்ல - போர் செய்யும் ஆற்றல் மிக்க மல்லனே!, திருவின் கணவ - திருமகளுக்குக் கணவனே, பெரு விறல் மள்ள - பெரிய வெற்றியையுடைய மறவனே ;

(வி - ம்.) செங்கட்காரி - வாசுதேவன். கருங்கண் வெள்ளை - பலதேவன். பச்சை என்றது பிரத்தியும்நன் என்னும் வடமொழித் திரிபு. பைங்கண் மால் - அநிருத்தன். இந்நால்வரும் விட்டுணுவின் வியூகர் எனப்படுவர்.

இடவ, வலவ எனற்பாலன ஈறுகெட்டு இடவல என நின்றன. குட - கூத்தாடற்கெடுத்த குடத்தையுடையோய் என்க. குடக்கூத்து என்பது திருமாலிற்குரிய கூத்துக்களுள் ஒன்று; "குடத்தாடல் குன் றெடுத்தோனுடல் அதனுக்கு அடைக்குவ ஐந்துறுப்பாய்ந்து," "வாணன் பேரூர் மறுகிடை நடந்து, நீணில மளந்தோன் ஆடிய குடமும்." (சிலப். ௬; ௫௪-௫) "குடங்கள் எடுத்தேறவிட்டுக் கூத்தாட வல்ல எங்கோவே," "குடமாடீ" "குடமாடிய கூத்தனை." எனவரும் ஆன்றோர் மொழிகளுங் காண்க.

அல - கலப்பைப்படையுடையோனே. கோவலன் - இடையன். காவல - காத்தற்றொழிலையுடையோனே! நீயா - விட்டு நீங்காத. நினைவ - நினைவின்கண் உள்ளோய். உலகபாலகருருவாய் நிற்றலின் 'உலகாள் மன்ன' என்றார். மாலை - வனமாலை. பொலம்புரியாடை - பொன்னிறத்தால் மிக்க ஆடையுடையோன் என்க. பருதி - ஆழிப் படை. வலவ - வலப்பக்கத்தே ஏந்தியவனே. கோட்ட - கோட்டை யுடையவனே; கோடு - சங்கு; ஈண்டுப் பாஞ்சசன்யம். மல்லன் - மற் போர் செய்பவன். மள்ளன் - மறவன்.

கூக - கூச : மாநில.................................நிழலே

(இ - ள்.) முதல் முறை மாநிலம் இயலா அமையத்து - ஆதி ஊழியின்கண் நீரினூடே பெரிய நிலம் தோன்றாத காலத்தே, நாம வெள்ளத்து நடுவண் - அச்சந்தரும் அப் பெரிய வெள்ளத்தின் இடையே தோன்றியதும், வாய்மொழி மகனொடு மலர்ந்த தாமரைப் பொகுட்டு - வேதத்தை உரைக் கும் மகனாகிய பிரமதேவனோடு விரிந்ததுமாகிய பொகுட்டினை யுடைய உந்தித் தாமரையையுடையாய், நின் நேமி நிழல் - நினது நேமியே உலகிற்கு நிழலாவது.

(வி - ம்.) நிலந்தோன்றாத ஆதியூழியில் வெள்ளத்து நடுவே தோன்றியதும் பிரமனொடு மலர்ந்ததுமாகிய உந்தித்தாமரையை உடையோனே நினது நேமியே உலகிற்கு நிழலாவது என்க.

(பரிமே.) கூச. தாமரைப் பொகுட்டு என்பது வரையறை இன்மையால் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகை.

---

## நான்காம் பாடல்

# திருமால்

### பொருட் சுருக்கம்

**க - ரு:** *ஐந்து பொறிகளால் உளதாகும் மயக்கவிருளை அகற்றி, மைத்திரி முதலிய நான்கானும், அகத்தைத் தூய்மை செய்து, சமாதியாகிய ஒரு நெறியின்கண்ணே தம்மைச் செலுத்திய நின் அன்பர்கள், நின்னைத் தொழுது ஏத்தி நின் புகழை விரித்தோதினர். அப் புகழெல்லாம் நினக்கு இயல்பாவன அன்றி வியக்கத்தக்கன அல்ல என்பது யாங்கள் நன்கு அறிந்திருப்பினும், எளியேமாகிய யாங்கள் அப் புகழுட் சிலவற்றை நெறி பிறழக் கூறுதல் நோக்கி நீ நகைத்தலும் கூடும். அந்த நகைப்பைப் பெறுதலும் எங்கட்குப் பேறே ஆகுமாதலின், யாம் அறிந்த வண்ணம் நின்னைப் புகழ்தற்கு நாணுவேமல்லேம்.*

**சு - கூ:** *நின் திருமேனி நீலமணியையும் கடலையும் முகிலையும் ஒத்தது. அக் கரிய மேனியோடு முரணிய பொன்னுடையையும் உடையை; பகைவர் உயிருடன் மாறுபட்ட ஆழிப்படையை உடையை ;*

**கo - உச:** *சிவந்த கண்ணையுடையோனே!, பிரகலாதன் நின்னைப் புகழ, அது பொறாத இரணியனுடைய மார்பினைப் பிளந்த நகத்தினை உடையை. பண்டு நிலம் நீரினுள் முழுகிக் கிடந்தபொழுது நீ வராகமாகி அந்நிலத்தை எடுத்து நிறுத்திய செயல் உலகந்தாங்கும் மேருமலையின் செயலோடு ஒக்கும்.*

**உரு - ஙரு:** *நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றின்கண் காணப்படுகின்றன; நின் தண்மையும் மென்மையும் திங்களிடத்தே உள்ளன; நின் சுரத்தலும் வண்மையும் முகிலிடத்துள்ளன; நின் காவலும் பொறுமையும் நிலத்தின்கண் உள்ளன; நின் மணமும் ஒளியும் காயாம்பூவிடத்தே காணப்படுகின்றன; நின் தோற்றமும் அகலமும் கடலிடத்தே காணப்படுகின்றன; நின் உருவமும் ஒலியும் விசும்பின்கண் உள்ளன; நின் வரவும் ஒடுக்கமும் காற்றின்கண் உள்ளன; இவையும் இன்னோரன்ன பிறவும் நின்னினின்றும் பிரிந்து நின்னையே தழுவி நின் காவற்கண் அமைந்துள்ளன ;*

**ஙசு - சஅ:** *கருடக்கொடியோனே! நினக்குப் பனை கலப்பை யானை முதலிய கொடிகள் உள்ளன ; எனினும்*

நினக்குக் கருடக் கொடியே சிறந்த கொடி ; அதனை ஒக்கும் கொடி பிறிதில்லை. அக் கருடன் பாம்பினது உயிரையும் உடலையும் ஒருங்கே உண்ணுவான்; அக் கருடன் இடையிலே கட்டப் பட்டதும் பாம்பு; அவனுடைய தொடியும் முடியணியும் ஏனை அணிகலனும் பாம்புதான்; அவன் தலையின்மேலும் சிறகின் மேலும் பாம்புகளே உள்ளன; அவனது இரையும் பாம்பே ;

**சகூ - ருசா :** நீ கொடுமையுடையாரிடத்தே கொடுமையும் செம்மை யுடையார்பால் செம்மையும் வெம்மையுடையாரிடத்து வெம்மையும் தண்மையுடையாரிடத்துத் தண்மையும் உடையை. அவை இல்லாரிடத்தே நீயும் அப் பண்பிலையாவாய். இங்ஙன மன்றி, உனக்குப் பகைவரும் இல்லை நண்பரும் இல்லை. அன்பர்கள் நெஞ்சிற் கருதிய வடிவமே நினக்கு; வடிவமாம் நினக்கென்று தனியே வடிவமொன்று இல்லை ;

**ருஎ - சாரு :** மணிமேனியிடத்தே வனமாலை யணிந்தவனே ! திருமறுமார்பனே ! தாமரைக் கண்ணோய்! அளத்தற் கரியோனே ! நீ நின்னினும் சிறந்த திருவடிகளையுடையை; நிறைந்த கடவுட்டன்மையையுடையை; இவையல்லாத வேறு பண்புகள் பலவும் உடையை; அவை அந்தணர் அருமறைப் பொருளாயுள்ளன யாமறிவேமல்லேம் !;

**சாசா - எ௦ :** நீயே ஆலின்கீழும் கடம்பினும் யாற்றிடைக் குறையினும் மலையிடத்தும் பிறவிடத்தும் பொருந்திய தெய்வங்களாக வேறு வேறு பெயரும் உருவமும் கொண்டு விளங்குகின்றாய். இவ்விடங்களேயன்றி யாண்டும் நிறைந்திருக்கின்றவனும் நீயே ;

**எ௦ - எங :** மேலும் நின் அன்பருடைய தொழுத கைகளின் அமைதியின் அமர்ந்திருப்போனும் நீயே; அவரவர் ஏவலாளனும் நீயே; அவரவர் செய்த பொருளுக்குக் காவலும் நீயே !

ஐந்திருள் அறநீக்கி நான்கின் உள்துடைத்துத்தம்
ஒன்றுற்றுப் படுத்தநின் ஆர்வலர் தொழுதேத்தி
நின்புகழ் விரித்தனர் கிளக்குங்கால் அவைநினக்
கிறும்பூ தன்மைநற் கறிந்தே மாயினும்
ரு நகுதலுந் தகுதியீங் கூங்குநிற் கிளப்பத்
திருமணி திரைபா டவிந்த முந்நீர்
வருமழை யிருஞ்சூன் மூன்றும் புரையுமாமேய்
மாஅ மெய்யோடு முரணிய வுடுக்கையை
நோனா ருயிரோடு முரணிய நேமியை

செயிர்தீர் செங்கட் செல்வநிற் புகழப்
புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற்
பிருங்க லாதன் பலபல பிணிபட
வலந்துழி, மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்
தலர்ந்த புகழோன் தாதை யாகலின்
இகழ்வோன், இகழா நெஞ்சின னாகநீ யிகழா
நன்று நட்டவ னன்மார்பு முயங்கி
ஒன்று நட்டவ னுறுவரை மார்பிற்
படிமதஞ் சாம்ப வொதுங்கி
இன்ன லின்னரோ டிடிமுர சியம்ப
வெடிபடா வொடிதூண் தடியொடு
தடிதடி பலபட வகிர்வாய்த்த உகிரினை
புருவத்துக் கருவல் கந்தத்தால்
தாங்கியிவ் வுலகந் தந்தடிப் படுத்ததை நடுவண்
ஓங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்
நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையு மாரியுள
நின், புரத்தலு நோன்மையு ஞாலத்துள
நின், நாற்றமு மொண்மையும் பூவையுள
நின், தோற்றமும் அகலமு நீரினுள
நின், உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின், வருதலும் ஒடுக்கமு மருத்தினுள
அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவும்
ஏமமார்ந்த நிற்பிரிந்து
மேவல் சான்றன வெல்லாம்
சேவலோங் குயர்கொடி யோயே
சேவலோங் குயர்கொடி
நின்றன் றுயர்கொடி பனை
நின்றன் றுயர்கொடி நாஞ்சில்
நின்றன் றுயர்கொடி யானை
நின், ஒன்று உயர்கொடி ஒன்றின்று
விடமுடை யரவினுடல் உயிருருங் குவணம்
அவன், முடிமேல் வலந்தது பாம்பு

பாம்பு தொடி பாம்பு முடிமேலன
பாம்புபூண் பாம்பு தலைமேலது
பாம்பு சிறை தலையன
பாம்பு படிமதஞ் சாய்த்தோய் பசும்பூணவை
கொடிமே லிருந்தவன் தாக்கிரை யதுபாம்பு
கடுநவை யணங்குங் கடுப்பு நல்கலும்
கொடுமையுஞ் செம்மையும் வெம்மையுந் தண்மையும்
உள்வழி யுடையை யில்வழி யிலையே
போற்றார் உயிரினும் போற்றுநர் உயிரினும்
மாற்றே மாற்ற லிலையே நினக்கு
மாற்றா ரும்மிலர் கேளிரு மிலரெனும்
வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே
மனக்கோள் நினக்கென வடிவுவே றிலையே
கோளிருள் இருக்கை ஆய்மணி மேனி
நக்கலர் துழாஅய் நாறிணர்க் கண்ணியை
பொன்னிற் றோன்றிய புனைமறு மார்ப
நின்னிற் றோன்றிய நிரையிதழ்த் தாமரை
அன்ன நாட்டத் தளப்பரியவை
நின்னிற் சிறந்தநின் தாளிணையவை
நின்னிற் சிறந்த நிறைகட வுளவை
அன்னோ ரல்லா வேறு முளவவை
நின்னோ ரன்னோ ரந்தணர் அருமறை
அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயு நீயேநின் ஆர்வலர்
தொழுதகை அமைதியின் அமர்ந்தோயு நீயே
அவரவர் ஏவ லாளனு நீயே
அவரவர் செய்பொருட் கரணமு நீயே.

**கடவுள் வாழ்த்து**

கடுவ னிளவெயினனார் பாட்டு; பெட்டனாகனார் இசை;
பண்ணுப் பாலையாழ்.

## உரை

### க - ரு: ஐந்திருள்......................கிளப்ப

(இ - ள்.) ஐந்து இருள் அற நீக்கி - செவி முதலிய ஐம்பொறிகளாலே உண்டாகும் மயக்கமாகிய இருளைத் துவரக் களைந்து, உள் நான்கின் துடைத்து - உள்ளத்தை மைத்திரி முதலிய நான்கின் பயிற்சியால் தூயதாக்கி, தம் ஒன்று ஆற்றுப்படுத்த நின் ஆர்வலர் - தம்மைச் சமாதியாகிய ஒரே நெறியின்கண் செலுத்திய நின்னுடைய அன்பர், தொழுது ஏத்தி நின் புகழ் விரித்தனர் - நின்னைத் தொழுது போற்றி நின்னுடைய புகழை விரித்து ஓதினர், கிளக்குங்கால் அவை நினக்கு இறும்பூது அன்மை - கூறுமிடத்து அப் புகழ்கள் எல்லாம் நினக்கு இயல்பே ஆவனவல்லது வியக்கப்படுவன அல்லாமையை, நற்கு அறிந்தேமாயினும் - எளியேங்கள் நன்றாக அறிந்துளேம் அங்ஙனம் அறிந்து வைத்தும், ஈங்கு ஊங்கு நின் கிளப்ப - அறிந்து கூறுந் தகுதியில்லாத யாங்களும் இங்கும் உங்குமாக அவற்றுள் சிலவற்றைக் கூற, நகுதலும் - எம் பேதைமை கருதி நீ சிறிது நகைத்தலும் கூடும், தகுதி - அந் நகைப்பைப் பெறுதலும் எமக்கு ஒரு தகுதியேயாம்; ஆதலால் எளியேங்கள் நாணி நின்னைப் புகழ்தலை ஒழியேம் ;

(வி - ம்.) ஐந்திருள் - பொறிகள் ஐந்தானும் உளதாகும் மயக்க விருள் என்க. என்னை?, அம் மயக்கம் தன்னையும் தலைவனையும் மறைத்து நிற்றலால் இருள் எனப்பட்டது. நான்கு - மைத்திரி கருணை முதிதை இகழ்ச்சி என்னும் நான்குமாம். இவற்றுள் மைத்திரியாவது - எவ்வுயிர்க்கும் கேண்மைபூண்டொழுகுதல். கருணையாவது - எவ்வுயிரிடத்தும் இரக்கமுடையராதல். முதிதையாவது - இன்பதுன்பங்களைச் சமமாகக்கொண்டு எப்போதும் மகிழ்ந்திருத்தல். இகழ்ச்சி, பொய்ப் பொருள்களிடத்துப் பற்றில்லாது அவற்றை இகழ்ந்துவிடுதல். இந் நான்குபாயங்களையும் கடைப்பிடியாகக் கொண்டொழுகின் மனம் தூய்தாம் ஆதலின் 'நான்கின் உள்துடைத்து' என்றார். ஒன்று - சமாதி கூடுதல். ஆர்வலர் - அன்பர். இறும்பூது - வியப்பு. நீ எம்மைக் கருதி நகைப்பாயாயினும் நின் நகைப்பிற்கு யாங்கள் பாத்திரமாகலின் அந் நகைப்பும் எங்கட்குப் பெறற்கரும் பேறே ஆகலின், நகுதலுந் தகுதி என்க. முறைப்படி கூறாமல் இங்குமங்குமாய்ச் சில புகழ்களை யாங் கூறுநிற்ப என்க.

(பரிமே.) க-உ : ஈண்டு ஐந்தென்றது ஐந்தன் காரியங்களை. ஐந்தையும் எனவும் நான்கினும் எனவும் வந்த முற்றும்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கன. மைத்திரி முதலிய நான்கும் சித்தத்தை அழகு செய்தலின் அவற்றை வடநூலார் 'சித்தபரி கருமம்' என்ப.

### சு - உக: திருமணி...............................உகிரினை

(இ - ள்.) திருமணி திரை பாடு அவிந்த முந்நீர் வரும் இரும் சூல் மழை மூன்றும் புரையும் மாமெய் - அழகிய நீலமணி

யும் அலை அடங்கிய கடலும் பருவ காலத்தே சூல் கொண்டு வரும் முகிலும் ஆகிய மூன்றனையும் ஒக்கும் கரிய திருமேனியை உடையை, மா மெய்யொடு முரணிய உடுக்கையை - அக் கரிய மேனியோடு மாறுபட்ட பொன்னிறமான ஆடையினை உடையை, நோனார் உயிரொடு முரணிய நேமியை - பகைவருடைய உயிரோடு மாறுபட்ட ஆழிப்படையினை உடையை, செயிர்தீர் செங்கண் செல்வ - குற்றமில்லாத சிவந்த கண்ணையுடையோனே !, பிருங்கலாதன் நிற் புகழ - பிரகலாதன் நின்னைப் புகழா நிற்ப, புகைந்த நெஞ்சின் புலர்ந்த சாந்தின் - அது பொறாது சினத்தீயால் புகைந்த நெஞ்சோடும் புலர்ந்த சாந்தோடும் இரணியன் அப்பிரகலாதன், பல பல பிணிபட வலந்துழி - பற்பல பிணிகள் படும்படி பிணித்தபொழுது, மலர்ந்த நோய் கூர்நடுக்கத்து அலர்ந்த புகழோன் - அப் பிணிப்பாலே மிகுந்த துன்ப மெய்திய காரணத்தானே நடுக்கத்தையுடைய விரிந்த புகழையுடையோனாகிய அப்பிரகலாதன், இகழ்வோன் தாதையாகலின் - தன்னை இகழ்பவன் தன் தந்தையே ஆகலின், இகழா நெஞ்சினன் ஆக - தான் இகழாதவனாய் நிற்ப, நீ இகழா - நீ அவ்விரணியனை இகழ்ந்து, நன்று நட்ட அவன் நன்மார்பு முயங்கி - நின்னோடு நன்றாக நண்பு செய்த அப் பிரகலாதன் வருந்தாமல் அவனுடைய நல்ல நெஞ்சத்துப் பொருந்தி, ஒன்று நட்டவன் உறுவரை மார்பில் - நின்னோடு ஒன்றாக வரங்கொண்ட அவ் விரணியனுடைய பெரியமலை போன்ற மார்பின்கண், படிமதம் சாம்ப ஒதுங்கி - பகைவலி அழியப் பாய்ந்து, இன்னல் இன்னரொடு - துன்பத்தைக் காட்டும் உற்பாதங்களொடு பொருந்தி, இடி முரசு இயம்ப - அவ் விரணியனது இடியை ஒத்த முரசு ஒலியாநிற்ப, வெடிபடா ஒடி தூண் தடியொடு - நீ பிளவுபட்டு வெளிப்படுதலாலே ஒடிந்த தூணினது பிளப்பினோடே, தடிதடி - நின்னால் பிளக்கப் பட்ட அவ்விரணியனது தசை, பலபட - பற்பல வீழாநிற்ப, வகிர் வாய்த்த உகிரினை - வகிர்தல் பொருந்திய நகத்தினை உடையை;

(வி - ம்.) திருமணி - அழகிய நீலமணி. திரைபாடு - அலையுண்டாதல். முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் மழைநீர் என்னும் மூன்று நீரையுடையது; கடல். இனி ஆக்கல் அளித்தல் அழித்தலாகிய மூன்று நீர்மையை உடையது எனினுமாம். இருஞ்சூல் வருமழை என மாறுக. மா - கருமை. கரியநிறத்தோடு மாறுபட்ட பொன்னிற உடுக்கையை என்க. நோனார்-பகைவர். செயிர்தீர் செங்கண்-சினந்தீர்ந்த பொழுதும் இயல்பாகச் சிவந்துள்ள கண் எனினுமாம். இனி உயிர்க் குற்றத்தை நோக்கத்தாலே தீர்க்குஞ் செங்கண்ணுமாம். எல்லாம் அவனுடைமையே யாகலின் 'செல்வ' என விளித்தார்.

பிருங்கலாதன் - பிரகலாதன். வலந்துழி - பிணித்தபொழுது. இகழ வேண்டியவன் இகழா நெஞ்சினனாக நீ இகழ்ந்து எனினுமாம். பிணியாலே உற்ற துயர் பொறுத்தற்பொருட்டு நட்ட அவன் மார்பு முயங்கி என்க.

பகையாய்த் தோன்றி மூன்று பிறப்புத் தீர்ந்தவுடன் நின்னை யடைவேம் எனத் துவாரபாலகர் வரங்கொண்டு இரணியன் முதலி யோராய்த் தோன்றினர் என்பவாகலின், அங்ஙனம் வரங்கோடற்குக் கேண்மையே காரணமாதல்பற்றி இரணியனை 'ஒன்று நட்டவன்' என்றார். ஒன்றாக என்பது ஈறுகெட்டு நின்றது. படிமதம் - பகை வலி - படி பிரதி என்பதன் சிதைவு. இன்னர் - உற்பாதம். 'இடி முரசு இயம்ப' என்றது முரசங்கள் முழக்குவாரின்றியே இடி போலத் தாமே முழங்க என்க. இங்ஙனம் முழங்குதல் உற்பாதமாம் என்பதனை,

> "பிடிமதம் பிறந்தன பிறங்கு பேரியும்
> இடியென முழங்குமால் இரட்ட லின்றியே."
> (சுந்தர - காட்சிப் செய். ௬௨)

எனவரும் கம்பர் செய்யுளானும் உணர்க. தூண்தடி - தூணினது பிளப்பு. தடி தடி - தடியும் தசை.

நின்னாற் பிளக்கப்பட்ட தூண் பிளவுடனே இரணியன் மார்பிற் றசையும் ஒருங்கே விழ என்க. என்றது அத்துணை விரைவில் என்ற படியாம். உகிர் - நகம்.

(பரிமே.) ௬. திரை கிளர்ந்தவழி வெண்மையுடைமையின் 'திரைபாடவிந்த' என்றார். 'மழையிருஞ்சூல்' என்பதனை மேல் 'தாம ரைப் பொகுட்டு' என்றது போலக் கொள்க.

மார்பின் (௧௭) வகிர்தல் (௨௧) என இயையும்.

௨௧ - படி என்பது பாகதச் சிதைவு. ஒரு காலத்தே இரண்டு தடியும் (தூண்தடியும் மார்பின் தடியும்) வீழ்ந்தன என விரைவு கூறியவாறு.

௨௨ - ௨௪: புருவத்து.................குன்றினேடொக்கும்

(இ - ள்.) புருவத்துக் கருவல் கந்தத்தால் தாங்கி - பண்டை நாளிலே இந்நிலம் வெள்ளத்தில் மூழ்கியபொழுது நீ பன்றியாகி வன்மையுடைய கழுத்தாலே தாங்கி, இவ்வுலகம் தந்து அடிப்படுத்தது - இவ்வுலகத்தை மேலே கொணர்ந்து இருத்திய செயல், நடுவண் ஓங்கிய பலர்புகழ் குன்றினோடு ஒக்கும் - நிலத்தின் நடுவே நின்று அதனைத் தாங்கி உயர்ந்த பலரானும் புகழப்படும் மேருவின் செயலை ஒக்கும்;

(வி - ம்.) பூருவத்து எனற்பாலது புருவத்து என முதல் குறுகி நின்றது. கருவல் : ஒருபொருட் பன்மொழி; கருமை, வன்மை என்பன, வலிமை என்னும் பொருளுடைய இரண்டு சொற்கள். அவை கருவல் என மையீறு கெட்டுக் கந்தத்திற்கு அடையாய் நின்றன என்க.

மிக வலிய என்க. கந்தம் - கழுத்து. அடிப்படுத்தது - திருத்தியது. ஐ: சாரியை. மலை பூமியைத் தரிப்பது என்பதனால் அதற்குப் பூதரம் என்று பெயர் கூறுப. மேரு, பூமியை நிலைக்கச் செய்த செயலோ டொக்கும் என்க.

௨௫ - ௩௫ : நின்வெம்மையும்......................எல்லாம்

(இ - ள்.) நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள - நின்னுடைய அழிப்புப் பண்பும் விளக்கமும் ஞாயிற்று மண்டிலத்தின்கண் உள்ளன, நின் தண்மையும் சாயலும் திங்கள் உள - நின்னுடைய அருட்பண்பும் மென்மையும் திங்கள் மண்டிலத்தின்கண் உள்ளன, நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள - நின்னுடைய திருவருட் பெருக்கும் கொடையும் முகிலிடத்தே உள்ளன, நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள - நின்னுடைய தாங்குந் தன்மையும் பொறையும் நிலத்தின்கண் உள்ளன, நின் நாற்றமும் ஒண்மையும் பூவை உள - நின்னுடைய மணமும் ஒளியும் காயாம் பூவின்கண் உள்ளன, நின் தோற்றமும் அகலமும் நீரின் உள - நினது வெளிப்பாடும் பெருமையும் கடலினிடத்தே உள்ளன, நின் உருவமும் ஒலியும் ஆகாயத்து உள - நின்னுடைய உருவமும் மொழியும் விசும்பின்கண் உள்ளன, நின் வருதலும் ஒடுக்கமும் மருத்தின் உள - நின்னுடைய பிறப்பும் மறைதலும் காற்றின்கண் உள்ளன, அதனால் - இங்ஙனமாதலின், இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும் எல்லாம் - இங்குக் கூறிய இவையும் உவையும் அவையும் சுட்டிறந்து நின்ற பிற பொருள்களும் ஆகிய எல்லாம், ஏமம் ஆர்ந்த நிற் பிரிந்து - தமக்குப் பாதுகாவலாக அமைந்த நின்னிடத்திருந்தே பிரிந்து, மேவல் சான்றன - பின்னும் நின்னைத் தழுவியே அமைந்துள்ளன ;

(வி - ம்.) வெம்மை - பகைவரை அழிக்குந் திறல். தண்மை - அன்பர்க்கு அருளும் அளியுடைமை. சாயல் - மென்மை. அஃதாவது - நாட்டிய மரபின் நெஞ்சு கொளினல்லது உலகியல் வழக்கால் ஒருவர்க்கொருவர் காட்டப்படாததொரு மென்மைத் தன்மை. சுரத்தல் - வழங்குந்தோறும் வழங்குந்தோறும் அச் செயலின்கண் மேலும் மேலும் விருப்பம் நிகழ்தல் என்க. வண்மை - கொடை. மாரி - முகில். புரத்தல் - தாங்குதல். நோன்மை - பொறை. ஞாலம் - நிலம். இப் பண்புகள் நிலத்திற்குண்மை "அகழ்வாரைத் தாங்கும் நிலம்" என்பதனானும் உணர்க. நாற்றம் - மணம். ஒண்மை - ஒளியுடைமை. பூவை - காயாமலர் ; ஆகுபெயர். தோற்றம் - வெளிப்பாடு. ஒலி - சொல். வருதல் - அவதரித்தல். ஒடுக்கம் - மறைதல். மருத்து - காற்று. இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும் என்றது சுட்டப்படுவனவும் சுட்டப்படாதனவும் என்றவாறு. ஏமம் - காவல். மேவல் - பொருந்துதல். நிற்பிரிந்தும் பின்னும் மேவல் சான்றன என்க.

(பரிமே.) ௩௪ - ரு: என்றது உலகுயிர்களின் தோற்றமும் நிலைபேறும் ஒடுக்கமும் நின்கண்ண என்றவாறும்.

இவை என்றது நணியவற்றை; உவை என்றது அவற்றிற் சேயவற்றை; அவை என்றது அவற்றினும் சேயவற்றை; பிற என்றது காணப்படாதவற்றை.

௩௫ - ௪௮ : சேவலோங்கு.............................பாம்பு

(இ - ள்.) சேவல் ஓங்கு உயர் கொடியோயே - கருடச் சேவல் எழுதப்பட்ட ஓங்கி உயர்ந்த கொடியினையுடையோனே !, சேவல் ஓங்கு உயர் கொடி நின் - சேவற் கொடியை உடைய நினது, உயர்கொடி ஒன்று பனை - உயர்ந்த கொடியினுள் ஒன்று பனைக் கொடியாகும், நின் உயர் கொடி ஒன்று நாஞ்சில் - நினது உயர்கொடியினுள் ஒன்று கலப்பைக் கொடி, நின் உயர்கொடி ஒன்று யானை நின் உயர்கொடியினுள் ஒன்று யானைக் கொடி, நின் ஒன்று உயர்கொடி ஒன்றின்று - இவ்வாறு நினக்குப் பல கொடிகள் உளவேனும் நினக்கே சிறப்பாக உயர்ந்த கொடியை ஏனைக் கொடி ஒத்தல் இல்லை எதனால் எனின் அச்சிறப்புக் கொடி, விடம் உடை அரவின் உடல் உயிர் உருங்கு உவணம் - நஞ்சுடைய பாம்பின் உடலையும் உயிரையும் உண்ணும் கருடனாதலான், அவன் மடிமேல் வலந்தது பாம்பு - அக் கருடனுடைய வயிற்றின்மேற் கட்டப்பட்ட பட்டிகையும், பாம்பே தொடி பாம்பு - அவன் கையிலணிந்த தொடியும் பாம்புதான், முடிமேலன பாம்பு - அவன் திருமுடிமேற் சுற்றப்பட்ட கண்ணிகளும் பாம்புகளேயாம், பூண் பாம்பு - மேலும் அவனுடைய அணிகலனெல்லாம் பாம்புகளே, தலைமேலது பாம்பு - அவன் தலையின் மேலே அணியப்படும் சூட்டும் பாம்புதான், சிறை தலையன பாம்பு - அவன் சிறகிடத்து அணியப்படுவனவும் பாம்புகளேயாம், படி மதம் சாய்த்தோய் - பகை வலி கெடுத்தோனே!, பசும்பூணவை-பொன்னிறமுடையோயின், கொடிமேல் இருந்தவன் தாக்கு இரையது பாம்பு - கொடிமேலிருந்த அக் கருடன் எறிந்தெடுக்கும் இரையும் பாம்பே ஆகும்;

(வி - ம்.) சேவல்-கருடச்சேவல். நின் உயர்கொடிகளுள் ஒன்று பனை; ஒன்று நாஞ்சில்; ஒன்று யானை. இங்ஙனம் பல கொடிகள் உளவேனும் அவை நின் சிறப்புக்கொடியாகிய கருடக்கொடியை ஒவ்வா; எற்றாலெனின் அக் கருடன் பாம்பின் உடலுயிர் உருங்கும் ஆதலால் என்க. ஒன்றாக உயர்கொடி எனற்பாலது ஈறு கெட்டு ஒன்று என நின்றது. ஒன்றின்று - ஒன்றுதலில்லை என்க: ஒருமைப் பன்மை மயக்கம். இனி நினக்கு ஒன்றாத கொடி ஒன்றில்லை எனக் கூறி அதற்கியைய உரைப்பினுமாம். உவணம் - கருடன். உருங்குதல் - உண்ணுதல். மடி - வயிறு. தொடி - வீரவலயம். வலந்தது - கட்டப் பட்டது. பசும்பூணவை - பொன்னிற முடையோயாகிய நினது என்க. கொடிமேலிருந்தவன் - கருடன்.

(பரிமே.) ௪௩. இன்னும் அது கடவுட்கொடி என்பது தோன்ற அவன் என உயர்திணையாற் கூறினர். செய்யுளாகலிற் சுட்டுப்பெயர் முற்கூறப்பட்டது.

வயிற்றின்மேல் உதரபந்தமாய் வலந்தது.

"படியை மடியகத்திட்டான்" (நான்மணிக் - கடவுள்.) என்புழி யும் வயிறு மடி எனப்பட்டது.

௪௪. முடிமேலன - கண்ணிகள். ௪௫. தலைமேலது - சூட்டு.

௪௮. தாக்கிரை - எறிந்தெடுக்கும் இரை.

இதனால் கருடனுக்கு அறனுடைமையும் மறனுடைமையும் கூறப் பட்டன.

௪௯ - ௫௯ : கடுநவை..................வடிவுவேறிலையே

(இ - ள்.) கடுநவை அணங்குங் கடுப்பும் - மிகவும் துன்ப முண்டாகும்படி வருத்தும் வெகுளியும், நல்கலும் - அருள் செய்தலும், கொடுமையும் - மனக்கோட்டமும், செம்மையும் - நடுவுநிலைமையும் ஆகிய இப் பண்புகளை, வெம்மையும் தண்மை யும் உள்வழி உடையை - நிரலே மறப்பண்புடையாரிடத்தும் அறப்பண்புடையாரிடத்தும் நீ உடையனாயிருக்கின்றாய், இல் வழி இலை - அவை இல்லாதாரிடத்து நீயும் இப் பண்புகள் இல்லாதவனாயிருக்கின்றனை, போற்றார் உயிரினும் போற்றுநர் உயிரினும் - பெருமானே நின்னைப் போற்றாதவருடைய உயிரின் கண்ணும் போற்றுவாருடைய உயிரின்கண்ணும், மாற்று ஏம் ஆற்றல் இலை - நிரலே அதனை மாற்றுதலும் காவல் செய்தலு மாகிய செயல்களை நீ செய்தல் இல்லை, நினக்கு மாற்றோரும் இலர் கேளிரும் இலர் - நினக்குப் பகைவரும் நண்பரும் என்னும் இருதிறத்தாரும் இலராகலான்; எனும் வேற்றுமையின்று அது போற்றுநர்ப் பெறின் - நினக்கு மாற்றாரும் கேளிரும் இலர் என்று கூறும் இதனோடு முன்னர் உள்வழியையுடையை இல்வழி யிலையே என்று கூறியதற்கும் முரண்பாடில்லை அங்ஙனம் கூறியதன் கருத்தை ஆராய்ந்து உணர்வாரைப் பெறுமிடத்து, நினக்கு மனக்கோள் வடிவு - நினக்கு அன்பர் மனத்திற்கொண்ட வடிவமே வடிவமாதலன்றி, நினக்கு என வடிவு வேறு இலை - நீ நினக்கே உரியதாக வேறுவடிவும் உடை யாய் அல்லை ;

(வி - ம்.) கடுப்பும் கொடுமையும் உடைய மறவோரிடத்தே நீ அப் பண்புகளை உடையாய் போலக் காணப்படுகின்றனை, நல்கலும் செம்மையும் உடைய அறவோரிடத்தே நீ அப் பண்புடையாய்போலக் காணப்படுகின்றனை என்பது கருத்து.

கடுப்பு - வெகுளி. நல்கல் - அருளுதல். இல்வழி - இவ் விரு வேறு பண்புகளும் இல்லாதவரிடத்தே. போற்றார் - நின்னை வழி

படாத மடவோர். போற்றுநர் - நின்னை வழிபடுமன்பர். மாற்று - மாற்றுதல்; கொல்லுதல். ஏம் - ஏமம் - காவல் : கடைக்குறை.

நினக்கு மாற்றாரும் கேளிரும் இலராகலான் மாற்றேமாற்றல் இலை என ஏதுவாக்குக.

(பரிமே.) ௪௪ - ௫௪ : என்றது, குற்றமாகிய மறமுடையா ரிடத்து வெகுளியும் கோட்டமும் உடையையாய் அஃது இல்லா ரிடத்து இல்லையாதலும், குணமாகிய அறமுடையாரிடத்து அருளும் செம்மையுமுடையையாய் அஃதில்லாரிடத்து இல்லையாதலுமல்லது நினக்குப் பகையாயினார் உயிரின்கண் அதனை மாற்றுதற் றொழிலும், நினக்குக் கேளிராயினார் உயிரின்கண் அதற்கு ஏமம் செய்தற்றொழிலும் உடையையல்லை; அவ் விருதிறத்தாரும் நினக்கு இன்மையான் என்ற வாறு.

௫௫. இவ்வாற்றான் இருதிறத்தாரும் நினக்கு இலரென்றாலும் முன் 'உள்வழி உடையை இல்வழி இலை' என்ற அதனோடு வேறு பாடின்று அஃது உணர்வாரைப் பெறின். என்றது உயிர்களது இயல்பான் நினக்குப் பகையும் நட்பும் உளபோலத் தோன்றுவ தல்லது நின் இயல்பான் அவை உளவல்ல என்றவாறும்.

௫௭ - ௬௫ : **கோளிருள்.............அந்தணர் அருமறை**

(**இ - ள்.**) கோள் இருள் இருக்கை - எப்பொருளையும் தன்பாற் கரந்து கொள்ளும் இருளினது உறையுள் ஆகிய, மணிமேனி - நீலமணி போன்ற திருமேனியின்கண், நாறு இணர் நக்கு அலர் துழாஅய் கண்ணியை - நறுமணங் கமழாநின்ற கொத்துக்களினின்றும் சிரித்து மலர்ந்த துழாயினாற் றொடுத்த மாலையினை உடையை, பொன்னின் தோன்றிய புனைமறு மார்ப - நிறத்தாற் பொன்போலத் தோன்றிய புகழப்படுகின்ற மறுவை யுடைய மார்பனே!, நின்னின் தோன்றிய நிரைஇதழ் தாமரை அன்ன நாட்டத்து - நின்னுடைய உந்தியிற் றோன்றிய நிரைத்த இதழ்களையுடைய தாமரைமலரை ஒத்த கண்களை உடைய யாய், அளப்பு அரியை - அளத்தற்கரியை, நின்னின் சிறந்த நின் தாளிணை யவை - நீ நின்னினும் பெருமையுடைய திருவடி களை உடையை, நின்னின் சிறந்த நிறை கடவுளவை - நின் னிடத்தே சிறந்த நிறைந்த கடவுட்பண்மையும் உடையை, அன்னோர் அல்லா வேறும் உள - அத்தன்மையவல்லாத பண்புகள் பிற பல நின்பால் உள்ளன, அவை - அப் பண்பு கள், நின் ஓரன்ன - நின்னையே ஒத்த, அந்தணர் அருமறை - அந்தணர்களுடைய உணர்தற்கரிய உபநிடதப் பொருளா யுள்ளன;

(**வி - ம்.**) கோளிருள் - பொருள்களைக் கரந்துகொள்ளும் இருள் என்க. இருக்கை - உறைவிடம்; இருளிருக்கை ஆகிய மணி என்க.

ஆய எனற்பாலது ஈற்றகரம் கெட்டு ஆய் என நின்றது. நக்கு அலர் துழாய் - சிரித்தாற்போன்று மலர்ந்த துழாய் என்க. இயற்கை மறுவாகாமல் திருமகளே மறுவாயிருத்தலின் 'புனை மறு' என்றார், நாட்டத்தோடே அளத்தற்கும் அரியை என்க. நாட்டம் - கண். நின்னிற் சிறந்த கடவுளவை என்புழி நின்னில் ஏழாவதன் உரு பேற்றது. அரியவை, இனையவை, கடவுளவை என்பன ஐகாரவீற்று முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்று என முன்னுங் கூறினும்; பிறுண்டும் இவற்றை அறிந்து கடைப்பிடிக்க. அகரங்கள் இசை நிறைக்கும் இடைச்சொல் என்பர் பரிமேலழகரும். கடவுளவை-கடவுட் டன்மையுடையை.

(பரிமே.) ௬௨. வீடளிக்குங்கால் நின்னினும் சிறந்த நின் தாளிணையை உடையை.

௬௫. அன்ன எனற்பாலது 'அன்' எனக் குறைந்து நின்றது. 'ஓர்' இரண்டும் அசைநிலை. அருமறை: ஆகுபெயர்.

௬௬ - எ௩: அழல்புரை.....................அரணமும்நீயே

(இ - ள்.) அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை ஆலமும் - தீக்கொழுந்தினை ஒக்கும் தளிரையும் கொழுவிய நிழலையும் தரும் பல கிளைகளையுடைய ஆலமரத்தின் கீழும், கடம்பும் - கடப்ப மரத்தின்கண்ணும், நல் யாற்று நடுவும் - நன்றாகிய யாற்றிடைக் குறையிடத்தும், கால் வழக்கு அறுநிலைக் குன்றமும் - காற்றின் செலவு தடையுறுதற்குக் காரணமான உயரிய நிலையினையுடைய குன்றுகளிடத்தும், பிறவும் - இன்னோரன்ன பிறவிடங்களினும், அவ்வவை மேய - அவ்வவ் விடங்களில் பொருந்திய, வேறு வேறு பெயரோய் - பற்பல தெய்வங்களாக வகுத்துச் சொல்லப்படும் பெயர்களையுடையோனே, எவ் வயினோயும் நீயே - எவ்விடத்தும் உறைபவன் நீயே, நின் ஆர்வலர் தொழுத கை அமைதியின் அமர்ந்தோயும் நீயே - முன்கூறிய இடங்களினன்றியும் நின்னைத் தொழும் அன்பர்தம் கூப்பிய கையினது தாழ்ச்சியின்கண் அகப்பட்டோனும் நீயே, அவரவர் ஏவலாளனும் நீயே - அவரவர் நினைத்தவற்றை முடித்துத் தருதலானே அவரவர் ஏவலாளனும் நீயே, அவரவர் செய் பொருட்கு அரணமும் நீயே - அவரவர் செய்கின்ற அற முதலிய நாற் பொருட்கும் காப்பாக அமைந்தவனும் நீயே;

(வி - ம்.) அழல் - தீ. புரை: உவமவுருபு. குழை - தளிர்; ஆலந் தளிர்க்குத் தீக்கொழுந்து உவமை. கொழுநிழல் செறிந்த (கொழுத்த) நிழல். ஆலம் - ஆலமரம்; வடவால். ஆலின்கீழ் மேயவன் தக்கிணா மூர்த்தி. கடம்புமேயவன்-முருகன். ஆற்றிடைக்குறைமேயவன் - திருமால். குன்றங்களில் மேயவர் - திருமால் சிவன் முருகன் முதலிய கடவுளரும் பிறரும் என்க. தொழுத கை அமைதியின் அமர்ந்தோயும் என்பதற்கு - நின் அன்பர் தொழாநின்ற அழகிய சாந்திநிலையின்கண் இருப்பவனும் நீயே எனப் பொருள்கோடல் சாலச் சிறந்ததாம்.

'அவரவர் ஏவலாளனும் நீயே' என்புழி

"என்னுட் கரந்துஎன் பின்வந் தருளி
என்னையும் தன்னையும் அறிவின் றியற்றி
என்னது யான்எனும் அகந்தையும் கண்டு
யாவயின் யாவையும் யாங்கணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்ந்து
மிக்க போகம் விதியால் விளைத்திட்டு
எற்பணி யாளாய் எனைப் பிரியாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்டு
என்வழி நின்றனன் எந்தை."

(இருபா இருபது. செய் - கஅ)

எனவரும் அருணந்தி சிவாச்சாரியார் அருண்மொழி நினைத்து மகிழற்பாற்று.

(பரிமே.) எஉ. நினைத்தன முடித்தலான் அவரவர் ஏவல்செய்வானும் நீ.

செய்பொருளாவன: அறம் பொருள் இன்பம் வீடு என்பன.

## ஐந்தாம் பாடல்

# செவ்வேள்

பொருட் சுருக்கம்

**க - கO :** *கடலின்கண் பாறைகள் துகள்படும்படி பிணி முகம் என்னும் யானையிலேறிச் சென்று, வேற்படையாலே சூரபன்மனாகிய மாமரத்தை வேரோடு வெட்டி நாவலந்திவினுள் வடபகுதியிலுள்ள கிரௌஞ்சம் என்னும் மலையை உடைத்து அதன் ஊடே வழியுண்டாக்கியோனே! ஆறுமுகங்களையுடையோனே ;*

**கக - உக :** *நீ ஆறு தலையுடனும் பன்னிரண்டு தோள்களுடனும் ஞாயிற்றை ஒத்த நிற அழகுடனும் தாமரைப்பூவின்கட் பிறந்த பிறவியை உடையை; உலகத்தை அழிக்கும் இறைவன் மகனே! செவ்வேளே! சால்பினையுடையோனே! என்று விழாவின்கண் வேலன் ஏத்தும் வெறிப்பாடலும் உள; அங்ஙனம் கூறுவன உண்மையுமல்ல; பொய்ம்மையுமல்ல; இவ் வுலகிற் கெல்லாம் நீயே தலைவன் ஆதலால். அவன் ஏத்துவனவற்றுள் நீ ஒன்றுயவழித் தலைமைச் சிறப்பினையுடைய நி அச் சிறப்பின்றி ஒழிவாய்; நல்வினையாற் சிறப்புடைய உயர் பிறப்பினராதலும் தீவினையால் இழிபிறப்பினராதலும் ஆகிய இது நின் ஆணையின்கட்பட்டது; ஆதலின், அச் சிறப்பு நினக்கு ஒருகாலும் ஒழியாது.*

**உஉ - சகூ :** *நான்முகனாகிய பாகன் செலுத்தாநிற்ப வேதமாகிய குதிரைகள் பூட்டப்பட்ட நிலமாகிய தேரை ஏறிச்சென்று அரவு நாணாகவும் மலை வில்லாகவுங் கொண்டு திரிபுரங்களை ஒரு நெருப்புக்கணையாலே அழியும்படி எய்தவனும், தேவர்களுடைய வேள்வியுணவினை உண்டவனும் ஆகிய இறைவன் இறைவியைக் கூடி இன்புறும்பொழுது உண்டான கருவை, இந்திரன் தன்பால் வேண்டிக்கொண்டமையானே அவ் விறைவனே பலவாகச் சேதித்தருளினான்; அக் கருவை முனிவர்கள் எழுவரும் பெற்று வேள்வித்தீயிலிட்டனர்; பின்னர் அதனைக் கார்த்திகை மகளிர் அறுவரும் உண்டு கருக்கொண்டு சரவணப் பொய்கையின்கண் தாமரைப்பூவாகிய பாயலில் நின்னை ஈன்றனர்.*

௫0 - ௫௪ : பெரும்பெயர் முருகா! கார்த்திகை மகளிர் அவ்வாறு ஈன்றபொழுதே இந்திரன் நின்னை வச்சிரப்படையால் எறிந்தானாக; அதனால் நீ ஆறுவேறுருவமுடையை ஆகிப் பின்னர் ஒருருவமுடையை ஆயினை ;

௫௫ - ௭0 : நீ குழவிப்பருவத்தினை உடையை ஆதலால் நீ விளையாடிய போரின்கண் இந்திரன் நின் வறுங்கைக்கே உடைதலாலே இத்தகைய ஆற்றலுடைய இவனே இனி நம் படைக்குத் தலைவன் எனக் கருதித் தீக்கடவுள் கோழியைத் தந்தான்; அவ் விந்திரன் மயிலைத் தந்தான்; இயமன் வெள்ளாட்டு மறியைத் தந்தான் ; அங்ஙனமே பிற தேவரும் படையாகத் தந்த மறியும் மயிலும் சேவலும் வில்லும் மரனும் வாளும் ஈட்டியும் கோடரியும் மழுவும் கணிச்சியும் மாலையும் மணியும் ஆகிய இவற்றைப் பன்னிரண்டு திருக்கைகளினும் கொண்டு அவ் விளமைப் பருவத்திலேயே அமரர்படைக்குத் தலைவனாயினை; இவ்வாற்றால் நீ அவ் வானோர்க் கரசனாகிய இந்திரனது புகழ் வரம்பினையும் கடந்தாய்;

௭௧ - ௮௧ : உருளிணர் கடம்பின் ஒலிதாரோயே! உயிர்களை வருத்தும் தீய நெஞ்சினை உடையோரும், அறத்தின்கட் சேராத புகழில்லாரும், கூடாவொழுக்கமுடைய பொய்த் தவவேடமுடையோரும், மறுபிறப்பு துறக்கம் நரகம் வீடு முதலியன இல்லை என்னும் அறிவில்லாதோரும் ஆகிய இன்னோரன்னோர் நினது திருவடிநீழலை அடையார் ; இனி இவரல்லாத அறவோரும் மாதவரால் வணங்கப்படும் மாண்புடையோரும் நின் தாள் நிழலை எய்துவர் ; ஆதலால், யாம் நின்னை இரந்து வேண்டுவன பொருளும் போகமும் அல்ல ; அருளும் அன்பும் அறமுமாகிய இம் மூன்றுமேயாம். இவற்றை அருள்க.

பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தம ருழக்கித்
தீயழல் துவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசூர் மாமுதல் தடிந்து
வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய
கோன்றுணல் அஞ்சாக் கொடுவினைக் கொஃறகை
மாய அவுணர் மருங்கறத் தபுத்தவேல்
நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை

மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்
சால்வ தலைவவெனப் பேஎ விழவினுள்
வேல னேத்தும் வெறியு முளவே
அவை, வாயு மல்ல பொய்யு மல்ல
நீயே வரம்பிற்றிவ் வுலக மாதலிற்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை
சிறப்பினுள் உயர்பாகலும்
பிறப்பினுள் இழிபாகலும்
ஏனோர்நின் வலத்தினதே
ஆதி யந்தணன் அறிந்துபரி கொளுவ
வேத மாபூண் வையத்தேர் ஊர்ந்து
நாக நாணா மலைவில் லாக
மூவகை, ஆரெயில் ஓரழல் அம்பின் முளிய
மாதிரம் அழலவெய் தமரர் வேள்விப்
பாக முண்ட பைங்கண் பார்ப்பான்
உமையொடு புணர்ந்த காம வதுவையுள்
அமையாப் புணர்ச்சி அமைய நெற்றி
இமையா நாட்டத் தொருவரங் கொண்டு
விலங்கென விண்ணோர் வேள்வி முதல்வன்
விரிகதிர் மணிப்பூண் அவற்குத்தான் ஈத்த
தரிதென மாற்றான் வாய்மைய னாதலின்
எரிகனன் றானாக் குடாரிகொண் டவனுருவு
திரித்திட் டோனிவ் வுலகேழு மருளக்
கருப்பெற்றுக் கொண்டோர் கழிந்தசெய் யாக்கை
நொசிப்பி னேழுறு முனிவர் நனியுணர்ந்து
வசித்ததைக் கண்ட மாக மாதவர்
மனைவியர் நிறைவயின் வசிதடி சமைப்பிற்
சாலார் தானே தரிக்கென அவரவி
யுடன்பெய் தோரே யழல்வேட் டவ்வவித்
தடவுநிமிர் முத்தீப் பேணியமன் னேச்சில்
வடவயின் விளங்கா லுறையெழு மகளிருள்
கடவுள் ஒருமீன் சாலினி யொழிய

அறுவர் மற்றையோரு மந்நிலை அயின்றனர்
மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற்சூ லினரே
நிவந்தோங் கிமயத்து நீலப்பைஞ் சுனைப்
பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்
பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே
அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன்
எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென
அறுவேறு துணியும் அறுவ ராகி
ஒருவனை வாழி ஓங்குவிறற் சேஎய்
ஆரா வுடம்பினீ அமர்ந்துவிளை யாடிய
போரால் வறுங்கைக்குப் புரந்தர னுடைய
அல்லலில் அனலன் தன்மெய்யிற் பிரித்துச்
செல்வ வாரணங் கொடுத்தோன் வானத்து
வளங்கெழு செல்வன்றன் மெய்யிற் பிரித்துத்
திகழ்பொறிப் பீலி அணிமயில் கொடுத்தோன்
திருந்துகோன் ஞமன்றன் மெய்யிற் பிரிவித்
திருங்கண் வெள்யாட் டெழின்மறி கொடுத்தோன்
ஆஅங், கவரும் பிறரும் அமர்ந்துபடை யளித்த
மறியு மஞ்ஞையும் வாரணச் சேவலும்
பொறிவரிச் சாபமு மரனும் வாளும்
செறியிலை யீட்டியும் குடாரியும் கணிச்சியும்
தெறுகதிர்க் கனலியு மாலையு மணியும்
வேறுவே றுருவினிவ் வாறிரு கைக்கொண்டு
மறுவில் துறக்கத் தமரர்செல் வன்றன்
பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம் பிகந்தோய்
நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினநீடி னோரும்
சேரா வறத்துச் சீரி லோரும்
அழிதவப் படிவத் தயரி யோரும்
மறுபிறப் பில்லெனும் மடவோருஞ் சேரார்
நின்னிழல் அன்னோ ரல்ல தின்னோர்
சேர்வா ராதலின் யாஅம் இரப்பதை

பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனு மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே.

கடவுள் வாழ்த்து

கடுவ னிளவெயினனூர் பாட்டு; கண்ணனுகனூர் இசை;
பண்ணுப் பாலையாழ்.

## உரை

க - கo : பாயிரும்..........................மூவிரு கயந்தலை

(இ - ள்.) சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து - மிகவும் உயர்ந்த பிணிமுகம் என்னும் யானையை ஏறிச் செலுத்தி, பாய் இரும்பனிக் கடல் - பரந்த பெரிய குளிர்ந்த கடலின்கண் உள்ள, பார் துகள்படப் புக்கு - பாறைக்கற்கள் நுறுங்கும்படியாகச் சென்று, தீ அழல் துவைப்ப விட்டெறிந்து - நெருப்பின் கொழுந்து ஒலிக்கும்படி திரித்து விட்டெறியப்பட்டு, நோய் உடை நுடங்கு சூர் மா முதல் தடிந்து-பிறரைத் துன்புறுத்தும் இயல்பினையுடைய அசையும் சூரபன்மனாகிய மாமரத்தினது வேரினை அறுத்து, வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய - வெற்றியுடைமையாலே புண்ணிய சனம் பாவ சனம் என இருவகைப் பெயர்களுள் வைத்துப் புண்ணிய சனம் என்னும் ஒருவகையாலே பெயர்பெற்ற, கொன்று உணல் அஞ்சாக் கொடுவினை கொல் தகை மாய அவுணர் மருங்கு அற-பிற உயிர்களைக் கொன்று தின்னலாகிய தீவினைக்கு அஞ்சாதவரும், கொல்லப்படும் தன்மையினை யுடையாரும் மாயஞ் செய்தலில் வல்லவரும் ஆகிய அவுணர்களுடைய குலம் அழியும் படி, அமர் உழக்கி - போர்செய்து, தபுத்த வேல் - கெடுத்த வேற்படையாலே, நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடை-இந்த நாவலந் தீவினுள் வடபகுதியின்கண் உள்ள, குருகொடு பெயர்பெற்ற மால்வரை உடைத்து - கிரௌஞ்சம் என்னும் பறவையினது பெயர்பெற்ற பெரிய மலையினைக் குடைந்து, மலை ஆற்றுப் படுத்த - அம் மலையின் ஊடே வழியுண்டாக்கின, மூஇரு கயந்தலை - ஆறு மெல்லிய தலைகளையுடைய பெருமானே;

(வி - ம்.) பாய் - பரந்த. இருங்கடல் - கரியகடல். பெரிய கடலுமாம். பார்-பாறைக்கல்; கடலினூடுள்ள பாறைக்கல். சேயுயர்: மிகஉயர்ந்த. பிணிமுகம் என்பது முருகப்பெருமானுடைய ஊர்தியாகிய யானையினது பெயர். "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. உசஎ) என்றும், "பிணிமுக ஊர்தி யொண்செய்யோனும்" (புறநா. ருசு) என்றும், பிற சான்றோரும் கூறுதல் உணர்க.

விட்டெறிந்து: ஒருசொல் நீர்மைத்து. விட்டெறிந்து என்னும் செய்வினையைச் செயப்பாட்டு வினையாக்கிக் கொள்க. தீயழல் - தீக் கொழுந்து. துவைப்ப - ஒலிக்கும்படி, நோய் செய்தலையுடைய என்க. நுடங்கு - அசைகின்ற. சூர் மா - சூரபதுமனாகிய மாமரம். தடிந்து - வெட்டி. மக்களுள் ஒருமையொடு பெயரிய - மக்கட்குரிய புண்ணிய சனம் பாவ சனம் என்னும் இருவகையுள் ஒருவகையாகிய புண்ணிய சனம் என்னும் பெயரையுடைய என்க. புண்ணிய சனம் - அவுணர். புண்ணிய சனம் என்பது வெறும் பெயர்மாத்திரையே என்பார் 'கொன் றுணல் அஞ்சாக் கொடுவினை மாய அவுணர்' என்றார். கொஃறகை - கொல் + தகை: கொல்லப்படும் தகுதியுடையார். தீயோர் ஆகலான் கொல்லப்படுதற்குரியார் என்றவாறு.

பிணிமுகமூர்ந்து கடலின்கண் பார் துகள்படப் புக்கு முதல் தடிந்து அவுணர் மருங்கு அமருழக்கித்தபுத்த வேலாலே வரை உடைத்து ஆற்றுப்படுத்த கயந்தலை என இயைக்க.

நாவலந் தண்பொழில் - நாவலந்தீவு. குருகு - அன்றில்; அதற்கு வடமொழியில் கிரௌஞ்சம் என்று பெயராகலின் அப் பறவையின் பெயர் பெற்ற வரை என்றார் 'கிரௌஞ்சகிரி' என்றவாறு. ஆற்றுப் படுத்தல் - மலையினூடே வழியுண்டாக்கி அதன்வழிச் செலுத்துதல்.

(பரிமே.) கயந்தலை என்பது மென்மையுடைய தலை. இது பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, அது முருக னுக்குப் பெயராய் அண்மைவிளி ஏற்றுநின்றது.

கக - கரு : மூவிரு கயந்தலை................வெறியும் உளவே

(இ - ள்.) மூஇரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள் - ஆறு மென்மையுடைய தலைகளுடனேயும் மத்தளம்போன்ற பன்னிரண்டு தோள்களோடும், ஞாயிற்று ஏர் நிறத்தகை - ஞாயிற்று மண்டிலத்தினது எழுச்சிக்கண் உண்டாகும் நிறம் போன்ற நிற அழகுடனேயும், நளினத்துப் பிறவியை - சரவணப் பூம்பொய்கைக்கண் தாமரைப்பூம் பாயலிலே தோன்றிய பிறப் பினை உடையாய், (எனவும்) காஅய் கடவுள் சேய் - உலகத்தை அழிக்குந் தொழிலையுடைய சிவபெருமானுடைய திருமகனே!, செவ்வேள் - செந்நிறமுடையவனே!, சால்வ தலைவ என - சான்றாண்மை யுடையோனே தலைமைத்தன்மை யுடையோனே என(வும்) கூறி, பேஎ விழவினுள் - நீ வெளிப்படுதலானே கண்டார்க்கு அச்சந்தரும் வெறியாட்டு விழாக் களத்தின்கண், வேலன் ஏத்தும் வெறியும் உள - நின்னை வேன்மகன் புகழா நின்ற வெறிப்பாடல்களும் உள்ளன;

(வி - ம்.) வேலன் வெறியாடும்பொழுது ஆறுமுகத்தோனே! பன்னிரண்டு தோளோனே! தாமரைப்பூவிற் றோன்றியவனே! சிவ பெருமான் மகனே! சிவந்த நிறமுடையோனே! சான்றோனே! தலைவனே! என்று கூறி ஏத்தும் வெறிப்பாடல்கள் உள்ளன என்க. ஞாயிற்று ஏர் நிறத்தகை - ஞாயிற்றின் எழுச்சிக்கட்படும் நிறம் போன்ற நிற அழகு என்க. நளினம் - தாமரைப்பூ. காய்தல் -

அழித்தல். காய்கடவுள் - சிவபெருமான். தலைவ - இறைமைத்தன்மை யுடையோனே. பிறரும் வேள் உளராகலின் முருகப்பெருமான் செவ்வேள் எனப்பட்டார். பே - அச்சம். விழவு - வெறியாட்டுவிழா. வெறி - வெறிப்பாட்டு : ஆகுபெயர்.

கசு - உ0 : அவை.........................நின்வலத்தினதே

(இ - ள்.) அவை - அவ் வெறிப்பாடல் கூறும் பொருள்கள், இவ் வுலகம் நீயே வரம்பிற்று ஆதலின் - இவ்வுலகம் முழுவதும் நின்னையே தலைவனாக உடைத்தாதலானே, வாயும் அல்ல - மெய்ம்மையுடையனவும் அல்ல, பொய்யும் அல்ல - அவ் வேலன் வெறிக்களத்தினுள் நின்னை அவ்வாறு கண்டு ஏத்துதலானே பொய்ம்மையுடையனவும் அல்ல, சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை - உருவமும் பிறப்பும் நிறப்பண்பும் குணப்பண்புமாகிய அப் பாடற் பொருள்களுள் ஒன்றை நீ உடையை ஆகியவிடத்து உருவமும் பண்பும் பிறப்பும் இல்லாத முழுமுதற் கடவுளாகிய நினது சிறப்பினை ஒழிகுவாய், ஏனோர் - முழுமுதற் கடவுளாகிய நின்னையல்லாத உயிர்களாகிய பிறரெல்லாம், சிறப்பினுள் பிறப்பினுள் உயர்வு ஆகலும் - நல்வினையாலே உயர்ந்த தெய்வப் பிறப்பினராதலும்; இழிபு ஆகலும் - தீவினையாலே இழிபிறப்பினராதலும் ஆகிய இந் நிகழ்ச்சி, நின் வலத்தினது-நினது ஆணையிடத்தது ஆகலான், அம் முழுமுதற்றன்மையாகிய நினக்கே உரிய சிறப்பு எக்காலமும் நின்னைவிட்டு நீங்காது ;

(வி - ம்.) அவை என்றது அவ் வெறிப்பாடலின்கண் அமைந்த பொருள் என்றவாறு. வாய் - வாய்மை : உண்மை. அவை வாய்மையாகா என்றதற்குக் காரணம் காட்டுவார் 'இவ் வுலகம் நீயே வரம்பிற்று ஆதலின்' என்றார். யாண்டும் எப்பொழுதும் வியாபகமாயிருந்து உலகினை நடத்தும் முழுமுதலாகிய நினக்கு உருவமும் பிறப்பும் கூடாமையின் அவை வாய்மையல்ல என்றவாறு. உண்மை அன்றெனினும், நின்னை அவ்வாறு கருதி வழிபடுவார்க்கு அவை உடையனாய்க் காட்சிதருகின்றனை ஆதலால், அவை பொய்யும் அல்ல என்றவாறு. நின்னை உருவம் பிறப்பு முதலியன உடையனாகக் கருதுமிடத்து நினது வியாபகத்திற்கு இழுக்காம் ஆகலின், நீ அம் முழுமுதலாஞ் சிறப்பின்றி ஒழிவை. அன்பர்க்கு அங்ஙனம் நீ வெளிப்படினும் இச் செயலால் நின் முழுமுதற்றன்மை கெட்டதில்லை என்றபடியாம்.

இறைப்பொருளும் உயிர்ப்பொருளும் சித்துப்பொருளாந் தன்மையில் ஒரு தன்மையுடையனவாதல் பற்றி உயிர்ப்பொருளை 'ஏனோர்' என்று கூறினார். சித்துப்பொருள்களுள் இறைப்பொருளாகிய நின்னையன்றி ஏனைய உயிர்ப்பொருள்கள் என்க. ஏனைய உயிர்கள் சிறத்தலும் இழிவடைதலும் பிறத்தலும் பிறவும் நின் ஆணையாலாம், நீ சிறந்திருத்தலும் பிறத்தலும் பிறர் ஆணையானன்றி நினது திருவுள்ளத்தின்படியே ஆம் என்பார், 'ஏனோர் உயர்பாகலும் இழிபாகலும் நின் வலத்தினது' என்றார்; எனவே அச் சிறப்பு நினக்கு ஒருகாலும் ஒழியாது என்பது குறிப்பெச்சத்தாற் போந்தது.

நீயே வரம்பிற்று - நின்னையே வரம்பாக உடைத்து. சிறப்பினுள் - நல்வினையாலே: உயர்பு என்றது தேவராயும் சான்றோராயும் பிறக்கும் உயர்ந்த பிறப்புக்களை ; இழிபு என்றது விலங்காகவும் நரகராகவும் பிறக்கும் இழிந்த பிறப்புக்களை. நல்வினையாலே என்றமையால், தீவினையாலே இழிபாகலும் என வருவித்துக் கூறுக.

## முருகப்பெருமானின் தோற்றம்

௨௨ - ௩௫ : ஆதிஅந்தணன்...................மருள

(இ - ள்.) ஆதி அந்தணன் பரி அறிந்து கொளுவ - பிரமதேவன் செலவினை அறியுமுறையாலே அறிந்து செலுத்தா நிற்ப, வேதம் மா பூண் வையத் தேர் ஊர்ந்து - வேதங்களாகிய குதிரை பூட்டப்பட்ட பூமியாகிய தேரில் ஏறிச்சென்று, மூவகை ஆர் எயில் - வெள்ளியும் பொன்னும் இரும்புமாகிய மூவகை உலோகங்களாலாகிய வெல்லுதற்கரிய முப்புரம் என்னும் மதில்கள், மலை வில் ஆக - இமயமலையையே வில்லாகக்கொண்டு, நாகம் நாண் ஆக - வாசுகி என்னும் பாம்பை அவ் வில்லிற்கு நாணாகக்கொண்டு, ஓர் அழல் அம்பின் - ஒப்பற்றதொரு தீக்கணையை, முளிய மாதிரம் அழல எய்து - வேகும்படியும் திசைகள் வெதும்பும்படியும் எய்து அழித்து, அமரர் வேள்விப் பாகம் உண்ட - தக்கன் தேவர்க்குச் செய்த வேள்விக்கண் அவியுணவை உண்ட, பைங்கண் பார்ப்பான் - பசிய கண்ணையுடைய சிவபெருமான், உமையொடு புணர்ந்த காம வதுவையுள் - மலையரையன் மகளாராகிய இறைவியோடு புணர்ந்த காமநுகர்ச்சிக்குக் காரணமான திருமணத்தின்கண், அமையாப் புணர்ச்சி அமைய - அமையாத புணர்ச்சியினை ஒருநாளின்கண் தவிர்ந்தானாக, நெற்றி இமையா நாட்டத்து ஒரு வரங்கொண்டு - நெற்றியினிடத்தே இமைத்தலில்லாத நெருப்புக் கண்ணையுடைய அச் சிவபெருமானிடத்தே இந்திரன் சென்று ஒரு வரம் வேண்டிப் பெற்று, விலங்கு என - நினது புணர்ச்சியாலமைந்த கருவினை அழிப்பாயாக என்று கூற, எரி கனன்று ஆனாக் குடாரி கொண்டவன் - தீப்பறக்கச் சினந்து என்றும் அழிதலில்லாத மழுப்படையினை ஏந்திய அச் சிவபெருமான், வாய்மையன் ஆதலின் - வாய்மையிற் றவிராது அதனைப் பேணுபவனாதலான், வேள்வி விண்ணோர் முதல்வன் விரிகதிர் மணிப்பூணவற்கு - நூறு வேள்விகளைச் செய்து தேவர்க்குத் தலைவனானவனும் விரிந்த சுடரையுடைய மணிகளாலாகிய அணிகலன்களையுடையவனுமாகிய அவ் விந்திரனுக்கு, தான் ஈத்தது அரிது என மாற்றான் - தான் கொடுத்த வரம் செய்தற்கரியதென்று கருதி அதனை மறாதவனாய், உலகேழும் மருள - இவ் வுலகங்கள் ஏழும் தனது வாய்மையிற் றப்பாத செயலைக் கண்டு வியவா

நிற்கும்படி, உருவு திரித்து இட்டோன் - உருவாய்த் திரண்ட அக் கருவினைப் பல கண்டமாகச் சிதைத்து அவ் விந்திரன்பாற் கொடுத்தருளினன்,

(வி - ம்.) ஆதியந்தணன்: பிரமதேவர். பரி - செலவு. பரி யறிந்து கொளுவ என மாறுக. செலவினை அறியுமாற்ருன் அறிந்து செலுத்த என்க. வேதமா: பண்புத்தொகை. வையத்தேர்: பண்புத் தொகை. நாகம் - பாம்பு; வாசுகி. மலை - இமயமலை. மூவகை எயில் - வெள்ளி பொன் இரும்பு என்னும் மூவகை உலோகங்களாலே தனித் தனி இயன்ற மதில்கள்; என்றது முப்புரத்தை. எய்த பார்ப்பான் - உண்ட பார்ப்பான் எனத் தனித்தனிக் கூட்டுக. பார்ப்பான், ஈண்டுச் சிவபெருமான். "ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ, ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றி." (புறநா. ருரு: க-உ) என்ருர் பிறரும். அழல எய்து, முளிய எய்து எனத் தனித்தனிக் கூட்டுக. உமை - இறைவி. காம வதுவை - காமநுகர்ச்சிக்குக் காரணமான மணம். அமையாப் புணர்ச்சி - விடுதற்கரிய புணர்ச்சி என்க. வதுவை யுள் அமையாப் புணர்ச்சி, ஒருகால் அமைய என்க. நெற்றி இமையா நாட்டம்: பன்மொழித்தொகை; சிவன். வேள்வி விண்ணோர் முதல்வன் ஆகிய மணிப்பூணவற்கு எனக் கூட்டுக. நூறு வேள்வி செய்தமையாலே விண்ணோர்க்கு முதல்வனாகியவனும் என்க. எரி கனன்று அத் தொழிலில் என்றும் ஆனுக் குடாரி என்க. குடாரி - மழுப்படை. குடாரி கொண்டவன் - சிவன். திரித்திட்டோன் என்புழி ஆகாரம் ஒகாரமாய்த் திரிந்து நின்றது.

இப் பகுதியில் கொண்டுகூட்டுப் பொருள் மலிந்திருத்தல் உணர்க.

இனி, இப் பரிபாடற் பகுதிபற்றி ஆசிரியர் நச்சினர்க்கினியர் தமது திருமுருகாற்றுப்படை ருஅ, உருரு அடிகளின் விரிவுரைக்கட் கூறியுள்ளனவும் ஈண்டு உணரற்பாலன; அவையாவன :—

"இறைவன் உமையை வதுவை செய்துகொண்ட நாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிரவேண்டும் என்று வேண்டிக் கொள்ள, அவனும் அதற்கு உடம்பட்டு அது தப்பானுகிப் புணர்ச்சி தவிர்ந்து கருப்பத்தை இந்திரன் கையிற் கொடுப்ப, அதனை இருடிகள் உணர்ந்து அவன் பக்கனின்றும் வாங்கித் தமக்குத் தரித்தல் அரிதாகையினுலே இறைவன் கூருகிய முத்தீக்கட் பெய்து, அதனைத் தம் மனைவியர் கையிற் கொடுப்ப, அருந்ததி ஒழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப் பொய்கையிற் பதுமப்பாயலிலே பயந்தாராக, ஆறு கூருகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிரத்தான் எறிய அவ் ஆறுவடிவு மொன்ருய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ் வடிவம் ஆருகி வேறுபட்ட கூற்ருலே மண்டிச் சென்றதென்று புராணங் கூறிற்று. இதனை 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பரிபாடற் பாட்டானும் உணர்க" எனவும்,

"அங்ஙனம் அங்கியின்கண் இட்டுச் சத்தி குறைந்த கருப்பத்தை முனிவர் எழுவரும் வாங்கித் தம் மனைவியர்க்குக் கொடுப்ப அருந்ததி

ஒழிந்தோர் விழுங்கிச் சூல் முதிர்ந்து சரவணப் பொய்கையிற் பதுமப் பாயலிலே பெற ஆறுவடிவாக வளர்ந்தமை கூறிற்று.........இது பரிபாடலிற் 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பாட்டான் உணர்க'' எனவும் வரும்.

நடகூ - சடு : கருப்பெற்று..............அயின்றனர்

(இ - ள்.) கருப்பெற்றுக்கொண்டோர் - சிதைந்த அக் கருவை இந்திரன்பால் பெற்றுக்கொண்டவராகிய, எழுறு முனிவர் - ஏழ் என்னும் எண்ணளவிற் பொருந்திய முனிவர்கள், கழிந்த சேய் ஆக்கை வசித்ததைக் கண்ட - இவ் வாற்றானே தாய் வயிற்றினின்றும் கழிந்த குழவி உடலைப் பிளந்த செயலைக் கண்ட, மகா மாதவர் நொசிப்பின் நனி உணர்ந்து - அக் கரு அறுமுகனாய்த் தேவர் படைக்குத் தலைவ னும் என்பதனை மிகப்பெரிய தவத்தையுடைய அம் முனிவர்கள் தமது அவதிஞானத்தானே நன்றாகத் தெளிந்து, மனைவியர் வசிதடி சமைப்பின் - தம் மனைவிமார்கள் சேதிக்கப்பட்ட இக் கருவினை உட்கொண்டு தம் வயிற்றிற் றங்கிக் குழவியாய் முதிரச்செய்யின், நிறைவயின் சாலார் - கற்புடைமையின்கண் அமைவுடையராகமாட்டார் என்பது கருதி, வேட்டு - ஒரு வேள்வி செய்து, அழல் ஆனே தரிக்க என உடன் பெய்தோரே- அவ் வேள்விக்கண் உண்டான தீயே இவற்றைத் தாங்குவதாக என்று அக் கருக் கண்டங்களை ஒருசேர அத் தீயின்கண் இட்டவராக, அவ் அவிர் தடவு நிமிர் முத்தீப் பேணிய எச்சில் - அந்த அவியோடு குண்டங்களில் எழுந்த முத்தீயும் கொள்ளுதலானே சேடமாகியவற்றை, வானத்து வடவயின் உறை எழுமகளிருள் - விசும்பின்கண் வடதிசைக்கண்ணே வதிகின்ற எழு மகளிருள் வைத்து, கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய - கடவுட் கற்பினையுடைய ஒரு மீனாகிய அருந்ததி ஒழிய, மற்றையோர் விளங்கு ஆல் அறுவரும் அங்கிலை அயின்றனர் - ஏனையோராகிய விளங்காநின்ற கார்த்திகை மகளிர் அறுவரும் அப்பொழுதே உண்டனர்;

(வி - ம்.) கழிந்த சேயாக்கை வசித்ததைக் கண்ட எனக் கூட்டுக. வசித்தது - பிளக்கப்பட்டது. நொசிப்பு - அவதிஞானம். அஃதாவது எதிர்கால நிகழ்ச்சிகளை உணர்ந்துகொள்ளும் அறிவு. சப்த ரிஷிகள் என்பராகலின், எழுறு முனிவர் என்றார்; ஏழ் என்னும் எண்ணுப்பெயரை அடைகூட்டி வழங்கப்படும் முனிவர் என்றவாறு. வசிதடி - துணிக்கப்பட்ட தசையாகிய கருத்துண்டுகள், அவதி ஞானத்தாலே இக் கரு முருகனாம் என்பதனை நனியுணர்ந்து கண்ட மகாமாதவர் என்க. மகாமாதவர் என்றது, அங்ஙனம் உணர்தற் குரிய தவப்பெருமையினை யுடையர் என்பதுபட நின்றது. பிறனுடைய கருவைத் தம் மனைவியர் வயிற்றிற் றங்குதல் கற்புடைமைக்கு இழுக்காம் என்று கருதி அழற்பெய்தனர் என்க.

சமைத்தல் - தம் வயிற்றில் வைத்துக் குழவியாக வளரச்செய்தல். உடன்பெய்தோர் - ஒருசேரப் பெய்தார். தடவு - யாககுண்டம். முத்தீ - ஆகவநீயம் காருகபத்தியம் தக்கணாக்கினி என்பன. எச்சில் சேடம்: நிருமாலியம். தீயிற்பெய்தலால் பிறன் கரு என்னும் குற்றம் நீங்கி, நிருமாலியம் என்னும் சிறப்பை எய்த மகளிர் உண்பாராயினர் என்பது கருத்து.

எச்சில் - புரோடாசம் என்பர் பரிமேலழகர். வானத்து வடவயின் என்க. ஆரல் என்பது ஆல் என இடைக்குறைந்து நின்றது. ஆரல் - கார்த்திகை மீன். எழுமகளிர் - சப்தரிஷிகளின் மனைவிமார்கள். தீயிற்பெய்து சேடமாகிய விடத்தும் உண்ணுமைக்கு ஏது குறிப்பின் உணர்த்துவார், கடவுள் ஒருமீன் சாலினி என்றார். கடவுட் கற்புடைய சாலினி என்க. சாலினி - அருந்ததி. அறுவர் மற்றையோரும் என்புழி, மற்றையோர் அறுவரும் என மாறுக. ஆலாகிய அறுவரும் என்க. அங்கிலே என்றது அப்பொழுதே என்னும் பொருட்டாய் நின்றது. அயின்றனர் - உண்டனர்.

(பரிமே.) சுஎ. மனத்தினை ஒன்றுக்கி நுண்ணியதாகக் காண்டலாதலின் சமாதி நொசிப்பு எனப்பட்டது.

சசு - ருச : மறுவறுகற்பின்....................சேஎய்

(இ - ள்.) மறு அறு கற்பின் மாதவர் மனைவியர் - குற்றமற்ற கற்பினையுடைய முனிவர் மனைவியராகிய அக் கார்த்திகை மகளிர், நிறைவயின் வழாஅது - அக் கரு வேள்வித்தீயின்கண் இடப்பட்டுச் சேடமாய் விட்டபடியாலும் தங் கணவர் வேண்டவே உண்டாராதலாலும் தம் கற்பின்கண் இழுக்காது, நின் சூலினர்-பெருமானே நின்னைச் சூற்கொள்வாராயினர், நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ்சுனைப் பதுமத்துப் பாயல் பயந்தோர் என்ப - பின், உயர்ந்தோங்கிய இமயமலையின்கண் நீலப்பூக்களை யுடைய பசிய சரவணம் என்னும் சுனையின்கண் தாமரைப் பூவாகிய பாயலிலே ஒருங்கே நின்னை ஈன்றனர் என்று பௌராணிகர் கூறுநிற்பர். பெரும்பெயர் முருக - பெரிய புகழினையுடைய முருகப்பெருமானே !, நின் பயந்த ஞான்றே-இவ்வாறு நின்னைக் கார்த்திகை மகளிர் பெற்றபொழுதே, அரிது அமர் சிறப்பின் அமரர் செல்வன் - பிறர் கிட்டுதற்கரிய விரும்புதற்குக் காரணமான சிறப்பினையுடைய தேவர் கோமான், இகந்துவந்து - பகைமை மிகுதியாலே தான் அம் முனிவர்கட்குக் கொடுத்ததையும் மறந்து அவர்க்குத்) தான் வழங்கிய வரத்தையும் கடந்து அங்கே வந்து, எரிஉமிழ் வச்சிரங்கொண்டு எறிந்தென - தீக் காலும் தனது வச்சிரப்படையாலே வெட்டினுகை, அறுவேறு துணியும் அறுவர் ஆகி - முன் ஆறு வேறு ஆகிய துணிகளும் ஆறு வடிவமாய், ஒருவனை - பின்னும் ஒரே உருவம் உடையை ஆயினை, ஓங்கு விறல் சேஎய் - அப்பொழுதே அவ் விந்திரனை வென்று உயர்ந்த வெற்றியினையுடைய செவ்வேளே;

(வி - ம்.) நிறைவயின் - கற்புடைமையின்கண்; வழாஅது - வழுவாமல். நின்சூலினர் - நின்னைச் சூற்கொண்டனர்: வேள்வித் தீயிற் பெய்தலாலே கரு சேடமாய் விட்டபடியாலும் கணவர் வேண்ட உண்டலாலும் நிறைவயின் வழாஅது என ஏதுக்கள் விரித்து ஓதுக. நீலப் பைஞ்சுனை - நீலப்பூவினையுடைய பசிய சுனை என்க; அஃதாவது சரவணப்பொய்கை. என்ப - என்று பௌராணிகர் கூறுகிற்பர் என்றவாறும். உருவமும் குணமும் வரலாறும் இல்லாத நினக்கிவ்வாறு பௌராணிகர் கூறுவர். அது வாயுமல்ல பொய்யுமல்ல என்றபடியாம். பெரும்பெயர் - பெரியபுகழ். 'நூறுமகஞ்செய்தாரே அமர்தற்குரிய இந்திரபீடத்தில் அமர்ந்த அமரர் செல்வன்' என்பார், அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன் என்றார். அமரர் செல்வன் - இந்திரன்: இகந்து என்றது, வரம்பு கடந்து என்றவாறு. குழவியைக் கோறல் அறமாகாது என்று கருதாமல் அறவரம்பு கடந்து எனினுமாம்.

ஒருவனை - 'ஐ' பகுதிப்பொருளது. ஒருவன் ஆயினை என ஆக்கச் சொல் வருவித்துக் கொள்க.

- சுஉ: ஆராவுடம்பின்...........மறிகொடுத்தோன்

(இ - ள்.) ஆரா உடம்பின் நீ அமர்ந்து விளையாடிய போரால் - குழவிப் பருவத்தினை உடைமை ஆதலான் வளராத உடம்பினை உடைய நீ விரும்பி விளையாட்டாகச் செய்த அப் போரின்கண், வறும் கைக்குப் புரந்தரன் உடைய - படை ஏந்தாத வறிய நின் கைகளுக்கே ஆற்றுதவனாய் இந்திரன் புறமிட்டோடுதலாலே, அல்லல்இல் அனலன் - துன்பமில்லாத தீக்கடவுள் (இத்தகைய ஆற்றல் வாய்ந்த இவனே நம் அமரர் படைக்குத் தலைவனுந் தகுதியுடையான் என்று கருதி), தன் மெய்யில் பிரித்துச் செல்வ வாரணம் கொடுத்தோன் - தனது உடலின்கண் தீத்தன்மையினின்றும் ஒரு கூற்றைப் பிரித்து வளப்பமான கோழிச்சேவலாக்கிக் கொடுத்தானாக, வானத்து வளங்கெழு செல்வன் தன் மெய்யிற் பிரிந்து - அதுகண்ட வானுலகத்து வளம்பொருந்திய செல்வமெல்லாம் உடைய இந்திரனும் தனது தன்மையினின்றும் ஒரு கூற்றைப் பிரித்து, திகழ் பொறிப் பீலி அணிமயில் கொடுத்தோன் - விளங்குகின்ற புள்ளிகளையுடைய தோகையாலே அழகுடைய மயிற்சேவலாக்கி அதனை நினக்கு அளித்தான், திருந்து கோல் நுமன் தன் மெய்யில் பிரித்து - திருந்திய செங்கோன்மையை யுடைய கூற்றுவன் தனது தன்மையினின்றும் ஒருகூறு பிரித்து அதனை, இருங்கண் வெள்யாட்டு எழின்மறி கொடுத்தோன் - கரிய கண்ணையுடைய வெள்ளாட்டினது அழகிய குட்டியாக்கி நினக்கு அளித்தான்;

(வி - ம்.) ஆரா - நிரம்பாத: அஃதாவது வளராத என்றவாறு. மிக இளங்குழவியாயிருக்கும்பொழுதே என்பார், ஆராவுடம்பின் நீ

என்றார். போரால் - போரின்கண் ; வேற்றுமை மயக்கம். வறுங்கை - படை ஏந்தாத கை. புரந்தரன் - இந்திரன்.

தன் மன்னன் உடைந்தமை கருதித் துன்புறாமல் குழவிவென்றமைக்கு மகிழும் தீக்கடவுள் என்பார், 'அல்லலில் அனலன்' என்றார். தீ இறைவன் வடிவமாதலால் அக் குழவியின் வெற்றிக்கு மகிழ்ந்தான் என்பது குறிப்பு. போரின்கண் வென்றோர் அவ் வெற்றிக்கு அடையாளமாக உயர்த்துவது கொடியே ஆதல்பற்றித் தீக்கடவுள் முருகனுக்குக் கொடியாதற்குரிய செல்வ வாரணம் கொடுத்தான் என்க. வாரணம் - கோழிச்சேவல். தன்மெய்யிற் பிரித்து என்றது, தனது தெய்வத் தன்மையினின்றும் கூறுபடுத்தி என்றவாறு. முருகனுக்குக் கொடுக்க வேண்டிய செல்வம் தன்பாலிருந்தும் அவற்றினும் சிறப்பாதற் பொருட்டுத் தன் மெய்யிற் பிரித்து மயில் கொடுத்தான் என்பார், 'வானத்து வளங்கெழு செல்வன்' என்றார். பொறி - புள்ளி. ஞமன் - யமன் ; கூற்றுவன்- தனது ஆட்சியின்கண் சிறிதும் முறை பிறழாத கூற்றுவன் என்பார், 'திருந்துகோல் ஞமன்' என்றார். திருந்துகோல் - செங்கோல்.

(பரிமே.) சுஉ. இருங்கண் - கரியகண்.

ருஅ, சு0, சுஉ கொடைச்சொல் முன்னிலைக்கண் வழுவமைதியாய் வந்தது.

சுரு - எ0 : ஆஅங்கு..................புகழ்வரம்பிகந்தோய்

(இ - ள்.) ஆஅங்கு - அவ்வாறு, அவரும் பிறரும் அமர்ந்து படை அளித்த - அத் தீக்கடவுளும் இந்திரனும் கூற்றுவனும் அவரல்லாத ஏனைத் தேவர்களும் மகிழ்ந்து தத்தம் மெய்யிற் பிரித்துப் படைகளாக்கி நினக்குக் கொடுத்த, மறியும் மஞ்ஞையும் வாரணச் சேவலும் - வெள்ளாட்டு மறியும் மயிலும் கோழிச் சேவலும், பொறி வரிச் சாபமும் - இலச்சினை யிடப்பட்ட வரிந்த வில்லும், மரனும் - தோமரமும், வாளும் - வாட்படையும், இலை செறி ஈட்டியும் - இலை செறிந்த ஈட்டியும், குடாரியும் - கணிச்சியும், தெறுகதிர் கனலியும் - சுடுகின்ற கதிர் கனையுடைய மழுப்படையும், மாலையும் - மாலையும், மணியும் - ஒலிமணியும் ஆகிய, வேறுவேறு உருவின் இவ் - வேறுவேறு வடிவினையுடைய இவற்றை, ஆறுஇரு கைக்கொண்டு - நின்னுடைய பன்னிரண்டு கைகளிடத்தும் ஏந்திக்கொண்டு, பொறி வரிக் கொட்டையொடு-நீ பிறந்த தாமரைப்பூவினது புள்ளிகளையுடைய அழகிய கொட்டையினின்றும் பெயரமாட்டாத அவ் விளம்பருவத்திலேயே, மறு இல் துறக்கத்து அமரர் செல்வன்றன் - குற்றமற்ற வானுலகின்கண் வாழும் தேவர் கோமானுடைய, புகழ் வரம்பு இகந்தோய் - புகழினது எல்லையைக் கடந்த பெருமானே ;

(வி - ம்.) ஆஅங்கு - அங்ஙனமாக. பிறர் - அவரல்லாத பிற தேவர்கள். அமர்ந்து - விரும்பி. மஞ்ஞை - மயில். சாபம் - ... மரன் - மரம்; தோமரப்படை என்க. கனலி - மழு. குடாரி - கோடரி. கையினும் எனற்பால முற்றும்மை விகாரத்தால் தொக்கது. கொட்டை - தாமரைப் பொகுட்டு. தாமரைப் பொகுட்டின்கண் இருக்கும் அவ் விளங்குழவிப் பருவத்திலேயே புகழ் வரம்பிகந்தோய் என்க.

எக - எஅ : நின்குணம்...............சேர்வராதலின்

(இ - ள்.) நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோரும் அல்லதை - நினது திருவருளினை விரும்பி ஏற்றுக் கொண்டு நினது நெறியாகிய அறநெறிக்கட்செல்லுதலைக் கடைப் பிடியாகக் கொண்டொழுகுவாரும் அல்லது, மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை - நினது திருவருள் வெள்ளத்தே நிலைத்து நிற்கும் குணமுடையோராய்ப் பெரிய தவத்தினையுடையோரும் வணங்கத்தகுந்தோராகிய சீவன்முத் தரும் அல்லது, செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும் - பிற வுயிரைக் கொல்லும் தீய நெஞ்சத்தோடே வெகுளியும் உடை யோரும், அறத்துச் சேராச் சீரில்லோரும் - அறநெறிக்கட் சேராத புகழில்லாத பூரியரும், அழிதவப் படிவத்து அயரி யோரும் - கூடாவொழுக்கத்தால் அழிந்த தவவிரதத்தை யுடையோரும், மறுபிறப்பு இல் என்னும் மடவோரும் - இப் பிறப் பின் நுகர்ச்சியே உள்ளது மறுபிறப்பும் அறம் பாவம் வீடு கடவுள் என்பன பொய்ப்பொருளாம் என்னும் அறிவில்லா தாரும், நின்னிழல் சேரார் - நினது திருவடி நிழலை எய்தாதவர் ஆவர், அன்னோர் அல்லது - சினம் நீடினோர் முதலிய அத் தன்மையுடையோரல்லது, இன்னோர் - நின் குணம் எதிர் கொண்டோர் முதலிய இத் தன்மையுடையோர், சேர்வர் ஆதலின் - நினது திருவடி நிழலை எய்துவாராதல் ஒருதலை யாதலின்;

(வி - ம்.) அறங்கொண்டோரும் மாதவர் வணங்கியோரும் நின் னிழல் சேர்வர் அல்லது, சின நீடினோரும் சீர் இல்லோரும் அயரி யோரும் நின்னிழல் சேரார்; இத்தன்மையோர் சேரார் முற்கூறிய அறங்கொண்டோர் அன்னோர் நின்னிழல் சேர்வராகலின் என இயைபு காண்க.

நின்குணம் என்றது நினது குணமாகிய திருவருளை என்றவாறு. அதனை எதிர்கொள்ளுதலாவது எல்லாம் இறைசெயல் என அறிந்து யான் எனது என்னும் செருக்கற்றிருத்தல். இதனை,

"யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான் என்னும்
　　இக்கோணை ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்துத்

தான் செவ்வே நின்றிட அத்தத்துவன்தான் நேரே
தனை அளித்து முன்நிற்கும் வினை ஒளித்திட் டோடும்.''
(௩.௦௫)

எனவரும் சித்தியாரானும் உணர்க.

இனி மாதவர் வணங்கியோர் என்றது, சீவன் முத்தரை. இன்னோர் என்றது, ஏனைச் சரியை கிரியை யோகங்களின் நிற்போரை என்க.

செறுதல் - பிறவுயிரைக் கொல்லுதல். அறத்துச் சேராதவர் - கயவர்கள். அயரியோர் என்றது, தவவேடமுடையாராய்க் கூடா வொழுக்கமுடையாரை. அயர்தல் - மறத்தல்: தம்நிலை மறந்து ஒழுகுவோர் என்பார், அயரியோர் என்றார்.

மறுபிறப்பு முதலியன இல் என்னும் மடவோர் என்க; என்றது நாத்திகரை.

எ௮ - ௮௧: யாஅம்......................தாரோயே

(இ - ள்.) உருள் இணர்க் கடம்பின் ஒலி தாரோய் - தேர் உருள் போன்ற பூக்கள் மலிந்த கொத்தினையுடைய கடப்பமலர் மாலையினையுடைய பெருமானே, யாம் இரப்பவை-நினது திருவடி நீழலை எய்த விரும்பிய அடியேங்கள் நின்பால் வேண்டுவன, பொருளும் பொன்னும் போகமும் அல்ல-நுகரப்படும் பொருளும் அவற்றைத் தரும் பொன்னும் அவற்றாலே நுகரும் இன்பமும் அல்ல, அருளும் நின்பால் அன்பும் அறனும் மூன்றும் - எமக்கு வீடுபயக்கும் நினது திருவருளும் அவ் வருளினை உண்டாக்க நின்னிடத்தே யாங்கள் செலுத்தக் கடவ அன்பும் அவ் விரண்டானும் வரும் அறமும் ஆகிய இம் மூன்றுமேயாம் இவற்றை எங்கட்கு அளித்தருளல் வேண்டும்.

(வி - ம்.) பொருள் என்றது நெல் மனை மாடு குதிரை யானை முதலியவற்றை, பொன்னுடையார் இவற்றை எய்துதல் ஒருதலை யாகலின் பொன் எனப் பிரித்துக் கூறினர். இவையெல்லாம் யான் எனது என்னும் செருக்கினை மிகச்செய்து பின்னும் பிறவிக்கே ஏதுவாம் பொருளுமாகலின், யாமிரப்பவை இவை அல்ல என்றார். போகம் - இன்பநுகர்ச்சி. அவனருளாலே அவன் அடிவணங்குதல் வேண்டுமாகலின், முதற்கண் அவ் வருளே வேண்டினார். அன்பு-இறை யன்பு. அறன் என்றது சிவபுண்ணியச் செயலை. அவற்றை,

"ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவுசீலம்
வழுக்கிலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவொடர்ச் சித்தல் ஆதி
இழுக்கிலா அறங்கள் ஆனல் இரங்குவான் பணி அறங்கள்.''
(சித்தியார் - சுப - செய். ௧௧௩)

எனவும்,

" மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங்கு இச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுதல் அகற்றி வாழும் செயல் அறம் ஆனால் யார்க்கும்
முனமொரு தெய்வம் எங்கும் செயற்குமுன் னிலையா மன்றே."

(சித்தியார் - சுப - செய் ; கககூ)

எனவும் வரும் சித்தியார்ச் செய்யுள்களான் உணர்க.

" அன்பேஎன் அன்பேஎன் றன்பால் அழுதரற்றி
அன்பே அன்பாக அறிவழியும்—அன்பன்றித்
தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்." (திருக்களிற்று - நரு)

என்றபடி இறைவனடியை அடைதற்கு உறுதுணையாவது இறையன்பே ஆதல் பற்றி இரண்டாவதாக அன்பு வேண்டினார்.

# ஆறும் பாடல்

## வையை

பொருட் சுருக்கம்

**க - க0 :** முகில்கள் கடலின்கண் நீரைமுகந்து கொணர்ந்து ஊழி முடிவின்கண் நிலத்தை முழுகுவிக்கப் பெய்யுமாறு போலப் பெய்தனவாக; அதனால் மலையிலுள்ள மான்கள் கலங்கவும் மயில்கள் அகவவும் மலையின் மாசு கழியவும் அருவி விரைந்து இழிந்தது; அவ் வருவிநீர் நாட்டின்கண் எங்கும் பரந்து உழவு முதலிய தொழில் பெருகும்படி ஓடியது ;

**கக - உச :** வையையாற்றின்கண் வெள்ளம் பெருகிற்று. அப் புதுப்புனலின்கண் ஆட விரும்பிய மகளிர், அகில் தீ பூ ஆராதனைப் பொருள்கள் பொன்மீன் முதலியவற்றை ஏந்தினர். தத்தம் கணவன்மாரையும் அவ் விழவிற்குரிய கோலங்கோடச் செய்தனர். இங்ஙனமாக மகளிரும் மைந்தரும் நீர்விழவிற்கு நெருங்கினர். தொடி அழுந்தவும், வளை அலையவும், தொய்யில் அழியவும், மேகலைகள் அற்று உதிர்ந்து நூல் தோன்றவும், முத்துவடம் சந்தனச்சேற்றால் நிறம் மழுங்கவும், அலத்தகம் அழியவும், குங்குமக்குழம்பு வண்டலிடவும், பூசின சந்தனஞ் சிதையவும், இருபாலாருடைய அணிகலன்களும் தம்முள் மயங்கவும் செய்து, அவர்களுடைய நிறையை இவ் வையை உடைத்தது; அதைப் போலவே அணைகளையும் உடைத்தது; அதன் அலைகள் கரையை உடைத்தன; அவ் வுடைப்பினை அடைத்தற்குப் பறை அறையப்பட்டது; அவ் வொலிகேட்டலும் மதுரை மாநகரமே கிளர்ந்து எழுந்தது ;

**உரு - ௩ரு :** அங்ஙனம் கிளர்ந்த அன்று, வையையின்கண் நீரட்டப் பிடியானைகள் அணியணியாய்ச் சென்றன; மகளிரும் மைந்தரும் நீராடற்கேற்ற ஆடைகளை அணிந்து யானைகளின் மேலும் குதிரைகளின் மேலும் ஊர்ந்து புறப்பட்டனர்; அவர்கள் நீர்விளையாட்டாகிய போரைச் செய்தற்குரிய படைகளையும் கொண்டுசென்றனர் ; புழுகுநிரப்பிய துருத்தியும், பனிநீர் நிரப்பிய கொம்பும் மிதவைகளும் நெட்டியாற் செய்த தேரும் கொண்டு நெருங்கிச் சென்றனர் ;

௩௬ - ௫௧ : நெருக்க மிகுதியால் இளைஞரும் இயங்க மாட்டாதவராயினர்; மெலியோர் துறைகளை நாடிச்சென்றனர். வலியோர் புதுப்புனலின்கட் பாய்ந்து ஆடினர்; அதனால் வையை சாறும் சேறும் மலரும் மணக்கச்சென்றது. மணங் கமழ்ந்து செல்லும் அந் நீர் தூய்மை யிழந்தது எனக் கருதி அந்தணர் அதன்கண் ஆடலை ஒழிந்தனர்; சூடிக் கழித்த மலரும் தாரும் கோதையும் மரங்கொடிகள் முதலியவற்றின் வேரும் தூரும் காய்களும் கிழங்கும் கீழ்மக்கள் உண்டு உகுத்த கள்ளும் கலத்தலால் நலனழிந்து வேறாயிற்றென்று பிறரும் நீங்கினர்; சேறுகிய வையை நீரோட்டம் இங்ஙனமாயிற்று;

௫௨ - ௬௦ : முருகன் பரங்குன்றத்தின்கண்ணே அருவி தாலாட்டவும், காற்றுப் பாராட்டவும், தலைவர் மகளிரோடு இனிதே துயில்கின்றனர் என்ற செய்தியை மதுரையிலுள்ளார்க்குச் சென்று அறிவிப்பதுபோலத் தமிழ்வையைப் புனல் பரவிச் சென்றது;

௬௧ - ௬௭ : இவ்வாறு பரந்த வையைப் புனலிலே ஒரு தலைவன் இற்பரத்தையோடே நீராடுறான்; அதுகண்ட காதற் பரத்தை ஊடினாள்; அவள் ஊடலைத் தணித்தற்கு அத் தலைவன் தளிரைக் கையுறையாகக் கொணர்ந்து காட்டி வையை நீரின் பெருக்கத்தை அவட்குக் கூறினான். அவள் பின்னரும் அவனோடு ஊடுவாளாய்க் கூறுகின்றாள் :--

நீ இத் தளிர் எனக்குக் கொய்தாயல்லை; நின்னைப் புதிதாக விரும்புமகளிர்க்குக் கொய்தாய் என்றாள். அதுகேட்ட தலைவன் நீ அறிந்திலை; இது நின்பொருட்டே கொய்து கொணரப்பட்டது என்றான். மேலும் காதற்பரத்தை கூறுகின்றாள் :—

முன்பெல்லாம் நீ எனக்குக் கொய்து கொணர்ந்த தளிர் விரைந்து நேரே என்பால் கொணர்ந்தமையால் துவளா திருந்தன; இது மற்றொருத்திக்குக் கொய்யப்பட்டு அவள் மறுத்தபின்னர் இங்கே கொணர்ந்தபடியால் பெரிதும் துவண்டது பார்; அவளுக்காகவே இதை நீ கொய்தாய்; பின்னர் அவளுக்குக் கொடுத்தாய்; அவள் மறுத்துவிட்டாள்; நினது வணக்கத்தையும் அவள் பொருட்டாகக் கொள்ளவில்லை போலும்! நான் கூறுவது உண்மையே அன்றோ கூறுக;

௬௮ - ௭௪ : இதுகேட்ட தலைமகன் வையையின்கண் புணையேறி வரவேண்டியிருந்தமையாலே பொழுது தாழ்த்தது; அதனால் இத் தளிர்கள் துவண்டன; "திருப்பரங்குன்றத்து ஆணை; வையைநீர் அழகிய பெருக்கன்றோ" என்றான். வையைப்

பெருக்கன்றோ என்று தலைவன் கூறியது, காமப் பெருக்கமும் வையைப் பெருக்கை ஒக்கும் என்னும் குறிப்புடையதாகக் கொண்டு காதற்பரத்தை பின்னரும் கூறுகின்றாள் ;

எரு - அசு : ஆம் ஆம் நீ கூறுவது உண்மையே ! காமம் எப்பொழுதும் ஒருதன்மையிலே நிற்பதில்லையே !, சிலரிடத்து விரைந்து பெருகுகின்றது ! சிலரிடத்து விரைந்து சுருங்கி விடுகிறது. இதனால் காமம் வையைப் பெருக்கினையே ஒப்பது தான். நீ இனி இங்ஙனம் பொய்ச் சூளுறுதலைத் தவிர். என்பதி, நின்பதிக்கு அண்மையில் இருக்கக் கார்காலத்தில் புனை யேறுதல் காரணமாக நின்னைத் தாழ்ப்பிக்கும் இவ் வையை இளவேனிற் காலத்திலோ நீர் சுருங்கிக்கிடக்கும்; நின் காமமும் அப்படிப்பட்டதே. நீ வலிய மகளிர்க்குத் தெப்பமாகிய மார்பினை உடையாய்; இரவெல்லாம அவளோடு தங்கினை; அவர் கண்ணீ ருகுத்து நிற்பரே ! நீ இங்கே வந்தமை அவர் அறியின் அவர் நெஞ்சம் மேலும் கனலுமன்றோ ! இனி நீ இங்கே வருதலை ஒழிக.

அஎ - கூரு : அதுகேட்ட தலைவன் "ஏடி! யாரோ ஒருத்தி ஒரு குளத்தின் கரையில் நின்றாள். நான் அங்கே குளித்தேன். அவள் அறியாமையாலே அக் குளத்தில் ஆழமான இடத்தி லிறங்கி நீருள் முழுகிப்போனாள். அவளை எடுக்கப் போனேன். அவளே எழுந்துவிட்டாள். பின் மயங்கி என்மேல் விழுந்தாள். அவளையன்றி என்னை அணைந்தாளொருத்தியுமிலள். நான் ஆடிய ஆறுதான் யாது ?" என்று வினவினான்.

கூசு - கoச : அதுகேட்ட காதற்பரத்தை அந்த ஆறு இவ் வையைதான் என்றாள். தலைவன் ஏடி! யான் பரங்குன்றின் தலையைத்தொட்டு ஆணையிடுகின்றேன். யான் அப்படிச் செய்யவில்லை என்றான். இவ்வாறு தலைவன் கூறியது கேட்ட காதற்பரத்தையின் இல்லிலே இருந்த முதுபெண்டிர், அவளை நோக்கி, "ஏடி ! நீ தகாது செய்கின்றனை ! அவன் நினைக்கு அஞ்சுகின்றான்; சினத்தை விட்டு அவனை ஏற்றுக்கொள்க; சினப்பாயாயின் அவன் இன்பம் பதனழிந்து கெடும்; நீ சுட்டிக் கூறுபவளோ காமஞ்சாலா இளமையோள்; நீ அவனைக் கடிந்து கொள்ளின் அவன் நின்னைவிட்டே நீங்குவான்; பின்னர் இரவில் நீ அவனைத் தேடித் திரியவேண்டிவரும்; இவ்வாறு செவ்வியறியாது ஊடுதல் பிழையாகும்," என அவளைக் கடிந்தனர். பிறரும் அவளை இரந்து வேண்டினர்; அதனால் அவள் ஊடல் தீர்ந்தாள்; பின்னர் இருவரும் கூடி யின்புற் றனர்; வையையின்கண் மகிழ்ந்து நீராடி யின்புற்றனர் ; பின்ன ரும் ஊடினர்; கூடி ஆடினர் ;

௧௦௫ - ௬ : இவற்றை எல்லாம் அறிந்து ஊடிய தலைமகள்பால் தலைவன் விறலியைத் தூதுவிட்டான். அவ் விறலிக்குத் தலைவி தலைவனுடைய பரத்தமையை எடுத்துக் கூறிப் பின் வையையை நோக்கி, 'வையாய்! நின்கண் ஆடுவார் நெஞ்சத்து அலர்ந்த காமம் எப்பொழுதும் குறையாதொழிக' என வாழ்த்து முகத்தானே வாயில் மறுத்தாள்.

நிறைகடன் முகந்துராய் நிறைந்துநீர் துளும்புந்தம்
பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வானம்
நிலமறை வதுபோன் மலிர்புன றலைத்தலைஇ
மலைய வினங்கலங்க மலைய மயிலகவ
மலைமாசு கழியக் கதழுமருவி யிழியும்
மலிநீ ரதர்பல கெழுவு தாழ்வரை
மாசில் பனுவற் புலவர் புகழ்புல
நாவிற் புனைந்த நன்கவிதை மாறாமை
மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல் ;
புகைபூ அவியா ராதனை யழல்பல வேந்தி
நகையமர் காதலரை நாளணிக் கூட்டும்
வகைசாலும் வையை வரவு ;
தொடிதோள் செறிப்பத் தோள்வளை யியங்கக்
கோடிசே ராத்திருக் கோவை காழ்கொளத்
தொகுகதிர் முத்துத் தொடை கலிழ்பு மழுக
உகிருங் கோடிறு முண்டசெம் பஞ்சியும்
நகிலணி யளறு நனிவண்டன் மண்ட
இலையு மயிரு மீர்ஞ்சாந்து நிழத்த
முலையு மார்பு முயங்கணி மயங்க
விருப்பொன்று பட்டவ ருளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை வையைத்
திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை யறைகெனும்
உரைச்சிறைப் பறையெழ வூரொலித் தன்று
அன்று, போரணி யணியிற் புகர்முகஞ் சிறந்தென
நீரணி யணியி னிரைநிரை பிடிசெல
ஏரணி யணியி னிளைஞரு மினியரும்
ஈரணி யணியி னிகன்மிக நவின்று

துணிபுன லாடுந் தகைமிகு போர்க்கண்
துணிபுன லாகத் துறைவேண்டு மைந்தின்
அணியணி யாகிய தாரர் கருவியர்
அடுபுன லதுசெல வவற்றை யிழிவர்
கைம்மா னெருத்தர் கலிமட மாவினர்
நெய்ம்மாண் சிவிறியர் நீர்மணக் கோட்டினர்
வெண்கிடை மிதவையர் நன்கிடைத் தேரினர்
சாரிகை மறுத்துத் தண்டா வுண்டிகை
ஓரிய வுறுத்தர வூரூர் பிடந்திரீஇச்
சேரி யிளையர் செலவரு நிலையர்
வலிய ரல்லோர் துறைதுறை யயர
மெலிய ரல்லோர் விருந்துபுன லயரச்
சாறுஞ் சேறு நெய்யு மலரும்
நாறுபு நிகழும் யாறுவர லாறு
நாறுபு நிகழும் யாறுகண் டழிந்து
வேறுபடு புனலென விரைமண்ணுக் கலிழைப்
புலம்புரி யந்தணர் கலங்கினர் மருண்டு
மாறுமென் மலருந் தாருங் கோதையும்
வேருந் தூருங் காயுங் கிழங்கும்
பூரிய மாக்க ளுண்பது மண்டி
நாரரி நறவ முகுப்ப நலனழிந்து
வேறு கின்றிவ் விரிபுனல் வரவெனச்
சேறுடு புனலது செலவு;
வரையழி வாலருவி(?) வாதா லாட்டக்
கரையழி வாலருவிக் கால்பா ராட்ட
இரவிற் புணர்ந்தோ ரிடைமுலை யல்கல்
புரைவது பூந்தாரான் குன்றெனக் கூடார்க்
குரையோ டிழிந்துரா யூரிடை யோடிச்
சலப்படை யானிரவிற் றுக்கிய தெல்லாம்
புலப்படப் புன்னம் புலரியி னிலப்படத்
தான் மலர்ந் தன்றே
தமிழ் வையைத் தண்ணம் புனல்;
விளியா விருந்து விழுவார்க்குக் கோய்தோய்
தளிரறிந் தாய்தா மிவை

பணிபோசி பண்பபண் டெல்லா நனியுருவத்
தென்னோ துவள்கண்டீ
எய்துங் களவினி நின்மார்பிற் றூர்வாடக்
கோய்ததும் வாயாளோ கோய்தழை கைபற்றிச்
செய்ததும் வாயாளோ செப்பு;
புனைபுனை யேறத் தாழ்த்ததை தளிரிவை
நீரிற் றுவண்ட சேஎய்குன்றங் காமர்ப்
பெருக்கன்றே வையை வரவு;
ஆமா மதுவோக்குங் காதலங் காமம்
ஒருக்க ஒருதன்மை நிற்குமோ ஒல்லைச்
சுருக்கமு மாக்கமுஞ் சூளுறல் வையைப்
பெருக்கன்றே பெற்றாய் பிழை;
அருகு பதியாக அம்பியிற் றூழ்ப்பிக்கும்
குருகிரை தேரக் கிடக்கும் பொழிகாரில்
இன்னிள வேனி லிதுவன்றே வையைநின்........
வையை வயமாக வை;
செல்யாற்றுத் தீம்புனலிற் சென்மரம் போல
வவ்வுவல் லார்புனை யாகிய மார்பினை
என்னும் பனியாய் இரவெல்லாம் வைகினை
வையை யுடைந்த மடையடைத்தக் கண்ணும்
பின்னு மலிரும் பிசிர்போல வின்னும்
அனற்றினை துன்பவிய நீயடைந்தக் கண்ணும்
பனித்துப் பனிவாரும் கண்ணவர் நெஞ்சம்
கனற்றுபு காத்தி வரவு;
நல்லாள் கரைநிற்ப நான்குளித்த பைந்தடத்து
நில்லா டிரைமூழ்கி நீங்கி யெழுந்தென்மேல்
அல்லா விழுந்தானை யெய்தியெழுந் தேற்றியான்
கொள்ளா வளவை யெழுந்தேற்றாள் கோதையின்
உள்ளழுத்தி யாளேவளோ தோய்ந்த தியாதெனத்
தேறித் தெரிய வுணர்நீ பிறிதுமோர்
யாறுண்டோ இவ்வையை யாறு;
இவ்வையை யாறென்ற மாறென்னை கையால்
தலைதோட்டேன் தண்பரங் குன்று;
சினவனின் னுண்கண் சிவப்பஞ்சு வாற்குத்

துனிநீங்கி யாட ஞூடங்கு துனிநனி
கன்றிடிற் காமம் கெடூஉ மகளிவன்
அல்லா நெஞ்ச முறப்பூட்டக் காய்ந்தே
வல்லிரு ணீய லதுபிழை யாகுமென
இல்லவ ராட விரந்து பரந்துழந்து
வல்லவ ரூட லுணர்த்தர நல்லாய்
களிப்பர் குளிப்பர் காமங் கொடிவிட
அளிப்ப துனிப்ப வாங்காங் காடுப
ஆடுவார் நெஞ்சத் தலர்ந்தமைந்த காமம்
வாடற்க வையை நினக்கு.

*என்பது, வையைநீர் விழவணியிற் காதற்பரத்தை, இப் பரத்தையுடன் நீராடினன் தலைமகனெனக் கேட்டுப் புலந்தாளைப் புலவி நீக்கிப் புணர்ந்தானெனக் கேட்ட தலைமகள் வாயிலாகப் புக்க விறலிக்கு அவ் வையைநீர் விழவணியும் ஆங்குப்பட்ட செய்தியும் கூறி வாயின் மறுத்தது.*

[1]ஆசிரியன் நல்லந்துவனர் பாட்டு; மருத்துவன் நல்லச்சுதனார் இசை;
பண்ணுப் பாலையாழ்.

## உரை

க - க0 : நிறைகடல்........................புனல்

(இ - ள்.) *வானம் நிறைகடல் முகந்து உராய் - முகில்கள் நீர் நிறைந்த கடலின்கண் உள்ள நீரை முகந்துகொண்டு வானத்தின்கண் யாண்டும் பரவி, நீர் நிறைந்து துளும்பும் தம் பொறை தவிர்பு அசைவிட - நீர் நிறைதலாலே துளும்பாநின்ற தமது பாரம் தீர்ந்து இளைப்பாறுதற் பொருட்டுப் பெய்யுவன போல, பொழிந்தன்று - மழையைப் பொழியாநின்றன, மலிர் புனல் நிலம் மறைவதுபோல் தலைத்தலைஇ - அதனால் மிக்க நீர் ஊழிக்காலத்தே நிலத்தை மறைக்கப் பெருகுமாறு பெருகி இடந்தோறும் கூடி, மலைய இனம் கலங்க மலைய மயில் அகவ - மலையிடத்தே வாழும் மானினம் முதலிய உயிர்கள் கலங்கும் படியும் மலையிடத்தனவாகிய மயில்கள் களித்து அகவாநிற்ப வும், மலை மாசு கழியக் கதழும் அருவி இழியும் - மலைகளின்மேற் படிந்துள்ள அழுக்குகள் தீரும்படி விரையும் அருவியாய் வீழ் கின்ற, மலிநீர் - வெள்ளம், அதர்பல கெழுவு தாழ்வரை -*

1. (பாடம்) ஆசிரியர் நவ்வந்துவனர்.

ஓடுதற்குரிய வழிகள் பற்பல பொருந்திய மலைச்சாரலிலே, தண் அம்புனல் - குளிர்ந்த அழகிய அந் நீர், மாசு இல் பனுவல் புலவர் புகழ் புல நாவில் புனைந்த நன்கவிதை மாறுமை - குற்ற மில்லாத நூற்கேள்வியினை யுடைய நல்லிசைப் புலவர்கள் புகழப்படும் அறிவினையுடைய தம் நாவாலே பாடிய நல்ல செய்யுள்கள் பொய்படாமல் நிலைநிற்கச் செய்ய, மேவிப் பரந்து விரைந்து வினை நந்தத் தாயிற்று - யாண்டும் சென்று பரவி விரைந்து உழவு முதலிய தொழில்கள் பெருகும்படி தாவிச் செல்லாநின்றது;

(வி - ம்.) முகில்கள் கடல் முகந்து தம் பாரந் தீரும்படி மழையைப் பொழிந்தன; வெள்ளம் ஊழிக்காலத்தே நிலத்தை மறைக்கப் பெருகுமாறுபோலே பெருகிற்று, அப் புனல் அருவியாய்க் கலங்கவும் அகவவும் மாசு ஒழியும்படி அதர் பொருந்திய தாழ்வரையிலே புலவர் கவிதை மாறாமல் மேவிப் பரந்து வினைகள் பெருகும்படி தாவிச் சென்றது என முடிவு காண்க.

நிறைகடல்: வினைத்தொகை. உராய் - பரந்து. பொழிந்தன்று - பொழிந்தது: பன்மை ஒருமை மயக்கம். பொறை - பாரம். அசைவிட - இளைப்பாற. வானம் - முகில்: ஆகுபெயர். மறைவது - மறைப்பது. மலிர்புனல் - மிக்க நீர்: வெள்ளம். இனம் - மானினம் முதலியன. மலைய - மலையிடத்துள்ளனவாகிய. கதழும் - விரையும் பனுவல் - நூல். புல நா - அறிவாற் சிறந்த நா. நன் கவிதை - குற்றமில்லாத அழகிய செய்யுள். அவையாவன:—“சீர்மற்றிப் புலவர்வாய்ச் சிறப் பெய்தி இருநிலம், தார்மாற்றி யதுபோலத் தகைபூத்த வையை,” “வையை என்ற பொய்யாக் குலக்கொடி,” “புகழ்பூத்த லல்லது பொய்யாத லுண்டோ மதுரை புனைதேரான் வையையுண் டாகும் அளவு,” என்றின்னோரன்ன செய்யுள்கள் என்க. தாயிற்று - தாவி யோடிற்று. வினை - தொழில். நந்துதல் - பெருகுதல்.

(பரிமே.) ௬. இனம், மானினம் முதலாயின.

௮. கவிதை - கவியது தன்மை. அஃது ஈண்டுச் செய்யுண்மேல் நின்றது.

கக - கரு: புகைபூ..........................வையை வரவு

(இ - ள்.) வையை வரவு - அவ் வெள்ளம் வையையாற்றின்கண் வந்த வருகையின்கண், புகை பூ ஆராதனை அவி அழல் பல ஏந்தி - புதுப்புனலாடற்கு விழைந்த மகளிர் தம் கூந்தல் புலர்த்துவதற்கு வேண்டிய அகில்மரம் முதலிய புகைக்கப்படும் பொருளும் சூடுதற்குரிய மலர்களும் வையைக்கு ஆராதனைக்குரிய அவிப்பொருளும் நெருப்பும் ஆகியவற்றையும் பொன்மீன் பொன்வண்டு முதலிய பிற பற்பல பொருள்களையும் ஏந்திக்கொண்டு, நகை அமர் காதலரை - தம் மகிழ்ச்சி பொருந்திய தத்தம் கணவன்மாரை, நாள் அணி கூட்டும் -

திருநாளுக்குரிய அணிகலன் ஆடைகளை அணியச்செய்யும், வகை சாலும் - முறை மிகாநின்றது ;

(வி - ம்.) வையையின்கண் வெள்ளம் வந்தவிடத்தே மகளிர் புகை முதலிய ஏந்தித் தங் காதலரை அணிக்கூட்டும் முறை மிகாநின்றது என்க.

தகுதியால் மகளிர் என்னும் வினைமுதல் வருவித்துரைக்கப் பட்டது. புகை - அகில் சந்தனம் முதலியன: ஆகுபெயர். அவியாகிய ஆராதனைப் பொருள் என்க. ஆராதனை : ஆகுபெயர். பல என்றது, பொன்மீன், பொன்னண்டு முதலிய பிற பலவும் என்க.

நாளணி - திருவிழாக் காலங்களில் சிறப்பாக அணிந்துகொள்ளும் ஆடை அணிகலன்கள். வகை - முறை. சாலும் - மிகாநிற்கும். இனி அப்பொழுது உண்டான ஆரவாரங்களை மேலே கூறுகின்றார்.

கச - உச : தொடி......................ஊர் ஒலித்தன்று

(இ - ள்.) தொடி தோள் செறிப்ப - மகளிர்கள் மகிழ்ச்சியானே உடல் பூரித்தலானே தொடிகள் தோளில் அழுந்த, தோள் வளை இயங்க - தோளின்கண் இட்ட வளையம் முன்கை இடத்தே வந்து அலையாநிற்ப, கொடி சேரா - எழுதப்பட்ட தொய்யிற்கொடிகள் ஒன்றோடொன்று கலந்து அழிய, கோவை காழ்கொள - மேகலை வடங்கள் அற்று உதிர்ந்து நூல்தோன்றுநிற்ப, தொகு கதிர்முத்துத் தொடை கலிழ்பு மழுக - திரண்ட ஒளியினையுடைய முத்துமாலை கலங்கிச் சந்தனம் முதலியன பூசப் பட்டமையானே ஒளி மழுங்காநிற்ப, உகிரும் கொடிறும் உண்ட செம்பஞ்சியும் - நகத்தினும் கபோலத்தினும் ஊட்டப்பட்ட அலத்தகச் சேறு அழிய, நகில் அணி அளறு நனி வண்டல் மண்ட - முலைக்கு அணிந்த குங்குமக் குழம்பு வண்டலிட்டு ஓடாநிற்ப, இலையும் மயிரும் ஈர்ஞ் சாந்து நிழத்த - தளிராற் செய்த படலைமாலையும் கூந்தலும் குளிர்ந்த சந்தனத்தை அழிக்க, முலையும் மார்பும் முயங்கு அணி மயங்க - மகளிர் முலையிடத்தும் மைந்தர் மார்பிடத்தும் பொருந்திய இருபாலார் அணிகலன்களும் தம்முள் கூடாநிற்ப, அவர் விருப்பு ஒன்று பட்டு உளம் நிறை உடைத்தென - மகளிரும் மைந்தருமாகிய அவ் விருபாலார் உளமும் அன்பாலே ஒன்றுபட்டு அவர்தம் நிறையுடைமையை உடைத்தாற்போலவே, வையை வரைச் சிறை உடைத்தது - வையை வெள்ளம் மலைபோன்ற அணைகளை உடைத்தொழித்தது, வையைச் சிறைத் திரை - அவ் வையை யாற்றின் சிறகுகளாகிய அலைகளோ, கரைசிறை உடைத்தன்று - வையையாற்றினது கரையாகிய காவலை உடைத்தொழித்தன, உரைச்சிறை - அக்கரை அடைத்தற்கு ஆளெழுக என்று கூறும் கரை காவலருடைய சொல்லாகிய காவல் ஒலியோடே,

பறையெழ ஊர் ஒலித்தன்று - பறையொலி எழுந்ததாக அவ்வொலியோடே கிளர்ந்து எழும் ஊரவர் ஆரவாரமும் எழுந்தது;

(வி - ம்.) தொடி - வளையல். செறித்தல் - அழுத்துதல். தோள்வளை-தோளில் அணியும் வளையம். கொடி-எழுதின தொய்யிற் கொடி. சேரா - ஒன்றனோடு ஒன்று சேர்ந்து: செய்யா என்னும் வாய் பாட்டு எச்சம். அழிய என ஒரு சொல் வருவித்து முடிக்க. திரு-அழகுடைய. கோவை - மேகலையணி. காழ் - நூல். முத்துத்தொடை - முத்துமாலை. கலிழ்பு - கலிழ்ந்து : கலங்கி என்க. மழுகுதல் - மழுங்குதல். உகிர் - நகம். கொடிறு - கபோலம் (கன்னம்). உண்ட - ஊட்டப்பட்ட. செம்பஞ்சி - அலத்தகக் குழம்பு : ஈண்டும் அழிய என்னும் ஒருசொல் வருவித்து முடிக்க. நகில் - முலை. அளறு - (குங்குமக்) குழம்பு. வண்ட விடுதலாவது வரிவரியாய்ச் சேர்தல். இலை - தளிரானுய மாலை: ஆகுபெயர். இதனைப் படலைமாலை என்றும் கூறுப. ஈர்ஞ்சாந்து - குளிர்ந்த சந்தனம். நிழத்த - அழிப்ப. "சேம மடிந்த பொழுதின் வாய்மடுத்து இரும்புனம் நிழத்தலின்" (குறிஞ்சிப்பாட்டு, கஙரு - சு) என்புழியும் அஃதப்பொருட்டாத லுணர்க.

வரைச்சிறை-மலையை ஒத்த அணைக்கட்டு. உடைத்ததை என்புழி ஐகாரம் பகுதிப்பொருளது. திரைச்சிறை - அலையாகிய சிறகு. கரைச்சிறை - கரையாகிய காவல். உரைச்சிறை - சொல்லாகிய காவல். ஊர் : ஆகுபெயர் ; ஊரிலுள்ள மாந்தர்.

(பரிமே.) கரு. தொய்யிற் கொடிகள்.

கசு. ஆணிதிரண்ட முத்திறுகிய வடம்.

உச. அஃது அடைக்க ஆளேறுதற்குப் பறையறைக என்னும் கரைகாப்பார் உரையாகிய காவலோடே.

கசு - கஎ. அழிய என்னும் வினைச்சொல் வருவிக்கப்பட்டது.

உரு - நஎ : அன்று..........................இடந்திரீஇ

(இ - ள்.) அன்று - அவ்வாறு ஊரவர் கிளர்ந்து ஆரவாரஞ் செய்த அந்த நாளிலே, போர் அணி அணியில் புகர் முகஞ் சிறந்தென - போர் செய்தற்கு அணிவகுக்கப்பட்ட அணியிடத்தே புள்ளிகளையுடைய முகத்தையுடைய களிற்றியானைகள் நிரைநிரையாகச் சிறப்பாகச் செல்லுமாறுபோல, நீர் அணி அணியில் - இந்த நீராட்டுவிழவின் பொருட்டு வகுக்கப்பட்ட அணியின்கண்ணே, நிரை நிரை பிடிசெல - வரிசை வரிசையாகப் பிடியானைகள் சிறந்து செல்லாநிற்றலானும், ஏர் அணி அணியின் இளையரும் இனியரும் - அழகாக அணியப்பட்ட அணிகலன்களையும் இளமையுடைய ஆடவரும் அவருக்கு இனியராகிய மகளிரும், (நஉ) அடிபுலலது செல அவற்றை இழிவர் - கரை முதலியவற்றை இடிக்கும் அவ் வையையாற்றின் வெள்ளத்தினூடே புகுதற்பொருட்டு அவ் வணிகலன்களை

நீக்கி, ஈரணி அணியின் - நீராடத்தகுந்த ஈர அணிகளுடனே, கைம்மான் எருத்தர் - யானையின் பிடரின் மிசையாருமாய், கலி மட மாவினர் - கலித்த மெல்லிய நடையினையுடைய குதிரையின் மிசையாருமாய், இகல் மிக நவின்று - விளையாட்டுப் போரினைப் பெரிதும் விரும்பி, தணி புனல் ஆடும் தகைமிகு - தண்ணிய நீராட்டுவிழவிற்குரிய தகுதிமிக்க, துணிபுனல் போர்க்கண் ஆக - தெளிந்த வையை நீரே அவ் விளையாட்டுப் போரினை நிகழ்த்தற் கேற்ற போர்க்களமாகக் குறித்து, துறை வேண்டும் மைந்தின் - ஏற்ற துறையினைத் தேர்ந்துகொள்ளும் விருப்பத்துடனே ஒருவரின் ஒருவர் முற்பட்டு, அணி அணியாகிய தாரர் கருவியர் - கூட்டங் கூட்டமாகிய தூசிப்படையின் தன்மையினையுடையராய் அப் போர்க்கு வேண்டும் படைக்கலங்களை உடையராய், நெய்ம் மாண் சிவிறியர் - உள்ளிடப்பட்ட புழுகுநெய்யாலே மாட்சிமைப் பட்ட துருத்தியினை உடையராய், நீர் மணக் கோட்டினர் - உள்ளிடப்பட்ட பனிநீராலே மணமிக்க கொம்புகளை உடையராய், வெண் கிடை மிதவையர் - வெள்ளிய நெட்டிகளாலே செய்யப் பட்ட தெப்பங்களை உடையராய், நன்கிடைத் தேரினர் - நிற மூட்டப்பட்ட நல்ல நெட்டிகளாலே செய்யப்பட்ட தேர்களை உடையராய், தண்டா உண்டிகை - செலவு தவிராத யானைத் திரளும் குதிரைத்திரளும், சாரிகை மறுத்து - தத்தம் கதியிற் செல்லுதலை ஒழிந்து, ஓர் இயவு உறுத்தர - அந்த ஒரே வழியின்கட் செல்வாரை நெருக்கும்படியாக, ஊர்பு ஊர்பு இடந் திரீஇ - செலுத்திச் செலுத்தி இடங்கள்தோறும் திரிதலானும்;

**(வி - ம்.)** அன்று என்றது - அங்ஙனம் வையையில் வெள்ளம் பெருகி ஊர் ஆரவாரித்த அந்த நாளிலே என்றவாறு. போரின்கண் களிற்று யானைகளைச் சிறப்பாகக் கருதி அணிசெய்து செலுத்துமாறு போல நீராட்டிற்குப் பிடியானைகள் சிறப்புடையனவாகக் கருதி அணிந்து செலுத்தப்பட்டன என்பது கருத்து.

இளையரும் இனியரும் என்றது, இளமையுடைய ஆடவரும் அவர்க் கினியராகிய மகளிரும் என்றவாறு. 'இனியரும் அடுபுனல் செல அவற்றை இழிவர்' எனக் கூட்டுக.

ஈரஅணி என்றது நீராடற்கேற்ற அணி என்றவாறு: அகரம் கெட்டு ஈரணி என நின்றது. இகல் - விளையாட்டுப் போர். நவின்று - விரும்பி. தணி - தண்மையுடைய. துணி - தெளிவு. துணிபுனல் போர்க்கண் ஆக என மாறுக. கண் - இடம். போர்க்கண் - போர்க் களம். மைந்து - விருப்பம். மைந்தினால் திரிய என இயைக்க. தாரர் - தார்ப்படையின் தன்மையுடையராய் என்க. முந்திச் செல்லும் விருப்பமுடையராய் என்றவாறு. கருவி - அவ் விளையாட்டுப் போர்க்கு வேண்டிய படைக்கலம் என்க. கைம்மான் - யானை. கலிமடமா - கலிப்பையும் மென்னடையையும் உடைய குதிரை என்க. எருத்து - பிடரி. நெய் - புழுகுநெய். சிவிறி - நீர்தூவும் குழல்; துருத்தி. நீர் - பனிநீர். கோடு - விலங்குகளின் கொம்பு. அதனகத்தே பனிநீர்

விட்டு அடைத்து அதுகொண்டு விளையாடுவர் என்க. கிடை - நெட்டி. நிறமூட்டப்பட்ட நெட்டியென்பார் 'நன்கிடை' என்றார். தண்டா - தவிராத. சாரிகை - யானை குதிரைகளின் செலவுவகை. உண்டிகை - திரள். ஓரியவு எனற்பாலது ஓரிய என ஈறுகெட்டு நின்றது; ஒருவழி என்க. உறுத்தர - நெருக்க. திரிய என்னும் செயவெனச்சம், திரீஇ எனத் திரிந்து நின்றது.

பிடி செல்லுதலானும் இளையரும் இனியரும் திரிதலானும் என ஏதுப்பொருளாக்குக. இவ் வேதுக்களான் நிகழும் நிகழ்ச்சி மேலே கூறுவர்.

(பரிமே) ௩௰. மைந்துடனே, ௩௭. திரிதலானும் என இயையும்.

௩௪. தூசித்தன்மை - முன்செல்லுதல்.

௩௬. உண்டை என்பது "கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன்" (இறைய - உ. மேற் - ரு) என்புழிப் போலத் திரள் மேலதா 'உண்டிகை' எனத் திரிந்து நின்றது.

௩௮ - ௪௫ : சேரி.......................... ....மருண்டு

(இ - ள்.) சேரி இளையர் செலவு அருநிலையர் - புறச்சேரியில் இளையர் செல்லுதற்கரிய நிலைமையினராக, வலியோர் அல்லார் துறை துறை அயர - மெலியோர் என்போர் புகுத மாட்டாமையாலே துறையைத் துறையை விரும்பாநிற்ப, மெலியர் அல்லார் விருந்து புனல் அயர - வலியவர் புது நீரின்கட் புகுந்து ஆடுதலாலே, சாறும் சேறும் நெய்யும் மலரும் நாறுபு - பத்துத் துவர் முதலாயின ஊறின நீரும் சந்தன முதலியவற்றின் குழம்பும் நறுமண எண்ணெயும் கூடிய பூக்களும் மணக்கும்படி, யாறு வரலாறு நிகழும் - இவ் வையையாறு வருகின்றவாறு நிகழாநிற்கும், புலம்புரி அந்தணர் நாறுபு நிகழும் யாறுகண்டு - வேதத்தை விரும்பும் அந்தணர்கள் இவ்வாறு பல்வேறு மணங்கமழ ஒழுகாநின்ற யாற்றின் தன்மையை உணர்ந்து, விரை மண்ணுக் கலிழை வேறுபடு புனல் என - மகளிரும் மைந்தரும் பூசின மணப்பொருள்களைக் கழுவின அக் கலங்கல் நீரை இது தூய்மையிழந்து மாறுபட்டதென எண்ணி, மருண்டு கலங்கினர் - மருட்சியடைந்து நீராடுதலும் வாய்பூசுதலும் செய்யாதாராய்க் கலக்கமெய்தினர்;

(வி - ம்.) சேரி - புறஞ்சேரி : புறஞ்சேரியின்கட் காதலாற் செல்லும் இளையர் என்க. அருநிலையர் - அரிய நிலைமையினர். வலியோர் அல்லார் - அக் கூட்டத்துட் புகுந்து செல்லுதற்குரிய ஆற்றல் இல்லாதவர் என்க; மெலியோர் என்றவாறு. துறைதுறை - துறையைத் துறையை. அயர - விரும்ப : கூட்டத்துட் புகும் ஆற்றல் உடையார் என்பார் 'மெலியோரல்லார்' என்றார். விருந்துபுனல் - புதுநீர். சாறு - மணநீர். துவரிலும் விரையிலும் ஊறிய நீர். அஃதாவது :— பத்து

வகைப்பட்ட துவரினும் ஐந்துவகை விரையினும் முப்பத்திருவகை ஓமாலிகையினும் ஊறிக் காயப்பட்ட மணநீர் என்க.

பத்துத் துவராவன : "பூவந்தி திரிபலை புணர் கருங்காலி நாவலொடு நாற்பான் மரமே" என்பன.

ஐந்து விரையாவன : கோட்டம் துருக்கம் தகரம் அகில் சந்தனம் என்பன.

முப்பத்திரண்டு ஓமாலிகையாவன : "இலவங்கம் பச்சிலை கச்சோலம் ஏலம், குலவிய நாகணங் கொட்டம் நிலவிய, நாகமதாவரிசி தக்கோலம் நன்னாரி வேகமில் வெண்கோட்டம் மேவுசீர் போகாத கத்தூரி வேரி யிலாமிச்சம் கண்டில் வெண்ணெய் ஓத்தகடு நெல்லி உயர்தான்றி துத்தமொடு வண்ணக்கச் சோலம் அரேணுக மாஞ்சியுடன், எண்ணும் சயிலேக மின்புழுகு - கண்ணுநறும் புன்னை நறுந் தாது புலியுகிர் பூஞ்சரளம், பின்னு தமாலம் பெருவகுளம் - பன்னும் பதுமுகம் நுண்ணேலம் பைங்கொடு வேரி கதிர்நகையா யோமாலிகை" என்னுமிவை.

"பத்துத் துவரினும் ஐந்து விரையினும்
முப்பத் திருவகை யோமாலிகை யினும்
ஊறின நன்னீர் உரைத்தநெய் வாசம்
நாறிருங் கூந்தல்." (சிலப். கூ : எகூ - அ)

என்றார் இளங்கோவடிகளாரும்.

சேறு - சந்தனம் குங்குமம் அலத்தக முதலிய குழம்பு. நெய் - மணமூட்டப்பட்ட நெய். நாறுபு - நாறி. வரலாறு - வரும்விதம். நிகழும்-ஒழுகும். விரைமண்ணுக் கலிழ்வு-மணப்பொருளைக் கழுவின கலங்கல்நீரை. புலம் - வேதம்; அறிவுமாம்.

சகூ - ருக : மாறுமென்......................புனலது செலவு

(இ - ள்.) மாறும் மென்மலரும் - சூடிக் கழித்தமையானே தம் நிறம் மணம் மாறிய மெல்லிய மலரும், தாரும் கோதையும் - மைந்தர் அணிந்த மாலைகளும் மகளிர் அணிந்த மாலைகளும், வேரும் தூரும் காயும் கிழங்கும்-கரையை இடித்து வருதலானே அக் கரைக்கண் உள்ள மரஞ் செடி கொடிகளினுடைய வேர்களும் தூர்களும் காய்களும் கிழங்குகளும் ஆகியவற்றோடு மேலும், பூரிய மாக்கள் உண்பது மண்டி - கீழ்மக்கள் உண்டெஞ்சிய, நார் அரி நறவம் உகுப்ப - பன்னாடையானே வடித்த கள்ளினை உகுத்தலானே அதனையும் மேற்கொண்டு, இவ் விரிபுனல் வரவு நலன் அழிந்து வேறுகின்று எ - இவ் விரிந்த புதுநீரின் வருகை நன்மை கெட்டு மாறுபட்டது என்று அவ் வந்தணரே யன்றிப் பிறரும் நீங்கினர், சேறு ஆடு புனலது செலவு - அந்தக் குழம்பிய புதுநீர் வருகை இத்தன்மைத்து ;

(வி - ம்.) மாறும் - மண முதலிய மாறிய. தார் என்பது ஆடவர் அணியும் மாலையினையும் கோதை என்பது மகளிர் அணியும் மாலையினையும் குறிக்கும். இதனை,

“ தாரும் மாலையும் மயங்கிக் கையற்றுத்
தீராக் காதலிற் றிருமுக நோக்கிக்
கோவலன் கூறும்.” (சிலப். உ : ௩௫ - எ)

எனவரும் சிலப்பதிகாரத்தானும் பிறுண்டும் இந் நூலினும் காண்க.

வேர் முதலியன வெள்ளத்தானே அடித்துக்கொண்டு வரப் பட்டன. பூரியமாக்கள் - கீழ்மக்கள். மண்டி - மிக்கு. அடியின்கண் உறைந்த கலங்கற் கள்ளுமாம். உண்பது மண்டி - உண்பதன்கண் மிக்க (எஞ்சியமண்டி) என்க. நார் - பன்னாடை. நறவம் - கள். நலன் - தூய்மை.

எனப் பிறரும் நீங்கினர் என்பது குறிப்பாற் கொள்ளப்பட்டது.

ருஉ - சுo : வரையழி.......................தண்ணம் புனல்

(இ - ள்.) வரை அழி வால் அருவி (வா?) தாலாட்ட - எல்லை கடந்து இழியாநின்ற வெள்ளிய அருவி தாலாட்டா நிற்பவும், கரை அழி வால் அருவிக் கால் பாராட்ட - தடையின்றிச் செல்லும் தூயதும் உருவமற்றதும் ஆகிய தென்றற் காற்றுப் பாராட்டாநிற்பவும், இரவில் புணர்ந்தோர் - இரவுக் குறிக்கண் தலைவியைத் தலைப்பட்டுக் கூடிய தலைவர், இடைமுலை அல்கல் - அத் தலைவியருடைய முலையிடையிலே கிடந்து இன்றுயில் கொள்ளுதற்கு, பூந்தாரான் குன்று புரைவது எனா - உருளிணர்க் கடப்பம் பூமாலையினையுடைய முருகனுடைய குன்றாகிய திருப்பரங்குன்றம் பொருந்துவதாம் என்று, கூடார்க்கு உரையொடு - அத் திருப்பரங்குன்றிற்குச் செல்லாத மாந்தர்க்குக் கூறுதற்றொழிலோடே, இழிந்து ஊராய் ஊரிடையோடி - ஒழுகிப் பரந்து மதுரையின் தெருக்களின் ஊடே ஓடி, சலப்படையான் - வஞ்சனைசெய்யும் மலர்க்கணையினையுடைய காமவேள், இரவின் தாக்கியது எல்லாம்-இரவின்கண் மகளிரையும் மைந்தரையும் மோதிய மோதல்களை எல்லாம், புலப்பட மகளிர்கள் ஊடி அறுத்தெறிந்த மாலை முதலியவற்றை வாரிக் கொணருமாற்றால் யாவருக்கும் புலப்படும்படி செய்து, புன் புலரியின் - புற்கென்ற வைகறைப் பொழுதிலே, நிலப்பட மலர்ந்தன்று - தெருக்கள் வறுநிலமாம்படி வரன்றிப் பரந்தது, தமிழ் வையைத் தண்ணம் புனல் - தமிழையுடைய வையை யாற்றின்கண் வந்த குளிர்ந்த அழகிய புதுநீர் இத்தன்மைத்து என அந் நீரின்கண் ஆடிய தலைவன் தன் காதற்பரத்தைக்கு விரிவாக விளம்பினன் ;

(வி - ம்.) வரை - எல்லை. வால் - வெள்ளிய. 'வாலருவிபா தாலாட்ட' என்றும் பாடம். இதனைக் கொண்டு அருவி யிசையாகிய பாட்டுத் தாலாட்டாநிற்ப எனினுமாம். கரை - தடை. அருவி - உருவமற்றது. கால் - காற்று. இரவில் - இரவுக்குறிக்கண். முலை யிடை எனற்பாலது, இடைமுலை என முன்பின்னாக மாறிநின்றது. அல்கல் - கிடத்தல். புரைவது - பொருந்துவது. அல்கலுக்குக் குன்று புரைவதாம் என்க. பூந்தாரான் - முருகப்பெருமான். குன்று - திருப்பரங்குன்று. கூடார் - ஆண்டுச் செல்லாதார். உரை - உரைத்தற் றொழில். உராய் - பரவி. சலப்படையான் - மதவேள் - சலம்: வஞ்சனை. புலப்பட - யாவர்க்கும் தோன்றும்படி. தெருவின்கட் கிடக்கும் மாலை முதலியவற்றை வரன்றிக் கொணருமாற்றால் சலப் படையான் அவ் விரவிற்றாக்கியதெல்லாம் யாவர்க்கும் புலப்பட என விரித்தோதுக. புன்னம்புலரி - புற்கென்ற வைகறை. அம் - சாரியை. நிலப்பட - வறுநிலமாக. மலர்ந்தது - பரவி விரிந்தது.

"நிறைகடன் முகந்துராய் என்பது முதல்.........தமிழ்வையைத் தண்ணம்புனல்" என்பது முடிய ஒரு தலைவன் வையையின் புது நீரின் கண் இற்பரத்தையுடன் நீராடியவன் தன் காதற்பரத்தையின்பால் தழையைக் கையுறையாகக் காட்டிக் கூறுவானது கூற்றாகக் கருதுக.

இங்ஙனம் கூறுபவன் "வையைப் புதுப்புனல் நகையமர் காதலரை நாளணி கூட்டும் வகைசாலும்" எனவும், "விருப்பொன்றுபட்டவர் உளநிறையுடைத்து" எனவும், "ஏரணி அணியின் இளையரும் இனியரும் ஈரணி அணியின் இகன்மிக நவின்று" எனவும், "இரவிற் புணர்ந்தோர் இடைமுலையல்கல் புரைவது பூந்தாரான் குன்று" எனவும் அவன் கூறியவற்றை இவன் பிற மகளிரொடு இங்ஙன மெல்லாம் நீராடிவந்து கூறினான் என எண்ணிக் காதற்பரத்தை புலந்து பின்வருமாறு கூறுகின்றாள் என்க.

(பரிமே.) (இதுகாறும்) இற்பரத்தையுடன் நீராடிய தலைமகன் காதற்பரத்தைக்குக் கூறியது.

நிசு. சொல்லுதற் றொழிலோடும் இழிந்து போந்து மதுரையில் தெருவின்கண் ஓடி வஞ்சனை செய்யும் படையான் இரவிற் செய்த தெல்லாம் ஊர்காப்பார்க்குப் புலப்பட நின்று,

சுக - எo : விளியா.........................வையை வரவு

(இ - ள்.) விளியா விருந்து - அழைக்கப்படாத விருந்தினா ளுகச் செல்லும் நீ, விழுவார்க்குக் கொய்தோய் தளிர் - நின்னை விரும்பும் பிற மகளிர்க்கே இத் தளிரைக் கொய்தனை (எனக்குக் கொய்தாயல்லை எனக் காதற்பரத்தை கூற), தாம் அறிந்தாய் இவை - அதுகேட்ட தலைவன் நீ நன்கு அறிந்துகொண்டாய் இவைதாம் பிற மகளிர்க்குக் கொய்தவையே ஆகும் உண்மையே! என்றான், பணிபு ஒசி (அசி?) பண்ப - அதுகேட்ட காதற் பரத்தை பணிமொழி கூறாநிற்பாயேனும் முறிந்த அன்பினை உடையோனே, இனி களவு எய்தும் - இச் செயலானே இப்பொழுது நினது களவொழுக்கம் எனக்குப் புலப்படா

நின்றது, பண்டு எல்லாம் - முன்னர் நீ எனக்குக் கொய்து கொணர்ந்தபோதெல்லாம் விரைவில் வருதலால் தளிர் உருவம் துவள்வதில்லையே; நனி உருவத் துவள் கண்டை என்னோ - இத் தளிர் மிக உருவந் துவண்டிருத்தலைப் பார் இதற்குக் காரணம் நீ இது பிறள் ஒருத்திக்குக் கொய்துசென்று அவளால் மறுக்கப்பட்டமையால் காலம் நீட்டித்ததலேயாம் அஃதன்றி வேறு என்னும் கூறுக, நின் மார்பில் நார்வாடக் கொய்ததும் வாயாளோ - இனி அப் புதியவள்தான் நினது மார்பின்கண் அணிந்த மாலை வாடும்படி நெடிது நின்று இத் தளிரைக் கொய்ததற்கேனும் நினக்கு நேர்ந்திலளோ, கொய்தழை கைபற்றிச் செய்ததும் வாயாளோ-இங்ஙனம் கொய்யப்பட்ட இந் தழையைக் கையுறையாகக்கொண்டு சென்று நீ அவளடியில் வீழ்ந்து தாழ்ந்திருப்பாயே அத் தாழ்ச்சி கருதியேனும் அவள் நினக்கு நேர்ந்திலளோ !, செப்பு - ஏனோ விழிக்கின்றாய் சொல் என்றாளாக, வையை வரவு காமர்ப் பெருக்கு அன்றோ - அது கேட்ட தலைவன் வையையின்கட் புதுப்புனல் வருகை அழகிய பெருக்குடைத்தன்றோ அதனால், புனை புணை ஏறத் தாழ்த்தது- கைசெய்யப்பட்ட புணையின்கண் ஏறி அதனைக் கடத்தற்குப் பொழுது தாழ்ந்தது ஆதலாலே, நீரில் துவண்டது - அவ் வையைநீர் காரணமாக இவை துவண்டன, சேஎய் குன்றம் - யான் முருகப்பெருமானுடைய திருப்பரங்குன்றத்தின்மேல் ஆணையாக இது கூறுகின்றேன் என்றான்.

(வி - ம்.) விளியா விருந்து - அழைக்கப்படாத விருந்தினன். தலைவன் மற்றொருத்தியாலே அழைக்கப்படாது வலிந்து தானே போயினன் என்பது தோன்ற 'விளியா விருந்தாகிய நீ' என்றாள் விழுவோர் அங்ஙனம் நீ வலிந்து சென்றுழி நின்னை விரும்புவோர் என்றவாறு. செறல் பற்றிப் பன்மை கூறினள். பின்னர் வாயாளோ என ஒருமையாற் கூறுதல் உணர்க.

எனக்குக் கொய்தாயல்லை என்பது குறிப்பெச்சம். இவைதாம் அறிந்தாய் - என்றது, குறிப்புமொழி நீ அறிந்திலை என்னும் பொருளது. பணியும் எனற்பால உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. பணிகின்றாயே தவிர அன்பில்லாதாய் என்பது கருத்து. பரிமேலழகர் 'பணிபொசி பண்ப' எனப் பாடங்கொண்டனர் என்பது அவருரையானே உணரலாம். இனி 'ஹஸி' என்னும் வடமொழித் திரிபாகக்கொண்டு அசிபண்ப என்பதற்கு நகத்தகுந்த அன்புடையோனே எனினுமாம். அசித்தல் - நகுதல் என்னும் பொருட்டாதல் "புள்ளெலாம் அசிப்ப போன்று இருவிசும்பு அடைந்த வென்பவே" (காந்தருவ - கூஎ) எனவரும் சீவகசிந்தாமணியினும் காண்க. 'பண்டெல்லாம் துவள் கண்டிலம் இன்று துவள் கண்டை' என்க. என்னோ - இதற்குக் காரணம் யாது. இனி - இப்பொழுது. கொய்ததன் பொருட்டேனும் நேர்ந்திலளோ. செய்தது - வணங்கியது. செப்பு - சொல்க.

புணைபுணை - கட்டுமரம். தாழ்த்ததை: ஐகாரம் பகுதிப்பொருளது.

வையை வரவு காமர்ப் பெருக்கன்றே என்ற தலைவன் கூற்றினை வையைப் பெருக்கம் காமப் பெருக்கை ஒத்தது என்றானாகக் கருதி மேலே காதற்பரத்தை கூறுகின்றாள்.

(பரிமே.) சுக. இத் தளிர் கொய்தது பழையேனாதலான் நீ இகழாநின்ற எனக்கு அன்று எப்பொழுதும் புதியராக விரும்பும் மகளிர்க்குக் கொய்தாய் என.

சுஉ மேல் தலைமகன்: நீ அறிந்தாய் அவைதாம் இவை; மெய் யென்றான்; என்றது, நீ அறிந்திலை; இத் தளிர்கள் அத் தன்மைய அல்லவென்னும் குறிப்பிற்று.

சுரு. பண்டு எனக்கு நீ கொய்துழியெல்லாம் கடிதின் வருதலால் தளிர் உருவத் துவட்சியுண்டோ?

சுசு. இஃது அவட்குக் கொய்து சென்று அவளால் மறுக்கப் பட்டமையால் துவண்டது பாராய்.

எக - எச: ஆமாம்........................பிழை

(இ - ள்.) ஆம்ஆம் அது ஒக்கும் - ஆமாம் நீ சொல்லு கின்றதும் பொருந்தும், காதல் அம் காமம் - காதலையுடைய அழகிய காமந்தானும், ஒருக்க ஒரு தன்மை நிற்குமோ-ஒருமிக்க ஒரே தன்மையுடையதாய் இருப்பதுண்டோ, ஒல்லைச் சுருக்கமும் ஆக்கமும் - சிலரிடத்து விரைந்து சுருங்குதலானும் சிலரிடத்து விரைந்து பெருகுதலானும், வையைப் பெருக்கு அன்றே - இவ் வையையாற்றினது நீர்ப்பெருக்கினை ஒப்பதாகின்றது, பெற்றாய் பிழை சூளுறல் - நீ வேண்டாது சூளுற்றுப் பிழையுடையை யாயினாய் இனிச் [illegible] -கொள்

(வி - ம்.) தலைவன் கூற்றை இகழ்வாள் ஆம் ஆம் என அடுக்கிக் கூறினாள். 'அது,' என்றது தலைவன் 'வையை வரவு காமர்ப்பெருக்கு' என்றதனை. ஒருக்க - ஒருமிக்க, என்றது தலைவன் தலைவியர்பால் ஒருவிதமாக என்றவாறு. அதற்குச் சான்று நீயே நினது காமம் அங்ஙனமே சுருங்கியது என்பது குறிப்பு. சுருக்கம் - வற்றுதல். ஆக்கம் - பெருக்கம். இவ் விரு பொதுத்தன்மையானும் காமம் நீர்ப் பெருக்கையே ஒக்கும்; நீ இப்பொழுது பொய்யே கூறுகின்றாய் என்பாள், 'சூளுறல் பெற்றாய் பிழை' என்றாள். சூளுறல் - சூளுறாதே கொள்.

(பரிமே.) எக. காதற்பரத்தை அவள் காமப் பெருக்கம் வையை வரவு ஒக்கும் என்றானாக உட்கொண்டு பின்னும் புலந்து கூறுவாள்.

எரு - எஅ: அருகுபதி. வை

(இ - ள்.) பொழி காரில் - முகில்கள் பொழிகின்ற இக் கார்ப்பருவத்திலே, அருகு பதி ஆக-எம்முடைய இருக்கை நின்

இருக்கைக்கு அணித்தாக இருக்கவேயும், அம்பியில் தாழ்ப் பிக்கும் - நின்னைப் புணை காரணமாகக் காலந்தாழ்ப்பிக்கும், இன இளவேனில் குருகு இரைதேரக் கிடக்கும் - இனிய இளவேனிற் பருவத்திலே நாரைகள் தம் இரையை ஆராயும் அளவிற்ருய்ச் சுருங்கிக்கிடக்கும், இது அன்ரே வையை - இத் தன்மை யுடையதன்ரே இவ் வையையாறும் இதனுல், நின்............... வையை வயமாக வை - நின்னுடைய (காமமும்) இவ் வையை யின் வழிப்பட்டதே என்று நினைத்திடுக;

(வி - ம்.) பதி-உறைவிடம். அருகு-அண்மையிடம். இவ்வையை கார்ப்பருவத்தே புணைதேடும்படி பெருகும். இளவேனிலில் இரைதேரும் படி வற்றிக்கிடக்கும். நினது காமமும் ஒருகாலத்தே அங்ஙனம் பெருகி ஒருகாலத்தே வற்றிவிடுகின்றது, அதனுல் நீ சொன்னது ஒக்கும் என்று அசதியாடினளாகக் கருதுக. வை - மனத்தில்வை.

(பரிமே.) எடு - அ. மேல் வையைப் பெருக்கன்ரே என்ற துணையல்லது அதன் இயல்பு கூறிற்றிலள்; கூருதாள் இதனுல் அதன் இயல்பு கூறி இவ் வொப்புமை யுண்மையான் அதன்கண் அவளோடு நுகர்ந்த நுகர்ச்சி இன்னும் ஒழிதற்பாற்றன்றென்ருளாம் (?) (இக் கருத்து விளக்கமாகவில்லை).

எகூ - அசு: செல்யாற்று.....................காத்திவர

(இ - ள்.) செல்யாற்றுத் தீம்புனலில் செல் மரம்போல - தனக்கென இயக்கமின்றி இனிய நீரின்கண் அந்நீர் இயக்கிய வழியே இயங்கும் மரம்போல, வவ்வு வல்லார் - நின்னைக் கவர்ந்துகொள்ளுதலில் வல்லவராகிய மகளிர் இயக்கிய வழியே இயங்கி, புணை ஆகிய மார்பினை - அம் மகளிர் நீராடுதற்கண் தெப்பமாகிய மார்பினையும் உடையையாய், என்றும் பணியாய் இரவெல்லாம் வைகினை - அவ்வாறிருத்தற்கு ஒருசிறிதும் அஞ்சாமலும் இராப்பொழுதெல்லாம் அவளோடு தங்கா நின்றனை, வையை உடைந்த மடை அடைத்தக் கண்ணும் - இவ் வையையாற்றின்கண் உடைந்தொழிந்த மடையை அடைத்தவிடத்தும், பின்னும் மலிரும் பிசிர்போல - மீண்டும் ஒழுகும் ஊற்றுநீர்போல, முன் ஆற்றிய துன்பு அவிய நீ அடைந்த கண்ணும் - முன்னே வெதுப்பிய துன்பம் நீங்கும்படி நீ அவர்பால் தங்கியிருந்தாய் எனினும், பனித்துப் பனிவாரும் கண்ணவர் நெஞ்சம் கனற்றுபு - நினது பிரிவாலே நீர்பில்கி ஒழுகும் கண்ணையுடைய அம் மகளிர் நெஞ்சத்தைப் பின்னரும் வெதும்பச்செய்து, வரவு காத்தி - இங்ஙனம் எம்மிடத்தே வருதலை இனித் தவிர்வாயாக (என்று காதற்பரத்தை கூறினள்);

(வி - ம்.) செல்யாறு: வினைத்தொகை. தீம்புனல்: இயற்கை அடைபுணர்ந்தது. நுமக்கு ஆடுதற்கு இனிய புனல் என்ருள் எனினு

மாம். செல்மரம் - நீரியக்கியவழிச் செல்லும் மரம் என்க. 'நீர் வழிப்படும் புணைபோல்' என்றார் பிறரும். வவ்வு - வவ்வுதற்றொழில். புணை - தெப்பம். என்னும் - சிறிதும். பனியாய் - அஞ்சாதாய்.

அம் மகளிர் துன்பத்தை மாற்ற நீ அவரொடு தங்கினை எனினும் நீ ஈண்டு வருதலானே அவர் கண் பனிவார்ந்து வெதும்பும். அங்ஙனம் வெதும்பச் செய்து எம்பால் வருதலைப் பரிகரிப்பாயாக என்க. கனற்றுபு - கனற்றி; வெதுப்பி. வரவு காத்தி என்றது, வருதலைப் பரிகரி என்றவாறு. சினம் காக்க என்புழிப்போல. அதுகேட்ட தலைவன் மேலே கூறுகின்றான்.

(பரிமே.) மேல் தலைமகன்.

அள - கூக : நல்லாள்......................யாதெனை

(இ - ள்.) நான் குளித்த பைந்தடத்து - ஏடி நான் ஒரு பசிய குளத்தின்கண் நீராடினேனாக, நல்லாள் கரைநிற்ப - அக் குளத்தின் கரையிலே ஒருத்தி நிற்ப, நில்லாள் திரை மூழ்கி நீங்கி எழுந்து - அங்ஙனம் நின்றவள் தன் அறியாமையாலே கரைக்கண் நில்லாதவளாய் அக் குளத்திற்பாய்ந்து ஆழ்ந்த இடத்தில் அழுந்தி அலையினாலே மூழ்கடிக்கப்பட்டுப் பின்னர் அவ்விடத்தினின்றும் நீங்கி எழுந்து, அல்லா என்மேல் விழுந்தாளை - மயங்கி என்மேல் விழுந்தாள் அங்ஙனம் விழுந்த வளை, யான் எழுந்து எய்தி ஏற்றுக்கொள்ளா அளவை - குளித்துக்கொண்டிருந்த யான் எழுந்து அவளை அணுகி ஏற்றுக் கொள்ளுமுன்பே, எழும் தேற்றாள் - தானே எழுந்தாள் அதனால் அவள் காம நுகர்ச்சியறியாத இளமையுடையாள் என்ப துணர்க. கோதையின் உள் அழுத்தியாள் எவளோ - அவளை யன்றி மாலைபோல என் மார்பினுள்ளே அழுந்த முயங்கியவள் யாவளோ!, தோய்ந்தது யாது என - அவளோடு யான் ஆடிய யாறுதான் யாது கூறுக என்று கூறுநிற்ப (மேலே காதற் பரத்தை கூறுகின்றாள்);

(வி - ம்.) நல்லாள் என்றது, ஒருத்தி என்னும் பொருட்டாய் நின்றது. யாரோ ஒருத்தி என்றவாறு. யான் வையையாற்றின்கண் நீராடவும் இல்லை என்பான், நான் குளித்த பைந்தடத்து என்றான். பைந்தடம் - பசிய குளம். தானே நீங்கி எழுந்து என்க. அல்லாந்து எனற்பாலது ஈறுகெட்டு அல்லா என நின்றது. அல்லாந்து-அலமந்து: சுழன்று, மயங்கி என்றபடி. "ஆக்கமிழந்தேம் என்று அல்லாவார்" (குறள் - ருகூ௩) "அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" (உரி - கஙு) என்பது தொல்காப்பியம்.

யான் எழுந்து ஏற்றுக்கொள்ளா அளவை என மாறுக. எழுந்தாள் எனற்பாலது எழும் என எதிர்காலச் சொல்லாய் மயங்கிற்று. கோதையின் - மாலைபோல. 'கோதையின் உள் அழுத்தியாள் எவளோ' என்றதற்குக் கோதை என்பதனை முன்னிலைப் பெயராகக் கொண்டு

'கோதைபோன்ற நின்னைப்போன்று என் மார்பினகத்து முயங்கப் பட்டவள் பிறள் யாவளோ' எனினுமாம். என்னால் நீ தழுவப் படுமாறு 'தழுவப்பட்டாள் பிறள் எவளோ' என்றவாறு. யாது - எந்தயாறு.

(பரிமே.) அஎ. அவள் பேதைமையால் கரையில் நில்லாது,

கூ0. (தேற்றாள்) காமநுகர்ச்சி அறியும் பருவத்தள் அல்லள். (அறிபவளாயின் யான் ஏற்றுக்கொள்ளும்படி வாளா கிடப்பள் என்பது கருத்து.)

கூஉ - கூரு : தேறி.............................யாறு

(இ - ள்.) தேறித் தெரிய உணர் நீ - அதனை யான் கூறுவேன் கூறிய பின்னர் நீயே தெளிந்து நன்கு உணர்ந்து கொள், பிறிதும் ஓர் யாறு உண்டோ - அங்ஙனம் நீ அவரோடு ஆடுதற்கு ஏற்ற யாறு மற்றொன்றும் உண்டோ?, இவ் வையை யாறு - நீ ஆடியது இந்த வையை யாறேதான்;

(வி - ம்.) யான் கூறுவதனால் தேறிப் பின்னும் நன்கு உணர் என்க. அறியாதாய்போலக் கூறுவாய் என்பாள் பிறிதுமோர் யாறுண்டோ என வினவினாள்.

வையையைப் பற்றியே உரையாடல் நிகழ்வதுபற்றி இவ் வையை என அண்மைச் சுட்டாற் சுட்டினாள்.

கூச - கூடு : இவ்வையை.......................குன்று

(இ - ள்.) இவ் வையை யாறு என்ற மாறு என்னை-அது கேட்ட தலைவன் யான் குளத்திற் குளித்தேனாகவும் நீ இவ் வையையாற்றிலே தான் ஆடினை என்று கூறிய மாறுபாடுதான் என் கொலோ, கையால் தண்பரங்குன்று தலைதொட்டேன் - பின்னும் நீ ஐயுறுவாய் என்னின் முன்புபோலன்றிக் குளிர்ந்த திருப்பரங்குன்றின் தலையை என் கையாலே தொட்டுக் கூறு கின்றேன் (என்றான்);

(வி - ம்.) இங்ஙனமாக நிகழ்ந்தவற்றையெல்லாம் அறிந்த தலைமகள் மேல் நிகழ்ந்த இருவர் கூற்றையும் கொண்டு கூறி மேலுங் கூறுகின்றாள்.

(பரிமே.) என்று பின்னும் சூளுற்றான் என்று இவ் விருவர் கூற்றையும் கொண்டு (தலைவி) கூறினாள்.

காதற்பரத்தையை அவள் இல்லின் முதுபெண்டிர் கழறியவாறும், வாயில்கள் ஊடல் உணர்த்தியவாறும் அவளைத் தலைமகன் புணர்ந்த வாறும் விறலிக்குத் தலைமகள் கூறுகின்றாள்.

(தலைவனால் ஊடல் தீர்க்கும்படி விடுக்கப்பட்ட விறலிக்குத் தலைமகனுக்கும் காதற்பரத்தைக்கும் நிகழ்ந்த உரையாடலை எல்லாம்

அறிந்த தலைமகள் அவர் கூற்றாகவே கூறி மேலும் விறலிக்குக் கூறு கின்றாள் என்பது கருத்து.)

௬௬ - ௧0௪ : சினவல்........................கூடுப

(இ - ள்.) (௧0௧) இல்லவர் - இங்ஙனம் ஊடிநின்ற காதற பரத்தையின் இல்லின்கண்ணுள்ள முதுபெண்டிர் அவளை நோக்கி, சினவல் - ஏடி நீ இவ்வாறு வெகுளாதேகொள், நின் உண் கண் சிவப்பு அஞ்சுவாற்கு - தலைவனே நினது மையுண்ட கண் சினத்தாலே சிவத்தலுக்குப் பெரிதும் அஞ்சாநின்றான் அங்ஙனம் அஞ்சுபவனிடத்து, துனி நீங்கி ஆடல் தொடங்கு - நீ ஊடல் தவிர்ந்து அவனோடு விளையாடுதலைத் தொடங்கு வாயாக, துனி நனி கன்றிடின் - அங்ஙனமன்றி நீ செவ்வியுணராது ஊடலின்கண் மிகுவாயாயின், காமங் கெடும் - அவன் காமவின்பம் பதனழிந்து கெட்டொழியும், மகள் - நீயோ பெண்மகள், இவன் அல்லா நெஞ்சம் உறப் பூட்டக் காய்ந்து வல் இருள் நீயல் - இத் தலைவனுடைய சுழற்சியையுடைய நெஞ்சம் இறுகப்பூட்டிக் கொள்ளும்படி சினந்து (இவன் நின்னைப் பிரிந்து போதல் ஒருதலை) பின்னர் இவனைத் தேடிச் செறிந்த இருளையுடைய இரவின்கண் செல்லுதல் வேண்டும் அங்ஙனம் செல்லாதொழி, அது பிழை ஆகும் என - அவ்வாறு இருட்கண் செல்லுதல் இடனறிந்தாடி இனிதின் உணரும் ஒழுக்கத்திற்குப் பிழையாகும் என்று கூறித்தேற்றுதலானும், வல்லவர் - ஊடலுணர்த்துதலிலே வல்ல வாயில்களும், இரந்து பரந்து உழந்து ஆட ஊடல் உணர்த்தர - இரந்து கூறியும் மிக்குக் கூறியும் வருந்திக் கூறியும் அவ் விருவரும் தம்முட் கூடும்படி ஊடலை உணர்த்துதலானும், நல்லாய் - விறலியே, களிப்பர் குளிப்பர் காமம் கொடிவிட துனிப்ப அளிப்ப - இருவரும் கள்ளுண்டு களியாநிற்பர் வையையின்கண் நீராடா நிற்பர் காமவின்பம் தளிர்க்கும்படி ஊடிக்கொள்வர் ஊடல் சிறிது மிக்கவுடன் அது தீர்ந்து கூடாநிற்பர். அங்கங்கே சென்று விளையாடா நிற்பர்;

(வி - ம்.) சினவல் - வெகுளாதே. கன்றிடில் - முதிருமாயின். காமம் - காமவின்பம். நீ மகளாதலானே இருளின்கண் நீயல் என இயைத்துக் கொள்க. அல்லாக்கும் நெஞ்சம் என்க. உறப்பூட்ட - வெறுக்கும்படி என்றவாறு. அது - அங்ஙனம் ஊடுதல்.

இவ்வாறு ஊடுவாயானால் அவன் நின்னை அகன்று போவான்; பின்னர் அவனைத் தேடி நீ இருளிலே செல்லும்படி நேரும் அவ்வாறு நிகழும்படி செய்து கொள்ளாதே என்பது கருத்து.

இல்லவர் - இல்லிலுள்ள முதுபெண்டிர். பரந்து என்றது, மேற் சென்றிடித்துக் கூறியும் என்றவாறு. ஆட - கூடும்படி. நல்லாய்

என்றது, விறலியை விளித்தவாறு. காமங்கொடிவிட என்றதற்கு அதற்கு இன்பமுண்டாக என்பர் பரிமேலழகர்.

(பரிமே.) கஅ: அதற்குக் காரணமாகிய மகள் இவன் சொல்லிய பேதைப் பருவத்தாள்.

கக. அல்லாப்பை இறுகப்பூட்டுதலால்.

க0ங. மதுவாற் களிப்பார்கள்.

க0ச. 'துனிப்ப' எனப் பன்மையாற் கூறிற்று உணர்ப்பு வயின் வாரா வூடலே நோக்கி. (உணர்ப்பு வயின் வாராவூடல் தோன்றின் புலத்தல்தானே கிழவற்கும் வரையார் என்பவாகலின், ஈண்டு இருவரும் ஊடிக்கொள்வர் என்பதுபடப் பன்மையாற் கூறினள் என்பது கருத்து.)

இதுகாறும் விறலிக்குக் கூறிய தலைவி இனி வையைக்குக் கூறு வாளாய் அவ் விறலி கேட்பக் கூறுகின்றாள்.

க0டு - க0சு : கூடுவார்......................நினக்கு

(இ - ள்.) வையை - வையையாறே, ஆடுவார் நெஞ்சத்து அலர்ந்து அமைந்த காமம் - நின்னிடத்தே நீராடுவாரின் நெஞ்சின்கண்ணே பெருகிப் பொருந்திய இத்தகைய காமத்தை உண்டாக்கும் தன்மை, நினக்கு வாடற்க - உன்பால் என் றென்றும் குறையாதாகுக;

(வி - ம்.) இவ்வாறு வையையை வாழ்த்துவாள்போலத் தனது நெஞ்சினிடத்தே உள்ள ஊடன் மிகுதியை விறலிக்குக் காட்டித் தலைவனுடைய பரத்தமையை நன்கு அவட்குணர்த்தி வாயின் மறுத்த வாறுதல் உணர்க.

என்பது.................வாயின் மறுத்தது

(இ - ள்.) இப் பாடல் வையையாற்றின்கண் புதுப்புனல் வந்துழித் தலைவன் இற்பரத்தையுடன் நீராடினன் என்பதனைக் காதற்பரத்தை கேட்டுத் தனக்குத் தழை கொணர்ந்த அத் தலைவனைப் புலந்தாள்; அவளை வாயில்களாவார் ஊடலுணர்த்த அவளைக் கூடினன் தலைவன். இச்செய்தி அனைத்தையும் தலைவி அறிந்து ஊடியிருந்தாள்; அவள் ஊடல்தீர்க்கும் பொருட்டுத் தலைவன் விறலியைத் தூது விட்டான். அவ் விறலிக்குத் தலைவி தான் அறிந்தன வெல்லாங் கூறித் தலைவன் பரத்தமையைப் புலப்படுத்தி வையையை வாழ்த்துமாற்றால் தனது ஊடன்மிகுதியை விளக்கி வாயின்மறுத்தபடியாம்.

# ஏழாம் பாடல்

## வையை

### பொருட் சுருக்கம்

தலைவி தலைவனோடு நீராடினமை கேட்ட செவிலி மகிழ்ந்து தோழியை நோக்கி நீவிர் ஆடிய நீராட்டின்பத்தை எனக்குக் கூறுக என்றாள். அச்செவிலிக்குத் தோழி பின்வருமாறு கூறுகின்றாள்.

**க - கூ :** முகில்கள் கடல் வற்ற நீரை முகந்து கொணர்ந்து பெரிதும் மழை பொழிந்தன ; ஆதலால் வையை யாற்றில் நீர் பெருகி நாடும் உயிரும் ஆக்கமுறும்படி வந்தது.

**கக - உஉ :** அவ் வெள்ளம் உதிர்ந்த பூக்களை வாரிக் கொண்டும், மரங்களை வேரோடு அகழ்ந்தும், பள்ளங்களை நிரப்பியும், அணைகளை உடைத்துக் கொண்டும் வந்தது ; அந் நீர் பலவேறு மணப் பொருள்களை உள்ளடக்கிக் கொண்டு புதிய நறுமணங் கமழாநின்றது.

**உரு - ருக :** மேலும் அவ் வெள்ளம் ஓடையிலுள்ள மலர்களை முழுகச்செய்தது ; இளமகளிர்கள் மணலில் எழுதிய பாவைகளை அழித்தலாலே அவர்கள் அழுதனர்; ஒருபக்கத்தே முற்றாத நெல்லினோடும அரிந்த நெற்கதிர்ச் சூட்டினிடத்தும் வெள்ளம் புகுந்தது என்று துடியை முழக்காநின்றனர் ; ஒரு சார் ஊரைக் கடல் சுற்றியது போலும் என ஆரவாரித்தனர்; சிலர் முகில்கள் ஓட்டையாயின என்றார் ; சிலர் பாக்கத்தை வெள்ளம் மூழ்குவித்தது என்றனர் ; சிலர் சேரியை நீர் கொண்டது என்றனர் ; இவ்வாறு பலரும் பற்பல கூறும்படி வெள்ளம் தலைவரது ஆசை வெள்ளம்போல் பெருகிப் பரவியது; உழவர்கள் தம் சுற்றத்தாரோடு தம் தொழிலைச் செய்ய அவ் வெள்ளத்தினூடே சென்றனர்.

**சo - ருக :** மேலும் அந்நீர் சோலைகளில் பரந்தது; மகளிர் காதில் தளிரைச் செருகியது ; மைந்தர் கண்ணியைப் பறித்தது ; மகளிர் அணிகலன்களையும் கவர்ந்தது ; மைந்தர் அணிகலன்களையும் கவர்ந்தது ; அப்பொழுது அவ் வையை யாற்றின்கண் மதுரை மகளிர் பலரும் புகுந்து ஆடாநின்றனர்.

கூ0 - எகூ : அந் நீரின்கண் ஆடிய தலைவி தன்மெய்யின் குளிர் நீங்கும் பொருட்டு வெப்பமுடைய கள்ளை ஏந்தினாள்; அப்பொழுது அவள் கண்கள் கறுத்திருந்தன; அக் கள்ளைப் பருகிய பின்னர்ச் சிவந்தன; சிவந்த அக் கண்ணின் எழில் கண்ட தலைவன் அவற்றைப் பாராட்டிப் பாடினான்; அத் தலைவனோடு அளவளாவக் கருதி மற்றொருத்தி துன்பமுற்றாள்; அவள் கருத்தை அறிந்த தலைவன் இதனைத் தலைவி அறியின் என்னுமோ என்று நடுங்கித் தலைவியின்பாற் சென்றான்; இந் நிகழ்ச்சியை அறிந்த தலைவி தான் அணிந்திருந்த மாலையை அறுத்தெறிந்து மேலும் ஊடினாள்; அவள் கண்கள் பின்னும் சிவந்தன; அதுகண்ட தலைவன் அவளடிகளில் வீழ்ந்து வணங்கினான்; அதனாலும் தலைவி ஊடல் தீராது அவன் தலையில் உதைத்து மேலும் சினந்தாள்.

எஎ - அகூ : அப்பொழுது வையையின்கண் யாழும் மிடற்றுப்பாடலும் இயைந்து ஒலித்தன; குழல்கள் ஒலித்தன; முழவு முழங்கின; தலைக்கோல் மகளிரும் பாணரும் ஆடா நின்றனர்; இம் முழக்கத்தோடு நீரோட்டத்தா லுண்டாய முழக்கமும் சேர்ந்து இடியோடுசேர்ந்த முகில் முழக்கத்தை ஒத்திருந்தன; வையையே! யாம் இன்று நின்பால் ஆடி இன்புற்றாற்போல என்றும் இன்புற்று நின்னைப் பாராட்டி மகிழ்வோமாக.

திரையிரும் பனிப்பௌவம் செவ்விதா வறமுகந்
துரவுரு முடன்றார்ப்ப ஊர்பொறை கொள்ளாது
கரையுடை குளமெனக் கழன்றுவான் வயிறழிபு
வரைவரை தொடுத்த வயங்குவெள் ளருவி
இரவிருள் பகலாக இடமரிது செலவென்னாது
வலனிரங்கு முரசிற் றென்னவ ருள்ளிய
நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன
பெயலாற் பொலிந்து பெரும்புனல் பலநந்த
நலனந்த நாடணி நந்தப் புலனந்த
வந்தன்று வையைப் புனல்;
நளியிருஞ் சோலை நரந்தந் தாஅய்
ஒளிர்சினை வேங்கை விரிந்தவிண ருதிரலோடு
துளியி னுழந்த தோய்வருஞ் சிமைதொறும்
வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்டு
உயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி

உழவர் களிதூங்க முழவு பணைமுரல
ஆட லறியா அரிவை போலவும்
ஊட லறியா உவகையள் போலவும்
வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது
விதியாற்றான் ஆக்கிய மெய்க்கலவை போலப்
போதுநாற்ற முள்ளுட் கரந்து புதுநாற்றம்
செய்கின்றே செம்பூம் புனல் ;
கவிழ்ந்த புனலிற் கயந்தண் கழுநீர்
அவிழ்ந்த மலர்மீ துற்றென வொருசார்
மாதர் மடநல்லார் மணலி னெழுதிய
பாவை சிதைத்த தெனவழ வொருசார்
அகவய லிளநெல் அரிகாற் சூடு
தொகுபுனல் பரந்தெனத் துடிபட வொருசார்
ஓதஞ் சுற்றிய தூரென வொருசார்
கார்தூம் பற்றது வானென வொருசார்
பாடுவார் பாக்கங் கொண்டென
ஆடுவார் சேரியடைந்தெனக்
கழனிவந்து கால்கோத்தெனப்
பழனவாளை பாளையுண்டென
வித்திடுபுல மேடாயிற்றென
உணர்த்த வுணரா ஒள்ளிழை மாதரைப்
புணர்த்திய விச்சத்துப் பெருக்கத்திற் றளைந்து
சினைவளர் வாளையிற் கிளையோடு கெழீஇப்
பழன வுழவர் பாய்புனற் பரத்தந்
திறவரை புரையுமா றிருகரை யேமத்து
வரைபுரை யுருவி னுரைபல சுமந்து
பூவேய்ந்து பொழில்பரந்து
துனைந்தாடுவா ராய்கோதையர்
அலர்தண்டா ரவர்காதிற்
றளிர்சேரீ இக் கண்ணி பறித்துக்
கைவளை யாழி தொய்யகம் புனைதுகில்
மேகலை காஞ்சி வாகு வலயம்
எல்லாங் கவரு மியல்பிற்றாய்த் தென்னவன்
ஒன்னா ருடைபுலம் புக்கற்றான் மாறட்ட

தானையான் வையை வனப்பு ;
புரிந்த தகையினன் யாறுடு வாருள்
துரந்து புனல்தூவத் தூமலர்க் கண்கள்
அமைந்தன வாங்க ணவரு ளொருத்தி
கைபுதைஇ யவளை
ஏக்கழுத்து நாணுற் கரும்பி னணைமென்றோள்
போக்கிச் சிறைபிடித்தா ளோர்பொன்னங் கொம்பு
பரிந்தவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வாள்
இரும்பீர் வடியொத்து மைவிளங்குங் கண்ணொளியாற்
செம்மைப் புதுப்புனல் சென்றிரு ளாயிற்றே
வையைப் பெருக்கு வடிவு ;
விரும்பிய வீரணி மெய்யீரந் தீரச்
சுரும்பார்க்குஞ் சூர்நறு வேந்தினள் கண்ணெய்தல்
பேர்மகிழ் செய்யும் பெருநறாப் பேணியவே
கூர்நறு வார்ந்தவள் கண் ;
கண்ணியல் கண்டேத்திக் காரிகைநீர் நோக்கினைப்
பாணு தரித்துப் பலபாட வப்பாட்டுப்
பேணு தொருத்தி பேதுற வாயிடை
என்னை வருவ தெனக்கென் றினையா
நன்ஞெமர் மார்ப னடுக்குற நண்ணிச்
சிகைகிடந்த வூடலிற் செங்கண்சேப் பூர
வகைதொடர்ந்த வாடலு ணல்லவர் தம்முட்
பகைதொடர்ந்து கோதை பரியூஉ நனிவெகுண்
டியாறுடு மேனி யணிகண்ட தன்னன்பன்
சேறுடுமேனி திருநிலத் துய்ப்பச் சிரமிதித்துத்
தீர்வில தாகச் செருவுற்றாள் செம்புனல்
ஊருட னுடுங் கடை ;
புரிநரம் பின்கொளைப் புகல்பாலை யேழும்
எழூஉப்புணர் யாழு மிசையுங் கூடக்
குழலளந்து நிற்ப முழவெழுந் தார்ப்ப
மன்மகளிர் சென்னிய ராடல் தொடங்கப்
பொருதிழி வார்புனற் பொற்பஃ
தருமிடி சேர்ந்த முழக்கம் புரையும்
திருமருத முன்றுறை சேர்புனற்கண் டுய்ப்பார்

தாமந் தலைபுனை பேள நீர்வையை
அடு நிற்பயம் பாடி விடிவுற் றேமாக்க
நிற்படிந்து நீங்காமை யின்றுபுணர்ந் தேனவே.

**என்பது, தலைமகன் தலைமகளோடு** புனலாடினானெனக் கேட்டு இனபுறற செவிலித்தாய் தோழியை நீங்காளாடிய புனலணியின்பங் கூறுகென்றாட்கு அப் புனலணியின்பமும் பல்வேறு வகைப்பட்ட இன்பமும தலைமகன் காதன்மையும் கூறி, என்றும் இந்த நீரணியின்பம் பெறுக யாமென்றது.

**மையோடக் கோவனூர் பாட்டு ; பித்தாமத்தர் இசை ;**

**பண்ணுப் பாலையாழ்.**

## உரை

க - க௦ : திரையிரும்......................வையைப் புனல்

(இ - ள்.) வான் - முகில்கள், திரைபனி இரும் பௌவம் அறச் செவ்விதா முகந்து - அலைகளையும் குளிர்ச்சியையும் உடைய கரிய கடல் வற்றிப்போகும்படி தாமே நேரில் சென்று நீரை முகந்துகொண்டு வந்து, உரவு உரும் உடன்று ஆர்ப்ப - வலிய இடியேறு சினந்து ஆரவாரஞ் செய்யாநிற்ப, ஊர்பொறை கொள்ளாது - தம்மேல் ஏறின பாரம் தாங்கமாட்டாமல், வயிறு அழிபு - தம்வயிறு கிழிந்தமையாலே, கரை உடை குளம் என - கரையுடைந்த குளத்தின் நீர் கழலுமாறுபோலக் கழலா நிற்ப, வரை வரை தொடுத்த - சையமலையின் சிகரங்கள் தோறும் தொடுக்கப்பட்ட, வயங்கு வெள் அருவி - விளங்கா நின்ற வெள்ளிய அருவிநீர், பெயலால் பொலிந்து - அம் மழை யானே பொலிவுற்று, பெரும்புனல் பல - மற்றையிடங்களிற் சேரும் பல நீர்களோடும் கூடி, வையைப் புனல் நந்த - வையை யாற்றின் நீர்பெருகி வெள்ளமாக, நலன் நந்த நாடு அணி நந்தப் புலன் நந்த - உயிர்கட்கு நலனெல்லாம் மிகும்படியும் மருதநிலம் அழகு மிகும்படியும் குறிஞ்சிமுதலிய வன்புலங்கள் வளம் பெருகும்படியும், வலன் இரங்கும் முரசின் தென்னவர் உள்ளிய நிலன்உற - வெற்றியுண்டாக முழங்கும் முரசினையுடைய பாண்டிய மன்னர் கொள்ளக் கருதிய நாட்டைச் சேருதற்கு, நிமிர்தானை நெடுநிரை நிவப்பு அன்ன - நிமிர்ந்து செல்லும் அப் பாண்டியருடைய படையினது நெடிய அணியினது எழுச்சி போல, இடம் செலவு அரிது என்னாது - யான் செல்லுமிடம் அடைதற்கரியது என்று கருதாமலும், இருள் இரவு பகலாக

வந்தன்று - அவ்வெள்ளம் இருளை உடைய இரவிது பகலிது என்று கருதாமலும் இருபொழுதினும் ஒழுகி வந்தது ;

(வி - ம்.) முகில் மழைபெய்ய அருவிநீர் பெருகிப் பிற நீரோடும் கூடி வையை நீரிற் கலந்து வெள்ளமாகித் தென்னவர் படைபோல அரிதென்னாது இரவும் பகலும் ஒழுகி வந்தது என முடிக்க.

தென்னவர் தானை உள்ளிய நிலன்உற இரவிருள் பகலாக இடமரிது செலவென்னாது நிமிர்தல் போலப் புனலும் இரவிருள் பகலாக இடமரிது செலவென்னாது வந்தன்று எனக் கூட்டுக.

இதன்கண் புனல் ஒழுக்கிற்கு உவமை கூறுவார்போல இப்புலவர் பெருமான் பாண்டிய மன்னரின் படைச்சிறப்புக் கூறிய நயமுணர்க.

பனி - குளிர்ச்சி; பனி இரும்பெளவம் என மாறுக. பெளவம் - கடல். உரவு - வலிமை. உரும் - இடி. நீரைச் சூலாகக் கூறுவதற்கேற்ப முகில் வயிறு அழிபு என்று கூறப்பட்டது. வரையிரண்டனுள் முன்னையது மலை; பின்னையது சிகரம். இனி மலைகள்தோறும் எனினுமாம். வலன் - வெற்றி இரங்கும் - முழங்கும். தென்னவர் - பாண்டியர். உள்ளிய - கொள்ளக் கருதிய.

நாடு - மருதநிலம். புலம்-வன்புலம். அவை முல்லையும் குறிஞ்சியும் என்க. வந்தன்று - வந்தது.

(பரிமே.) வெற்றியுண்டாக ஒலிக்கும் முரசினையுடைய தென்னவர் கொள்ளக் கருதிய நாட்டையுற நிமிரும் அவர் தானையது நெடு நிரையின் நிமிர்ச்சி ஒக்க யாம் செல்லுமிடம் அரிதென்னாது இருளையுடைய இரவும் பகலாக வந்ததெனக் கூட்டுக.

கக. மென்புலங்கள் அழகுபெற வன்புலங்கள் விளைய வந்தது.

கக - கஙு : நளியிருஞ்சோலை......................பரப்பி

(இ - ள்.) நளி இருஞ் சோலை நரந்தம் தாஅய் - அப் புனல் செறிந்த கரிய சோலைகளிலுள்ள நரந்தம்புற்களின் மேலே பரந்து, ஒளிர்சினை வேங்கை விரிந்த இணர் உதிரலொடு-விளங்குகின்ற கிளைகளையுடைய வேங்கைமரத்தின்கண் மலர்ந்த பூங்கொத்தினின்றும் உதிர்ந்த பூக்களோடு கூடி, துளியின் உழந்த தோய்வு அரும் சிமைதொறும் - மழையாலே அலைக்கப்பட்ட எய்துதற்கரிய மலைச்சிகரங்கள் தோறும் உளவாய், வளிவாங்கு சினைய மாமரம் - காற்றாலே வளைப்புண்டு முறிந்த கொம்புகளையுடைய பெரிய மரங்களை, வேர்கீண்டு - வேரோடு அகழ்ந்து தள்ளி உருட்டிக் கொணர்ந்து, உயர்ந்துழி உள்ளன பயம்பிடைப் பரப்பி - இவ்வாறாகக் குறிஞ்சியினும் முல்லையினும் உள்ள பொருள்களை வாரிக் கொண்டுவந்து மருதநிலத்தினும் நெய்தனிலத்தினும் பரப்பி ;

(வி - ம்.) நளி - செறிவு. இருஞ்சோலை - கரியபொழில் ; இருண்டு தழைத்த பொழில் என்க. நரந்தம் - ஒருவகை மணப்புல்;

"நரந்த நாறுந் தன்கையால்" (புறநா - உ௬௰) எனவருதல் காண்க. "நரந்தை நறும்புல்" (புறநா - கரு௨) என்பதும் காண்க. தாஅய் - பரந்து. ஒளிர்சினை-மலரானும் தழையானும் விளங்கா நின்ற கொம்பு. விரிந்த இணர் - மலர்ந்த பூங்கொத்து. துளி - மழை. சிமை - சிகரம். உழந்த மாமரம்; வளிவாங்கு சினைய மாமரம் எனத் தனித்தனிக் கூட்டுக. உயர்ந்துழி - குறிஞ்சியினும் முல்லையினும் உள்ள. பயம் பிடை - மருதத்தினும் நெய்தலினும் என்க. 'உயர்ந்துழியுள்ளன பயம்பிடைப் பரப்பி' என்னும் இவ்வடி,

"முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்தல் தன்னைப் பொருவரு மருத மாக்கி."
(ஆற்றுப் - கஎ)

எனவரும் கம்பநாடர் செய்யுட்கு முதலாகும் போலும்.

வளிவாங்குசினை - காற்றாலே வளைத்து முறிக்கப்பட்ட கொம்பு என்க.

(பரிமே.) பயம்பு - பள்ளம்.

கசு - உஉ : உழவர்..........................செம்பூம்புனல்

(இ - ள்.) உழவர் களிதூங்க - உழுதொழில் செய்வோர் மகிழ்ச்சியின்கண் மிகாநிற்ப, முழவு பணைமுரல - முழாக்களும் பெரும்பறைகளும் முழங்காநிற்ப, ஆடல் அறியா அரிவை போலவும் - கூத்தினது இயல்பு உணராத கூத்தியர் மகள் போலவும், ஊடல் அறியா உவகையள் போலவும் - இடனறிந் தாடி இனிதின் உணருவதாகிய ஊடலின் இயல்பறியாத உவகையினையுடையாள் போலவும், வேண்டுவழி நடந்து - தான் வேண்டிய வழியெல்லாம் சென்றும், தாங்குதடை பொருது- தடை செய்வதாகிய அணையை உடைத்துக் கொண்டு சென்று, விதி ஆற்றான் ஆக்கிய மெய்க் கலவைபோல-நூன்முறையாலே செய்யப்பட்ட உடலிற் பூசுதற்குரிய கலவையினது மணம்போல, பொதுநாற்றம் உள்உள்ளுட் கரந்து - நறுமணப் பொருள் பலவும் கூடினமையாலே பொதுவாக மணக்கும் மணத்தை உள்ளே உள்ளே அடக்கி வைத்துக்கொண்டு, செம்பூம்புனல்-அப் புதிய சிவந்த அழகிய நீர், புதுநாற்றம் செய்கின்று-மேலே புதியவாகிய நறுமணத்தைப் பரப்பாநின்றது ;

(வி - ம்.) புதுநீர் வந்தமையானே உழவர் களிதூங்க என்க. பணை - பெரும்பறை. முரல - முழங்க. ஆடல் அறியா அரிவைபோல வேண்டுவழி நடந்தும், ஊடலறியா உவகையள் போலத் தாங்குதடை பொருதும் என, நிரல்நிறையாக்கிக் கூட்டுக.

ஆடல் - கூத்தினது இலக்கணம். கூத்திலக்கணம் அறியாதவள் தன் மனம்போனபடி யெல்லாம் சென்று ஆடுதல்போல் நீரும் மதகு கால்வாய் முதலிய நெறிபற்றிச் செல்லாது கண்டுழியெல்லாம் சென்றது என்க.

ஊடல் - ஊடலின் இயல்பு. உவகையள் என்றது, செருக்குடையவள் என்பது படநின்றது. ஊடலறியாச் செருக்குடையவள், தன் கணவனைக் கடந்து நீங்குதல்போல நீர் தனக்குத் தடையாகிய அணைகளை உடைத்துச் சென்றது என்க. விதியாறு - நூல்நெறி. மெய்க்கலவை - உடலில் பூசிக்கொள்ளுதற்குரிய மணக்கூட்டு. புது நாற்றம் - இன்னமணம் என்று அறியவொண்ணாத புதிய மணம். செய்கின்று - செய்தது. பூம்புனல் - பூவினையுடைய நீருமாம்.

(பரிமே.) கஎ-கக. ஆடலியல்பு அறியாத அரிவை போலத் தான் வேண்டிய இடங்களில் நடந்தும், ஊடலியற்கை அறியாத ஊடலுவகையள் கணவனைக் கடந்து நீங்குமாறுபோலத் தகைந்த அணைகளை முறித்தும் போய்.

உO. நூனெறியானுக்கிய மெய்ப்படுக்கும் கலவையது நாற்றம் போல.

## உ௩ - ௩O: கவிழ்ந்த..................வானென ஒருசார்

(இ - ள்.) ஒருசார் கயம் கவிழ்ந்த புனலின் கழுநீர் அவிழ்ந்த மலர்மீது உற்றென - ஒருபக்கத்தே குளம் வெள்ளம் பாயப்புகுந்த நீராலே பெருகி செங்கழு நீரினது மலர்ந்த மலர்கள் முழுகும்படி மிக்கது என்று சிலர் கூறுநிற்பவும், ஒருசார் மடநல்லார் மணலின் எழுதிய மாதர் பாவை சிதைத்தது என அழ - ஒரு பக்கத்தே இளமையுடைய மகளிர் தாம் மணற் பரப்பின் மேலே புனைந்த தம்மால் விரும்பப்பட்ட பாவையை வையை நீர் அழித்தது என்று கூறி அழாநிற்பவும், ஒருசார் வயல் அகம் இளநெல் அரிகால் சூடு தொகுபுனல் பரந்தெனத் துடிபட - ஒருபக்கத்தே வயலின்கண்ணே விளைந்து முற்றிய இளநெல்லின் மீதும் அரிந்துவைத்த சூட்டின்மீதும் மிக்கவெள்ளம் பெருகிற்று என்று சொல்லி அவற்றை ஓம்பும் பொருட்டு முழக்கும் துடிகள் முழங்காநிற்பவும், ஒருசார் ஊர் ஓதம் சுற்றியது என - ஒருபக்கத்தே ஊரைக் கடலே பெருகிவந்து சுற்றிக் கொண்டது என மாந்தர் ஆரவாரிப்பவும், ஒருசார் கார் தூம்பு அற்றது என - ஒருபக்கத்தே முகில் துளித்தற்குரிய சிறு துளைகள் உடைந்து பெரிதும் ஓட்டையாயிற்றுப் போலும் என்று சிலர் கூறுநிற்பவும்;

(வி - ம்.) கயம் - ஓடையுமாம். கவிழ்ந்த புனல் - வந்து புகுந்த நீர், புனலாலே பெருகி மலர் மீதுற்றது என்க. அவிழ்ந்த மலர் - விரிந்தபூ. மாதர் - அழகுமாம். மடநல்லார் - இளமகளிர் என்க. மகளிர் மணலின் மேலே பாவை எழுதி விளையாடுதலை, "வாலிழை மடமங்கையர் வரிமணற் புனை பாவைக்கு" (புறநா - கக : உ - ௩) எனப் பிறர் கூறுதலானும் உணர்க.

அகவயல் - வயலகம் எனமாறுக. இள நெல் - மூன்றுதிங்களில் பயிராகிவிளையும் இயல்புடைய குறுவை யினத்து நெல் என்க. அரிகால் - அரி; சூடு - அரிகளை அடுக்கிய போர்வு.

தொகுபுனல் - வெள்ளம். அவற்றை ஓம்புதற்பொருட்டு முழக்கிய துடி என்க. தூம்பு - துளை. துளித்தற்குரிய சிறுதுளை அற்று ஓட்டையாயிற்றுப் போலும் என்பாரும் என்க. ஓதம் - கடல். கடலே பெருகிவந்து ஊரை வளைந்ததோ என்று மருளும் படியும் என்க.

(பரிமே.) ௨௫. எழுதிய - புனைந்த,

௨௯ - ௩. பாவைமேற் காதலையுடைய மடவார் அழ என்க.

௩0 - வானின் மழை தூம்பற்ற தென.

௩௧ - ௩௩: பாடுவார்..................பரத்தந்து

(இ - ள்.) பாடுவார் பாக்கம் கொண்டென - ஒருபக்கத்தே பாணர்கள் குடியிருந்த பாக்கத்தை வெள்ளம் கவர்ந்து கொண்டதென்று பூசலிடவும், ஆடுவார் சேரி அடைந்தென - ஒரு பக்கத்தே கூத்தர் குடியிருந்த சேரியை வெள்ளம் சுற்றியது என்று பூசலிடவும், கழனி கால் வந்து கோத்தென - வயல்களை வெள்ளக்கால் வந்து கொண்டது என்று ஒருசார் ஆரவாரிப்பவும், பழன வாளை பாளை உண்டென - ஒருசார் வெள்ளம் கமுகு தெங்குகளின் கழுத்தை முட்டப் பெருகியதனால் வயல்களிடத்தே வாழும் வாளைமீன் அவற்றின் பாளையைத் தின்னுகின்றன என்று வியப்பவும், வித்திடு புலம் மேடு ஆயிற்று என - ஒருசார் உழவர் தமது நாற்றங்கால் வெள்ளத்தாலே வண்டலிடப்பட்டு மேடாயிற்று என்று வருந்தாநிற்பவும், உணர்த்த உணரா ஒள் இழை மாதரைப் புணர்த்திய இச்சத்துப் பெருக்கத்தின் துணைந்து - ஊடலைத் தான் உணர்த்த உணராத மகளிரைக் கூட்டுவித்தற்கு முயலும் கணவனது ஆசை வெள்ளம்போலப் பெருகி விரைந்து, பாய் புனல் - பாயாநின்ற நீரின்கண்ணே, பழன உழவர் சினைவளர் வாளையின் கிளையொடு கெழீஇப் பரத்தந்து - வயல் உழுதொழிலையுடைய வேளாண்மாந்தர் கருமுதிர்ந்த வாளைமீன் போன்று விலாப்பருக்க உண்டு தம் சுற்றத்தாரோடும் கூடித் தம் தொழிலைச் செய்யும் பொருட்டுச் பரவிச்செல்லாநிற்பவும்;

(வி - ம்.) பாடுவார் - பாணர். பாக்கம் - பக்கத்தே உள்ள ஊர். ஆடுவார் - கூத்தர். கால் - வெள்ளக்கால். கால்வந்து என மாறுக. பழனம் - வயல். தெங்கு முதலியவற்றின் கழுத்துமுட்ட வெள்ளம் உயர்தலாலே அவற்றின் பாளையை வாளை உண்ணுகின்றன என்க. வித்திடுபுலம் - விதை வித்துதற்குரிய வயல்; அஃதாவது நாற்றங்கால். வண்டலிடுதலாலே மேடாயிற்று என்க. புணர்த்திய - புணர்த்த: செய்யிய என்னும் வாய்பாட்டெச்சம். இச்சம் - இச்சை; ஆசை. இச்சத்துப் பெருக்கம் - ஆசையாகிய வெள்ளம்: அத்துச் சாரியை அல்வழிக்கண் வந்தது.

ஒருசார் என்பதனைப் பாக்கங்கொண்டென முதலிய ஏனை எனவென்னெச்சங்களோடும் கூட்டியுரைக்க.

உண்டதனால் வயிறுவிலாப் புடைத்த உழவர்க்குச் சினை வளர்தலாலே விலாப்புடைத்த வாளைமீன் உவமை. பரத்தந்து-பரந்து; இச்செய்தெனெச்சத்தைச் செயவெனெச்ச மாக்குக.

(பரிமே.) ௯௫. நாற்றங்கால் வண்டலிட்டு மேடாயிற்றென.

௯௦. ஒருசார் என்பதனைப் பின்பில் எனவெனெச்சங்களோடும் கூட்டுக.

௯௮ - க "விலாப்புடை மருங்குல் விசிப்ப மாந்திய" (புறநா - ௬௧ : ௬) உழவர்.

௪௦ - ௫௦ : இறுவரை........................வையையவனப்பு

(இ - ள்.) இறுவரை புரையுமாறு இருகரை ஏமந்து - நீராலே குத்துண்டு இடிந்தமையாலே அடிப்பக்கம் இடிந்த மலைகளைப் போன்று நிற்கும் இரண்டு கரைகளாகிய காவலுள் அடங்கி, வரை புரை உருவின் - வெள்ளிப் பனிமலையின் சிகரங்களை ஒத்த வடிவமுடைய, நுரை பல சுமந்து - நுரைகள் பலவற்றையும் சுமந்து கொண்டு, பூ வேய்ந்து பொழில் பரந்து - பூவானே மூடப்பட்டுச் சோலைகளினூடே பரந்து, துனைந்து ஆடுவார் ஆய் கோதையர் காதின் தளிர் செறிஇ - தன்னிடத்தே விரைந்து விளையாடாநின்ற ஆராய்ந்தணிந்த மலர் மாலையினையுடைய மகளிரின் செவியிடத்தே தளிரைச் செருகியும், அலர் தண்டாரவர் கண்ணி பறித்து - மலர்ந்த குளிர்ந்த மாலையணிந்த மைந்தருடைய தலையின்கண் சூடிய மாலைகளைப் பறித்தும், கைவளை தொய்யகம் புனை துகில் மேகலை காஞ்சி - மகளிரின் கையிலணிந்த வளையல்களும் தலையிலணிந்த தலைப்பாளை என்னும் அணிகலனும் உடுத்த ஆடையும் அவ்வாடையின் உள்ளே அணியப்படும் மேகலை என்னும் அணிகலனும் ஆடையின் புறத்தே அணியப்படும் காஞ்சி என்னும் அணிகலனும், புனைதுகில் ஆழி வாகுவலயம் - மைந்தர் உடுத்த ஆடையும் அணிந்த மோதிரங்களும் தோள்வலயங்களும், எல்லாம் கவரும் இயல்பிற்றாய் - ஆகிய இவற்றை எல்லாம் கவர்ந்து கொள்ளும் தன்மையுடையதாய், மாறு அட்ட தானையான் வையை வனப்பு - பகைவரைக் கொன்ற படையினையுடைய பாண்டியனது வையை யாற்றின்கண்ணே வந்த புதுப்புனலின் இயல்பு, தென்னவன் ஒன்னார் உடைபுலம் புக்கற்று - பாண்டியமன்னன் பகைவருடைய தோற்றற்குரிய நிலத்தின்கண் புகுந்த தன்மையை ஒத்தது ;

(வி - ம்.) இறுவரை - அடிப்பக்கம் இற்றமலை. இது நீராற் குத்துண்டு நிற்கும் இடிகரைக்கு உவமை. புரையுமாறு - ஒக்கும்படி.

வரை - சிகரம்; பனிமலையின் சிகரம் என்க. இது நுரைத்திரட்சிக்கு உவமை. ஏமம் - காவல். துனைந்து - விரைந்து. கோதையர் - மகளிர். தாரவர் - மைந்தர், கோதையர் காதிற் செருகி அவர் தம் வளை தொய்யகம் மேகலை காஞ்சி புனை துகில் என்னும் இவற்றையும், தாரவர் கண்ணி பறித்து அவர்தம் ஆழி புனை துகில் வாகுவலயம் என்னும் இவற்றையும் கவருமியல்பிற்றாய் எனக்கொண்டு கூட்டுக. புனை துகில் இருபாலார்க்கும் கூட்டப்பட்டது.

செரீஇ - செருகி. கண்ணி தலையிற்சூடும் மாலை. ஆழி-மோதிரம். தொய்யகம் - ஒருவகைத் தலைக்கோல அணி. இதனைத் தலைப்பாளை எனபர் சிலப்பதிகார அரும்பதஉரை ஆசிரியர். அடியார்க்கு நல்லார் 'பூரப்பாளை' என்பர், "தொய்யகம் தொடர்ந்த தலைக்கணி" (சிலப். சு: கOஎ.) என்றார் இளங்கோவடிகளார்.

மேகலை - இருவடமாய் ஆடையினுள்ளே அணிவதொரு அணிகலன். காஞ்சி - எண்வடமாய் ஆடையின் மேலணியும் அணிகலன்.

இவ்வாறு கவர்தலானே பாண்டியன் பகைநிலத்தே புக்குழி அவனை ஒத்தது வையை என்க. தென்னவன் - பாண்டியன். உடைபுலம் : வினைத்தொகை. மாறு - பகை. வனப்பு என்பது இயல்பு என்னும் பொருட்டாய் நின்றது.

(பரிமே.) வையை வனப்பு இது.

ருக - சுO : புரிந்த..............................வடிவு

(இ - ள்.) புரிந்த தகையினன் யாறு ஆடுவாருள் - யாவரானும் விரும்பப்பட்ட அழகினையுடைய பாண்டிய மன்னனது வையையாற்றின்கண் நீராடாநின்ற மகளிருள்ளே, புனல் துரந்து தூவ - சிலமகளிர் சிவிறியினின்றும் நீரைச் செலுத்திச் சிதறாநிற்ப, தூமலர்க் கண்கள் அமைந்தன - ஏனை மகளிர் தூயமலர் போன்ற கண்கள் எல்லாம் அந் நீரை ஏற்று இமைத்தலின்றி அமைந்தனவாக, ஆங்கண் கை புதைஇயவளை அவருள் ஒருத்தி - அப்பொழுது அவ்விளையாட்டிற் றோற்றுத் தன் கண்களைப் புதைத்தவளை அம் மகளிருள் ஒருத்தி, ஏக்கழுத்து - வெற்றியாலே இறுமாந்து, நாணுல் கரும்பின் அணை மெல் தோள் போக்கிச் சிறைப்பிடித்தாள் - தன் கழுத்தில் அணிந்த பொன்னுணலே தொய்யில் கரும்பு எழுதப்பட்ட அணையை ஒத்த மெல்லிய தோள்களைக் கட்டிச் சிறையாகப் பிடித்தாள், ஓர் பொன்னங் கொம்பு - அது கண்ட பொற்கொடி போல்வாள் ஒருத்தி, பரிந்து அவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வாள் - அங்ஙனம் சிறையானவளுக்கு இரங்கி அவளைக் கையாற் பிணிக்கப்பட்ட அச்சிறையினின்றும் விலக்கும் பொருட்டுப பாய்ந்தாள், இரும்பு ஈர்வடி ஒத்து மை விளங்கும் கண் ஒளியால் - அங்ஙனம் பாய்ந்தவளுடைய வாளால் அரியப்பட்ட மாவடுவின் பிளப்பினை ஒத்து மையாலே விளங்காநின்ற

கண்ணொளி பாய்ந்து கதுவுதலாலே, புதுப்புனல் செம்மை சென்று இருள் ஆயிற்று - புதிய அந் நீரினது சிவந்த நிறம் போய் நீல நிறமாயிற்று, வையைப் பெருக்கின் வடிவு - வையையாற்றின் புதுநீர் வெள்ளத்தின் அழகு இத் தன்மைத்து;

(வி - ம்.) ஆடுவோர் தம்முள் புனல்தூவ, அவருள் ஒருத்தி அதற்கு அஞ்சிக் கண் புதைத்தாள்; அவளை அவருள் ஒருத்தி ஏக் கழுத்து நாணால் போக்கிச் சிறைபிடித்தாள்; அவட்குப் பரிந்து ஒருத்தி பிணை நீக்கப் பாய்ந்தாள்; அவள் கண்ணொளியாலே புதிய செம்புனல் நீல நிறமாயிற்று என்க. இரக்கமுடைமையும் எழிலுடைமையும் கூறுமாற்றானே பொன்னங் கொம்பெனப்பட்டவள் தலைவியாதல் குறிப்பான் உணர்த்தப் பட்டமை உணர்க.

புரிந்த தகையினான் என்றது பாண்டியனை. 'புரிந்த தகை- மிக்க தகைமை' என்பர் பரிமேலழகர். துரந்து - சிவிறியினின்றும் செலுத்தி என்க. அந் நீர் படுதற்கு அஞ்சாமல் ஏற்றுக் கோடல் வெற்றியாகவும் அஞ்சி இமைப்பதும் கண்புதைப்பதும் தோல்வியாகவும் கொள்ளப்பட்டன, தோற்றாரைச் சிறைசெய்தல் மரபாகலின். வென்றவள் கண் புதைத்துத் தோற்றாளைச் சிறை பிடித்தாள், கைப்பிணை - கையாற் பிணிக்கப்பட்ட கட்டு. இரும்பு - இரும்பாலியன்ற வாள். வடு - மாம்பிஞ்சு. இரும்பாலரிந்த மாவடு துவருடைமையானே கறுத்திருத்தல் மை விளங்குதற்கு உவமை. இவ்வுவமை நினைந்து மகிழற்பாற்று. வடிவு - அழகு.

இதுகாறும் நீரணியின்பம் கூறப்பட்டது; இனி, தலைவனுடைய காதன்மை கூறப்படும்.

(பரிமே.) ருரு. (ஏக்கழுத்து) இறுமாந்த.

ருரு. தொய்யிற் கரும்பினையுடைய.

இவ்வளவும் (௧ - முதல் ௬௦ - வரையில்) தோழி புனலணி இன்பம் கூறி, மேல் தலைமகன் காதன்மை கூறுகின்றாள்.

௬௧ - ௬௨ : **விரும்பிய..............................கண்**

(இ - ள்.) விரும்பிய ஈரணி மெய் ஈரம் தீர - இங்ஙனம் விரும்பப்பட்ட நீராட்டிற்கேற்ற ஈர அணியை உடைய உடல் ஈரம் உலர்ந்து வெப்பமுடையதாகும் பொருட்டு, சுரும்பு ஆர்க்கும் சூர் நறவு ஏந்தினாள் - தலைவி வண்டுகள் சூழ்ந்து ஆரவாரித்தற்குக் காரணமான கடுப்புடைய கள்ளைப் பருகுதற்குத் தன் கையின்கண் ஏந்தினாள், கண் நெய்தல் - அங்ஙனம் ஏந்திய பொழுது அவள் கண் நெய்தற்பூவைப் போன்று கறுத் திருந்தன, கூர் நறவு ஆர்ந்தவள் கண் - கூர்த்த களிப்பை யுடைய அக் கள்ளினைப் பருகிய பின்னர் அவளுடைய கண்கள் சிவந்து, பேர்மகிழ் செய்யும் பெரு நறாப் பேணிய - கண்டார்க்குப்

பெரிய மகிழ்ச்சியை உண்டாக்கும் பெரிய நறவம்பூவை ஒத்திருந்தன ;

(வி - ம்.) விரும்பிய - விரும்பப்பட்ட. ஈர அணி - ஈரணி என அகரங்கெட்டுப் புணர்ந்தது. மெய்யீரம் - உடலின்கண் உள்ள ஈரம். சுரும்பு - வண்டு. சூர் - கடுப்பு. நறு - கள். பெருநறு-பெரிய நறவம்பூ. ஆர்ந்தவள் - பருகியவள். நெய்தல்மலர் கருநிறத்திற்கும் நறவமலர் செந்நிறத்திற்கும் உவமைகள்.

(பரிமே.) ௬எ. பேணல் : ஈண்டு, உவமச் சொல்.

௬௫ - ௬௯ : **கண்ணியல்................நடுக்குற நண்ணி**

(இ - ள்.) கண் இயல் கண்டு ஏத்தி - அங்ஙனம் சிவந்த கண்ணினது அழகினைக் கண்டு பாராட்டி, காரிகை நீர் நோக்கினை - அக் கண்களின் அழகிய தன்மையுடைய நோக்கங்களை, பாண் ஆதரித்து - இசைப்பாட்டின்கண் இயைந்துப் பாட விரும்பி, பலபாட - தலைவன் பற்பல பாடல்களையும் பாடாநிற்ப, ஒருத்தி அப் பாட்டுப் பேணாது பேதுற - அப் பாடல்களைக் கேட்டாருள் ஒருத்தி அப் பாடல்கள் பாடுவான் தன் காதலியைப் பாடும் பாடல்கள் என்பதனை அறியாது தன்னை விரும்பிப் பாடும் பாடல் எனக் கருதி அவனைக் கூடும் கருத்தாலே துன்புறு நிற்ப, நன்ஞெமர் மார்பன் - அவள் கருத்தறிந்த நன்கு விரிந்த மார்பினையுடைய தலைவன், எனக்கு என்னை வருவது என்று இனையா - இந் நிகழ்ச்சியினைத் தலைவிதான் அறிவளேல் எனக்கு எத்தகைய துன்பந்தான் வருமோ அறிகின்றிலேனே என்று கருதி மனம்நொந்து, நண்ணி நடுக்குற-அவ்விடத்தினின்றும் பெயர்ந்து தலைவியினை அணுகி அச்சத்தாலே உடல் நடுங்கி நிற்ப ;

(வி - ம்.) சிவந்த கண்ணின் இயல் என்க. காரிகை நீர் நோக்கம்-அழகிய நீர்மையுடைய பார்வை. பாண் - பாடல்: 'பாண்சாதி' என்பர் பரிமேலழகர். ஆதரித்து - விரும்பி : அக் கண்களைப் பொருளாகக்கொண்டு பலபாட என்க. கண்களின் நோக்கத்தைப் பாடலின் இயைத்துப்பாட விரும்பி என்க. அங்ஙனம் பாடும் பாடல்களை,

> "பவள வுலக்கை கையாற் பற்றித்
> தவள முத்தம் குறுவாள் செங்கண்
> தவள முத்தம் குறுவாள் செங்கண்
> குவளை யல்ல கொடிய கொடிய." (சிலப். கானல்-உ0)

> "புன்னை நீழற் புலவுத் திரைவாய்
> அன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
> அன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
> கொன்னே வெய்ய கூற்றம் கூற்றம்." (ஷை - உக)

கள்வாய் நீலம் கையின் ஏந்திப்
புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்
புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்
வெள்வேல் அல்ல வெய்ய வெய்ய.'' (ஷை - உஉ.)

எனவரும் சிலப்பதிகாரங் கண்டுணர்க.

ஒருத்தி - மற்றொருத்தி. பேஊறுதல் - பாடுவான் கருத்தறிதல். பேது - துன்பம். தலைவியால் எனக்கு எத்தகைய இடர் வருமோ என்று கருதி என்க. இனையா - இனைந்து: நொந்து. ஞெமர் - பரந்த. அச்சத்தாலே நடுங்க என்க.

(பரிமே.) சுடு. காரிகை நீர்மையினையுடைய நோக்கு.

சுசு. (பாண்) பாண்சாதிபோல.

சுஎ. அப் பாட்டுத் தன் காதலியைப் பாடுகின்றது என்று அறியாது வேறொருத்தி கேட்டு அவனோடு கூடுதற்கு வருத்தமுற்று.

சுகூ. நல்ல பரந்த மார்பன்.

தலைவன் தலைவியின் கண்ணியல்கண்டு அவற்றின் காரிகை நீர்மையைப் பாட ஒருத்தி பேஊறு பேதுறத் தலைவன் அதுகண்டு இனைந்து தலைவியை நண்ணி நடுங்காநிற்ப என்க.

எo - எசு: சிகை கிடந்த......................ஆடுங்கடை,

(இ - ள்.) சிகை கிடந்த ஊடலின் செங்கண் சேப்பு ஊர - முன்னரே குறைகிடந்த ஊடல் காரணமாய்ச் சிவந்துள்ள தன் கண்கள் இந் நிகழ்ச்சி காரணமாய்ப் பெரிதும் சிவக்க, வகை தொடர்ந்த ஆடலுள் நல்லவர் தம்முள் - வகுப்புப் பொருந்திய அந் நீராட்டின்கண் வந்த மகளிருள் வைத்து, பகை தொடர்ந்து - முன்னோர்ப் பாட்டுப்பேஊறு பேதுற்ற அவளோடு தலைவி பகைமை மிக்கு, நகை வெகுண்டு கோதை பரியூஉ - மிகவும் சினந்து தன் மாலையினை அறுத்து எறியாநிற்ப, ஆறு ஆடு மேனி அவ்வரிகண்ட தன் அன்பன் - அப்பொழுது நீராட்டினாலே பொலிவுற்ற தலைவியின் மேனியின்கது அழகைக் கூர்ந்து நோக்கிநின்ற அவள் காதலன் அங்ஙனம் சினந்த தலைவிக்கு அஞ்சி, சேறு ஆடு மேனி திருநிலத்து உய்ப்ப - தனது சந்தனம் பூசப்பட்ட மேனியை அழகிய நிலத்திலே கிடத்தி வணங்க, தீர்வு இலதாகச் சிரம் மிதித்துச் செரு வுற்றாள் - அதனாலும் தன் சினந் தீர்தல் இலாததாக அத் தலைவனது தலையில் உதைத்து ஊடிக்கொண்டாள், ஊருடன் செம்புனல் ஆடுங்கடை - ஊரவரோடு புதுநீர் ஆடியவிடத்து;

(வி - ம்.) சிகை - குறை. முன் ஊடலிற் சிவந்ததன் மேலும் சேப்பூர என்க. சேப்பூர - சிவக்க. வகை - வகுப்பு: நீராடுவார்

தம்முள் இருகூறுய்ப் பிரிந்து ஆடுதல் வழக்கமாதல்பற்றி வகை தொடர்ந்த ஆடல் எனப்பட்டது. நல்லவர் - மகளிர்: மகளிர் தம்முள் வைத்து முன் தலைவன் பாட்டாலே பேதுற்ற அவளை என்க. பரியூஉ - பரிந்து: அறுத்து. செய்யூ என்னும் வினையெச்சம்; வெகுண்டு பரியூஉ என மாறுக. பரியூஉ என்னும் எச்சத்தைப் பரிய எனச் செயவெனெச்சமாக்குக. ஆருடு மேனி அணிகண்ட- ஆருடினமையாலே பொலிந்து தோன்றும் மேனி அழகைக் கூர்ந்து பார்த்து நின்ற என்க. அன்பன் - காதலன்: 'மேனி நிலத்துய்ப்ப' என்றது, நிலத்தின் மேல் வீழ்ந்து வணங்க என்றவாறு. அதனுனும் தீர்வு இலதாக என்க. மிதித்தல் - உதைத்தல். செம்புனல் என்றது புதுப்புனல் என்பதுபட நின்றது.

(பரிமே.) இனி இந் நீரணியின்பம் பெறுக யாம் என வையை யைக் குறித்துக் கூறுகின்றுள்.

எள - அசு: **புரிநரம்பின்...............புணர்ந்தெனவே**

**(இ - ள்.)** புகல்பாலை ஏழும் எழூஉப் புணர் புரிநரம்பு இன் கொளை யாழும் - விரும்புதற்குரிய பாலைப்பண் ஏழினையும் எழுப்பிப் புணர்த்துதற்குரிய முறுக்குண்ட நரம்பின்கண் இனிய தாளவறுதியைத் தருகின்ற யாழினிசையும், இசையும் கூட - மிடற்றுப் பாடலும் தம்முட் பொருந்த, குழல் அளந்து நிற்ப - அவற்றின் சுதியை வங்கியம் அளந்து நிற்ப, முழவு எழுந்து ஆர்ப்ப - முழவு ஓசை எழுந்து முழங்காநிற்ப, மன் மகளிர் - அரங்கேறி அரசனுல் தலைக்கோல் பெற்ற மகளிரும், சென்னியர்- பாணரும், ஆடல் தொடங்க - கூத்தாடுதலைத் தொடங்க இவற்றுனுய முழக்கத்துடனே, வார்புனல் பொருது இழியும் - ஒழுகும் நீர் கரைகளை இடித்து ஓடுதலாலே எழுந்த முழக்கமும் சேர்ந்து ஆரவாரிக்கும் தன்மை, உரும் இடி சேர்ந்த முழக்கம் புரையும் - உருமேருகிய இடியோடு சேர்ந்த முகில் முழக்கத்தை ஒக்கும், திருமருதமுன்றுறை - திருமருத முன்றுறை எனப் பெயரிய துறையினை, சேர் புனற்கண் துய்ப்பார் - எய்திய வையைநீரின்கண் ஆடி இன்புறுவோர், தாமம் தலைபுனை பேஎம் நீர் வையை - மலர்மாலைகளை வாங்கி நின் தலையிடத்தே சூட்டி மகிழ்தற்குக் காரணமான அச்சந்தரும் ஆழ்ந்த நீரினையுடைய வையை யாறே!, இன்று நின் படிந்து பயம் நீங்காமை புணர்ந்தென - யாம் இன்று நின்னிடத்தே நீராடி நீங்காத இவ்வின்பத்தை எய்திஞற்போலவே, நின் பயம் பாடி விடிவுற்று ஏமாக்க - என்றும் நின்னிடத்தே நீராடி நின்னுல் பெறும் இன்பத்தைப் பாடி, விடிவு எய்தி மகிழ்வேமாக.

**(வி - ம்.)** ஏழுபாலையாவன :—செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என்பனவாம். எழூஉ - எழுப்பி. புணர்யாழ், கொளையாழ் எனத் தனித்தனிக் கூட்டுக. கொளை - தாளவறுதி. இசை - மிடற்றுப்

பாடல். குழல் - வங்கியம். முழவு - மத்தளம். மன்மகளிர் - அரசு தலைக்கோல் அளிக்கப்பட்ட கூத்தியர். சென்னியர் - பாணர் : ஆடல் கூறவே பாடல் கூறவேண்டாவாயிற்று. கரைபொரு திழிபுனல் என்க. பொற்பு - அழகு : ஈண்டு தன்மை என்பதுபட நின்றது. ஆடல் தொடங்க உண்டாகிய முழக்கமும் புனல் இழி முழக்கமும் கூடி, இடியோடு முழங்கும் முகில் முழக்கின் பொற்புடைத்தாயிற்று என்க.

திருமருத முன்றுறை-மதுரையிடத்தே வையையின்கண் ஆடுதுறையுள் ஒன்று. புனற்கண் துய்ப்பார் - நீராடி இன்புறுவோர். தாமம் - மாலை பேஎம் - அச்சம். வையை : அண்மைவிளி ; என்றும் படிந்து என இருசொல் வருவித்துக் கூறுக. விடிவுற்று - துன்பம் அகலப் பெற்று விடியமாட்டான். அவனுக்கு விடிந்தது அவன் என்றும் விடியான் என இன்றும் வழங்கும் உலகவழக்கும் உணர்க. ஏமாக்க வியங்கோள் வினைமுற்று ; தன்மைக்கண் வந்தது. பயம் - பயன். பயம் என்பதனை நீங்காமையின் பின்னரும் ஒட்டுக.

(பரிமே.) அசு. பேஎநீர் - ஆழத்தான் அச்சத்தைத் தரும் நீர்.

அகூ. விடிவுறுதல் - துன்பம் நீங்கி இன்பமாதல்.

அகூ. 'ஏமாக்க' என்னும் வியங்கோள் வேண்டிக் கோடற் பொருட்டாகலின் தன்மைக்கண் வந்தது.

என்பது....................பெறுக யாமென்றது.

இதன் பொழிப்பு :—வையைப் புதுநீரின்கண் தலைவன் தலைமகளோடு சென்று நீராடினான் என்று கேட்டு மகிழ்ந்த செவிலி தோழியை அந் நீராட்டின்பம் எவ்வாறிருந்தது எனக்குச் சொல் என்று கேட்பத் தோழி, அந் நீராட்டின்பமும் தலைவன் தலைவியின்பாற் கொண்டுள்ள காதற் சிறப்பும் செவிலிக்குக் கூறியதாக இப் பாடல் அமைந்துள்ளது என்றவாறு.

## எட்டாம் பாடல்

# செவ்வேள்

**பொருட் சுருக்கம்**

(உகூ) குன்றம் உடைத்த ஒளிர் வேலோய்! (கஎ) முதல்வ!

**க - கக :** திருமாலும், சிவபெருமானும், பிரமனும், ஆதித்தர் பன்னிருவரும், அசுவனி மருத்துவர் இருவரும், வசுக்கள் எண்மரும், உருத்திரர் பதினொருவரும், திக்குப் பாலகர் எண்மரும், ஏனைத் தேவர்களும், அசுரரும், முனிவர்களும், நின்னைக் காண்டல் காரணமாக மண்ணுலகின்கண் வந்து உறையும் இடமாக நின்றது: ஆதலால் நினது திருப்பரங்குன்றம் இமயக் குன்றத்தை ஒக்கும்;

**கஉ - உக :** அப் பரங்குன்றத்தின்கண்ணுள்ள சுனை, நின்னையீன்ற சரவணப்பூம் பொய்கையை ஒக்கும். அக்குன்றிலுள்ள முகில் முழக்கம் நின் யானையினது முழக்கத்தை ஒக்கும். அம் முழக்கத்தைக் கேட்ட நினது கோழிச் சேவல் கூவிற்று; யானைகள் பிளிறின; அதனால் அம்மலை முழையின்கண் எதிரொலி எழுந்தது;

**உஉ - உச :** அத்திருப்பரங்குன்றத்திற்கும் மதுரைக்கும் இடையே கிடந்த வழியில் குழலும் யாழும்போல வண்டுகள் இசைபாடின; சுனைப்பூக்களும், கொன்றை மலரும், கொடிப் பூக்களும், காந்தட் பூக்களும், பிற பூக்களும் மலர்ந்து மணங் கமழ்ந்தன. இம் மணங்களை அளாவிக்கொண்டு தென்றல் உலாவும் சிறப்புடையது அவ்வழி;

**உகூ - ௩ரு :** மதுரையின்கண்ணே முரசம் கடல்போன்றும், முகில்போன்றும், இடிபோன்றும் முழங்குந்தோறும் நினது பரங்குன்றத்தில் அதற்கு மாறாக எதிரொலி எழுந்து முழங்கா நிற்கும்;

**௩சு - சகூ :** தலைவியரால் தூது விடுக்கப்பட்ட வண்டுகளின் இசை, அவருடைய காதற் சிறப்பை மதுரைநகரின்கண் புலப்படுத்தியது. அத் தலைவியர்பால் தலைவர்கள் போந்தனர், அங்ஙனம் போந்த தலைவருள் ஒருவன், பரத்தையர் சேரியினின்றும் வந்தான்; அவன் தன் தலைவியின் ஊடல் தவிர்க்கக்

கருதி அவனை நோக்கி, திருப்பரங்குன்றம் களவுப் புணர்ச்சியை யும் இடைவிடாதமைந்த நல்ல புணர்ச்சியையும் தரும் சிறப் புடையது என்றான்;

சஎ - ருO : அதுகேட்ட தலைவி புலந்து கூறுகின்றாள்; ஏடா! இப்பொழுது நின்மேனியில் அயல் மகளிர் மேலுள்ள மணங்கமழா நின்றது. அவரைக் கூடுதற்பொருட்டே நீ காலை யில் என்னைப் பிரிந்து சென்று மாலைதோறும் இங்கே வருகின் றாய். ஆதலின், நீ பண்டு எனக்குச் செய்த சூண் மொழியைத் தவிர்வாயாக;

ருக-ருரு : அதுகேட்ட தலைவன் கூறுகின்றான் : மலருண் கண்ணாய்! இவ்வையையிலுள்ள இரும்பொழிலாணை! பரங் குன்றத்துச் சாரலாணை! பார்ப்பார் ஆணை! அச்சொல் எனக் குப் பொருந்துவதன்று! இம்மணம் திருப்பரங்குன்றத்துள்ள கனியினும் மலரினும் பயின்றுவந்த காற்று என்மேல் வீசியத னால் உண்டாயது. ஆதலால் நீ வருந்தாதேகொள். இங்ஙனம் சூளுற்ற தலைவன் குறிப்பை நோக்கி, ஏடா! நின் சூளை விடு என்றாள் தலைவி;

ருரு - சுஉ : மேல் இவ்வுரையாடலைக் கேட்டுநின்ற தோழி தலைவனை நோக்கி ஏடா! சூளுறுதே! நில்லு! நில்லு! யான் கூறுவது கேட்டபின் சூளுறுக. தகுதியில்லாத மகனே! நீ இடும் ஆணையாலே இவட்கு ஏதம் வரும். இவளோ ஒரு தாய்க்கு ஒரு பெண் என்றாள். அதுகேட்ட தலைவன் அப்படியா! இவள் அங்ஙனம் அருமகளோ! யான் அஃதறிந்திலேன்! என்று கூறிப் பின்னும், இதோ பார், வையை மணலைத் தொடுகின் றேன்; திருப்பரங்குன்றத்தின் அடியைத் தொடுகின்றேன்; என்று சூண் மொழிந்தான்;

சுஉ - எக : அதுகேட்ட தோழி ஏடா! நீ இவ்வாறு ஆணையிடின் அம் முருகனைச் சார்ந்த அணங்கும், அவன் வேற் படையும், உன்னை வருத்தாநிற்கும். பார்ப்பாருடைய அடி தொட்டு ஆணையிடினும் இடலாம். அம் முருகவேளின் மயிலை யும் வேலையும் நோக்கி ஆணையிடாதே! ஏடா! வள்ளிமேலும் ஆணையிடுகின்றாய்; இனி அங்ஙனம் செய்யாதே. அங்ஙனமே வையை மணலையும், திருப்பரங்குன்றத்தையும் கூறி ஆணை யிடாதே என்றாள்;

எஉ - அஉ : மேல், தலைவன் கூறுகின்றான். நேரிழாய்! யாம் இருதலைப் புள்ளின் ஓருயிரனையேம் ஆகலின், எமக்குள் யார் பிரிவது! யார் தருவது! யார் விளைவுவது! யார் விடை யிறுப்பது! பிரிவும் வரவும் வினவும் விடையும் எமக்குள் எவ் வாறு உண்டாகும். நீ இது நினையாமல் ‘நின் ஆணை கொடி

யது' என்கின்றாய். இத் தலைவி என்மேலேற்றிக் கூறிய குற்றம், கனவுமன்று நனவுமன்று வெறும் பொய்யே. நான் இட்டது பொய்யாணையாயின் அது குறித்து இறைவன் என்னை ஒறுப்பான் எனின், இறைவன் அவ்வாறு செய்யாமல் இருத்தற் பொருட்டு ஏடி! தோழி நீயே சென்று அவனடியை வணங்கி, அவன் சினத்தை ஆற்றுவாயாக. ஏவலிளையர்களே! இவ்வுரையை எல்லோர்க்கும் அறிவியுங்கள்; நாம் எல்லோரும் திருப்பரங்குன்றத்தே சென்று மலர் தூவுவோம்: அவியை ஊட்டுவோம்; பாடுவோம்; கிணையை முழக்குவோம்;

**அரு - அகூ;** இங்ஙனம் தலைவன் கூறக்கேட்ட தோழி ஏடா! என்னை நின் சூண்மொழிக்குச் சாந்திசெய்யச் செல்க என்றாய்; இதனாலே நின்சூள் பொய்ச்சூள் என்பதும், அதனால் வரும் ஏதம் நின்னைக் கவரும் என்பதும் அறிந்துகொண்டேன். நின்சூளானே முருகப்பெருமான் வேறுபடுமுன்பே இத் தலைவியே சென்று முருகவேளை வணங்கி நின்சூளால் வரும் துன்பத்தை ஆற்றுவாள். அவள் அவ்வாறு செய்தலை நீயும் காண்பாயாக என்றாள். தோழி கூறியவாறே தலைவியும் தன் கணவனுக்குத் துன்பம் வராதபடி முருகவேள் அடிவணங்கி அப் பெருமான் சினத்தை ஆற்றுவித்தாள்.

**கூ0 - க0அ:** இவ்வாறே, மதுரையினின்று திருப்பரங் குன்றத்திற்குச் செல்லும் வழியின்கண்ணே தலைமகளிர் திரளாகச் சென்று இறைவனை வழிபடச் சந்தனமும், புகைத்தற்குரிய பொருளும், விளக்கமும், மலர்களும், முழவும், மணியும், கயிறும், மயிலும், குடாரியும், பிணிமுகமும் ஆகிய இவற்றையும், இன்னோரன்ன பிறபொருள்களையும் ஏந்திச்சென்று குன்றத்தை எய்தி, தொழுவோரும், வரங்கொள்வோரும், 'வயிறு கருவுறுக!' என வேண்டுவோரும், 'எங்கணவர்க்குச் செய்பொருள் வாய்க்க!' என வேண்டுவோரும், 'எங்கணவர் போரின்கண் வெல்க!' என வேண்டுவோரும் ஆகி, வழிபட்டனர்;

**க0கூ - க உரு:** ஆடுவோர் கொட்டும், தாளவொலியும், பாடுவோர் ஒலியும், குன்றத்தின் எதிரொலியும், கூடுதலாலே பெருமுழக்கம் உண்டாயிற்று. மகளிரும் மைந்தரும் சுனையாடுங்கால் அவர்தம் அணிகலன்கள் மயங்கின. பின்னர்க் காமபானத்தையும் அடிசிலையும் உண்டு தலைமகளிர் தத்தங் கணவன்மாராலே வந்த சோர்வினின்றும் நீங்கினர்;

**க உச - கரு0:** திருப்பரங்குன்றமே! இவ்வாறாகத் தலைவரும் தலைவியரும், வரம் வேண்டும் பிறரும் கூடி, கறைமிடற்றண்ணலும், மாசிலா இறைவியும் ஈன்றளித்த கடம்பமர் செல்வன் திருக்கோயிலை என்றென்றும் வழிபட்டுநிற்ப, மண்வருந்த மழை

*வறந்ததாயினும் நெறிநீர் அருவி மிக்குப் பெருகும் செல்வம் நினக்கு நிலைபெறுவதாக.*

மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசைக் கொடியோனும் புங்கவ மூர்வோனும்
மலர்மிசை முதல்வனு மற்றவ னிடைத்தோன்றி
உலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரும்
மருந்துரை யிருவருந் திருந்துநூ லெண்மரும்
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரு நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரு மமரரு மவுணரும்
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்று கின்றநின் காரண மாகப்
பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கும்
இமயக் குன்றினிற் சிறந்து
நின்னீன்ற நிரையிதழ்த் தாமரை
மின்னீன்ற விளங்கிணரூழா
ஒருநிலைப் பொய்கையோ டொக்குநின் குன்றின்
அருவிதாழ் மாலைச் சுனை ;
முதல்வநின் யானை முழக்கங் கேட்ட
கதியிற்றே காரின் குரல் ;
குரல்கேட்ட கோழி குன்றதிரக் கூவ
மதநனி வாரண மாறுமா றதிர்ப்ப
எதிர்குதிர் ஆகின் றதிர்ப்பு மலைமுழை
ஏழ்புழை யைம்புழை யாழிசைகேழ்த் தன்னவினம்
வீழ்தும்பி வண்டொடு மிஞிறுூர்ப்பச் சுனைமலர்க்
கொன்றை கொடியிண ரூழ்ப்பக் கொடிமலர்
மன்றல மலர மலர்காந்தள் வாய்நாற
நன்றவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத்
தென்ற லசைவரூஉஞ் செம்மற்றே யம்மநின்
குன்றத்தாற் கூடல் வரவு ;
குன்ற முடைத்த வொளிர்வேலோய் கூடல்
மன்றல் கலந்த மணிமுரசி னார்ப்பெழக்
காலொடுமயங்கிய கலிழ்கடலென
மால்கடல் குடிக்கு மழைக்குரலென

ஏறதிர்க்கு மிந்திர னிருமுருமேன
மன்ற லதிரதிர மாறுமா றதிர்க்குநின்
குன்றங் குமுறிய வுரை ;
தூதேய வண்டின் றொழுதி முரல்வவர்
காதன்மூ தூர்மதில் கம்பலைத் தன்று
வடுவகிர் வென்றகண் மாந்தளிர் மேனி
நெடுமென் பணைத்தோட் குறுந்தொடி மகளிர்
ஆராக் காம மார்பொழிற் பாயல்
வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி
முடியா நுகர்ச்சி முற்றாக் காதல்
அடியோர் மைந்த ரகலத் தகலா
அலர்ஞெமன் மகன்றி னன்னர்ப் புணர்ச்சி
புலரா மகிழ்மறப் பறியாது நல்கும்
சிறப்பிற்றே தண்பரங் குன்று ;
இனிமன்னு மேதிலர் நாறுதி யாண்டுப்
பனிமலர்க் கண்ணரோ டாட நகைமலர்
மாலைக்கு மாலை வரூஉம் வரைசூணில்
காலைப்போய் மாலை வரவு ;
இனிமணல் வையை யிரும்பொழிலுங் குன்றப்
பனிமொழி சாரலும் பார்ப்பாரும்...........
துனியன் மலருண்கண் சோல்வேறு நாற்றம்
கனியின் மலரின் மலிர்கால்சீப் பின்னது
துனிய னனிநீநின் சூள் ;
என்பாணி நின்னி லேலாஅபாணி நீநின்சூள்
சான்றுள ரீன்ற தகாஅத்த காஅமகாஅன்
ஈன்றாட் கொருபெண் இவள் ;
இருண்மையீ ருண்க ணிலங்கிழை யீன்றாட்
கரியளோ வாவ தறிந்திலே னீதா
வருபுனல் வையைமண றேட்டேன் றருமணவேள்
தண்பரங் குன்றத் தடிதோட்டேன் என்பாய்
கேளிர் மணலின் கெழுவு மிதுவோ
ஏழுலகு மாளி திருவரைமே லன்பளிதோ
என்னை யருளி யருண்முருகு சூள்சூளின்
நின்னை யருளி லணங்கான்மெய் வேறின்னும்

விறல்வெய்யோ னூர்மயில் வேனிழ னோக்கி
அறவ ரடிதொடினும் ஆங்கவை சூளேல்
குறவன் மகளாணை கூறேலா கூறேல்
ஐய சூளின் அடிதொடு குன்றொடு
வையைக்குத் தக்க மணற்சீர்சூள் கூறல்
யார்பிரிய யார்வர யார்வினவ யார்செப்பு
நீருரைசெய் நீர்மையில் சூளேன்றி நேரிழாய்
கயவாய நெய்தலலர் கமழ்முகை மணநகை
நயவரு நறவிதழ் மதருண்கண் வாணுதல்
முகைமுல்லை வென்றெழின் முத்தேய்க்கும் வெண்பல்
நகைசான்ற கனவன்று நனவன்று நவின்றதை
இடுதுனி கையாறு வெற்றுயர் கூரச்
சுடுமிறை யாற்றிசி னடிசேர்ந்து சாற்றுமின்
மிக, ஏற்றுதுமல ரூட்டுது மவி
தேற்றுதும் பாணி எழுதுங் கிணைமுருகன்
தாட்டொழு தண்பரங் குன்று ;
தெரியிழாய் செல்கென்றாய் எல்லாயாம் பெற்றேம்
ஒருவர்க்கும் பொய்யாநின் வாயில்சூள் வேளவல்
பருவத்துப் பன்மாணீ சேறலிற் காண்டை
எருமை யிருங்தோட்டி எள்ளீயும் காளை
செருவஞ் செயற்கென்னை முன்னைத்தன் சென்னி
அருள்வயினுற் றாங்கு மணிகையாற் றுக்கி
நிரைவளை ஆற்றிருஞ் சூள் ;
வளிபொரு சேட்சிமை வரையகத்தால்
தளிபெருகுந் தண்சினைய
பொழில்கொளக் குறையாமலரக்
குளிர்பொய்கை யளறுநிறைய
மருதநளி மணன்ஞெமர்ந்த
நனிமலர்ப் பெருவழிச்
சீறடியவர் சாறுகொள வெழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்
மணியுங் கயிறு மயிலுங் குடாரியும்

பிணிமுக முளப்படப் பிறவு மேந்தி
அருவரைச் சேராத் தொடுநர்
கனவிற் றொட்டது கைபிழை யாகாது
நனவிற் சேஎப்பநின் னளிபுனல் வையை
வருபுனல் அணிகென வரங்கொள் வோரும்
கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்
ஐயம ரடுகென வருச்சிப் போரும்
பாடுவார் பாணிச்சீரு மாடுவா ரரங்கத் தாளமும்
மஞ்சாடு மலைமுழக்கும்
துஞ்சாக் கம்பலைப்
பைஞ்சுனைப் பாஅ யெழுபாவையர்
ஆயித முண்க ணலர்முகத் தாமரை
தாட்டா மரைத்தோட் டமணியக் கயமலர்
தங்கைப் பதுமங் கொங்கைக் கயமுகைச்
செவ்வா யாம்பல் சென்னீர்த் தாமரை
புனற்று மரையொடு புலம்வேறு பாடுறக்
கூரெயிற்றார் குவிமுலைப் பூணொடு
மார னொப்பார் மார்பணி கலவி
அரிவைய ரமிர்தபானம்
உரிமை மாக்க ளுவகையமிர் துய்ப்ப
மைந்தர் மார்வம் வழிவந்த
செந்தளிர் மேனியார் செல்ல றீர்ப்ப
எனவாங்கு
உடம்புணர் காதலரு மல்லாருங் கூடிக்
கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற் றண்ணற்கு மாசிலோ டந்த
நெறிநீர் அருவி யசும்புறு செல்வ
மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
தண்பரங் குன்ற நினக்கு.

கடவுள் வாழ்த்து

[1]ஆசிரியன் நல்லந்துவனார் பாட்டு; [2]மருத்துவன் நல்லச்சுதனார் இசை;
பண்ணுப் பாலையாழ்.

1. 'ஆசிரியர் நல்லந்துவனார்' 'ஆசிரிய நல்லந்துவனார்' 'ஆரிய நல்லந்துவனார்.' 2. 'மருத்துவ நல்லச்சுதனார்.'

## உரை

**க - கக : மண்மிசை..............................நிகர்க்கும்**

**(இ - ள்.)** (கஎ) முதல்வ - உயிர்களுக்குத் தலைவனே!, (உக) குன்றம் உடைத்த ஒளிர் வேலோய் - கிரௌஞ்ச மலையை உடைத்த ஒளிருகின்ற வேற்படையை ஏந்திய முருகப் பெருமானே!, பரங்குன்று - நினது திருப்பரங்குன்றம், அவிழ் துழாய் மலர் - மலர்ந்த துழாய் மாலையையும், தரு செல்வத்து - உயிரினங்கட்கு வழங்குதற்குரிய செல்வத்தினையும், மிசைப்புள் கொடியோனும் - மேலே கருடப்பறவையை எழுதப்பட்ட கொடியையும் உடைய திருமாலும், புங்கவம் ஊர்வோனும் - ஆனேற்றினை ஏறிச் செலுத்தும் சிவபெருமானும், மலர் மிசை முதல்வனும் - தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் பிரமதேவனும், அவனிடைத் தோன்றி உலகு இருள் அகற்றிய பதின் மரும் இருவரும் - அப் பிரமதேவனிடத்தினின்றும் தோன்றி உலகின்கண் நிலவும் இருளைப்போக்கிய ஆதித்தர் பன்னிருவரும், மருந்து உரை இருவரும் - தேவ மருத்துவராகிய அசுவனி தேவர் இருவரும், திருந்து நூல் எண்மரும் - திருந்து தற்குக் காரணமான மெய்ந்நூல்களை உணர்ந்த வசுக்கள் எண்மரும், ஆதிரை முதல்வனின் கிளந்த நாற்பதின்மரும் பன்னொருவரும் - திருவாதிரை நாளிற்குரிய உயிர்முதல்வனாகிய சிவபெருமானுடைய பெயராலே சொல்லப்பட்ட தலைவர் பதினொரு உருத்திரரும், நல்திசை காப்போரும் - நல்ல திசையினைக் காக்கும் திசைகாவலர் எண்மரும், யாவரும் - ஆகிய இவரெல்லாரும், அமரரும் அவுணரும் பிறரும் - இவரல்லாத தேவரும் அவுணர்களுமாகிய ஏனையோரும், மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும் - உளம் பொருந்தி உணர்ந்து கோடற்குரிய வேதத்தை உணர்ந்த சிறந்த தவவொழுக்கமுடைய தெய்வ முனிவர்களும், நின் காரணமாக மண்மிசைப் படுத்து ஆகின்று - பெருமானே நின்னைக்காணும் பொருட்டு இம் மண்ணுலகத்தின் கண் வந்து தங்குதற்குரிய இடமாகாநின்றது, இமயக் குன்றம் நிகர்க்கும் - ஆதலால் இக் குன்றம் இமயமலையையே ஒக்கின்றது;

**(வி - ம்.)** முதல்வ! நின் பரங்குன்றம், நின்னைக் காணத் தேவரும், அவுணரும், முனிவரும் வந்து தங்கும் இடமாதலால், அது தேவர் முதலியோர் தங்கும் இமயமலையை ஒக்கின்றது என்க.

புள் - கருடப்பறவை புள்மிசைக் கொடியோன் - திருமால். புங்கவம் ஊர்வோன் - சிவ பெருமான்; புங்கவம் - காளை. மலர்மிசை முதல்வன் - பிரமதேவன். பதின்மரும் இருவரும் - பன்னிருவரும். மருந்துரை யிருவரும் - தேவமருத்துவர் இருவரும். திருந்துநூல் - மெய்ந்நூல். எண்மர் - வசுக்கள். ஆதிரைமுதல்வன் - ஆதிரைநாட்

குரிய தலைவனாகிய சிவபெருமான் என்க. அவன் பெயர், உருத்திரன் என்பது. நாதர் - தலைவர். மேவரும் - உணர்தல் அரிய என்க. முதுமொழி - வேதம். விழுத்தவம் - சிறந்த தவம். பற்று - உறையுமிடம். ஆகின்று - ஆகாநின்றது.

(பரிமே.) உ. புங்கவம் - ஏறு.

ச. உலகின்கண் இருள்.

சு - எ. ஆதிரை முதல்வன் பெயராற் சொல்லப்பட்ட நாதர் - உருத்திரர்.

கக. அவர் பழைய இடமாகிய இமயக் குன்றத்தை ஒக்கும்

கஉ - கசு: இமய....................சுனை

(இ - ள்.) நின் குன்றின் அருவிதாழ் மாலைச் சுனை - பெருமானே நினது திருப்பரங்குன்றின் கண் அருவிநீர் தங்கும் நிரல்பட்ட சுனை, இமயக் குன்றினிற் சிறந்து - அவ்விமய மலையின் கண்ணுள்ள ஏனைச் சுனைகளினுங் காட்டிற் சிறப்பு எய்தி, நின் ஈன்ற நிரையிதழ்த் தாமரை மின் ஈன்ற விளங்கு இணர் ஊழா - நின்னை ஈனுதற்கு இடமான நிரைத்த இதழ்களையுடைய தாமரையினது மின்னல்போல விளங்கும் இதழ்த் தொகுதி என்றும் உதிராத தெய்வத் தன்மையுடைய, ஒரு நிலைப் பொய்கையோடு ஒக்கும் - வற்றாமல் என்றும் ஒரேநிலையில் இருக்கும் சரவணப் பொய்கையை ஒக்கும்;

(வி - ம்.) இமயக்குன்றினில் உள்ள ஏனைச் சுனைகளினுங் காட்டிற் சிறப் பெய்தி என்க. 'நின்னீன்ற' என்பது அதற்குக் குறிப்பேதுவாய் நின்றது. இணர், ஈண்டு இதழின் தொகுதி. அருவிதாழ்- 'அருவி தங்கும் சுனை' என்பர் பரிமேலழகர். மாலை - ஒழுங்கு.

கஎ - உக: நின் யானை.

(இ - ள்.) நின் யானை முழக்கம் காரின் குரல்கேட்ட கதியிற்று - பெருமானே நின் ஊர்தியாகிய யானையினது பிளிற்றொலி முழக்கம் முகிலினது இடிக்குரல் கேட்ட தன்மைத்து, குரல் கேட்ட கோழி குன்று அதிரக் கூவ - அவ்வியானையினது முழக்கங்கேட்ட நினது கோழிச்சேவல் வெருவிக் குன்றம் அதிரும்படி கூவாநிற்றலானும், மணிமத வாரணம் மாறு மாறு அதிர்ப்ப - அக் கோழியின் கூக்குரல் கேட்குந்தோறும் மிக்க மதத்தையுடைய நினது யானையும் பிளிறாநிற்றலானும், மலைமுழை அதிர்ப்பு எதிர்குதிர் ஆகின்று - திருப்பரங்குன்றத்தின் முழையின்கண் எழுகின்ற எதிரொலி அவ் வொலிகளுக்கு மறுதலையாகா நின்றது;

(வி - ம்.) யானை - முருகப்பெருமான் ஊர்தியாகிய பிணிமுகம் என்னும் யானை என்க. காரின் குரல் கேட்ட கதியிற்று என மாறுக. கதியிற்று - தன்மைத்து. யானை முழக்கம் இடிமுழக்கத்தைக் கேட்பது போன்றிருக்கும் என்றவாறு. நின் என்பதனைக் கோழிக்குங் கூட்டுக. "குன்றெதிர் கூவக் கூவுதலானும்" என்னும் பரிமேலழகர் உரையான் அவர் 'குன்றெதிரக் கூவ' என்றே பாடங்கொண்டனர் என்பது உணரப்படும். எதிர்குதிர் - மறுதலை. முழை - குகை. அதிர்ப்பு - முழக்கம்; ஈண்டு எதிரொலி. ஆகின்று - ஆகாநின்றது.

(பரிமே.) கக. கேட்ட என்பதனை வாரணத்தொடுங் கூட்டுக.

உக. எதிர் குதிர் - ஒருபக்கவழக்கு.

உஉ - உஅ: ஏழ்புழை..................வரவு

(இ - ள்.) (உ௨ - ௮) அம்ம நின் குன்றத்தால் கூடல் வரவு - பெருமானே நினது திருப்பரங் குன்றத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் வழி, ஏழ்புழை ஐம்புழை யாழ் இசை - ஏழு துளையையுடைய குழலிடத்தும் ஐந்து துளையையுடைய குழலிடத்தும் யாழினிடத்தும் பிறந்த இசையைப் போன்று, கேழ்த்து அன்ன இனம் வீழ் தும்பி வண்டொடு மிஞிறு ஆர்ப்ப - நிறத்தாலே ஒத்த தம் இனத்தை விரும்புதலையுடைய தும்பியும் வண்டும் மிஞிறும் இசை பாடாநிற்பவும், சுனை மலர - சுனைகள் நீர்ப்பூக்களைப் பூவாநிற்பவும், கொன்றை கொடி இணர் ஊழ்ப்ப - கொன்றை மரங்கள் கொடிபோன்று நீண்ட பூங்கொத்துக்களை மலராநிற்பவும், கொடி மலர் மன்றல மலர - முல்லைமுதலிய கொடிகளின் மலர்கள் நறுமணமுடையவாய் மலராநிற்பவும், மலர் காந்தள் வாய் நாற - மலர்ந்த காந்தட்பூ இடமெல்லாம் மணங்கமழாநிற்ப, நன்று அவிழ் பன்மலர் நறை பனிப்ப நாற - இவைகளேயன்றி நன்றாக மலர்ந்த பலவாகிய ஏனைப்பூக்களும் தேன் துளிப்பவும் மணங்கமழாநிற்பவும், தென்றல் அசைவரும் செம்மற்று - அந் நறுமணங்களை அளவித் தென்றற்காற்றும் தவழும் தலைமையினையுடையது;

(வி - ம்.) அம்ம: கேட்பித்தற் கண் வந்தது. ஏழ்புழை ஐம்புழை: அன்மொழித் தொகை; ஏழு துளையினையுடைய குழலுக்கும் ஐந்து துளையினையுடைய குழலுக்கும் பெயராய் நின்றன. புழை - துளை. இசைபோல ஆர்ப்ப என்க. கேழ்த்து - நிறத்தால். வீழ் - விரும்பும். தும்பி வண்டு மிஞிறு என்பன வண்டுகளின் சாதிவேற்றுமை. வண்டொடு என்புழி ஓடுச்சொல் எண்ணுப் பொருட்டாகலின் உம்மையாக்கித் தும்பியும் வண்டும் மிஞிறும் என ஏனையவற்றோடும் ஒட்டுக. சுனை தன்கண்ணுள்ள பூவை மலர என்க. கொடியிணர் - நீண்டகொத்து. ஊழ்ப்ப - மலர. நறை - தேன்; இவற்றோடு தென்றலும் அசைவரும் என்க. செம்மற்று - தலைமைத் தன்மையுடையது. குன்றத்தால்: வேற்றுமை மயக்கம். வரவு - நடைபாதை; வழி.

நின் குன்றினின்றும் கூடலுக்குச் செல்லும்வழி செம்மற்று என முடிக்க.

(பரிமே.) உஉ. எழுதுளையான வங்கியத்தும் ஐந்து துளையான வங்கியத்தும் யாழினும் பிறந்த இசைச்சுருதி யொத்து.

உஅ. நின் குன்றத்தொடு கூடலிடைவழி.

உகூ - ௩௫ : கூடல்...................குழுறிய வுரை

(இ - ள்.) கூடல் மன்றல் கலந்த மணிமுரசின் ஆர்ப்பு எழ - மதுரையின்கண் மணம் பொருந்திய மணிநிறமுடைய முரசத்தின் முழக்கம் எழுந்ததாக, மன்றல் - அந்த மணமுரசம், காலொடு மயங்கிய கலிழ கடல் என - காற்றால் ஏறுண்ட புடை பெயர்ச்சியையுடைய கடல் போலவும், மால் கடல் குடிக்கும் மழைக் குரல் என - காற்றானே மயங்கும் அக் கடல்நீரைப் பருகாநின்ற முகிலினது முழக்கம் போலவும், இந்திரன் ஏறு அதிர்க்கும் இரும் உரும் என - இந்திரனுடைய இடியேறு முழக்கும் பெரிய இடிமுழக்கம் போலவும், அதிர அதிர - முழங்குந் தோறும் முழங்குந் தோறும், நின் குன்றம் குழுறிய உரை - நின்னுடைய திருப்பரங்குன்றம் முழங்கிய முழக்கம், மாறுமாறு அதிர்க்கும் - அம முழக்கத்திற்கு மாறுமாறாக முழங்கா நிற்கும்;

(வி - ம்.) கூடல் - மதுரை. மன்றல் - மணம். மணிமுரசு - மணிபோன்ற நிறமுடைய முரசம் என்க. கால் - காற்று. கலிழ்கடல் - புடை பெயர்ச்சியுடைய கடல். மால் - மயக்கம். மழை - முகில். இந்திரனுடைய இடிஏறு என்க. மன்றல்: முரசிற்கு ஆகுபெயர். மாறுமாறு - எதிரெதிராக. குழுறிய - முழங்கிய. உரை - முழக்கம். இதுகாறும் முருகவேளை எதிர்முகமாக்கி வாழ்த்தியது.

(பரிமே.) ௩௫. முழக்கம் மலைக்கு வார்த்தை போறலின் 'உரை' எனப்பட்டது.

௩௬ - ௪௬ : தூதேய.........................குன்று

(இ - ள்.) தூது ஏய வண்டின் தொழுதி முரல்வு - தலைவியரானே தூதாக விடப்பட்டுத் தலைவர்களோடே மீண்ட வண்டுக்கூட்டத்தினது இசை, அவர் காதல் மதில் மூதூர் கம்பலைத்தன்று - அத் தலைவியரின் காதற்பெருக்கத்தை மதிலையுடைய பழைமை பொருந்திய மதுரைக்கண் உள்ளார் அறிந்து கொள்ளற்குக் காரணமானதொரு ஆரவாரமாயிற்று, (அங்ஙனம் வண்டு தூதுரைப்ப வந்த தலைவருள் ஒருவன் தலைவியை நோக்கி) தண்பரங்குன்று - என் அன்பே! குளிர்ந்த திருப்பரங் குன்று, வடுவகிர் வென்ற கண் மாந்தளிர் மேனி நெடுமென் பணைத்தோள் குறுந்தொடி மகளிர் - மாவடுவின் பிளப்பினை

வென்ற விழிகளையும் மாவினது தளிர்போன்ற நிறத்தினையும் நீண்ட மெல்லிய மூங்கிலை ஒத்த தோளினையும் குறிய வளையலையும் உடைய மகளிரது, ஆராக் காமம் - நுகர்ந்தமையாத காம வின்பத்தினை, வரை அகத்து ஆர் பொழில் பாயல் இயைக்கும் வரையா நுகர்ச்சி - மலைச்சாரலிலே பொருந்திய சோலையின்கண்ணே பூம்பாயலிலே தலைவரோடு கூட்டாநின்ற களவுப் புணர்ச்சியினையும், அடியோர் மைந்தர் அகலத்து அகலா அலர் ஞெமன் மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி முற்றாக் காதல் முடியா நுகர்ச்சி - வரைந்துகொண்டு தங்கணவர் அடியுறையும் மகளிர் தங்கணவர் மார்பகத்தினைப் பிரியாமல் மலரின்கண் திரியும் மகன்றிற் பறவைகளின் நல்ல புணர்ச்சியை ஒத்த முதிர்தல் இல்லாத காதலோடு ஒழியாத இன்ப நுகர்ச்சியினையும் உடைய, புலரா மகிழ் - உலராத கற்பிற் புணர்ச்சியினையும், மறப்பு அறியாது நல்கும் சிறப்பிற்று - மறவாமே காதலர்களுக்கு அளிக்கும் சிறப்பினையுடைத்து என்றவாறு ;

(வி - ம்.) 'தாதேய வண்டூன் தொழுதிமூதூர் மதில் கம்பலைத்து' என்றது தலைமக்கள் வருகையினைக் கூறியபடியாம்.

ருஅ. 'வடுவகிர்' என்பது தொடங்கி, பரத்தையிற் பிரிந்துவந்தானொரு தலைவன் கூற்றும் தலைவி கூற்றும் தோழி கூற்றுமாய்க் கூறு முகத்தானே மேலே திருப்பரங்குன்றத்தை வாழ்த்துகின்றார்.

ஏய - ஏவப்பட்ட. தொழுதி - கூட்டம். முரல்வு - இசை. மதில் மூதூர் என மாறுக. கம்பலைத்தன்று - கம்பலையை உண்டாக்கியது. வடுவகிர் - மாவடுவின் பிளப்பு. பணை - மூங்கில். குறுந்தொடி மகளிர் என்றது களவொழுக்கமுடைய மகளிரை. வரையகத்து ஆர்பொழில் என மாறுக. பூம்பாயலின்கண் என்க. முடியா நுகர்ச்சி - நுகர்ந்து போதுமென அமைதற்கியலாக் காம நுகர்ச்சி என்க. முற்றாக் காதல் - முதிர்ந்து பதனழியாத காதல் என்க.

அடியோர் - வரைந்துகொண்டு கணவரோடு உடனுறையும் கற்பொழுக்கமுடைய மகளிர். ஞெமல் - திரியும். மகன்றில் - ஒருவகைப் பறவை. இப் பறவை ஒருபொழுதும் பிரிவினைப் பொறாது வருந்தும் இயல்புடையன ; இதனை, "பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன நீர் உறை மகன்றிற் புணர்ச்சி" (ருஎ) எனவரும் குறுந்தொகைச் செய்யுளானும் உணர்க. புலரா மகிழ் - கெடாத இன்பம் என்க.

தலைவன் தலைவியை நோக்கித் திருப்பரங்குன்றம் களவினும் கற்பினும் காதலோர்க்கு மறவாது இன்பம் நல்கும் சிறப்புடைத்து என்று கூறினான் என்க.

இதுகேட்ட தலைமகள் பொறாது புலந்து மேலே கூறுகின்றாள்:

சஎ - ருo : இனிமன்னும்..................மாலைவரவு

(இ - ள்.) இனி ஏதிலார் மன்னும் நாறுதி ஏடா! நீ இப்பொழுது அயல் மகளிருடைய மணத்தினை மிகவும் மணக்கின்

றனை, ஆண்டுப் பனிமலர்க் கண்ணுரோடு ஆட - அவ்விடத்தே நீ குளிர்ந்த மலர்போன்ற கண்ணினையுடைய அம் மகளிரோடு கூடி ஆடும்பொருட்டே, காலைப் போய் மாலை வரவு - நாள் தோறும் காலைப்பொழுதிலே பிரிந்துபோய் மாலைப்பொழுதிலே ஈண்டு வரும் வருகை, நகைமலர் மாலைக்கு மாலை வருஉம் - ஒளிமலரையுடைய மாலைதோறும் நிகழாநின்றது, வரைசூள் நில் - இங்ஙனமாதலின் நீ பண்டு நின்னிற் பிரியேன் பிரியின் உயிர்வாழேன் என வரைந்து கூறிச் செய்த சூண்மொழியைத் தவிர்வாயாக என்று தலைவி கூறாநிற்ப ;

**(வி - ம்.)** இனி - இப்பொழுது. ஏதிலர் - அயலோர் : என்றது பரத்தையரை. 'ஏதிலர் நாறுதி' என்றது, நீ பரத்தையரோடு ஆடி வருதலாலே அவர் அணிந்த மணம் நின்மேல் கமழாநின்றது என்றவாறு.

பனி - குளிர். ஆட : இடக்கரடக்கு. நகைமலர் - ஒளியுடைய மலர். மாலைக்கு மாலை - மாலைதோறும். வருஉம் - நிகழும். வரை சூள் - வரைந்துகூறும் சூள் என்க. நில் - தவிர்க என்னும் பொருட்டு.

(பரிமே.) சகூ. 'மாலைக்குமாலை' என்றது அடிக்கடி என்றாற் போல நின்றது.

ருக - ருரு : **இனிமணல்......................நின்சூள்**

**(இ - ள்.)** மலர் உண்கண் இனி மணல் வையை இரும் பொழிலும் குன்றப் பனிபொழி சாரலும் பார்ப்பாரும் (..........)- அதுகேட்ட தலைவன் தலைவியை நோக்கித் தாமரைமலரை ஒத்த மையுண்ட கண்ணையுடையோய் இனிய மணலையுடைய வையைக்கண் உள்ள பெரிய பொழிலானை திருப்பரங்குன்றத் தினது சாரலானை பார்ப்பாரானை, சொல்வேறு - நீ கூறிய சொல் எனக்குப் பொருந்தாத வேறு சொல்லாயிற்று, துனியல்- இங்ஙனம் பொருந்தாத கூறி வருந்தாதேகொள், நாற்றம் - என்மேற் கமழும் இம் மணம, கனியின் மலரின் கால் சிப்பின்னது - திருப்பரங்குன்றத்திலுள்ள கனியினும் மல ரினும் பயின்றுவந்த காற்று என்மேலும் அடித்தமையாலே உண்டாகியது, நனி துனியல் - ஆதலால் நீ இவ்வாறு மிகவும் வருந்தாதேகொள் என்றான், நின் சூள் (சகூ) நில் - அதுகேட்ட தலைவி தலைவனை நோக்கி ஏடா! நீ இவ்வாறு பொய்ச் சூளுறு தலைத் தவிர்வாயாக என்றாள் ;

**(வி - ம்.)** இனிமணல் - இனிய மணல். இரும்பொழில் - பெரிய சோலை. குன்றம் - திருப்பரங்குன்றம். ருரு-ஆம் அடியின் இறுதிச் சீர் அழிந்தொழிந்தது. அது சூள் என்னும் பொருளுடையதுபோலும்.

துனியல் - வருந்தாதே. மலருண்கண் : அன்மொழித் தொகை விளியேற்று நின்றது. சொல்வேறு என்றது நின்சொல் அதற்குரிய உண்மைத்தன்மையின் வேறுபட்டது என்றவாறு. பொருந்தாச்

சொல் என்க. மலிர்தல் - பயிலுதல். சேப்பினது எனற்பாலது சேப்பின்னது என விரித்தல் விகாரமெய்தி நின்றது. சேத்தலான் உண்டானது என்க. சேத்தல் - விசுதல்: நனிதுனியல் என மாறுக. எனக் கூட்டுக.

(பரிமே.) மேல் தலைமகள் வையை மணலையும் பரங்குன்றத்தையும் சூளுற்றான் குறிப்பு நோக்கி, நீ நின் சூளை விடு என.

ருஎ - ருஅ : என்பாணி.....................ஒரு பெண் இவள்

(இ - ள்.) எலா சான்றோர் ஈன்ற தகாஅத் தகாஅ மகாஅன் - இவ்வாறு நிகழ்ந்த தலைவன் தலைவி உரையாடலைக் கேட்டுநின்ற தோழி தலைவனை நோக்கி யடா சான்றோர் ஈன்ற மிகத் தகுதியில்லாத மகனே!, என் பாணி நில்நில்-யான் நினக்கு ஒன்று கூறுவேன் அது கூறி முடியுந்துணையும் நில்லு நில்லு, இவள் ஈன்றாட்கு ஒரு பெண் - இத் தலைவி இவளை ஈன்றாட்கு ஒரே பெண்ணாக உள்ளவள் இதனை மனத்துக்கொள்வாயாக என்றாள் ;

(வி - ம்.) எலா-யடா. தகாஅத் தகாஅ: ஒருபொருட் பன்மொழி: மிகவும் தகுதியில்லாத என்க. சான்றோர் ஈன்ற மகன் என்பது குறிப்புமொழி. சாலாதார் ஈன்ற மகனே என்றவாறு. மகன் என்பது இடைநின்ற குறில் நெடிலாகி அளபெடுத்து இசைநிறைத்து மகாஅன் எனநின்றது; அது விளியேற்று நின்றது.

'ஈன்றாட்கு இவள் ஒருபெண்' என்றது, நீ இவ்வாறு பொய்ச் சூளுறுதல் காரணமாக நினக்கு ஏதம் வருமிடத்து இவளும் இறந்துபடுவாள்; இறப்பளேல் இவளன்றி மகவேறு இல்லாத இவள் பெற்றோரும் இறந்துபடுதல் ஒருதலை ஆதலான் இவ் உண்மையை மனத்துட் கொண்டு நீ ஒழுகுதல் வேண்டும் என்றித்துணையும் குறிப்பான் உணர்த்திநின்றது.

பாணி - காலம். நில்நில் என்றது, பொறுமையுடன் நின்று என் கூற்றை உன்னிப்பாய்க் கேள் என்பது படநின்றது.

இங்ஙனம் கூறிய தோழி மேலும் தலைவனை நோக்கிக் கூறுகின்றாள்.

(பரிமே.) எலா, நினக்கு இச் சூளான் ஏதம்வரின் இவள் இறந்துபடும் என்பது கூறிப் பின்னும், அவன் கூற்றைக்கொண்டு கூறுகின்றாள்.

ருகூ - சுக : இருள்........................அம்பலிதோ

(இ - ள்.) இருள் மை உண் ஈர் கண் இலங்கு இழை - இருண்ட மையுண்ட குளிர்ந்த கண்களையும் விளங்குகின்ற அணிகலன்களையுமுடைய இவள், ஈன்றாட்கு அரியளோ ஆவது அறிந்திலேன் - இவளைப் பெற்ற தாய்க்கு ஒரே பெண்ணாம்

அருமையுடையளோ அங்ஙனம் அரியளாதலே யான் இதுகாறும் அறிந்து கொண்டேன் இல்லையே, ஈதா வருபுனல் வையை மணல் தொட்டேன் மணம் தருவேள் தண்பரங் குன்றத்து அடிதொட்டேன்-இதோபார் ஒழுகும் நீரையுடைய இவ்வையை யாற்றின் கடவுட்டன்மையுடைய மணலைத் தொட்டு ஆணையிடு கின்றேன் காதலர்க்கு இருவகைப் புணர்ச்சியையுந்தரும் செவ் வேளுக்குரிய குளிர்ந்த இத் திருப்பரங்குன்றத்தின் அடியைத் தொட்டு ஆணையிடுகின்றேன், என்பாய் - என்று (யான் கூறிய தனைக் கேட்டபின்னரும்) பொய்யாணையே இடாநின்றாய், கேளிர் மணலின் கெழுவும் இதுவோ - ஏடா கேளிரை ஒத்த இம் மணலின்கண் நினக்குள்ள அன்புரிமையும் இத்தகைய பொய்மையுடையது தானோ, ஏழ் உலகும் ஆளி திருவரைமேல் அன்பு அளிது - ஏழுலகங்களையும் காத்தருளும் முருகப் பெரு மானுடைய திருப்பரங்குன்றத்தின்பால் நீ கொண்டுள்ள அன்பும் இரங்கத்தக்கதே ஆகும்;

(வி - ம்.) இருள் என்பது முதலாக குன்றத்தடி தொட்டேன் என்பது முடியத் தலைவன் கூற்றைத் தோழி கொண்டு கூறியது. இலங்கிழை : அன்மொழித்தொகை. அறிந்திலேன் என்றது, குறிப்பு மொழி. நீ சொல்லாமலே எனக்கிது தெரியும் என்றவாறு.

'என்பாய்' என்றது, மீண்டும் பொய்ச்சூளே மொழிகின்றாய் என்பதுபட நின்றது. மணந்தருவேள் எனமாறுக. என்றது முன் னர்த் தலைவன் "தண்பரங்குன்று வரையா நுகர்ச்சியும் அகலா மகன்றினன்னர்ப்புணர்ச்சியும் நல்கும்" என்றதனைக் கருதிக் கூறிய படியாம். வேள் - செவ்வேள்; முருகன்.

வையை மணல் தாயர்மடியிற் றவழ்வதுபோன்று தவழ்ந்து விளை யாட இடனுதல்பற்றிக் 'கேளிர் மணல்' என்றாள். கெழுவு - அன் புரிமை. நின் அன்பு பொய்யன் பென்பாள், 'அளிது' என்றாள். ஏழுலகு என்றது, மூன்று பகுதியாய் ஏழு ஏழாயமைந்த உலகங்கள் என்றவாறு. எனவே அனைத்துலகும் ஆள்பவன் என்றாளாயிற்று. திருவரை - திருப் பரங்குன்றம்.

(பரிமே.) சுO. ஈதா என்பது ஒரு மரூஉ முடிவு; அஃது இக் காலத்து இந்தா (இதோ) என்று வழங்கப்படும்; சுட்டுநீண்டது.

சுக. மணத்தைத் தரும் வேள்.

சுரு - எக: என்னை.....................சூள் கூறல்

(இ - ள்.) என்னை அருளி அருள் முருகு சூள் சூளின் - (மேற்கூறியவாறு தலைவனைப் பழித்த தோழி பின்னும் அவனை நோக்கி) ஏடா! இங்ஙனமே நீ பொய்ச்சூள் மொழியும் இயல் புடையை ஆதலின் நீ எனக்கு அருள் செய்யாது பரத்தமை யுடையையாயிருந்தும் எனக்கு அருள் செய்வதாகச் சொல்லித் திருவருளையுடைய முருகப் பெருமான்மிசை சூளுறுவாயாயின்,

நின்னை அருள்இல் அணங்கான் மெய்ப்வேல் தின்னும் - அங்ஙனம் பொய்ச்சூண் மொழியும் நின்னை அப் பெருமானைச் சார்ந்த அருள் இல்லாத தெய்வங்களுடனே அவனுடைய மெய்மைத் தன்மையுடைய வேற்படையும் பெரிதும் வருத்தாநிற்கும், அறவர் அடி தொடினும் - நீ சூண் மொழிவதாயின் பார்ப்பார் அடியைத் தொட்டு மொழியினும் மொழிக, விறல் வெய்யோன் ஊர்மயில் வேல் நிழல் நோக்கி அவை சூளேல் - வெற்றியையே விரும்பும் முருகப் பெருமான் ஊர்ந்து செல்லுதற்குரிய மயிலும் அவன் ஏந்தும் வேற்படையின் ஒளியும் ஆகிய இவற்றை நோக்கிச் சூள் மொழியாதேகொள், குறவன் மகள் ஆணை கூறு ஏலா கூறேல் - மேலும் அப் பெருமானுடைய கிழத்தியாகிய குறவன்மகள் வள்ளியின் மேலும் ஆணை கூறத் துணிகின்ற ஏடா அதனையும் கூறாதேகொள், ஐய சூளின் - ஐயனே நீ இனிச்சூள் கூறுவாயாயின் நீ முன் கூறியபடி, அடிதொடு குன்றொடு வையைக்குரு நக்கசீர் மணல் சூள் கூறல் - சான்றோரானே வணங்கப்படும் திருப்பரங்குன்றத்தின் மேலும் வையையாற்றிற்குத் தகுந்த புகழுடைய மணலின்மேலும் சூள் மொழியாதே கொள் என்றாள்;

(வி - ம்.) என்னை என்றது - தலைவிக்குந் தனக்கும் வேற்றுமை கருதாமற் கூறியபடியாம். தலைவிக்கு அருள் செய்வதாக என்பது கருத்து. அருளில் அணங்கு - அருளில்லாத தீண்டிவருத்தும் தெய்வம். அணங்கான் என்புழி ஆன் உருபு ஒடு உருபின் பொருட்டு. முருகனுக்கு வேல் ஞானசத்தியாகலின் மெய்வேல் என்றாள். மிகுதியும் வருத்தும் என்பது தோன்றத் தின்னும் என்றாள். தின்னும் - வருத்தும். தின்பது போன்று வருத்தும் என்றபடியாம். ஆசிரியர் திருவள்ளுவனாரும்,

> "கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
> தின்னும் அவர்க்காண லுற்று." (குறள் - கஉ௬௪.)

என்று ஓதியமை உணர்க.

விறல் வெய்யோன் : முருகன்; வெற்றியையே விரும்புபவன் என்க. ஊர்மயில் : வினைத் தொகை. நிழல் - ஒளி. நிழல்வேல் என மாறிக் கூறினும் பொருந்தும். அறவர் - பார்ப்பார். அடிதொடினும் என்புழி உம்மை எதிர்மறை. குறவன் மகள் - வள்ளியம்மையார். கூறு ஏலா எனக் கண்ணழித்துச்செய்க. ஐய : விளி. அடிதொடு குன்று - வணங்கப்படும் குன்று; அவது திருப்பரங்குன்று.

இத்துணையும் கூறித் தோழி தலைவனைச் சூள் விலக்க மேலே தலைவன் கூறுகின்றான்.

எஉ - எஎ : யார்.......................நவின்றதை

(இ - ள்.) நேரிழாய் - நேரிழையே, யார் பிரிய யார் வர யார் வினவ யார் செப்பு - யார் பிரிவது யார் வருவது யார்

வினவுவது யார் விடை கூறுவது யாம் இருதலைப்புள்ளின் ஓர் உயிர் போல்வேம் ஆகலின் பிரிவும் வரவும் வினவும் செப்பும் நம்மிடை எவ்வாறு நிகழ்தல் கூடும், நீர் உரைசெய் சூள் நீர் மையில் சூள் என்றி-ஏடி! நீ அது கருதாமல் நீர் கூறும் சூண் மொழி நன்னீர்மையில்லாத பொய்ச்சூள் என்று கூறி என்னை இகழாநின்றனை; கயவாய நெய்தல் அலர் - குளத்தின்கண் உளவாகிய நெய்தற்பூக்களையும், முகை மணம் கமழ் நகை நய வரும் நறவு இதழ் - மொட்டு மணங்கமழ்தற்குக் காரணமான மலர்ச்சியினாலே கண்டோர் விரும்புதற்குரிய நறவம் பூவின் இதழையும் ஒத்த, மதர் உண்கண் - மதர்த்த மையுண்ட விழி களையும், வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியினையும், முல்லை முகை வென்று எழில் முத்து ஏய்க்கும் - முல்லையின் அரும்புகளை அழகான் வென்று அழகிய முத்துக்களை ஒத்த, வெண்பல் - வெள்ளிய பற்களையும் உடைய தலைவி, நவின்றது - என்மீது ஏற்றிக் கூறிய குற்றம், நனவு அன்று - வாய்மையின் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியும் அன்று, நகைசான்ற கனவு அன்று - நகைத்தற்கு இடமாவதொரு கனாநிகழ்ச்சியும் அன்று, பொய்யே காண்;

(வி - ம்.) தலைவியும் யானும் இருதலைகளையுடைய ஒருபறவை யையே ஒத்துள்ளேம்; அங்ஙனமாக யாங்கள் பிரிவதும் வருவதும் வினவுவதும் விடைகூறுவதும் எங்ஙனம் கூடும் என்பது கருத்து. செப்பு - விடை. நீர் உரை செய்சூள் நீர்மையில் சூள் எனச் சூள் என்பதனை முன்னுங் கூட்டுக.

நீர்மையில் சூள் - பொய்ச்சூள். என்றி - என்கின்றாய். கயம் - குளம். முகை மணம் கமழ்நகை என மாறுக. நயவருதல் - விரும்பு தல். நறவு - நறவம்பூ. வெண்பல் : அன்மொழித் தொகை.

கண்ணையும் நுதலையும் உடைய வெண்பல் என்க. கனவு கண்டெழுந்தார் அதனை நினைந்து நகுதல் இயல்பாகலின் 'நகை சான்ற கனவு' என்றாள். கனவும் நனவும் எனற்பால உம்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கன. கனவு மன்று நனவு மன்று எனவே பொய்யே என்பது அருத்தாபத்தியாற் பெற்றாம். நவின்றதை- என்புழி ஐகாரம் பகுதிப்பொருளது. நவின்றது - என்மேற் கூறிய குற்றம் என்க.

(பரிமே.) நேரிழாய்! யார் பிரிய யார்வர யார் வினவ, யாரது செப்பு உண்டாகின்றது?

என்றது, இருதலைப்புள்ளின் ஒருயிரேம் ஆதலாற் பிரிவும் வரவும் வினவும் செப்பு நம்மிடை உளவாகா என்றவாறு.

எக - டு. அலர்ச்சியான் நயக்கப்படும் நறவம்பூவினது.

எசு. முகைமுல்லை - முல்லையது முகை.

எஎ. பொய்யாதலால் நகைமிக்க கனவு.

எஅ - அஉ : இடுதுனி.....................தண்பரங்குன்று

(இ - ள்.) இடு துனி கை ஆறு ஆ என் இறை துயர் கூரச் சுடும் - பின்னுந்தலைவன் தோழியை நோக்கி ஏடி யான் குற்றமிலேன் ஆகவும் இவள் என்மேல் ஏறட்டுக் கூறிய இத் துனிக்காரணத்தை எனது ஒழுக்கம் நெறியாகக்கொண்டு ஆராயப்புகுந்து இதனைப் பொய்ச் சூள் என்றே துணிந்து என்னை இறைவன் துன்பமிகும்படி ஒறுப்பினும் ஒறுக்கும், அடிசேர்ந்து ஆற்றுசின் - அங்ஙனம் இறைவன் ஒறுக்குமுன்னரே நீ அவ்விறைவனுடைய திருவடியை அடைந்து வேண்டி அவன் சினத்தை ஆற்றுவிப்பாயாக என்று கூறிப் பின்னர்த் தன் ஏவ லிளையரை நோக்கி, சாற்றுமின் - இளையர்காள் நீவிர் சென்று யான் கூறுமொழியை எல்லாரும் உணரும்படி கூறுங்கள், முருகன் தாள் தொழு தண்பரங்குன்று - யாவரும் முருகப்பெருமானுடைய திருவடிகளைத் தொழுதற்கிடமான குளிர்ந்த திருப்பரங்குன்றத்தின்கண் யாமெல்லோரும் சென்று, மிக மலர் ஏற்றுதும் - மிகவும் மலரைத் தூவுவோம், அவி ஊட்டுதும் - இறைவனுக்கு ஊட்டும் அவிப்பொருளை ஊட்டாநிற்போம், பாணி தோற்றுதும் - தாளத்தினையுடைய இசைப் பாட்டினைப் பாடாநிற்பேம், கிணை எழுதும் - கிணைப்பறையின் முழக்கத்தை எழுவிப்போம் என்றான் ;

(வி - ம்.) துனி - ஆகுபெயராய்த் துனிக்காரணமாகிய குற்றம் என்னும் பொருட்டாய் நின்றது. பொய்க்குற்றம் என்பான் 'இடு துனி' என்றான்; படைத்து மொழிந்த குற்றம் என்றவாறு. கை - ஒழுக்கம். ஆறு - வழியாக. என் - என்னை. இறை - கடவுள். சுடும் - சுடுவது போன்று ஒறுப்பான் என்றவாறு. ஆற்றிசின் - ஆற்றுவிப்பாயாக.

இடுதுனி என்பது தொடங்கி ஆற்றிசின் என்னுந் துணையும் தோழிக்குக் கூறியது. மேல் சாற்றுமின் என்பது தொடங்கி ஏவ லிளையர்க்குக் கூறியது என உணர்க. அவி - கடவுட் பலிப்பொருள். 'கேட்டுதும்' என்றும் பாடம். பாணி - தாளம். அதனையுடைய பாட்டிற்கு ஆகுபெயர். கிணை - தடாரிப்பறை. தாடொழு எனற்பாலது எதுகை நோக்கித் தாட்டொழுது என நின்றது.

(பரிமே.) 'ஆற்றிசின்,' என்றது, தோழியை நோக்கி. 'சாற்றுமின்' என்றது, தன் ஏவலிளையரை நோக்கி. உளப்பாடுகள் அவளையும் அவரையும் நோக்கி.

அங - அகூ : தெரியிழாய்.........................சூள்

(இ - ள்.) எல்லா என்னை (அள) தெரியிழாய் செல்க என்றாய் - ஏடா நீ என்னைநோக்கி முருகப்பெருமானை வணங்கி ஆற்றுவித்தற்கு ஆராய்ந்த அணிகலன்களையுடைய நீயே செல்வாயாக என்று கூறாநின்றாய், ஒருவர்க்கும் பொய்யாநின் வாய் இல் சூள் வௌவல் யாம் பெற்றேம்-அங்ஙனம் நீ கூறியது

னாலேயே யாவரிடத்தும் பொய்கூறாத நின்னுடைய மெய்ம்மை யில்லாத சூளானே வரும் துன்பம் நின்னை வெளவிக்கொள்ளும் என்பதனை யாங்கள் அறிந்துகொண்டோம், எருமை இருந் தோட்டி எள்ளியும் காளை செருவம் செயற்குமுன்னை - கூற்றுவ னுடைய பெரிய ஆணையினையும் இகழும் ஆற்றலுடைய முருகப் பெருமான் நின் பொய்ச்சூளானே மாறுபடுதற்கு முன்னரே, நிரைவளை-நிரைத்த வளையலையணிந்த தலைவியே அப் பெருமான் அடிக்கண் சென்று, கையால் தூங்கு மணி தாக்கி - தனது கையாலேயே அவன் திருக்கோயிலிலே தூங்காநின்ற மணியை அடித்து, தன் சென்னி-தனது தலையாலே அவன் திருவடிகளை வணங்கி, இருஞ்சூள் - நினது கடிய சூளாலே வரும் துன்பத்தை நினக்கு வாராதபடி செய்யும்பொருட்டு, அருள்வயினான் ஆற்று- அப் பெருமானுடைய சினத்தை அவனது திருவருட் கூற்றை வழிபடுமாற்றானே ஆற்றுவிக்கும் காட்சியை, நீ பருவத்துப் பன்மாண் சேறலின் காண்டை - நீ பரத்தையரைப் புணர்தற் குரிய பருவத்தில் பலகாலும் அத் திருப்பரங்குன்றத்திற்குச் செல்லுதலுண்மையானே காண்பாய் ;

**(வி - ம்.)** நீயே கழுவாய் செய்ய ஏவுதலானே நினது சூள் பொய்ச்சூள் என்பது எம்மால் அறிந்துகொள்ளப்பட்டது என்றவாறு. 'ஒருவர்க்கும் பொய்யாநின்' என்றது, இகழ்ச்சிக் குறிப்பு. பொய்க்க லாகா இறைவனிடத்தும் பொய் கூறுபவன் என்பது கருத்து. யாம் என்றது, தலைவியை உளப்படுத்தியது. வாயில் - உண்மையில்லாத. வெளவல் - பற்றிக்கோடல். பருவம் - பரத்தையரைப் புணரும் பருவம். பன்மாண் - பலகாலும். சேறலின் - செல்லும் வழக்க முடைமையின். காண்டை - காண்பாய். எருமை: ஆகுபெயராய்க் கூற்றுவனுக்கு ஆயிற்று. தோட்டி - ஆணை. எள்ளியும் - எள்ளும்: இகழும். காளை: முருகப்பெருமான். செருவஞ்செய்தல் - பகைமை செய்தல். சென்னியான் வணங்கி என வருவித்துக் கூறுக. அருள் வயின் - அப் பெருமானுடைய தெறலும் அளியுமாகிய இரு கூற்றினுள் அருட்கூற்றினை வழிபடுமாற்றானே என்க. ஆற்று - ஆற்றுதல்.

கற்புக் கடம்பூண்ட தலைவி நீ கூறுமலே நினது சூளான்வரும் ஏதத்தை இறைவனை வணங்கி அகற்றுவாள்; அவ்வாறு செய்தலை நீயே காண்பாய் என்றவாறு. நிரைவளை: அன்மொழித்தொகை. இருஞ் சூள் - கடுஞ்சூள்; பொய்ச்சூள் என்றவாறு.

(பரிமே.) என்றது, யான் ஆற்றவேண்டா; அவள் தானே ஆற்றுமெனத் தலைமகள் கற்புடைமை கூறியவாறு.

அச. 'ஒருவர்க்கும் பொய்யாநின்' என்றது, குறிப்புமொழி.

(மேலே) கணவற்கு வரும் ஏதமஞ்சிச் செய்தலால் தம் கற்பிற் கும்............தலைமகளிர் யாவரும் இத்தன்மைய செய்வரென அவரது செய்தி கூறுகின்றார்.

[இவ்வாறு தலைவன் தலைவி தோழி என்பவர்களின் கூற்றில் வைத்துத் திருப்பரங்குன்றத்தின் சிறப்பினை ஓதிவந்த புலவர், இனிக்

கற்புடைத் தலைவியர் அத் திருப்பரங்குன்றை வழிபாடு செய்யு மியல் பினைக் கூறுகின்றார் என்றவாறு.]

கூo - கoஉ : வளிபொரு......................தொடுநர்

(இ - ள்.) வளிபொரு சேண் சிமைய வரை அகத்தால் தளி பெருகும் - காற்றாலே மோதப்படும் உயரிய சிகரங்களை யுடைய மலையின்கண்ணே பெய்த மழைநீர் பெருகுதலானே தழைத்த, தண்சினைய பொழில் - குளிர்ந்த கிளைகளையுடைய பூம்பொழில்கள், கொளக் குறையா மலர - பூக்கள் பறிக்கத் தொலையாவாகும்படி மலராநிற்பவும், குளிர் பொய்கை அளறு நிறைய - குளிர்ந்த குளங்கள் நீராலே நிறையவும் சிறப்புற்ற, மருதம் - மருதநிலத்தினூடே, கிடக்கும் நளி மணல் ஞெமர்ந்த - செறிந்த மணல்பரந்த, நனிமலர்ப் பெருவழி - மிக்க மலரினை யுடையதாய்த் திருப்பரங்குன்றத்திற்கும் மதுரைக்கும் இடையே உள்ள பெரிய வழியின்கண்ணே, சீறடியவர் - சிறந்த இறை யன்புடையோர், சாறு கொள எழுந்து - அக் குன்றத்தின்கண் உறையும் முருகவேளுக்கு விழாச்செய்ய எழுந்து, வேறுபடு சாந்தமும் - நிறத்தானும் மணத்தானும் ஒன்றற்கொன்று மாறுபடுகின்ற பலவேறு சாந்தங்களும், வீறு படு புகையும் - பெருமையுடைய புகைப்பொருள்களும், ஆறு செல் வளியின் அவியா விளக்கமும் - இயங்குகின்ற காற்றாலே அவியாத விளக்கிற்கு வேண்டுவனவும், நாறுகமழ் வீயும் - மணங்கமழா நின்ற மலர்களும், இசை கூறு முழவமும் - இசையை எடுத்துக் காட்டும் முழவும், மணியும் கயிறும் மயிலும் குடாரியும் பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி - மணியும் கயிறும் மயிலும் கோடரியும் பிணிமுகம் என்னும் யானை ஊர்தியும் ஆகிய இவற்றையும் இன்னோரன்ன முருகவேளுக்கு உவந்த பிற பொருள்களையும் ஏந்திக்கொண்டு, அருவரை சேராத் தொடுநர் - அரிய திருப்பரங்குன்றத்தினைச் சேர்ந்து முருகப்பெருமானது திருவடிகளைத் தொழுபவர்;

(வி - ம்.) வளி - காற்று. சிமை - சிகரம். தளி - மழை. சினைய - கிளைகளையுடைய. கொள - பறிக்க. அளறு: ஆகுபெயர். மருதத்திலே கிடக்கும் பெருவழி, மணம் ஞெமர்ந்த பெருவழி எனத் தனித்தனிக் கூட்டுக. ஞெமர்ந்த - பரந்த. பெருவழி - பெரியசாலை. சீறடியவர் - சிறந்த கடவுளன்புடையோர். சாறு - விழா. சாந்தம் - சந்தனக் குழம்பு, குங்குமக்குழம்பு முதலியன. வீறு - வேறொன்றற்கில்லாத சிறப்பு. புகை: ஆகுபெயர்; அகில் முதலியன. ஆறு செல்வளி - இயங்கும் காற்று. அவியா விளக்கம் - நந்தாவிளக்கு. நாறுகமழ் - மணங்கமழ்கின்ற. முழவம் முதலியன முருகவேட்குரிய பொருள்கள். மயில் குடாரி பிணிமுகம் முதலியன பொன்னாற் செய்யப்பட்டவைகள். சேரா - சேர்ந்து. தொடுநர் - வழிபாடு செய்யும் மகளிர் என்க.

(பரிமே.) கoo. கயிறு - பாசம்.

க0ரு - ககக : கனவில்.........................கம்பலை

(இ - ள்.) கனவின் கைதொட்டது பிழையாகாது கனவின்கண் யாம் எம் காதலரைக் கைதொட்டது பொய் யாகாமல், நனவின் சேப்ப - நனவின்கண் எய்தும்படி, நின் நளி புனல் வையை வருபுனல் அணிகென - நினக்குரிய செறிந்த நீரையுடைய வையையாறு புதுநீரை அணிவதாக என்று, வரங்கொள்வோரும் - வரம் வேண்டுவோரும், வயிறு கரு உறு கெனக் கடம்படுவோரும் - எம் வயிறு கருப்பம் எய்துக எய்தின் இன்னின்ன பொருளை நினக்குத் தருவேம் எனக் கடன் நேர்பவரும், செய்பொருள் வாய்க்க எனச் செவிசார்த்து வோரும் - எங்கணவர் சென்றுள்ள வினைக்கண் செய்தற்குரிய பொருள் நிரம்ப வாய்ப்பதாக என்று முருகப்பெருமான் திருச் செவியின்கட் சேரக்கூறி வழிபடுவோரும், ஐ அமர் அடுகென அருச்சிப்போரும் - போர்மேற் சென்றுள்ள எம்தலைவர் அப் போரின்கட் பகைவரைக் கொன்று வாகைசூடுக என்று வேண்டி அருச்சனை செய்வோரும் ஆகி, பாடுவார் பாணிச் சீரும் - முருகப்பெருமானை வாழ்த்திப் பாடுபவருடையவும் பாடு வார் பாட்டிற்கிடும் பாணியாகிய தாளத்தினுடையவும், அரங்கம் ஆடுவார் தாளமும் - கூத்தாட்டரங்கத்தின்கண் ஆடு வாருடைய தாளத்தினுடையவும் ஆகிய ஒலியும், மஞ்சாடு மலை முழக்கும்-முகில் தவழும் அம் மலையின்கண் எழும் எதிரொலியும் ஆகிய, துஞ்சாக் கம்பலை - கெடாத ஆரவாரத்தின்கண்ணே;

(வி - ம்.) கனவின்கண் கணவன் கைபிடித்து வையை யின்கண் நீராடியதாகக் கண்டது நனவின்கண் நிகழும்படி வையை யின்கண் புதுநீர் வந்து அணிக என்க. கடம்படுதல் - இறைவனுக்குப் பொருள்களை நேர்ந்து கோடல். ஐ - தலைவன். மஞ்சு - முகில். துஞ்சா- கெடாத. கம்பலை - ஆரவாரம். ஐஅமர் - வியத்தகு போர் எனினுமாம்.

(பரிமே.) க0சு. பாடுவாரது பாணியாகிய தாளமும்.

ககக. இக் கெடாத கம்பலைக் கண்ணே : ஏழாவது வினைசெய் இடத்தின்கண் வந்தது.

கக௨ - ககசு : பைஞ்சுனை.....................மார்பணி கலவி

(இ - ள்.) பைஞ்சுனைப் பாய் எழுபாவையர் - பசிய சுனை யின்கண்ணே பாய்ந்து நீராடி எழாநின்ற பாவையராகிய, ஆயிதழ் உண்கண் அலர்முகத் தாமரை- தம் அழகிய இமையாகிய இதழ்களையுடைய மையுண்ட கண்ணாகிய தாமரைமலரும் முகமாகிய தாமரைமலரும், தாள் தாமரை - தம் தாள்களாகிய தாமரைமலரும், தோள் தமனியக் கயமலர் தம் கைப் பதுமம் - தமது தோளாகிய பொன்குளத்திலே மலர்ந்த தம் கையாகிய தாமரைமலரும், கொங்கைக் கயமுகை - தம் கொங்கைகளாகிய

பெரிய தாமரை மொட்டுகளும் ஆகிய, செவ்வாய் ஆம்பல் செல்நீர்த் தாமரை - சிவந்த தமது வாயாகிய அரக்காம்பல் மலரோடு கூடி இயங்கும் இத் தாமரைகள் எல்லாம், புனல் தாமரையொடு புலம் வேறுபாடுறு - தாம் பாய்ந்தாடிய அச்சுனை நீரின்கட் பூத்த தாமரையொடு சிறிதும் காட்சி வேறுபாடு உறுத, மடர் எயிற்றூர் - மடர்த்த பல்லினையுடைய மகளிர்களுடைய, குவிமுலைப் பூணொடு மாரன் ஒப்பார் மார்பு அணிகலவி - குவிந்த முலையின்கண் அணிந்த அணிகலன்களோடு மதவேளை ஒப்பவராகிய கணவன்மார்கள் மார்பின்கண் அணிந்த அணி கலன் மயங்காநிற்ப;

(வி - ம்.) ஆரவாரத்தினிடையே சுனை பாய்ந்தாடியெழும் பாவையராகிய கூரெயிற்றூர், கண் முகம் தாள் கை கொங்கை முதலிய உறுப்புக்களாகிய தாமரைகள் தாமாடிஎழுந்த சுனையின்கட் டாமரை யோடு வேறுபடாது ஒத்துத் தோன்றும் கூரெயிற்றூர் எனத் தனித் தனிக் கூட்டுக.

ஆய் - அழகு. இதழ் - இமையாகிய இதழ். கயம் - குளம். தமனியக்கயம் - பொற்குளம் என்க. தோளாகிய பொற்குளத்தே மலர்ந்த கையாகிய தாமரை என்க. மூலத்தினும் பரிமேலழகர் உரையினும் 'எங்கை' என்றும் 'எம்கை' என்றுங் காணப்படுகின்றன. இவை தங்கை எனத்திருத்தப்படுதல் வேண்டும்.

கயமுகை என்புழி கய என்னும் உரிச்சொல் பெருமைப் பண்பு குறித்து நின்றது. "தடவும் கயவும் நளியும் பெருமை" (உரி - உஉ.) என்பது தொல்காப்பியம்.

பாஅய்-பாய்ந்து. தாள் - கால். பதுமம் - தாமரை. முகை-மொட்டு. புலம் - காட்சிப்புலம். கலவி என்னும் செய்தென் னெச்சத்தைக் கலவ எனச் செயவெனெச்சமாக்குக. மாரன் - மதவேள்-

(பரிமே) கக௨. சுனைக்கட்பாய்ந்தெழு பாவையராகிய (கக அ) கூரெயிற்றூர் என மேலே கூட்டுக.

ககஎ. செவ்வாயாம்பலொடு கூடியியங்கும் நீர்மையையுடைய இத் தாமரைகள்.

**க௨0 - க௨௫ : அரிவையர்..................செல்லல்தீர்ப்ப**

(இ - ள்.) அரிவையர் அமிர்த பானம் - அவர்க்கு மகளிர் சமைத்த அமிர்தம் போன்ற காமபானத்துடனே, உரிமை மாக்கள் உவகை அமிர்து உய்ப்ப - அடிசில் சமைத்தற்குரிய மடைத் தொழிலாளர் இன்பந்தரும் அமிழ்தத்தை ஒத்த அடிசிலைக் கொடுக்க அவற்றையுண்டு, செந்தளிர் மேனியார் மைந்தர் மார்வம் வழிவந்த செல்லல் தீர்ப்பர் - சிவந்த மாந் தளிரை ஒத்த நிறத்தையுடைய அம் மகளிர் பண்டு தம் கணவர் தம்மைப் பிரிந்தமையாலே அவர் மார்பு தரவந்த துன்பத்தைத் தீராநிற்பர்;

(வி - ம்.) அமிர்தபானம் - அமிர்தம் போன்ற காமபானம். உரிமை மாக்கள் - சமைத்தற் றொழிலுரிமைபூண்ட மடையர். அவிச் சுவையே தேர்வாராகலின் 'மாக்கள்' என்றார்.

மைந்தர் மார்வம் வழிவந்த - தலைவர் மார்பம் தம்மைப் பிரிந்தமை காரணமாக வந்த செல்லல் என்க. செல்லல் - துன்பம். "செல்லல் இன்னல் இன்னாமையே," (தொல் - உரி. ௬.)

(பரிமே.) ௧௧௬. 'கலவ' என்பது கலவி என நின்றது.

சிறடியவர் சாறுகொளப் பெருவழியிடத்து எழுந்து பிறவும் ஏந்தி வரையகத்துச் சென்று தொழுது கம்பலைக்கண்ணே மார்பணி கலக்க உவமையமிர்து உய்ப்ப வரங்கொள்வோரும் கடம்படுவோரும் செவி சார்த்துவோரும் அருச்சிப்போருமாய்ச்செல்லல் தீர்ப்ப எனக் கூட்டுக.

## ௧௨௪ - ௧௩௦ : எனவாங்கு......................நினக்கு

(இ - ள்.) என ஆங்கு - என்று இவ்வாற்றால், தண் பரங்குன்றம் - குளிர்ந்த திருப்பரங்குன்றமே, உடம்புணர் காதலரும் அல்லாரும் கூடி - தம்முள் பிரியாது கூடி மகிழும் காதலையுடைய மகளிரும் மைந்தரும் அவரல்லாத வரம் வேண்டுவோரும் கடம்படுவோரும் அருச்சிப்போருமாகிய ஏனை யோரும ஒருங்கே குழுமி, மறுமிடற்று அண்ணற்கு மாசு இலோள் தந்த கடம்பு அமர் செல்வன் கடிநகர் பேண - நஞ்சாகிய கறையினையுடைய மிடற்றினையுடைய தலைவனாகிய சிவபெருமானுக்குக் குற்றமில்லாத உமாதேவியார் ஈன்ற கடம் பின்கண் விரும்பி உறையும் செவ்வேளினது காவலையுடைய திருக்கோயிலை இன்றே போல என்றென்றும் வழிபடும்படி, மண்பரிய வானம் வறப்பினும் - இம் மண்ணுலகத்தில் வாழும் உயிர்கள் வருந்தும்படி மழை வறந்து போயினும், நினக்கு நெறி நீர் அருவி அசும்பு உறு செல்வம் மன்னுகமா - நெறிப்படுத்தி ஒழுகும் அருவி இடையறாது ஒழுகுவதாகிய பெரிய செல்வம் நினக்கு என்றென்றும் நிலைபெறுவதாக.

(வி - ம்.) அல்லார் - முற்கூறப்பட்ட வரங்கொள்வோர் முதலிய பிறர். கடம்பமர் செல்வன் - முருகப் பெருமான். நகர் - திருக்கோயில். மறு - நஞ்சாகிய கறை மறுமிடற்று அண்ணல் : சிவபெருமான். மாசிலோள் - உமை. (நிமலை; விமலை) அசும்புதல் - இடையறாதொழுகுதல். மண் : ஆகுபெயர். வானம் : ஆகுபெயர் ; மன்னுகமா என்புழி 'மா' வியங்கோளசைச் சொல்.

(பரிமே.) முருகற்கு இடமாகிய பரங்குன்றை வருணித்த முகத்தால் எதிர்முகமாக்கியும் படர்க்கையாக்கியும் அவனையே வாழ்த்தி முடித்தமையின், 'கடவுள் வாழ்த்தாயிற்று'

---

## ஒன்பதாம் பாடல்

---

# செவ்வேள்

பொருட்சுருக்கம்

**க - கக.** இமய மலையின் சிகரத்தில் கார்த்திகை மகளிர் அறுவரிடத்தே மணிமிடற் றண்ணலாகிய சிவபெருமானுக்கு மகனாகப் பிறந்த பெருமானே! நீ வள்ளியைக் களவின்கண் மணந்த அன்று, தேவசேனையின் கண் முதுவேனில் கார்ப்பருவ மாகும்படி முகில்மழை பெய்தாற்போலத் திருப்பரங்குன்றின் கண் நீராகிய மழையைப் பெய்தது.

**கஉ - உ௦.** நான்மறைப் பொருளை விரித்து, அம் மறையி னது நல்ல இசையை விளக்கும் புலவீர்! சிறந்ததொரு பொருளை யாங்கூறுவேம் கேளுங்கள்! காமத்திற் சிறந்தது காதலையுடைய களவுக் காமம். அதுதான் மெய்யுற்றறியார் இருவர் அன்பொத்து ஊழ்வகையானே தாமே மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சி; இனி அன்பொவ்வாத கற்பென்னும் ஒழுக்கம் புலத்தலாற் சிறந்தது. அப் புலவிதானும் தலைவ னுடைய பரத்தமையால் நிகழ்வதாம். மேலும், தலைவன் சென்றுள்ள பரத்தைஇல்லிற்குத் தலைவி தன் தோழியைச் செவ்வணி யணிந்து விட்டுத் தன் பூப்பை அறிவிக்க, அதனால் தலைவன் வந்து உவக்கும் புணர்ச்சியை உடையது அக் கற் பொழுக்கம்.

**உ௦ - உஎ.** அப் புணர்ச்சிகள் பரத்தையரானே பழிகூறப் படுவனவாம். மேலும் அப் புணர்ச்சியின்பம் இயல்பாலன்றி ஊடலானே உண்டாவது. கற்பில் தலைவர் பிரிவது போன்றின் றிப் பிரிவின்றி அமையும் களவுப் புணர்ச்சியையுடைய மகளிர் தங்கணவரோடு ஊடுகின்ற குற்றமுடையர் அல்லர். இத்தகைய களவுப் புணர்ச்சியைப் பாராட்டும் பொருளிலக்கணத்தை யுடைய தமிழை ஆராயாத தலைவரே களவொழுக்கத்தை மேற் கொள்ளமாட்டார்.

**உஅ - ௩அ.** வையைப் புனல் கொண்டு வந்த சந்தனத் தின் புகை சூழ்ந்த மார்பின்கண் முத்துமாலை அணிசெய்ய முருகவேள் தேவசேனையோடு அளவளாவச் சென்றார். அவள் அவரைத் தொழுது, 'வஞ்சனே! நின்னை அறியாமல் நின்மய லில் அகப்பட்ட மகளிர், மழையை எதிர் நோக்கி வருந்தும்

பொழிலையே ஒப்பாவார். ஆதலால் அவரே தவறுடையர்; நீ தவறுடையை அல்லை; நின்னை எய்தும் திருவுடைய மகளிர் தோளில் வைகி அளிசெய்யும் இயல்பும் நினக்கில்லை. ஆதலால் நின் மாணலம் யான் உண்ணக் கடவனோ?" என ஊடி நீங்கினாள். அதுகண்ட முருகவேள் அத் தேவசேனையின் அடியில் வீழ்ந்து வணங்கினார். தேவசேனையும் ஊடல் தீர்ந்து அவரைத் தழுவிக் கொண்டாள்.

௩௯ - ௪௯. அஃதறிந்த வள்ளி முருகவேளைச் சினந்து, 'இனி அவள்பாற் செல்லாதே!' என, அவர் கைகளைக் கட்டி மாலையைக் கோலாகக் கொண்டு புடைத்தாள். அதனைக் கண்டு, தேவசேனை மயிலும் வள்ளியின் மயிலும் தம்முட் பகைத்து எதிர்த்தன; அங்ஙனமே அவர் கிளிகளும் பகைத்தன; வள்ளியின் குன்றத்திலுள்ள வண்டுகள் தேவசேனையின் கொண்டையிலிருந்த வண்டுகளின்மேற் பாய்ந்து பொருதன; இருவருடைய தோழிகளும் தம்முட் பகைத்துப் போரிடுவாராயினர்.

௫௦ - ௫௫. வள்ளியின் தோழியர் மதங்கொண்ட களிற்றியானையின் இயல்புடையராய்க் குதிரைகள் போன்று நடந்து வந்தனர்; தேர்ப்படைபோல வடிக்கயிற்றைக் கொண்டுவந்தனர்; வில்லை வளைத்தனர்; வாளேந்தி நின்றனர்; தோள்வளையாகிய ஆழிப்படையைச் சுழற்றினர்.

௫௬ - ௬௯. இவர் நிலைகண்டு தேவசேனையின் தோழியர் அஞ்சி முருகனைச் சூழ்ந்துகொண்டு சுனைநீருட் கரந்து நீராடினர்; வண்டுகளாகி முரன்றனர்; மயிலாகி ஆடினர்; குயிலாகிக் கூவினர்; பலவகையாய்த் துன்பமுற்றனர்; இப் போரின்கண் வள்ளியின் தோழியரே வாகை சூடுதலானே திருப்பரங்குன்றம் முருகவேளுக்கு இயைந்தது.

எ௦ - எ௪. சூர்மாத் தடிந்த வேலையுடைய வீரனே! நின் பரங்குன்றத்தின்கண், ஆடல் பயின்றோர் அவ்வாடல் பயின்றோரை வென்றனர்; பாடல் பயின்றோர் அப் பாடல் பயின்றோரை வென்றனர்; சூதாடுவோரைச் சூதாடுவோர் வென்றார்; இங்ஙனமே பிறகல்வியுடையோர் பிறகல்வியுடையோரை வென்றனர்; இவ் வெற்றியின் அறிகுறியாகச் சுனைப்பக்கத்தே வெற்றிக்கொடி நின்று திகழ்ந்தது.

எ௯ - அ௫. வேற்படையை யுடையோனே!, வெற்றியுடையோனே!, குமரவேளே!, அன்புடைய யாம் நின் திருவடிக்கண் உறையும்செயல் நாடோறும் பொலிந்து பயன்தருதலோடு

*சிறக்கவென்று நின்னை வணங்கி வாழ்த்தி வேண்டுகின்றோம்; அருள் புரிவாயாக.*

இருநிலந் துளங்காமை வடவயி னிவந்தோங்கி
அருநிலை யுயர்தெய்வத் தணங்குசால் தலைகாக்கும்
உருமுச்சூழ் சேட்சிமை உயர்ந்தவர் உடம்பட
எரிமலர்த் தாமரை இறைவீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி
மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்நீ
மையிருநூற் றிமையுண்கண் மான்மறிதோண மணந்தஞான்
றையிருநூற்று மெய்ந்நயனத் தவன்மகண் மலருண்கண்
மணிமழை தலைஇயென மாவேனில் காரேற்றுத்
தணிமழை தலையின்று தண்பரங் குன்று
நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது
காதற் காமம் காமத்துச் சிறந்தது
விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே அதுதான்
இரத்தலு மீதலு மிவையுள் ளீடாப்
பரத்தையுள் ளதுவே பண்புறு கழறல்
தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே
கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை
சுணங்கறைப் பயனும் ஊடலுள் ளதுவே, அதனால்
அகறல் அறியா அணியிழை நல்லார்
இகறலைக் கொண்டு துனிக்கும் தவறிலரித்
தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்றுப் பயன்
ஊழாரத் [1]தேய்கரை நூக்கிப் புனல்தந்த
காழாரத் தம்புகை சுற்றிய தார்மார்பிற்
கேழாரம் பொற்ப வருவானைத் தொழாஅ
வாழிய மாயாநின் தவறிலை எம்போலும்
கேழிலார் மாணலமுண் கோ திருவுடையார்

---

(*பாடம்*) 1. *தோய்கரை.*

மென்றேண்மே லல்கி நல்கலு மின்று
வையெயிற் றெய்யா மகளிர் திறமினிப்
பெய்ய வுழக்கு மழைக்காமற் றைய
கரையாவெங் நோக்கத்தாற் கைசுட்டிப் பெண்டின்
இகலினிகந்தாளை யவ்வேள் தலைக்கண்ணி
திருந்தடி தோயத் திறைகொடுப் பானை
வருந்தல் எனவவற்கு மார்பளிப் பானைக்
குறுகலென் றோளிழை கோதைகோ லாக
இறுகிறுக யாத்துப் புடைப்ப
ஒருவர் மயிலொருவர் ஒண்மயிலோ டேல
இருவர் வான்கிளி ஏற்பின் மழலை
செறிகொண்டை மேல்வண்டு சென்றுபாய்ந் தன்றே
வெறிகொண்டான் குன்றத்து வண்டு
தார்தார் பிணக்குவார் கண்ணியோச்சித் தடுமாறுவார்
மார்பணி கொங்கைவார் மத்திகையாப் புடைப்பார்
கோதை வரிப்பந்து கொண்டெறிவார்
பேதை மடநோக்கம் பிறிதாக வூத
நுடங்கு நொசிநுசுப்பார் நூழில் தலைக்கொள்ளக்
கயம்படு கமழ்சென்னிக் களிற்றியல்கைம் மாறுவார்
வயம்படு பரிப்புரவி மார்க்கம் வருவார்
தேரணி யணிகயிறு தெரிபு வருவார்
வரிசிலை வளைய மார்புற வாங்குவார்
வாளி வாளிகள் நிலைபெற மறலுவார்
தோள்வளை யாழி சுழற்றுவார்
மென்சீர் மயிலிய லவர்
வாண்மிகு வயமொய்ம்பின்
வரையகலத்தவனை வானவன்மகள்
மாணெழின் மலருண்கண்
மடமொழியவ ருடன்சுற்றிக்
கடிசுனையுட் குளித்தாடுநரும்
அறையணிந்த அருஞ்சுனையான்
நறவுண் வண்டாய் நரம்புளர்நரும்
சிகைமயிலாய்த் தோகைவிரித் தாடுநரும்
கோகுலமாய்க் கூவுநரும்

ஆகுல மாகுநரும்
குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்
வித்தகத் தும்பை விளைத்தலான் வென்வேலாற்
கோத்தன்று தண்பரங் குன்று ;
கடுஞ்சூர் மாமுதல் தடிந்தறுத்தவேல்
அடும்போ ராளநின் குன்றின்மிசை
ஆட னவின்றோ ரவர்போர் செறுப்பவும்
பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்
வல்லாரை வல்லார் செறுப்பவும்
அல்லாரை அல்லார் செறுப்பவு மோர்சொல்லாய்ச்
செம்மைப் புதுப்புனல்
தடாக மேற்ற தண்சுனைப் பாங்கர்ப்
படாகை நின்றன்று
மேஎ வெஃகினவை
வென்றுயர்த்த கோடி விறல்சான்றவை
கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
நயத்தகு மரபின் வியத்தகு குமர
வாழ்த்தினேம் பரவுதுந் தாழ்த்துத்தலை நினையா
நயத்தலிற் சிறந்தவெம் மடியுறை
பயத்தலிற் சிறக்க நாடோறும் பொலிந்தே.

**கடவுள் வாழ்த்து**

**குன்றம்பூதனார் பாட்டு ; மருத்துவன் நல்லச்சுதனார் இசை ; பண்ணுப் பாலையாழ்.**

## உரை

க - கக : இருநிலம்......................தண்பரங்குன்று

(இ - ள்.) *இருநிலம் துளங்காமை வடவயின் நிவந்து ஓங்கி - பெரிய இம் மண்ணுலகம் அசையாமல் நிலைத்து நிற்கும் படியாக வடதிசைக்கண்ணே மிகவும் உயர்ந்து, அருநிலை - ஏறுதற்கரிய நிலைமையினையுடையதும், அணங்குசால் உயர் தெய்வத் தலைகாக்கும் - தீண்டி வருத்தும் தன்மை பொருந்திய உயர்ந்த பிறப்பினையுடைய தெய்வங்கட்குத் தலைவனாகிய இந்திரனாலே பாதுகாக்கப்படுவதும் ஆகிய, உருமுச் சூழ் சேண் சிமை - இடியேறு சூழாநின்ற நெடிய இமயமலைச் சிகரத்*

தின்கண்ணே, எரிமலர்த் தாமரை இறை வீழ்த்த பெருவாரி - தீயை ஒத்த மலராகிய தாமரையின்கண் வீற்றிருக்கும் முதல்வனாகிய பிரமதேவனாலே வீழ்த்தப்பட்ட பெரிய ஆகாயகங்கையை, ஊழ்த்து விழும் நிகர் மலர் ஏய்ப்ப விரிசடைப் பொறை தணிவுறத் தாங்கிய-மலர்ந்து உதிராநின்ற புதிய மலரைத் தாங்குமத் துணை எளிதாகத் தனது விரித்த சடைப்பாரத்தின்கண்ணே அக் கங்கையின் வேகந் தணியும்படி தாங்கியருளிய, தனிநிலைச் சலதாரி - ஒப்பற்ற நிலைமையினையுடைய சலதாரி என்னும் ஏதுப்பெயரையுடைய, மணிமிடற்று அண்ணற்கு - நீலமணி போலும் நிறத்தினையுடைய மிடற்றினையுடைய சிவபெருமானுக்கு, உயர்ந்தவர் உடம்பட - தம் கணவராகிய உயர்ந்த தவத்தையுடைய தெய்வமுனிவர் அறுவரும் உடம்பட, மதி ஆரல் பிறந்தோய் - நன்கு மதிக்கப்படும் கார்த்திகை மகளிரிடத்தே பிறந்த பெருமானே, நீ மை இரு நூற்று இமை உண்கண் மான் மறி தோள் மணந்த ஞான்று - நீ மையாகிய கரிய நூற்றாலே அணியப்பட்ட இமைக்கும் கண்ணையுடைய வள்ளியின் தோளைக் களவின்கண் மணந்த நாளிலே, மெய்யிரு நூற்று நயனத்தவன் மகள் மலர் உண்கண்-உடம்பின்கண்ணே ஆயிரங் கண்களையுடையவனாய இந்திரன் மகளாகிய தேவசேனையின் மலர்போன்ற மையுண்ட கண், மாவேனில் கார் ஏற்று மணிமழை தலைஇ என - முதுவேனிற் காலம் கார்காலத்தின் தன்மை பெறும்படி நீலமணி போன்ற நிறமுடைய முகில்கள் மழைபெய்தாற் போல, தண்பரங்குன்று தணிமழை தலையின்று-நினது திருப்பரங்குன்றத்தின் மிசை தண்ணிய கண்ணீராகிய மழையைப் பொழியாநின்றது ;

**(வி - ம்.)** இருநூறு - கரிய நுகள்: மையாகிய கரிய நுகளால் அணியப்பட்ட உண்கண். நூறு - நுண்ணிதாக நுறுக்கிய நுகள். மானிடமகள் என்பது தோன்ற 'இமையுண்கண்' என்றும் வள்ளிக் கிழங்கு அகழ்ந்த குழியில் மானாலே ஈனப்பட்ட மகள் என்பதுதோன்ற 'மான்மறி' என்றும் கூறினர். மான் என்பதற்கேற்ப மறி என்றார்; மான்குட்டி என்றவாறு. மெய் ஐயிரு நூறு நயனம் என மாறுக. என்றது, ஆயிரங் கண்களையுடைய இந்திரனை. நயனம் - கண். மணி மழை - மணிபோன்ற நிறமுடைய முகில். மழை: ஆகுபெயர். தலைஇ என - பெய்தாற்போல.

இதனால் முருகவேள் மானிட மகளொருத்தியையும் தேவமகள் ஒருத்தியையும் மணந்து தேவர்க்கும் மக்கட்கும் ஒத்த உரிமையுடையராதல் விளக்கினமையும் உணர்க.

மேலும் வள்ளியை தமிழர்க்குரிய சிறப்புப் புணர்ச்சியாகிய களவுப்புணர்ச்சியின் வாயிலாய் மணந்தமை உணர்த்தினமையும் காண்க. தணி - குளிர்ந்த.

முருகவேள் வள்ளியைக் களவுமணம் செய்த நாளில் அஃதறிந்த தேவசேனையின் கண்கள் திருப்பரங்குன்றத்தின்கண் முகில்போல நீரைப் பொழிந்தது என்க.

(பரிமே.) ரு. (உயர்ந்தவர்) தெய்வமுனிவர் அறுவரும்.

ஐ - அ. அயனால் வீழ்த்தப்பட்ட ஆகாய கங்கையை மலர்ந்து விழும் பூவை ஒப்ப வேகந்தணிய சடைப்பாரத்தின்கட் டாங்கிய ஒப்பில்லாத நிலைமையினையுடைய சலதாரியாகிய மணிமிடற்றண்ணல் என மேலே கூட்டுக.

சு. சலதாரி - சலத்தைத் தரிக்கும் இயல்புடையவன்.

அ. வள்ளியை "இமையுண்கண் மான்மறி" என்றார் மானுடை மகள் (பி - ம். மானுடமகள், மானிட மகள்) ஆகலின்.

இவ்வளவும் "முருகவேளை எதிர்முகமாக்கிக் கைகோள்" (பி - ம். கைக்கோள்) இரண்டிற்குமுரிய தேவியராற் காதலிக்கப் பாடு கூறி வாழ்த்தி, மேல் வள்ளியது சிறப்பும் அவன் பரங்குன்று அவட் கொத்தவாறும் கூறலுறுவார், நான்மறைப் புலவரை நோக்கித் தமிழது சிறப்புக் கூறுவாராய்ப் பொதுவகையான் அவற்றிற்குக் காரணங் கூறுகின்றார்.

கஉ - கரு : **நான்மறை......................புணர்ச்சி**

(இ - ள்.) நான்மறை விரித்து நல்இசை விளக்கும் வாய்மொழிப் புலவீர் - நான்கு வேதங்களையும் விரித்து ஓதி அவ் வேதங்களின் நல்ல புகழை விளக்காநின்ற மெய்ம்மொழியினை யுடைய புலவர்களே!, சிறந்தது கேண்மின் - யாங்கூறுகின்ற சிறந்ததொரு பொருளைக் கேளுங்கள், காமத்துச் சிறந்தது காதல்காமம் - காமத்திலே சிறந்தது காதலையுடைய காமமே யாகும், விருப்பு ஓர் ஒத்து மெய்யுறுபுணர்ச்சி - அஃதாவது பண்டு மெய்யுற்று அறியாதார் இருவர் தம்முள் அன்பு ஒரு தன்மையாய் ஒத்து ஊழ்வகையாலே தாமே தம்முள் தலைப்பட்டு மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சியாகும்;

(வி - ம்.) நான்மறை விரித்து நல்லிசை விளக்கும் புலவீர் என்றது, பொருளிலக்கணமமையாத வடமொழிப் புலவரை. வேதம் ஓதுங்கால் அவற்றின் பொருள் புலப்பாட்டினும் ஓசை புலப்பாடே சிறந்து நிற்றலின் 'நல்லிசை விளக்கும் புலவீர்' என்றார். வாய்மொழி-வேதம்: வேதத்திற்குரிய புலவீர் என்றவாறு. நுமது மொழியில் இச் சிறப்பு இன்மையின் யாங்கூறுதும் கேண்மின் என்க.

காமம் - காமவொழுக்கம். காமத்துக் காதற்காமம் சிறந்தது என மாறுக. விருப்பு - அன்பு. ஓரொத்து - ஒருதன்மையானே ஒத்து.

காமங்களுள் வைத்துக் காதற்காமம் சிறந்ததென்க. காதல் இல்லாத காமமாவன, கைக்கிளையும் பெருந்திணையும் பொருட்பெண்டிர் பொய்ம்மைமுயக்கமும் முதலியன என்க. இவற்றைக் காமக்காமம்

என்ப. பொருளியலின்கண் இவற்றை வேறுபிரித்துக் குறிஞ்சி முதலிய காதற்காம வொழுக்கங்களையே சிறந்தனவாகக் கோடல் உணர்க.

(பரிமே.) கரு. பான்மைவகையால் தாமே மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சி.

கசு - உஉ : புலத்தலின்................ஊடலுள்ளதுவே

(இ - ள்.) கற்பே புலத்தலின் சிறந்தது - இனிக் காதற் காமத்தினும் களவு கற்பு என்னும் கைகோள் இரண்டனுள் முற்கூறப்பட்ட களவு நிற்க எஞ்சிய கற்பு ஒழுக்கம் ஊடுதலானே சிறந்ததாகும், அதுதான் இரத்தலும் ஈதலும் இவை உள்ளீடாப் பரத்தை உள்ளது - அவ் ஊடல்தானும் தலைவன் வாயில் வேண்டலும் தலைவி வாயிலோர்தலும் இன்னோரன்ன ஒழுக்கங்களும் உள்ளிட்ட தலைவனது பரத்தமை ஒழுக்கத் தானே வருவதாகும், தோள் புதிது உண்ட பரத்தை இல்நாள் சிவப்புஉற அணிந்து பண்புறு கழறல் உவக்கும் சுணங்கறை யது - இனித் தலைவனாலே புதிதாகத் தோள் நுகரப்பட்ட பரத்தையினது இல்லின்கண்ணே அவன் இருக்கும்பொழுது தலைவி தன் தோழியருள் ஒருத்தியை நாட்காலையிலே சிவந்த அணிகளாலே அணிசெய்து ஏவித் தன் பூப்பினை அறிவிப்ப அப் பண்புறு கழறலானே தலைவன் வந்து உவக்கும் புணர்ச்சியை உடைத்து, சுணங்கறை கேள் அணங்கு உற மனைக்கிளந்து உள - அப் புணர்ச்சிகள் தாமும் தலைவிக்குப் பாங்காயினர் கேட்டு வருத்தமுறும்படி பரத்தையால் தன் வீட்டின்கண் அலர் கூறப்பட்டுளவாகும், சுணங்கறைப் பயனும் ஊடலுள்ளது - அப் புணர்ச்சி யின்பந்தானும் களவுப்புணர்ச்சி யின்பம்போல இயல்பாக உளதாகாது ஊடுதலாலே உண்டாவ தாம் ;

(வி - ம்.) புலத்தல் - ஊடுதல். கற்பு - கற்பொழுக்கம். அது - அவ் ஊடல். இரத்தல் - வாயில் வேண்டல். ஈதல் - வாயினேர்தல். இவை என்றது - இன்னோரன்ன பிற வொழுக்கங்களும் என்றவாறு. அவை "கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி, அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக், காத லெங்கையர் காணி னன்றெனு, மாதர் சான்ற வகை" முதலியன.

பரத்தை - பரத்தமை ஒழுக்கம். பண்புறு கழறல் - அறத்தொடு பொருந்திய உறுதிச்சொல். நாள் - விடியற்காலை. நாள் சிவப்புற அணிந்து என மாறுக. சுணங்கறை - புணர்ச்சி. சுணங்கறைப் பயன் - புணர்ச்சி யின்பம் : ஊடலுள்ளது என்றது, 'இயல்பான் உளதாகாது ஊடலின்கண் உளதாவது என்பதுபட நின்றது.

(பரிமே.) கசு. அன்பு ஒவ்வாத கற்பு.

கஅ. பண்புறு கழறலாவது :—"பூப்பின் புறப்பா டீராறு நாளும், நீத்தகன் றுறைதல் அறத்தா றன்றே" எனும் அறத்தொடு பொருந்திய உறுதிச்சொல்.

உஉ - உகூ : அதனுல்.........................பயன்

(இ - ள்.) அதனுல் - இங்ஙனமிருத்தலால், அகறல் அறியா அணி இழை நல்லார் - இக் கற்பிற்போலத் தலைவர் நீங்குதல் அறியாத களவுப்புணர்ச்சியையுடைய மகளிர், துனிக்கும் தவறு இலர் - தந்தலைவரோடு மாறுகொண்டு ஊடுகின்ற குற்றம் உடையர் அல்லர், இத் தள்ளாப் பொருள் இயல்பின் தண்தமிழ் ஆய்வந்திலார் - இக் களவுப் புணர்ச்சியே களவு கற்பென்னும் இரண்டனுள் வைத்தும் சிறந்தது என்று பாராட்டுகின்ற குன்றாத பொருள் இலக்கணத்தை உடைய குளிர்ந்த தமிழை ஆராயாத தலைவரே, குன்றுப் பயன்-குறிஞ்சியின்கண் நிகழும் இன்பமாகிய இக்களவொழுக்கத்தை, கொள்ளார் - மேற்கொள்ளார் ;

(வி - ம்.) அகறல் - பிரிந்துபோதல் : 'அகறலறியா அணியிழை நல்லார்' என்றது, களவுப் புணர்ச்சியையுடைய தலைவியரைப் பிரிதலும் ஊடலும் இல்லாமையால் கற்பினும் களவே சிறந்தது என்பது கருத்து. இக் கருத்தினை,

"சிறப்பினுற் பெயர்பெற்றது களவியலென்பது. என்னை? களவு கற்பு என்னும் கைகோள் இரண்டனுள் களவினைச் சிறப்புடைத்தென்று வேண்டும் இவ் வாசிரியன்" (இறையனர் களவியல் சூ. க-உரை) என்றும், "இன்றமிழ் இயற்கை யின்பம்" (சீவக-உ0கூரு) என்றும் பிற சான்றோரும் ஓதுமாற்றானும் உணர்க.

தள்ளா - குன்றாத. பொருளியல்பின் தண்தமிழ் - பொருளிலக்கணத்தையுடைய இனிய தமிழ். குன்றுப் பயன் - குன்றுதரும் பயன் என்க. அஃதாவது களவுப் புணர்ச்சியின்பம். மலையும் மலைசார்ந்த நிலனுமாகிய குறிஞ்சிநிலத்து ஒழுக்கமாகலின் 'குன்றுதரும் பயன்' என்றார்.

(பரிமே.) இனி அக் களவிற்புணர்ச்சியை உடைமையான் வள்ளி சிறந்தவாறும் அத் தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்தவாறும் கூறுகின்றார்.

உஎ - ஙகூ : ஊழ்ஆரத்.......................இகந்தாளை

(இ - ள்.) ஊழ் தேய்கரை ஆரம் நூக்கிப் புகைஅல் தந்த - முறை முறையாகத் தேய்ந்தொழிந்த கரையின்மேல் நின்ற சந்தனமரத்தை முறித்து வையை நீர் கொணர்ந்த, காழ் ஆரத்து அம்புகை சுற்றிய தார் மார்பின்-வயிரமேறிய சந்தனக் கட்டையினது அழகிய புகை சூழ்ந்ததும் மாலையினையுடையதுமாகிய மார்பின்கண், கேழ் ஆரம்பொறப்ப வருவானை - நிறம் பொருந்திய முத்துமாலை அழகுசெய்யாநிற்ப வள்ளியின் பக்கல்

நின்று தன்பக்கலிலே வாராநின்ற முருகவேளை, தொழாஅ - தேவசேனை தொழுது, ஐய (ருச) எம்போலும் கேழ்இலார் - ஐயனே எம்மைப்போன்று பிரிவாலே நிறம் கெட்டவராகிய, வைஎயிற்று எய்யா மகளிர் திறம்-கூர்த்த பற்களையுடையவரும் நின்னியல்பு அறியாமல் நின் மயலிலே அகப்பட்டவருமாகிய மகளிர்களினது தன்மை, இனி மழைபெய்ய உழக்கும் கா - இனி மழை பெய்யவேண்டி வருந்தாநிற்கும் பொழிலின் தன்மையையே ஒபபதாம், திருவுடையார் மென் தோள்மேல் அல்கி நல்கலும் இன்று - நின்னை எய்தும் பாக்கியமுடைய மகளிரின் மெல்லிய தோள்மேல் எழுந்தருளி அவர்க்கு அளி செய்யும் தன்மையும் நினக்கு இல்லை, வாழிய மாயா நின் தவறிலை - நீ இத் தன்மையுடையா யாகலின் வஞ்சனே நீ வாழ்வாயாக!, நீ தவறுடைமை அல்லை - நின்னியல்பு அறியாமல் நின் மயலிற்பட்ட மகளிரே தவறுடையர் ஆவர், மாண் நலம் உண்கோ - ஆதலால் யான் நினது மாட்சிமையுடைய நலத்தை நுகரக்கடவனோ நுகரேன்காண் என்று, வெம் நோக்கத்தால் கைசுட்டிக் கரையா - வெச்சென்ற பார்வையுடனே கையாற் றன்னைச் சுட்டிச் சொல்லி, பெண்டின் இகலின் இகந்தாளை - அவன் வழிமுறைக் கிழத்தியாகிய வள்ளி காரணமாக ஊடிச் செல்லாநிற்ப அங்ஙனம் செல்லும் தேவசேனையை ;

(வி - ம்.) ஊழ்தேய் கரை ஆரம் நூக்கி என மாறுக. ஊழ் - முறை : மழை பெய்யுந்தோறும் நீர் பெருகுந்தோறும் முறை முறையாகத் தேய்ந்த கரை என்க. காழ் - வயிரம். கேழாரம் - நன்னிற முடைய முத்துமாலை. பொறப - அழகுசெய்ய வருகின்ற முருகவேளை என்க. எம்போலும் கேழிலாரே தவறுடையர் என்பது குறிப்பெச்சம். கேழிலார் என்றது பிரிவாற்றுது நிறம் கெட்ட மகளிர் என்றவாறு.

திருவுடையார் - நின்னை எய்தும் பாக்கியம் உடைய மகளிர். எய்யா - அறியாத. நின்னியல்பறியாது மயங்கிய மகளிர் என்க. எய்யாமகளிர் திறம் மழைக்கு வருந்தும் காவினது திறத்தை ஒக்கும் என்க.

வெங்நோக்கம் - வெச்சென்ற பார்வை. கைசுட்டி என்றது யான் நின் மாணலம் உண்கோ என்புழித் தனது விரலைத் தன் மார்பின்கண் வைத்துச் சுட்டி என்றவாறு. கரையா : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் ; கரைந்து என்க. கரைதல் - கூறுதல். பெண்டின் - பெண்டு காரணமாக. பெண்டு : வள்ளி.

(பரிமே.) ருச. காவை ஒத்தலாவது : கா தனக்கு இன்றியமையாத மழையை வருவித்துக்கொள்ளமாட்டாது, அது தானே வந்துழிப் பொலிந்து வாராத வழியும் ஆமளவும் ஆற்றி ஆகாத எல்லைக்கண் இறந்துபடுதல் (பி - ம். இறந்துபடுமாகலான்). அத் தொழில்களான் ஒத்தல்.

நக - சச : அவ்வேள்............................வண்டு

(இ - ள்.) அவ்வேள் திருந்து அடி தலைக்கண்ணி தோயத் திறை கொடுப்பானை - அதுகண்ட அம் முருகவேள் அங்ஙனம் ஊடலானே சென்ற தேவசேனையைத் தொடர்ந்து சென்று அவளுடைய திருந்திய அடியின்மேல் தனது தலையிற் சூட்டப்பட்ட மாலை தோயும்படி வணங்கித் தனது வணக்க மாகிய திறைப்பொருளை அவளுக்குக் கொடுப்ப அங்ஙனம் கொடாநின்ற முருகவேளை, வருந்தல் என அவற்கு மார்பு அளிப்பாளை - நீ இனி வருந்தாதேகொள் என்று ஆறுதல்கூறி ஊடல் தீர்ந்து அவனுக்குத் தனது மார்பைத் தேவசேனை அளிக்க, ஒள் இழை இறுகிறுக யாத்து கோதை கோல்ஆக குறுகல் என்று புடைப்ப - அதுகண்ட ஒள்ளிய அணிகலன் களையுடைய வள்ளி சினந்து அம் முருகவேளின் கைகளை இறுக இறுகக் கட்டிவைத்துத் தனது மாலையையே அடிக்கும் கோலாகக்கொண்டு 'நீ இனி அவள்பால் செல்லாதே செல்லாதே' என்று கடிந்து அடியாநிற்ப, ஒருவர் மயில் ஒருவர் ஒண்மயிலோடு ஏல - அந் நிகழ்ச்சியினைக் கண்டு நின்றனவாகிய ஒருவர் மயில் ஒருவர் மயிலோடு போர்தொடங்காநிற்பவும், இருவர் வான்கிளியும் மழலை ஏற்பின் - வள்ளியும் தேவசேனையு மாகிய இருவருடைய உயர்ந்த கிளிகளும் தம்முட் பகைகொண்டு ஒன்றை ஒன்று மழலைச்சொல்லாலே வையத்தொடங்கவும் அவ்வளவிலே, வெறிகொண்டான் குன்றத்து வண்டு - வெறி யாட்டினை உவந்து ஏற்கும் முருகவேள் உறையும் திருப்பரங் குன்றத்துவாழும் வள்ளியினுடைய வண்டு, கொண்டை செறிவண்டு மேல்சென்று பாய்ந்தன்று - தேவசேனையினது கொண்டையின்கட் செறிந்த வண்டின்மேல் சென்று மோதா நின்றது ;

(வி - ம்.) வேள் - முருகவேள். தலைக்கண்ணி - தலையிற் சூட்டப் பட்ட மாலை. திருந்தடி - இலக்கணமமைந்த அடி என்க. திறை - வென்றோர்க்குத் தோற்றோர் திறை கொடுப்பது மரபாகலின், ஊட லின்கண் தோற்ற வேள் தன் வணக்கமாகிய திறைப்பொருளைக் கொடுத்தான் என்க. குறுகல் - செல்லாதே. ஒள்ளிழை : அன்மொழித் தொகை : வள்ளி. யாத்து - கட்டி. புடைப்ப - அடிப்ப.

இருவர் ஊர்திகளாகிய மயிலிரண்டும் தம்முட் பகைத்துப் போர் தொடங்க என்க. வான்கிளி - உயர்ந்தசாதிக் கிளி : வானத்திற் றிரியும் கிளியுமாம். மழலை ஏற்பின் எனமாறுக. மழலை ஏற்றல் - மழலைச்சொல்லானே வைதல். கொண்டை - தேவசேனையினது கொண்டை என்க.

குறமகளாதலின் வள்ளியின் வண்டைக் 'குன்றத்து வண்டு' என்றார். வெறிகொண்டான்-வெறியாடலை உவந்து ஏற்றுக்கொண்டவ னாகிய முருகன். குன்றம் - திருப்பரங்குன்றம்.

(பரிமே.) சச. குன்றத்து வண்டென்றமையான், அது வள்ளி யுடையதாயிற்று.

சடு - சகூ: தார்தார்......................நூழில் தலைக்கொள்ள

(இ - ள்.) ஊதுநுடங்கும் நொசி நுசுப்பார் - (அங்ஙனம் பாய்ந்ததனைக் கண்ட) வாயினால் ஊதாநின்ற காற்றினையும் பொறாமல் வளையும் நுண்ணிதாகிய இடையினையுடையவராகிய தேவசேனையின் தோழியர் அங்ஙனம் மெல்லியராயிருந்தும், பேதை மட நோக்கம் பிறிது ஆக-தமது பேதைமையையுடைய மெல்லிய நோக்கம் சினத்தாலே மாறுபடாநிற்ப, தார் தார் பிணக்குவார் - வள்ளியின் தோழியருடைய மாலைகளோடு தம் மாலையை வீசிப் பின்னுவர், கண்ணி ஓச்சித் தடுமாறுவார் - தமது தலையிலணிந்த மாலைகளை எறிந்து சினத்தானே மனந் தடுமாறுநிற்பர், கோதை வரிப்பந்து கொண்டு எறிவார் - தமது மாலைகளையும் வரியினையுடைய பந்துகளையும் போர்ப்படையாகக் கொண்டு எறியாநிற்பர், மார்பு அணி கொங்கை வார் மத்திகை யாப் புடைப்பர் - மார்பினை அழகுசெய்யும் தமது கொங்கை யின்கண் இறுக்கிய கச்சினையே மத்திகையாகக்கொண்டு புடையாநிற்பர், நூழில் தலைக்கொள்ள - இவ்வாறாக மிடைந்த போரினை மேற்கொள்ளாநிற்ப ;

(வி - ம்.) தார்-மார்பில் அணியும் மாலை. பிணக்குதல் - பின்னச் செய்தல். கண்ணி - தலையிற் சூடும் மாலை. சினமிகுதியான் மனந் தடுமாறுநிற்பர் என்க. மார்பிற்கு அணிசெய்யும் கொங்கையின்கண் வார் என விரிக்க. மத்திகை - சம்மட்டி. மத்திகையாக எனற்பாலது ஈறுகெட்டு நின்றது. வரிப்பந்து - வரியினையுடைய பந்து என்க. மடநோக்கம் - மெல்லிய நோக்கம் என்க. சினத்தானே நோக்கம் வேறுபட என்க. நொசி நுசுப்பு - நுணுகிய இடை. நூழில் - மிடைத லுடைய போர்.

(பரிமே.) சசா. மார்பை அழகுசெய்த கொங்கைக் கண்.

சகூ. ஊத நுடங்கும் நுசுப்பினராயிருந்தே மிடைந்த போரை மேற்கொள்ள.

ருo - ருசா. கயம்படு......................மயிலியலவர்

(இ - ள்.) (ருசா.) மென்சீர் மயிலியலவர் - இங்ஙனம் தேவ சேனையின் தோழியர் போரை மேற்கொண்டமை கண்ட வள்ளி யின் தோழியராகிய மெல்லிய தன்மையின்கண் மயிலை ஒத்தவர், கயம்படு கமழ சென்னிக் களிற்று இயல் கைம்மாறுவார் - தோட்டிப்புண்ணாலே மென்மைப்பட்டதும் மதமணங்கமழ்வது மாகிய தலையினையுடைய களிற்றியானையினது தன்மையினைத் தம்பால் கொள்ளுவார், வயம்படு பரிப்புரவி மார்க்கம் வருவார்-

வெற்றியை உண்டாககுதற்குக் காரணமான செலவினையுடைய குதிரைகளது கதிகளை மேற்கொண்டு வாராநிற்பர், தேர் அணி அணிகயிறு தெரிபு வருவார் - தேரினதுவரிசை வருமாறு போல வடிக்கயிற்றைத் தெரிந்துகொண்டு வாராநிற்பர், வாளி மார்பு உற வரிசிலை வளைய வாங்குவார் - அம்புகள் தம் மார்பினைப் பொருந்தும்படி தமது வரியப்பட்ட வில்லினை நன்கு வளையுமாறு வளைக்காநிற்பர், வாளிகள் நிலைபெற மறலுவார் - வாட்படையினையுடைய போர்மறவர் தன்மை தம்பாற் றோன்றும்படி சீறாநிற்பர், தோள்வளை ஆழி சுழற்று வார் - தமது தோளின்கண் அணியப்பட்ட வளையங்களையே ஆழிப்படையாகக் கொண்டு அவற்றைச் சுழற்றாநிற்பர்;

(வி - ம்.) கயம் - ஈண்டு மென்மைப்பண்பு குறித்து நின்றது; "கயவென் கிளவி மென்மையும் செய்யும்" (உரி - உசு.) என்பர் தொல்காப்பியர். தோட்டிப் புண்ணுல் மென்மைப்பட்ட என்க. மதம் கமழ் சென்னி என்க. களிறு - ஆண்யானை. ஆண்யானையின் இயல் பினை மேற்கொள்வார் என்க. கைம்மாறுதல்: ஒரு சொல்; தம்பாற் கோடல். வயம் - வெற்றி. தேரணி - தேர்வரிசை. அணிகயிறு - வடிக்கயிறு - அஃதாவது கடிவாளக்கயிறு. வாளி மார்புற என மாறுக. மறலுதல் - சீறிப்பகைத்தல். ஆழி - சக்கரப்படை.

மென்சீர் மயிலியலையுடைய வள்ளியின் தோழியர் களிற்றியானை வருமாறும், புரவி வருமாறும், வடிக்கயிறு தெரிந்து தேரணி வருமாறும் வருவார் என்க.

(பரிமே.) ருய. தோட்டிப்புண்ணுல் மென்மைப்பட்ட சென்னி.

ருக. (பரிப்புரவி) செலவினையுடைய புரவிகள்.

ருச. (வாளிகள்) வாளினையுடையார்.

ருஎ - சுசு: **வாண்மிகு.....................ஆகுல மாகுநரும்**

**(இ - ள்.)** வானவன் மகள் மாண் எழில் மலர் உண்கண் மடமொழியவர் - வள்ளியின் தோழியர் செயல்கண்டு அஞ்சிய இந்திரன் மகளாகிய தேவசேனையினது தோழியராகிய மாட்சிமைமிக்க அழகானை தாமரை மலரை ஒத்த மையுண்ட கண்களையும் மடப்பமுடைய மொழியினையும் உடைய மகளிர் கள், வாள்மிகு வயமொய்ம்பின் வரை அகலத்தவனை உடன் சுற்றி - வாள் தழும்பு மிக்க வெற்றியாற்றலையுடைய மலை போன்ற மார்பினையுடைய முருகவேளை ஒருங்கே கூடிச் சூழ்ந்து கொண்டு, கடி சுனையுள் குளித்து ஆடுநரும் - மலர் மணங் கமழும் சுனையின்கண் பாய்ந்து முழுகி ஆடுவோரும், அறை அணிந்த அருஞ்சுனையான் - அப் பாறையினை அழகுசெய்த அரிய சுனையின்கண், நறவு உண்வண்டாய் - தேனை உண்ணும்

வண்டுகளாகமாறி, நரம்பு உளர்நரும் - யாழ் நரம்பு இசைக்கு மாறு இசை யெழுப்புவோரும், சிகை மயிலாய் தொகை விரித்து ஆடுநரும் - உச்சிச் சூட்டினையுடைய மயில்களாய மாறித் தம் தோகையை விரித்து ஆடுவாரும், கோகுலமாய்க் கூவுநரும் - குயில்களாக மாறிக் கூவா நிற்போரும், ஆகுலம் ஆகுநரும் - துன்பங்களை நுகர்வாரும் ஆகாநிற்ப ;

(வி - ம்.) வாள் : ஆகுபெயர்; வாட்டமும்பென்க. மொய்ம்பு - வலிமை. வரை - உத்தம இலக்கணமாகிய கோடுகளுமாம். அகலத்தவன் - ஈண்டு முருகவேள். வானவன் - ஈண்டு இந்திரன். எழிலால் மலரையொத்த உண்கண் என்க. கடிசுனை - மணமுடைய சுனை. அறை - பாறைக்கல். அருஞ்சுனை - வேறிடத்தே காண்டற்கரிய சுனை என்க. சுனையான்-சுனையின்கண் : வேற்றுமைமயக்கம். நரம்புபோல உளர்நரும் என்க. சிகை - உச்சிச்சூட்டு; கொண்டை. தோகை : முதல் குறுகி, தொகை எனநின்றது. கோகுலம் - குயில். ஆகுலம் - துன்பம்.

(பரிமே.) சுகூ. ஆகுலமாகுநருமாக.

சுஎ - சுகூ : குறிஞ்சி........................குன்று

(இ - ள்.) தண் பரங்குன்று - இத் தண்ணிய திருப்பரங்குன்று, குறிஞ்சிக்குன்றவர் மறம் கெழு வள்ளி தமர் - குறிஞ்சி நிலத்து மக்களாகிய குறவர் பெற்ற தறுகண்மை பொருந்திய கொடிச்சியராகிய வள்ளியின் தோழிமார், வித்தகத் தும்பை விளைத்தலால் - மேற்கூறியவாறு திருந்திய போரினை விளைத்து வாகை சூடுதலானே, வென் வேலாற்கு ஒத்தன்று - வெற்றி வேலையுடைய முருகவேளுக்குப் பெரிதும் இயைவதாயிற்று.

(வி - ம்.) குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த இடமும். குன்றவர் - குறவர். மறம் - தறுகண்மை. வள்ளிதமர் - வள்ளியின் தோழியர். வித்தகம் - திருத்தம். தும்பை : போர் விளைத்து வென்றதனுல் என்க.

(பரிமே.) இவ்வாறு அவனைப் படர்க்கையாக்கி இவை கூறிப் பின்னும் எதிர்முகமாக்கி வாழ்த்துகின்றார்.

எ0 - எஅ : கடுஞ்சூர்.....................படாகை நின்றன்று

(இ - ள்.) கடுஞ்சூர் மாமுதல் தடிந்து அறுத்தவேல் அடும்போராள - கடிய சூரபதுமனாகிய மாமரத்தினது வேரை வெட்டி அறுத்த வேற்படையினையுடைய போர்த்தொழிலை மேற்கொள்ளும் பெருமானே, நின்குன்றின்மிசை - நின்னுடைய திருப்பரங்குன்றத்தின்கண், ஆடல்நவின்றோர் அவர் போர் செறுப்பவும் - கூத்துத்தொழில் பயின்றோரை அக் கூத்துத்

தொழில் பயின்றோர் வெல்லாநிற்பவும், பாடல்பயின்றோரைப் பாணர் செறுப்பவும் - இசைப்பாடல் பயின்றோரை அவ்விசைப் பாடல் வல்லோர் வெல்லாநிற்பவும், வல்லாரை வல்லார் செறுப்பவும் - சூதாடுவாரை அச் சூதுப்போராடுவோர் வெல்லா நிற்பவும், அல்லாரை அல்லார் செறுப்பவும் - மேற் கூறப் பட்டோர் அல்லாத பிற கல்விகளையுடை யோரை அவ்வக்கல்வி யுடையோர் வெல்லாநிற்பவும், ஓர் சொல்லாய் - இக் கல்வி வென்றிகளால் ஆகிய ஒப்பற்ற புகழுக்கு அறிகுறியாகி, செம் மைப் புதுப்புனல் தடாகம் ஏற்ற தண் சுனைப் பாங்கர்ப் படாகை நின்றன்று - செவ்விய புதிய நீரானே நிறைந்த தடாகத்தை ஒத்த சுனையின் பக்கத்தே கொடி உயர்த்து நின்றது;

(வி - ம்.) நவிலுதல் - பயிலுதல். ஆடல் நவின்றோரை அவர் போர் செறுப்பவும் என்றது, ஆடல் வென்றியை. இதனை,

"கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு—பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றாடும்
தொடுகழன் மன்னன் துடி." (பு - வெ. ருகூ)

எனவரும் புறப்பொருள் வெண்பாவான் உணர்க.

'பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்' என்றது, பாடல் வென்றியை. இதனை,

"வண்டுறையும் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையும் செந்துறையும் வேற்றுமையாக்—கண்டறியக்
கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடையாழ்
அந்நரம்பும் அச்சுவையும் ஆய்ந்து." (பு - வெ. ருகூ0)

எனவரும் வெண்பாவான் உணர்க.

'வல்லாரை வல்லார் செறுப்பவும்' என்றது, சூதுவென்றியினை. இதனை,

"கழகத் தியலும் கவற்றின் நிலையும்
அளகத் திருநுதலாள் ஆய்ந்து—புழகத்து
பாய வகையால் பணிதம் பலவென்றாள்
ஆய வகையும் அறிந்து." (புற - வெ. ருகு அ)

என்னும் வெண்பாவான் உணர்க.

அல்லார் என்றது இக் கல்வியல்லது பிறகல்வியுடையார் என்ற வாறு. அவையாவன:—குதிரைவென்றி, தேர்வென்றி, யாழ்வென்றி முதலியன.

"ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையும்
கந்து மறமும் கறங்குளைமா—மூந்துற
மேல்கொண் டவைசெலீஇ வென்வேலான் மேம்பட்டான்
வேல்கொண்ட கண்ணுளை மீட்டு." (புற - வெ. ௩௫௫)

இது குதிரைவென்றி.

"ஒலிமணித் திண்டேர் உடையாரை வெல்லும்
கலிமணித் திண்டேராற் காளை—கலிமாப்
பலவுடன் பூட்டிப் படர்சிறந் தைந்து
செலவோடு மண்டிலம் சென்று." (புற - வெ. ௩௫௬)

இது தேர்வென்றி.

"பாலை படுமலை பண்ணி அதன்கூட்டம்
கோலஞ்செய் சீறியாழ் கொண்டபின்—வேலைச்
சுவையெலாம் தோன்ற எழீஇயினாள் சூழ்ந்த
அவையெலாம் ஆக்கி அணங்கு." (புற - வெ. ௩௫௭)

இது யாழ் வென்றி.

ஓர்சொல் - ஒப்பற்றபுகழ். புகழ்க்கு அறிகுறியைப் புகழாகி என்றார். படாகை - கொடி - வென்றிக் கொடி. நின்றன்று - நின்றது. கல்விக்கு வென்றிக் கொடியுயர்த்தும் வழக்கத்தை,

"பல்கேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
உறழ்குறித் தெடுத்த உருகெழு கொடியும்."
(கசுகூ - கஎக)

எனவரும் பட்டினப் பாலையானும்,

"நன்பல பல்வேறு குழூக்கொடி" (௩எ௨ - ௩.)

எனவரும் மதுரைக்காஞ்சி அடிக்கு நச்சினார்க்கினியர் கூறும் நல்லுரையானும் உணர்க.

(பரிமே.) எச. வல்லாரை - வல்லுப்போர் வல்லாரை.

எரு. இக் கல்வி வென்றிகளான் ஒப்பில்லாத புகழ்பரப்ப.

எகூ - அரு: மேஎ வெஃகினவை.....................பொலிந்தே

**(இ - ள்.)** மேஎ எஃகினவை - பெருமானே நீ நினக்குப் பொருந்தியதொரு வேற்படையினையுடையை, வென்று உயர்த்த கொடிவிறல் சான்றவை - நின் பகைவரை வென்று அவ் வெற்றிக்கு அறிகுறியாயதொரு கோழிக்கொடியாலே வெற்றிப் பாடும் அமையாநின்றனை, கற்பு இணை நெறி - கற்பொழுக்கம் பொருந்திய நெறியினையுடைய நின் தேவியரினுடைய, ஊடு அற்பு இணை கிழமை - ஊடுதலாகிய அன்பு பொருந்திய

உரிமையினை, நயத்தகு மரபின் வியத்தகு குமர - நயத்தற் கேற்ற பண்பினையுடைய வியத்தற்குரிய அழகனே!, யாம் நினை - அடியேங்களாகிய யாங்கள் நின்னை, நயத்தலின் சிறந்த எம் அடியுறை - அன்பினாலே சிறந்த எம்முடைய நினது திருவடி நீழலிலே உறையும் உறைவு, நாள் தொறும் பொலிந்து பயத்தலின் சிறக்க - நாள்தோறும் பொலிவு பெற்றுப் பயன்தருதலோடே சிறப்பதாக என்று, தலை தாழ்த்து வாழ்த்தினேம் பரவுதும் - நினது திருவடிகளிலே எமது தலையுறும்படி வீழ்ந்து வணங்கி வாழ்த்தி வேண்டிக் கொள்ளா நின்றேம்.

**(வி - ம்.)** மேள - பொருந்திய. எஃகு - வேல். எஃகினவை, சான்றவை என்பன ஐயீற்று முன்னிலை ஒருமைக் குறிப்பு வினைமுற்றுக் கள் ஆதல் முன்னும் கூறினும். கொடி - கோழிக்கொடி. ஊடு அற்பு இணை கிழமை எனக் கண்ணழித்துக் கொள்க. ஊடுகின்ற அன்பு பொருந்திய உரிமை என்க. அற்பு - அன்பு. கிழமை - உரிமை. தலை தாழ்த்து எனமாறுக; வணங்கி என்றவாறு. வாழ்த்தினேம்: முற்றெச்சம்; வாழ்த்தி என்க. நின்னை நயத்தலாலே சிறந்த எம் முடைய என்க. நயத்தல் - அன்பு செலுத்துதல். எம் அடியுறை - யாங்கள் உறையும் எமது உறைவு என்றவாறு. எனவே நினது திருவடிக்கண் யாங்கள் கொண்டுள்ள விருப்பம் என்றவாறாயிற்று. நினது திருவடிக்கண் எமது விருப்பம் நாடோறும் பொலிந்து சிறக் கும்படி நீ அருள்பாலிக்க வேண்டும் என்று வேண்டியவாறு அவ னருளாலே அவனடி வணங்குதல் வேண்டுதலின் இவ்வாறு வேண்டி னர் என்க.

இவ்வாறே ஐந்தாம் பாட்டினும்,

"...............யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்லநின் பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்."

என்று வேண்டுகின்ற அருமையை இதனோடு ஒப்புக் காண்க.

(பரிமே.) என்றென்பது அவாய் நிலையான் வந்தது.

# பத்தாம் பாடல்

## வையை

### பொருட் சுருக்கம்

இப்பாடல் தலைவன் பிரிந்தமையானே ஆற்ருது வருந்திய தலைவியின் நிலைகண்டு வருந்திய தோழி தலைவன்பால் பாணனைத் தூதுவிட்டாளாக, அப் பாணன் தலைவனைப் பாசறைக்கண் சென்றுகண்டு கார்ப்பருவ வருகையையும், அதனால் மதுரையின்கண் வையையாற்றில் புதுநீர் வந்தமையும், ஆங்கு நிகழ்ந்த நீரணிவிழவும் பிறசெய்திகளும் கூறுவான் கூற்ருக அமைக்கப்பட்டுளது.

**க - ரு :** பெருமானே ! மலையிடத்தே மாலைப் பொழுதிலே பெய்த பெருமழையாலே காலைப் பொழுதிலே வையையாறு வெள்ளத்துடன் கடலோடு கலக்கும் பொருட்டு மலர்ப் போர்வையையும் பருமணலையும் மேலே மூடிக்கொண்டு உலகிற் பசிமுதலிய துன்பங்கள் அகன்றொழியவும் வண்டுகள் பாடவும் கரை காவலரை அழைக்கின்ற பறைகள் முழங்கவும் போந்தது.

**சு - கரு :** அப் புனலிலே ஆடும் பொருட்டு யாவரும் புறப்பட்டனர்; மகளிர் தம் மேகலைஅணியை இறுகிறுகப் புனைந்தனர்; நீர்வீசும் துருத்திகளையும், சந்தனத்தையும் எடுத்துக் கொண்டு குதிரையின் மீதும், எருதுபூண்ட வண்டியின் மீதும், கோவேறு கழுதையின் மீதும், குதிரை பூண்ட வண்டியின்மீதும், சிவிகையின்மீதும் ஏறினர்.

**கசு - உரு :** முகைபோன்ற பருவத்தினரும், புதுமலர் போன்ற பருவத்தினருமாகிய இளமகளிரும், நரைவிரவிய கூந்தலுடையோரும், முழுநரையாகிய கூந்தலுடையோரும் ஆகிய முதுமகளிரும், கற்புடை மகளிரும், பரத்தையரும், இவர்தம் தோழியரும், சிலதியரும் மெல்லநடந்து ஆற்றின் கரையைச் சேர்ந்தனர். இவர்கள் நடை தாளவிதியாலே கூட்டப்பட்ட பல இசைக்கருவிகளின் மென்னடை போன்றிருந்தது.

**உசு - சய :** இங்ஙனம் சேர்ந்த மகளிரிற் சிலர் நீரின் அழகைக்கண்டு நின்றனர்; சிலர் நீரணிமாடத்தில் ஏறிச்

சென்றனர்; சிலர் குதிரையில் ஏறிச்சென்றனர்; சிலர் பிடி மேலேறிச் செலுத்தினர்; சிலர் ஆற்றிடைக்குறையிற் சென்று தங் காதலரைத் தழுவிக்கொண்டனர்; சிலர் யாமத்து உண்டான ஊடலின் குறையாகிய தேனை உண்டனர்; சிலர் காமக் கணிச்சி உடைத்தலால் ஊடல் தீர்ந்து திரை வீழ்த்துப் படுக்கையிற் சேர்ந்தனர்; முகைப்பருவத்து மகளிர் தம் காதற் கணவர் தம்மை நாடி வந்து எதிர்ந்து இன்புறும்படி நீராடல் குறித்துச் சென்றனர்; அவர் தமக்குக் காவலாகிய பாட்டியரையும் கடந்துபோய் வையைப் புனலை எதிர்கொண்டனர்.

**சக - ருரு :** மதுரையில் இங்ஙனம் நிகழும்போது ஒரு களிறு தன்பக்கத்தே வரும் பிடியைக்கண்டு மயங்கித் தன் மேலிருந்த மைந்தர் செலுத்தும் வழிச் செல்லாமல் ஒரு புலிமுக மாடத்தின் அருகே நின்றது; அப் பிடியும் அக் களிற்றை விரும்பித் தன்மேலிருந்த மகளிரோடே அக் களிற்றைத் தொடர்ந்து அப் புலிமுக மாடத்தருகே சென்று ஆங்கு மாடத்தில் இயற்றி வைத்திருந்த புலியுருவத்தை மெய்யான புலி என்று கருதி, அப் புலி களிற்றின்மேற் பாயும் என்னும் அச்சத்தாலே தன் மேலிருந்த மகளிர் நடுங்கும்படி பாகருக்கு அடங்காமல் சிதைந்தது; அது கண்ட களிறும் அவ்வாறே சிதைந்தது; அதுகண்ட பாகர் அக் களிற்றினை அம் மாடத்தருகினின்றும் பெயர்த்துப் பிடியை அணைவித்தனர்; பிடியும் களிறும் அமைதியுற்றன; மகளிரும் நடுக்கந் தீர்ந்தனர்.

**ருகூ - கூஅ :** ஊடலை மேற்கொண்ட மகளிரும் மைந்தரும், ஆண்டு எழுந்த இன்னிசைகள தமது திண்மையை உடைத்துக் காமவிருப்பத்தை மிகுவித்தலானே, ஊடல்தீர்தற்கு அவாவுடையராகியும் தோல்விகருதி ஊடல்தீர்தற்கு நாணினர்; அதனாற் கூடிமுயங்காமல் இன்னல் உற்றனர்.

**கூகூ - எ0 :** காமம் மிக்கு எழ, அதனால் உண்டான களிப்புத் தம் கண்ணிற் புலப்படாநிற்பவும், ஊரவர்க்கு அஞ்சிச் சிலர் அதனை ஒளித்தனர்.

இவ்வாறாக, இவ் வையைப்புனல் கள்ளையும் காமத்தையும் பொருந்திக் கரையற்ற இன்ப வெள்ளத்தைத் தந்தது.

**எக - கூச :** நீராடலின்கண் இளைத்த மகளிர் புணையை விட்டுக் கரையேறினர்; அகிற்புகையாலே தம் முடம்பின் ஈரத்தைப் புலர்த்தி மார்பிலே கலவைக்குழம்பைப் பூசினர்; அதன்மணம் திசையெலாம் கமழ்ந்தது; சில மகளிர் வள்ளத்தில் மதுவைப் பெய்து தம் வாயில்வைத்துப் பருகினர்; சிலர் வெண்டுகிலாலே போர்த்துக் கொண்டனர்; சிலர் கூந்தலில்

ஆடையைச் சுற்றி முறுக்கினர்: சிலர் குங்குமச்சேறு அகிற் சாந்து பச்சைக்கருப்பூரம் ஆகிய இவற்றைச் சாத்தம்மியிலிட்டுத் தீநிறம்பெற அரைத்தனர்; சிலர் பொன்னாற்செய்த சங்கு நண்டு இறவு வாளை என்பனவற்றை நீரிலிட்டு வாழ்த்தினர்; சிலர் வறியோர்க்கு வழங்கினர்; சிலர் நீணிறக்கூந்தலில் பத்து வகைத் துவர்களையும் தேய்த்து நீராடினர்; சிலர் எண்ணெய் நீங்கும்படி அரைப்பைத் தேய்த்துக்கொண்டனர்; சிலர் மாலையையும் சந்தனத்தையும் கத்தூரியையும் அணிகலன்களை யும் நீரிலிட்டனர்; சிலர் மதுவை நீரில் ஊற்றினர்.

**கூரு - கூகூ:** இவ்வாறு அமைந்த மகளிருடைய நிறம் நீர்விளையாட்டினால் ஒளிமிக்கது; முக முதலியன சிவந்தன; இங்ஙனம் ஆடியும் அவர்கள் கண்கள் பின்னரும் அந் நீரின்கட் சென்றன; அவர் கண்கள் மதவேளின் கூர்மைசெய்யப்பட்ட அம்புகள்போற் பொலிந்தன.

**க00 - கககக:** மகளிர்நிலை இங்ஙனமாக மைந்தர் சிலர் வாழைத்தண்டைப் புணையாகப்பற்றி நீரின்மேல் தாவித்தாவிச் செல்லாநின்றனர்; சிலர் தாழம்பூவின் தாதினை நீரின்மேல் தூவினர்; சிலர் ஓடத்திலேறி அதனை நீரோட்டத்தோடே சேரச் செலுத்தினர்; சிலர் நீரோட்டத்தை எதிர்த்தாடி, இளைத் தமையாலே மெல்ல மெல்ல ஆடினர்; சிலர் மகளிர்தம் சிற்றி லின்கண் அட்ட சிறுசோற்றை உண்ணச்சென்றனர்; சிலர் மகளிருடைய பந்தையும் கழங்கையும் களவுகொண்டு ஓடி நீரிற் பாய்ந்தனர்; இங்ஙனம் ஆடலாலே அப் புனல் தெளிவில தாயிற்று.

**ககஉ - கஉரு:** இவ்வாறு, நீர்விளையாட்டு நிகழ்ந்த பின்னர், மாலைப்பொழுது வரத் திங்கள் மண்டிலம் தோன்றிற்று; அங்குள்ள மாந்தர் மீண்டும் மதுரைமூதூர் புகத் தொடங் கினர்; தாங்கள் அணிந்திருந்த பகற்பொழுதிற்குரிய அணி கலன்களை அகற்றினர்; மாலைப்பொழுதிலே மலரும் மலர்களையும், தோளணி தோடு முத்துமாலை முதலிய அணிகலன்களையும், அணிந்துகொண்டனர்; பலர் பாடினர்; அவர்தம் பாட்டொலி யும், பரவுவார் ஒலியும், புகழ்வார் ஒலியும், ஆடுவார் ஒலியும், தாள ஒலியும், தேன்வண்டுகள் இசைக்கும் ஒலியும் மிகுந்தன; இங்ஙனம் எழுந்த பண்ணொலி கேட்டு ஊரிலுள்ள வண்டுகள் தம் இனமென்று கருதி எதிர்வந்து இசைத்தன; பாடுவோரது கொண்டையின்கண்ணிருந்த வண்டுகளும் அவற்றோடு கூடி இசைத்தன; எல்லோரும் தென்றிசைநோக்கி மீண்டனர்; அப்பொழுது மாடத்தினுள்ளிருந்தெழுந்த மணப்புகை மலையின் மேல் தங்கி எழுந்த பனியை ஒத்தது.

**கஉசு - கங0 :** வையையாற்றின் வெள்ளத்தைக்கண்டு விருந்துசெய்யும் கூடலின்கண் குற்றமின்றி இசைக்கின்ற இசைக்குரிமையுடையவராகிய பாணரும், கூத்தரும் மேவிய கூட்டத்தோடு ஒருங்கு ஏத்தித் தொழும்படி வையையாறு புலவர்க்குப் பொன்னைச்சொரியும் வழுதியைப்போலவே கழனிகளின்கண் பொன்னைப் பரப்பும் இயல்பினை என்றென்றும் மாறாது நிலைபெறுக.

மலைவரை மாலை அழிபெயல் காலைச்
சேலவரை காணுக் கடறலைக் கூட
நிலவரை யல்ல னிழத்த விரிந்த
பலவுறு போர்வைப் பருமணன் மூஉய்
வரியரி யாணு முகிழ்விரி சினைய
மாந்தீந் தளிரொடு வாழையிலை மயக்கி
ஆய்ந்தளவா வோசை யறையூஉப் பறையறையப்
போந்தது வையைப் புனல் ;
புனன்மண்டி யாடல் புரிவான் சனமண்டித்
தாளித நொய்ந்நூற் சரணத்தர் மேகலை
ஏணிப் படுகால் இறுகிறுகத் தாளிடீஇ
நெய்த்தோர் நிறவரக்கி னீரேக்கி யாவையும்
மூத்துநீர்ச் சாந்தடைந்த மூஉய்த் தத்திப்
புகவரும் பொங்குளைப் புள்ளியன் மாவும்
மிகவரினு மீதினிய வேழப் பிணவும்
அகவரும் பாண்டியு மத்திரியு மாய்மாச்
சகடமுந் தண்டார் சிவிகையும் பண்ணி
வகைவகை யூழூழ் கதழ்புமூழ்த் தேறி
முதிய ரிளையர் முகைப்பரு வத்தர்
வதிமண வம்பலர் வாயவிழ்ந் தன்னார்
இருதிற மாந்தரு மின்னினி யோரும்
விரவுநரை யோரும் வெறுநரை யோரும்
பதிவத மாதர் பரத்தையர் பாங்கர்
அதிர்குரல் வித்தகர் ஆக்கிய தாள
விதிகூட் டியவிய மென்னடை போலப்
பதியெதிர் சென்று பரூஉக்கரை நண்ணி
நீரணி காண்போர் நிரைமாட மூர்குவோர்

பேரணி நிற்போர் பெரும்பூசல் தாக்குவோர்
மாமலி யூர்வோர் வயப்பிடி யுந்துவோர்
வீமலி கான்யாற்றின் துருத்தி குறுகித்
தாம்வீழ்வா ராகந் தழுவுவோர் தழுவெதிரா
தியாமக் குறையூட லின்னசைத் தேனுகர்வோர்
காமக் கணிச்சியாற் கையறவு வட்டித்துச்
சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்
தாம்வேண்டு காதற் கணவ ரேதிர்ப்படப்
பூமேம்பா டுற்ற புனைசுரும்பிற் சேம
மடநடைப் பாட்டியர்த் தப்பித் தடையிறந்து
தாம்வேண்டும் பட்டின மெய்திக் கரைசேரும்
ஏமுறு நாவாய் வரவெதிர் கொள்வார்போல்
யாம்வேண்டும் வையைப் புனலெதிர்கொள் கூடல்
ஆங்க, அணிநிலை மாடத் தணிநின்ற பாங்காம்
மடப்பிடி கண்டு வயக்கரிமா லுற்று
நடத்த நடவாது நிற்ப மடப்பிடி
அன்ன மனையாரோ டாயா நடைக்கரிமேற்
சென்மன மாலுறப்பச் சென்றெழின் மாடத்துக்
கைபுனை கிளர்வேங்கை காணிய வெருவுற்று
மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புறச்
செய்தொழில் கோள்ளாது மதிசெத்துச் சிதைதரக்
கூங்கை மதமாக் கொடுந்தோட்டி கைந்நீவி
நீங்கும் பதத்தால் உருமுப் பெயர்த்தந்து
வாங்கி முயங்கி வயப்பிடி கால்கோத்துச்
சிறந்தார் நடுக்கம் சிறந்தார் களையல்
இதையுங் கயிறும் பிணையு மிரியச்
சிதையுங் கலத்தைப் பயினாற் றிருத்தும்
திசையறி நீகானும் போன்ம் ;
பருக்கோட்டி யாழ்ப்பக்கம் பாடலோ டாடல்
அருப்ப மழிப்ப அழிந்தமனக் கோட்டையர்
ஒன்ளறோ டிரண்டா முன்றேறார் வென்றியிற்
பல்சன நாணிப் பதைபதைப்பு மன்னவர்
தண்ட மிரண்டும் தலைஇத்தாக்கி நின்றவை
ஒன்றியு முடம்பா டொலியெழுதற் கஞ்சி

நின்ற நிகழ்ச்சியும் போன்ம்;
காமங் கனைந்தெழக் கண்ணின் களியெழ
ஊர்மன்னு மஞ்சி ஒளிப்பா ரவர்நிலை
கள்ளின் களியெழக் காத்தாங் கலரஞ்சி
உள்ள முளையெழ ஊக்கத்தா னுள்ளுள்
பரப்பி மதர்நடுங்கிப் பாரலர் தூற்றக்
கரப்பார் களிமதரும் போன்ம்;
கள்ளொடு காமம் கலந்து கரைவாங்கும்
வெள்ளந் தருமிப் புனல்
புனல்பொருது மெலிந்தார் திமில்விடக்
கனல்பொருத வகிலுருவி காவெழ
நகின்முகடு மெழுகிய அளறுமடை திறந்து
திகைமுழுது கமழ முகிலகடு கழிமதியின்
உறைகழி வள்ளத் துறுநறவு வாக்குநர்
அரவுசெறி உவவுமதியென அங்கையிற் றூங்கி
எறிமகர வலய மணிதிகழ் நுதலியர்
மதியுணர மகளென வாம்பல்வாய் மடுப்ப
மீப்பால் வெண்டுகில் போர்க்குநர் பூப்பால்
வெணடுகில் சூழ்ப்பக் குழன்முறுக்குநர்
செங்குங்குமச் செழுஞ்சேறு
பங்கஞ் செய்யகில் பலபளிதம்
மறுகு படவறை புரையறு குழவியின்
அவியம ரழலென வரைக்குநர்
நத்தொடு நள்ளி நடையிறவு வயவாளை
வித்தி யலையில் விளைக பொலிகென்பார்
இல்லது நோக்கி இளிவரவு கூறுமுன்
நல்லது வெஃகி வினைசெய்வார்
மண்ணுறு மணியின் வணர்குரல் வண்டார்ப்பத்
தண்ணந் துவர்பல வூட்டிச் சலங்குடைவார்
எண்ணெய் கழல விழைதுகள் பிசைவார்
மாலையுஞ் சாந்து மதமு மிழைகளும்
கோலங் கொளநீர்க்குக் கூட்டுவா ரப்புனல்
உண்ணு நறவினை ஊட்டுவா ரொண்டடியார்
வண்ணந் தெளிர முகமும் வளர்முலைக்

கண்ணுங் கழியச் சிவந்தன வன்னவகை
ஆட்டயர்ந் தரிபடு மைவிரை மாண்பகழ்
அரந்தின்வாய் போன்ம் போன்ம் போன்ம்
பின்னு மலர்க்கண் புனல் ;
தண்டித் தண்டிற் றுய்ச்செல் வாரும்
கண்டற் றண்டாது திரைநுரை தூவாரும்
வெய்ய திமிலின் விரைபுனலோ டோய்வாரும்
மெய்ய துழவி னெதிர்புனன் மாறுடிப்
பைய விளையாடு வாருமென் பாவையர்
செய்தபூஞ் சிற்றடிசி லிட்டுண்ண வேற்பார்
இடுவார் மறுப்பார் சிறுகிடையார்
பந்துங் கழங்கும் பலகளவு கொண்டோடி
அந்தண் கரைநின்று பாய்வாராய் மைந்தர்
ஒளிறிலங் கெஃகோடு வாண்மா றுழக்கிக்
களிறுபோ ருற்ற களம்போல நாளும்
தெளிவின்று தீநீர்ப் புனல் ;
மதிமாலை மாலிருள் கால்சீப்பக் கூடல்
வதிமாலை மாறுந் தொழிலாற் புதுமாலை
நாளணி நீக்கி நகைமாலைப் பூவேய்ந்து
தோளணி தோடு சுடரிழை நித்திலம்
பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல்
ஆடுவார் ஆடல் அமர்ந்தசீர்ப் பாணி
நல்ல கமழ்தே னளிவழக்க மெல்லாமும்
பண்டோடர் வண்டு பரியவெதிர் வந்தூதக்
கொண்டிய வண்டு கதுப்பின் குரலூதத்
தென்றிசை நோக்கித் திரிதர்வாய் மண்டுகோற் சார்வா
னளிர்மலைப் பூங்கொடித் தங்கு புகக்கும்
பனிவளர் ஆவியும் போன்ம் மணிமாடத்
துண்ணின்று தூய பனிநீ ருடன்கலந்து
காறிரி வாக்கும் புகை ;
இலம்படு புலவர் ஏற்றகை ஞெமரப்
பொலஞ்சொரி வழுதியிற் புனலிறை பரப்பிச்
செய்யிற் பொலம்பரப்பும் செய்வினை ஓயற்க
வருந்தாது வரும்புனல் விருந்தயர் கூடல்

கஙு0 அருங்கறை அறையிசை வயிரியர் உரிமை
ஒருங்கமர் ஆயமோ டேத்தினர் தொழவே.

என்பது, பருவங்கண்டு வன்புறை எதிரழிந்த தலைமகளது ஆற்றாமை கண்டு தோழி தூதுவிடச் சென்ற பாணன் பாசறைக்கண் தலைமகற்குப் பருவவரவும் வையைநீர் விழவணியும் ஆங்குப்பட்ட செய்தியும் கூறியது.

கரும்பிள்ளைப் பூதனார் பாட்டு; மருத்துவன் நல்லச்சுதனார் இசை; பண்ணுப் பாலையாழ்.

## உரை

க - அ : மலைவரை......................வையைப் புனல்

(இ - ள்.) மலைவரை மாலை அழிபெயல் - மலையிடத்தே மாலைப்பொழுதிலே பெய்த மிக்க மழையாலே, காலை வையைப் புனல் - மறுநாள் காலைப்பொழுதிலே வையையாற்றின்கட் பெருகிய நீர், நிலவரை அல்லல் நிழத்த - நில எல்லையின்கண் பசி முதலிய துன்பங்கள் சுருங்க, விரிந்த பல உறு போர்வை - மலர்ந்தனவாகிய பலவேறு மலர்கள் நெருங்கின போர்வையுடனே, பருமணல் மூஉய்-யாற்றின்கண் பண்டுநீரின்மையானே வறந்து பரவிக்கிடந்த பரிய மணற்பரப்பை மூடிக்கொண்டு, வரிஅரி யாணு முகிழ்விரி சினைய மாதீம் தளிரொடு - வரிகளையுடைய வண்டுகள் மொய்க்கப்பட்டு அழகிய மொட்டுக்கள் மலர்ந்த கொம்புகளையுடைய மாமரத்தினது காண்டற்கினிய தளிர்களோடு, வாழைஇலை மயக்கி - வாழையின் இலைகளையும் மயக்கி, ஆய்ந்து அளவா ஓசை அறையூஉ - ஆராய்ந்து அளவிடப்படாத பல்வேறு ஓசைகள் ஒலியாநிற்பவும், பறை அறைய - கரைகாவலரை அழைத்தற்குரிய பறைகள் முழக்கும்படியும், செல வரை காணு கடல்தலைக் கூட - சென்று எல்லை காணப்படாத கடலைக் கூடுதற்கு, போந்தது - வந்தது;

(வி - ம்.) பெயலானே வையையின்கட் புனல் நிழத்த மூஉய் மயக்கி அறையூஉ அறையப் போந்தது எனக் கூட்டுக.

மலைவரை என்பதன்கண் வரை என்பது ஏழனுருபின் பொருட்டு. அழி - மிகுதி, "அழிதரும் கம்பலை" (மதுரைக்காஞ்சி - ௩௬௪) என்புழியும் அஃதப்பொருட்டாதல் அறிக. பெயலான் எனற்பால ஆனுருபு இறுதியிற் றொக்கது. செல என்னும் செயவென்னெச்சத்தைச் சென்று எனச் செய்தெனெச்சமாகத் திரித்துக்கொள்க. செல வரை, நிலவரை என்னு மீரிடத்தும் வரை எல்லை என்னும் பொருட்டு.

தலைக்கடல், கூட என மாறிக் கூட்டுக. நிழத்த - சுருங்க. "ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயி னான்கும் உள்ளதன் நுணுக்கம்" (உரி - அஉ) என்பர் தொல்காப்பியனார். அல்லல் என்றது, பசி முதலிய துன்பங்களை என்க. விரிந்த - விரிந்தனவாகிய மலர்கள் என்க. உறுதல் - நெருங்குதல். மூஉய் - மூடி: முதுவேனிற்பருவத்தே நீர் வறந்துகிடந்தமை தோன்ற 'பருமணன் மூஉய்' என்றார்.

அரி - வண்டு. யாணு-அழகு; "யாணுக் கவினாகும்" (உரி-அஉ) என்பது தொல்காப்பியம். முகிழ் - அரும்பு. தீந்தளிர் - காட்சிக்கு இனிய தளிர் என்க. பல்வேறு ஒலியும் ஒன்றுகூடி இசைத்தலின் ஆய்ந்து அளவிடப்படாத ஓசை என்க. அறையூஉ - அறைய: செய்யூ என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பறை - கரைகாவலரை அழைத்தற்குரிய பறை என்க.

(பரிமே.) க. ஈண்டு எல்லைப் பொருண்மைக்கண் வந்த இறுதிக்கண் ஆனுருபு தொக்கு நின்றது.

உ. 'சென்று' என்பது செல்ல எனத் திரிந்தது.

சு. 'மாந்தீந் தளிரொடு வாழையிலை மயக்கி' என்றது புனல் கரையிற் சோலைகளுள் மரச்சினைகளைத் தோய்ந்து செல்கின்றமை தோன்ற நின்றது.

கூ - கஅ: **புனல்மண்டி......................மூற்தேறி**

(இ - ள்.) புனல்மண்டி ஆடல் புரிவான் சனம் மண்டி - அப்புதுநீரின்கண் புகுந்து ஆடுதலைச் செய்ய மாந்தர் செல்லுதற் பொருட்டு, (தாளிதம் நொய்ந்நூல் ?) சரணத்தர் - சரணத்தை யுடையராய், மேகலை ஏணிப்படுகால் இறுகிறுகத் தாள் இடீஇ - மேகலையாகிய ஏணிப்படிகாலை மிக இறுகும்படி தாளிட்டுக் கொண்டு, நெய்த்தோர் நிற அரக்கின் நீர் எக்கி யாவையும் - குருதியினது நிறம்போலும் சிவந்த நிறத்தையுடைய அரக்கு நீரை எக்குதற்குரிய கருவிகள் எல்லாவற்றையும், முத்து நீர்ச் சாந்து அடைந்த மூஉய் - முத்துப்போன்ற நிறத்தையுடைய பனிநீரோடு அளவிய சந்தனத்துடனே பெட்டியின்கண் கொண்டு, தத்திப் புக அரும் பொங்கு உளைப் புள்ளியல் மாவும் - தாவுதலாலே மேற்கொள்ளுதற்கரிய மிகுந்த பிடரிமயிரையும் பறவைபோன்ற விரைந்த செலவினையும் உடைய குதிரையையும், மிக வரினும் மீது இனிய வேழப் பிணவும் - மிகையாக நடப்பினும் மேற்கோடல் இனிதாகிய பெண்யானையினையும், அகவு அரும் பாண்டியும் அத்திரியும் ஆய்மாச் சகடமும்-பெயர் சொல்லி அழைக்கப்படுகின்ற அரிய எருதுபூண்ட வண்டியினையும் கோவேறு கழுதையினையும் ஆராய்ந்து பூட்டப்பட்ட குதிரைபூண்ட வண்டியினையும், தண்டு ஆர் சிவிகையும் வகை வகை பண்ணி - காவுதற்குரிய தண்டுபொருந்திய சிவிகையினையும் பல்வேறு வகையினும் அழகுசெய்து, ஊழ் ஊழ் கதழ்பு

மூழ்த்து ஏறி - முறைமுறையாக வந்து மொய்த்து விரைந்து அவற்றின்மேல் ஏறி;

(வி - ம்.) மண்டி ஆடுதல் - கூடி ஆடுதல். சனம் - மக்கள். மண்டி என்னும் செய்தெனெச்சத்தை மண்ட எனச் செயவெனெச்ச மாக்குக. மண்ட - செல்லுதற் பொருட்டு என்க.

"தாளித நொய்ந்நூற் சரணத்தர்" என்ற தொடர்க்கு நன்கு பொருள் விளங்கவில்லை. தாளிதம் என்னும் பெயரையுடையதும் நுண்ணிய நூலானியதும் காலிலே மாட்டி அணிந்து கொள்ளுவது மாகிய ஒருவகை உள்ளாடை என்று ஊகிக்கலாம். இவ்வாடை மகளிர் நீராட்டு ஆடையாக இருக்கலாம். (கால்சட்டை) தாளித மாகிய நொய்ந்நூலாடையிட்ட சரணத்தராய் என்க. சரணத்தர் - காலையுடையோர். வேறு பொருள் தோன்றினும் கொள்க. மேகலை ஏணிப்படுகால்: இருபெயரொட்டுப் பண்புத்தொகை ஏணியினது படிபோல ஒன்றற்கொன்று வடம் உயர்தலான் இருகோவை முதல் முப்பத்திரு கோவையீறாக அமைந்த பல்வேறு மேகலையையும் ஏணிப் படுகால் என்றார். ஏணிப்படிகால் என்றும் வழங்குவதுண்டு.

இறுகிறுக - மிகவும் இறுக என்க. 'இறுகிறுக யாத்துப் புடைப்ப' (க - சுo.) என முன்னரும் போந்தமை நினைக. "இறுகிறுகத் தோட் கோப்புக் கொள்ளளார்" (நாலடி - கஉஅ.) என்றார் பிறரும். தாள் இடூஇ - தாட்பூட்டி என்க. இடூஇ - இட்டு. நெய்த்தோர் நிறம் - குருதிநிறம். நீரெக்கி - துருத்தி. எக்குதல் - பீலிற்றுவித்தல்; பீச்சுதல் என்பர் இக்காலத்தார். முத்து நீர் - முத்துப் போன்ற தெளிந்து வெண்ணிறமுடைய பனிநீர். மூஉய் - மூடியை உடைய பெட்டி. தத்தி என்னும் செய்தெனெச்சத்தைத் தத்த எனச் செயவெனெச்ச மாக்குக. புகஅரும் - மேற்கொள்ள அரிய.

புள்ளியன்மா - குதிரை. பறவைபோன்று விரையும் குதிரை என்றவாறு. மிகவுருதல்: ஒருசொல். மிகையாக நடப்பினும் என்க. பிடியானை மிகையாக நடக்கும் இயல்புடைய தாயினும் மேற்கொண்டு ஊர்தல் இனிதென்பார், 'மிகவுரினும் மீதுஇனிய' என்றார்; மீதிருத்தல் இனிய என்க. வேழப்பிணவு - பிடியானை.

"பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய என்ப பிணவென் பெயர்க்கொடை." (மரபு - குஅ.)

என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தின்கண் ஒன்றிய என்ற இலேசானே பிணவு ஈண்டு யானைக்கு வந்தமை அமைத்துக் கொள்க. அகவு அரும் பாண்டி - பெயரிட்டு வழங்கும் எருதுபூண்ட அரிய வண்டி என்க. பாண்டி - எருது; ஈண்டு வண்டிக்கு ஆகுபெயராய் நின்றது. அத்திரி - கோவேறு கழுதை. சகடம் - வண்டி. சிவிகை - பல்லக்கு. அதன்கண் காவுமரம் தண்டெனப்பட்டது. பண்ணி - பண்ணுறுத்து, அணிசெய்து என்க. கதழ்தல் - மொய்த்தல் - மூழ்த்தல் - விரைதல் "முரணுடை வேட்டுவர் மூழ்த்தனர் மூசி" (பெருங்-க. குசு: சுக) என்புழியும் அஃதப் பொருட்டாதலறிக.

(பரிமே.) கo - கக. இருகோவை முதல் முப்பத்திரு கோவையீறாக ஒன்றற்கொன்று வடமேறுதலான் மேகலையை 'ஏணிப்படுகால்' என்றார்.

கரு. மூடுதலுடைமையாற் பூப்பெட்டியை 'மூஉய்' என்றார்.

கசு. பாண்டி என்பது ஆகுபெயர்.

கக - உசு : முதியர்.

(இ - ள்.) முகைப் பருவத்தர் - மலரும் செவ்வியை எய்திய மொட்டுப்போன்ற பருவத்தை உடையவரும், மணம் வதி வம்பு அலர் வாய் அவிழ்ந்தன்னார் - நறுமணந் தங்குதற்கிடமான புதியமலர் வாய்விரிந்தாற் போன்ற பருவத்தை உடையவரும் ஆகிய, இளையர் - இளம்பருவத்து மகளிரும், விரவு நரையோரும் வெறுநரையோரும் - இடையிடையே நரைவிரவிய பருவத்தோரும் முழுதும் நரைத்த பருவத்தோருமாகிய, முதியர் - முதுமைப்பருவத்து மகளிரும் என்னும், இருதிறமாந்தரும் - இவ் விருவகைப் பருவத்தினரும், பதிவதம்மாதர் பரத்தையர் இன்னினியோரும் - கற்புடைமகளிரும் பரத்தையரும் ஆகிய இம்முப்பருவத்து மகளிரும், பாங்கர் - இவர்க்குப் பாங்காகிய தோழியரும் சிலதியரும், வித்தகர் ஆக்கிய தாள விதி கூட்டிய அதிர் குரல் இய மென்னடை போலப் பதிஎதிர் சென்று - இசைப்புலமையின்கண் சதுரப்பாடுடைய புலவரானே ஆக்கப்பட்ட தாளவிதியானே கூட்டப்பட்ட முழங்காநின்ற குரலையுடைய பல்வேறு இசைக்கருவிகளின் இசையும், மென்னடையிற் சென்றாற் போன்று ஊரின்கண்ணுள்ள பிறமாந்தரோடுங் கூடி யாற்றின் எதிரே மெல்லெனச் சென்று, பரூஉக்கரை நண்ணி - அவ வியாற்றினது பரிய கரையை அடைந்து ;

(வி - ம்.) முகைப் பருவத்தர் வம்பலர் வாயவிழ்ந்தன்னார் இளையர் விரவு நரையோர் வெறுநரையோர் முதியர் இருதிறமாந்தரும் ஆகிய பதிவதமாதர் பரத்தையர் இன்னினியோர் என மாறிக்கூட்டி வேண்டு மிடமெல்லாம் உம்மையும் ஆக்கச்சொல்லும் விரித்துரைத்துக் கொள்க.

முகை - மொட்டு. வம்பு - புதுமை. அலர் - மலர். வாயவிழ்தல்- மலர்தல். அலர் வாயவிழ்ந்தன்னார் என்றாரேனும் வாயவிழ்ந்த அலரன்னார் என்பது கருத்தாகக் கொள்க. இன்னினியோர் - இப் பருவத்தினர். விரவு நரை - கருமயிரின் ஊடே விரவிய நரை. வெறு நரை - கருமயிரின்றி முழுதும் நரைந்த நரை என்க. பதிவதமாதர் - கற்புடை மகளிர். வதம் - விரதம்; பதிவிரதமுடைய மாதர் என்றபடி. பாங்கர் - இவ்விரு திறத்தார்க்கும் பாங்காயினார் என்க. வித்தகர் - ஈண்டு இசைப்புலமையின் மிக்கோர். அதிர் குரல் இயம் எனக் கூட்டுக. மென்னடை - தாளகதியில் ஒன்று. முடுகுநடை, இடைநிகர்நடை, மென்னடை எனத் தாளநடை மூவகைப்படும். இவற்றைத் துரிதகாலம் மத்திமகாலம் விளம்பிதகாலம் என்பர். பதி-மாந்தர்: ஆகுபெயர். மக்கள் நெருக்கத்தானே மெல்லச் செல்லும் செலவிற்கு இயங்களின் மென்னடை உவமை.

(பரிமே.) ௨௬ - ௫. தாளவிதி கூட்டிய மென்னடைபோற லாவது:—இயங்கள் ஒன்றற்கொன்று கூறு வேறுபாடுடையவேனும் விளம்பித நடையையுடைய தாளகதியால் எல்லாம் மென்னடையா வாய்ச் செல்லுமாறுபோல, எதிர் செல்கின்றவர்களும் வன்மை மென்மை இடைமையாகிய பண்பு வேறுபாடுடையரேனும் நெருக்கத் தால் எல்லாரும் மென்னடையாய்ச் சேறல்.

உஎ - ௩௪ : நீரணி......................சேர்குவோர்

(இ - ள்.) நீர் அணி காண்போர் - அவருட்சிலர் அவ் வையை யாற்றின்கட் பெருகி ஒழுகும் புதுநீரினது அழகினைக் கண்டு நிற்பார், நிரைமாடம் ஊர்குவோர் - சிலர் நிரல்பட்ட நீரணி மாடத்திலேறி அவற்றைச் செலுத்தாநிற்பர், பேர் அணி நிற்போர் - சிலர் நீரின்கண் ஆடவரோடு எதிர்ந்து செய்யும் போருக்கு பெரிய அணிவகுத்து நிற்பார், பெரும்பூசல் தாக்கு வோர் - சிலர் அப் பெரிய நீராடற் போரின்கண் தூசிப்படை யாய்ச்சென்று தாக்காநிற்பர், மா மலி ஊர்வோர் - சிலர் குதிரைத் திரளில் ஏறி நீரினுட் செலுத்தாநிற்பார், வயப்பிடி உந்துவோர் - சிலர் வலிய பிடியானைகளின்மீது ஏறி அவற்றை நீரின்கட் செலுத்தாநிற்பார், வீ மலி யாற்றின் துருத்தி குறுகி தாம் வீழ்வார் ஆகம் தழுவுவார் தழுவு எதிராது - வேறு சிலர் நறிய பூக்கள்மிக்க யாற்றிடைக்குறையை அடைந்து அவ் விடத்தே தம்மாற் காதலிக்கப் பட்டோராகிய தந்தலைவர் தமது மெய்யினைத் தழுவுவாராகவும் அத் தழுவுதலை ஏற்றுக் கொள்ளாமல், யாம ஊடல் குறை இன் நசைத் தேன் நுகர் வோர் - முதல் நாளிரவின்கண் தாம் ஊடினராக அவ்வூடல் தீராது குறையாக நின்றமையான் அவ்வூடலையே தொடர்ந்து ஊடி அதனால் உண்டாகும் இனிய விருப்பமாகிய தேனை நுகரா நிற்பர், காமக் கணிச்சியால் கையறவு வட்டித்துச் சேமத்திரை வீழ்த்துச் சென்று அமளி சேர்குவோர் - வேறு சிலர் ஊடியிருந் தேயும் காமம் என்னும் கோடரி தமது நிறைஎன்னும் கதவினை உடைத்தொழிந்தமையானே மேலும் ஊடற்கு வலியிலராய்த் தமது ஊடலைச் சுழற்றி எறிந்துவிட்டுத் தங்கணவரை எதிர் கொண்டு காவலாகிய திரையை விடுத்து உட்சென்று ஆண்டுப் படுக்கையின்கட் சேராநிற்பர்;

(வி - ம்.) நீர் அணி - புதுநீர்ப்பெருக்கின் அழகு. நிரைமாடம்: வினைத்தொகை. நிரலாகச் செலுத்தப் படுதலால் நிரைமாடம் என்றார். மாடம் - இஃதொருவகை ஓடம்; இதனைப் பள்ளியோடம் என்றுங் கூறுப. போர்க்குப் பெரிய அணிவகுத்து நிற்பார் என்க. பூசல் - போர். தாக்குவோர் என்றமையால் - முற்படச்சென்று அஃ தாவது தூசிப்படையாய்ச் சென்று தாக்குவார் என்றார் உரையா சிரியர். வட்டித்து - சுழற்றி.

மலி - திரள். வயப்பிடி - வலிய பெண்யானை. உந்துவோர் - செலுத்துவார். வீ - மலர். துருத்தி - யாற்றிடைக் குறை; (அரங்கம்.) தழூவு - தழுவுதல். குறையூடல் - குறை கிடந்த ஊடல்; தீராமனின்ற ஊடல், 'சிலைகிடந்த ஊடல்' (எ - ௭௨.) என முன்னரும் வந்தமை காண்க: நசை - விருப்பம். கணிச்சி - கோடாரி.

"காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு." (௧௨௫௧.)

எனவரும் திருக்குறளை நினைக. சேமம் - காவல். அமளி - படுக்கை.

(பரிமே.) நீரினது அழகுகாண்டல் முதலாக அமளிசேர்தல் ஈறுகச் சொல்லிய விளையாட்டுக்கள் அலர்வாயவிழ்ந்தன்ன பருவத்துக் கற்புடைமகளிர் பரத்தையரன; அவற்றில் மாவின்திரளை ஊர்தலும் பிடியை உந்துதலும் பரத்தையர்க்கே உரிய.

(மாஊர்தல் பிடியூர்தலிரண்டும் பரத்தையர்க்கே உரியன; ஏனைய கற்புடைமகளிர்க்கும் பரத்தையர்க்கும் பொது என்றவாறு.)

௩௫ - ௪௦: தாம்வேண்டும்....................கூடல்

(இ - ள்.) புனை மேம்பாடு உற்ற சுரும்பின் - அணிந்து கொள்ளுதற்குரிய பூவினது மேம்பாட்டை விரும்பி அதன்கண் வந்து பொருந்தாநின்ற வண்டுபோல, தாம் வேண்டு காதல் கணவர் எதிர்ப்பட-ஏனை முகைப்பருவத்து மகளிரெல்லாம் தாம் விரும்பும் காதலையுடைய கணவர் தம்மை விரும்பிவந்து எதிர்ப் பட்டுப் புணரும் பொருட்டு, சேம மட நடைப் பாட்டியர் தப்பித் தடை இறந்து - தமக்குக் காவலாகிய மெல்லிய நடையினை யுடைய பாட்டியரைத் தப்பி அவர் தடுத்தலையும் கடந்துபோய், தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும் ஏம் உறும் நாவாய் வரவு எதிர் கொள்வார் போல் - தம்மால் விரும்பப் பட்ட துறைமுகப் பட்டினத்தை அடைந்து அங்கிருந்து மீண்டுங் கரையைச் சேராநின்ற தாம் இன்புறுதற்குக் காரண மான மரக்கலத்தினது வருகையினை விரும்பி எதிர்கொள்ளா நின்ற வணிகரைப் போன்று, யாம் வேண்டும் வையைப் புனல் எதிர்கொள் கூடல் - யாம் விரும்புகின்ற வையையாற்றினது நீரை எதிர்கொள்ளுதற்கு இடமாய மதுரையின்கண்;

(வி - ம்.) தாம் என்றது, முன்னர்க் கூறப்பட்ட மகளிருள் வைத்து முகைப்பருவத்து மகளிரை என்க.

தாம் விரும்புங் கணவர் தம்மை எதிர்ப்படும் பொருட்டு வையைப் புனலை எதிர்கொள்வார் என்க.

பூமேம்பாடுகண்டு தாமே வரும் வண்டுபோலத் தங்கணவர் தம் மேம்பாடு கண்டு தாமே வந்து எதிர்ப்பட என்க.

தமது மரக்கலத்தின் வருகையை எதிர்கொள்ளும் வணிகர்போல வையைப்புனலை எதிர்கொள்வார் என்க. தாம் வேண்டும் நாவாய்

கரைசேரும் நாவாய் ஏமுறு நாவாய் எனத் தனித்தனிக் கூட்டுக. நாவாய் வரவெதிர்கொள்ளும் என்றதனுல் வணிகர் என்றும்.

இது கூறுவான் பாணன் 'தலைவனையும் உளப்படுத்தி யாம் வேண்டும் வையைப்புனல்' என்றான். கூடல் - மதுரை.

ஏமுறு நாவாய் - இன்புறுதற்குக் காரணமான நாவாய் என்க. ஏமம் - ஏம் என இடைகுறைந்து நின்றது. ஏமம் - இன்பம்.

(பரிமே.) ௩அ - கூ. தாம் நினைத்த பட்டினத்தைச் சேர்ந்து ஏற்றிவிட்ட பண்டங்களைக் கொடுத்து, ஆண்டுள்ளனகொண்டு இடையூறின்றி வந்து கரையைச்சேரும் நாவாய் என்க.

சரணத்தராய்த் தாளிட்டுக்கொண்டு ஏறிச்சென்று 'நண்ணி அலர்வாயவிழ்ந்தன்னுர் இப் பெற்றி செய்ய முகைப்பருவத்தர் எதிர் கொள்கின்ற கூடல்' என முடிக்க.

சக - சஅ : ஆங்க..............................சிதைதர

(இ - ள்.) அணி நிலை மாடத்து அணிநின்ற வயக்கரி - அழகிய நிலைகளையுடைய மாடத்தின் அணித்தாக நின்றதொரு வலிய களிற்றியானை, பாங்கு ஆம் மடப்பிடி கண்டு மால் உற்று - தனக்குப் பக்கத்தே உளதாகிய இளமையுடைய பெண் யானையைக் கண்டு காமத்தால் மயக்கமுற்று, நடத்த நடவாது நிற்ப - தன்மேலிருந்த பாகன் செலுத்தவும் செல்லாமல் நிற்ப, மடப்பிடி செல் கரிமேல் மனம் மால் உறுப்ப - அம் மடப்பமுடைய பிடியானையும் அக் களிற்றுயானையின்மேற் சென்ற தன் மனம் மயக்கம் செய்யாநிற்ப, அன்னம் அனையாரோடு நடை ஆயா சென்று - தன்மேலிருந்த அன்னப்பறவையை ஒத்த மகளிரோடே தனது நடை சுருங்கி அக் கரி நின்ற இடத்திற்சென்று, எழில்மாடத்துக் கைபுனை கிளர் வேங்கை காணிய - ஆண்டுள்ள அழகிய புலிமாடத்தின்கண்ணே பண்ணிவைத்த பாயும் நிலையிலுள்ள வேங்கையினது உருவத்தைக் கண்டவளவிலே, மதி செத்து - அதனை மெய்யான வேங்கையென்றும் அது தன் காதற்களிற்றைப் பாயுமென்றும் கருதி, மைபுரை மடப்பிடி - அந்த முகிலையொத்த பிடியானை, மடநல்லார் விதிர்ப்பு உற - தன்மேலிருந்த மடப்பமுடைய மகளிர்கள் நடுங்கும்படி, செய் தொழில் கொள்ளாது - பாகர் செய்யும் தொழிலை ஏற்றுக் கொள்ளாமல், சிதைதர - சிதையாநிற்ப ;

(வி - ம்.) ஆங்க : அசை. அணிநிலைமாடம் - அழகிய நிலைகளையுடைய மாடமாளிகை. அணிநின்ற - அணித்தாக நின்ற. பாங்கு - பக்கம் : வயக்கரி பாங்காம் மடப்பிடி கண்டு மாலுற்று என மாறுக. கரி - யானை : நடைஆயா என மாறுக. ஆய்தல் என்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்த செய்யா என்னும் வாய்பாட்டெச்சம்; ஆய்ந்து என்க. சுருங்கி என்பது பொருள். "ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்,

ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'' (உரி - கூஉ) என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானே அஃதப் பொருட்டாதல் உணர்க. மாலுறுப்ப - மயக்கத்தைச் செய்ய. கைபுனை வேங்கை - கையாலே பண்ணிவைத்த வேங்கை. பாயும் நிலையில் பண்ணப்பட்ட வேங்கை உருவம் என்பார், 'கிளர்வேங்கை' என்றார். காணிய என்னும் எச்சத்தைக்கண்டு எனத் திரித்துக்கொள்க. இனிச்செயவெனெச்ச மாக்கி ஏதுப்பொருட்டாக்கலுமாம். மை - முகில். புரை : உவமவுருபு : மதிசெத்து என்புழி மதி என்பது இசைநிறை. இஃது இசைநிறை யாய் வருதல் அதிகாரப் புறனடையாற் கொள்க.

சிதைதல் - கட்டுக்கடங்காது கண்டபடி செல்லல்.

(பரிமே.) அணிநிலைமாடம் : ஆகுபெயர்.

சசு - ருரு : கூடிங்கை மதமா.................நீகானும் போன்ம்

(இ - ள்.) கூடம் கைமதமா - அங்ஙனம் பிடியானை சிதைந் தமை பொறாமல் பிளிறுநின்ற மதக்களிப்பையுடைய அக் களிற்றுயானை, கொடும் தோட்டி கைந்நீவி - வளைந்த தோட்டிக் கும் அடங்காமற் கடந்து, நீங்கும் பதந்நால் - சிதையும் அளவிலே, சிறந்தார் - அதன்மேலிருந்த பாகுத்தொழிலிலே சிறந்த பாகர், உருமுப் பெயர்த்தந்து - இடிபோலும் அதன் முழக்கம் ஒழியுமாறு, வாங்கி - அதனை அப் புலிமுக மாடத்தி னின்றும் நீக்கி, வயப்பிடி முயங்கிக் கால்கோத்து - அப் பிடி யானை சிதையாதபடி அதனை அணைவித்து, சிறந்தார் நடுக்கம் களையல் - அப் பிடிமேலிருந்த மகளிரின் நடுக்கத்தைக் களைதல், இதையும் கயிறும் பிணையும் இரியச் சிதையும் கலத்தை - பாயும் கயிறும் மரக்கூட்டமும் கெட்டொழியக் காற்றால் அலைப்புண்டு ஓடும் மரக்கலத்தை, பயின்றல் திருத்தும் திசையறி நீகானும் போன்ம்-பயினாலே சீர்திருத்தி அதன் உள்ளிருப்போர் நடுக்கத் தைக் களையும் திசையறிந்து செலுத்துதல்வல்ல நீகானுடைய செயலை ஒக்கும் ;

(வி - ம்.) கூடம் - கூடவும் : பிளிறுநின்ற. மதமா - ஈண்டுக் களிற்றி யானை. கொடுந்தோட்டி - வளைந்த அங்குசம். கைந்நீவி - கைகடந்து : தோட்டியாற் குத்தி அடக்கவும் அடங்காது கடந்து என்க. நீங்கும் பதம் - தனது கைக்கடங்காது சிதையும் செவ்வி. உருமு - இடி : இடிபோலும் பிளிற்றொலிக்கு ஆகுபெயர். பெயர்த்தந்து - பெயர்த்து. கால்கோத்தல் - சேர்த்தல். சிறந்தார் இரண்டனுள் ஒன்று தந் தொழிலிற் சிறந்த பாகரும், மற்றொன்று பெண்மையிற் சிறந்த மகளிரும் என்க.

இதை - பாய். கயிறு - பாயிழுக்கும் கயிறு. பிணை - பாய் பிணைக்கும் மரங்கள். பயின்-ஒட்டுதற்குரிய பசைப்பொருள். இதனைப் பிசின் என இக்காலத்தார் வழங்குப. இரிதல் - தம்நிலையிற் கெட் டகலுதல். நீகான் - மரக்கலம் ஓட்டுபவன். மீகான் என்றும் வழங்குத லுண்டு. (மீகான் என்றும் பாடம்.)

போன்ம் - போலும், என்பது இடையுகரம் கெட்டு லகரம் னகரமாய்த் திரிந்து நின்றது.

நீகானும் என்புழி உம்மை இசைநிறை.

(பரிமே.) ௫௪ - ௫௫. கலங்களை ஓட்டும் திசையறிந்த நீகான் என்க.

வையைநீர் விழவின்கண் மைந்தரும் மகளிருமே யன்றி விலங்குகளும் ஒத்த அன்பினவாயின. அது நின்மாட்டு இல்லையாயிற்று என்பது கூறியவாறாயிற்று.

(வையை நீர்விழவின்கண் நிகழ்ந்த இந் நிகழ்ச்சியைத் தலைவனுக்குக் கூறுகின்ற பாணன் இங்ஙனம் விலங்குகளும் ஒத்த அன்புடையவாய் ஒன்றை ஒன்று தழுவா நிற்பவும், நீயோ தலைவியை நினைந்தாயில்லை எனக் குறிப்பாற் கடிந்தவாறாயிற்று என்பதாம்.)

௫௬ - ௬௨ : **பருக்கோட்டி யாழ்....................நிகழ்ச்சியும் போன்ம்**

(இ - ள்.) பருக்கோட்டு யாழ்ப்பக்கம் பாடலோடு ஆடல் - பரிய தண்டையுடைய யாழ்க்கூறும் மிடற்றுப் பாடலும் ஆடலும் ஆகிய இவை, அருப்பம் அழிப்ப - தம் மனத்திண்மையை அழித்து விட்டமையானே, அழிந்த மனக்கோட்டையர் - அழிந்தொழிந்த நெஞ்சமாகிய அரணத்தையுடைய மைந்தரும் மகளிரும், (ஒன்றோடிரண்டா முன்றேறூர்?) வென்றியின் - ஊடலின்கண் வெல்லுதல் காரணமாக, நாணி - தாம் ஒருவரின் ஒருவர் முற்படுதலை நாணிக்கூடாமல், பதைபதைப்பு - உளந்துடித்து வருந்திநிற்றல், மன்னவர் தண்டம் இரண்டும் - தம்முட் பகைத்தெழுந்த மன்னவருடைய படைகளிரண்டும், தலைஇ தாக்கி நின்றவை - தம்முள் தலைப்பட்டுப் போர்செய்து நொந்து நின்றன, ஒன்றியும் - அப் போரினை ஒழித்துத் தம்முள் உடம்பாடு பெற்றுப் போதற்கு மனத்தாலே இயைந்து வைத்தும், பல்சன உடம்பாடு ஒலி எழுதற்கு அஞ்சி - உலகிலுள்ள பல வேறு மாந்தரிடையேயும் இம் மன்னன்படை முற்பட உடம்பட்ட தென்னும் பழிச்சொல் பிறத்தற்கு அஞ்சிப் பின்னும், நின்ற - போர்செய்தற் றுன்பத்தோடு நின்ற, நிகழ்ச்சியும் போன்ம் - செயலை ஒக்கும் ;

(வி - ம்.) யாழ் முதலியவற்றின் இன்னிசையாலே மனத்திண்மை யழிந்து ஊடலழிந்து கூடுதற்கு மனமியைந்தும் ஊடலில் வெல்லுதல் காரணமாகத் தம்முட் கூடாதுநின்ற மகளிரும் மைந்தரும் உளம்பதைத்து நிற்கின்ற செயல், போர் செய்த பகைமன்னர் படை தம்முள் உடம்பட்டுப்போக மனமியைந்தும் பழிச்சொல்லையஞ்சி மீண்டும் பொருது துன்புற்று நிற்கும் செயலை ஒக்கும் என்க.

பருக்கோடு - பரிய(யாழ்த்)தண்டு. பாடல் - மிடற்றுப்பாடல். ஆடல் - கூத்து. அருப்பம் - திண்மை. மனக்கோட்டை - மனமாகிய

அரண். கோட்டை - அரண். மனஅரண் அழிந்த மகளிரும் மைந்தரும் என்க.

"ஒன்றேருடிரண்டா முன்றேரூர்" எனவருந் தொடர் பொருள் காண்டற்கியலாதபடி உளது. "கூடுதற்குச் செல்கின்ற.........னும் ஒத்திருக்கவும்" என இத் தொடர்பற்றிய பரிமேலழகர் உரையும் இடையே சிதைந்தழிந்துளது.

பதைபதைப்பு - மனத்தடுமாற்றுத் துயர். பல்சனம் - பல்வேறு மாந்தர்கூட்டம். பல்சன ஒலி எனக் கூட்டுக.

மன்னவர் - தம்முட் பகைத்த மன்னர் என்க. தண்டம் - படை. தலைஇ - தலைப்பட்டு. ஒன்றியும் - உடம்பட்டுப்போதற்கு மனம் இயைந்திருந்தும். ஒலி - சொல் : ஆகுபெயர். நின்ற - பின்னரும் பொருதுநின்ற என்க. நிகழ்ச்சியும் என்புழி உம்மை இசைநிறை.

(பரிமே.) ௫௬. (யாழ்ப்பக்கம் - ) யாழ்க்கூறு.

௫எ. (அழிந்த மனக்கோட்டையர் - ) அழிந்த துணியிணையுடைய மகளிரும் மைந்தரும்.

௫௯. (பதைபதைப்பு-) மெலிவுறுதல். மன்னவர்-மாறுபாட்டை யுடைய மன்னவர்.

௬௧. (ஒன்றியும் - ) மனத்தான் இயைந்து வைத்தும். (ஒலி - ) வார்த்தை.

### ௬௩ - ௬அ : காமம்.....................போன்ம்

(இ - ள்.) காமம் கனைந்து எழ - நெஞ்சத்திலே காமம் மிக்கு எழாநிற்ப, கண்ணின் களி எழ - அதனானே தம் கண் களிலே அக் காமக் களிப்புப் புறத்தார்க்குப் புலப்படும்படி எழா நிற்ப, ஊர் மன்னும் அஞ்சி - ஊரினுள்ளார் அதனை அறிந்து அலர் தூற்றுவரே என்று மிகவும் அஞ்சி, ஒளிப்பார் நிலை - அக் காமக்களிப்பினைப் புறத்தார்க்குப் புலப்படாதபடி மறைக்கின்றவருடைய நிலைமை, கள்ளின் களி எழ - கள்ளுண்ட வர் தம்பால் அக் கள்ளின் களிப்புப் புறத்தார்க்குப் புலப்படும் படி எழாநிற்ப, உள்ளம் உளை எழ அலர் அஞ்சி - தம் மனம் துன்புறும்படி ஊரவர் அலர் தூற்றுதற்கு அஞ்சி, ஊக்கத்தால் - அதனைப்பிறர் அறியாமல் முயலும் முயற்சியாலேயே, மதர் பரப்பி - அக் களிப்பினை யாவரும் அறியும்படி தாமே பரப்பிப் பின், பார் அலர் தூற்ற - உலகம் பழி தூற்றலைக் கேட்டு, உள் உள் நடுக்கி - தம் உள்ளே உள்ளே நடுக்கி, களி மதர் காத்து கரப்பார் போன்ம் - மேலும் அக் கள்ளால் உண்டாகிய களிப்பினைப் புறத்தார்க்குப் புலனாகாதபடி காத்து மறைப்பவருடைய நிலைமையை ஒக்கும்;

(வி - ம்.) தம் கண்ணிற் றோன்றும் காமக்களிப்பை மறைப்பவருடைய நிலைமை கள்ளுண்டு அதனால் உண்டாகிய களிப்பை மறைப் பவருடைய நிலைமையை ஒக்கும் என்க.

ஊக்கத்தால் பரப்புதலாவது - தாம் கள்ளுண்டிருத்தலைப் பிறர் அறியாமைப்பொருட்டுத் தாம் மேற்கொள்ளும் செயலே அதனைப் பிறர்க்குப் புலப்படுத்தும்படி முயலுதல்.

கனைந்து - மிகுந்து. மன்னுமஞ்சி - மிகவும் அஞ்சி. காத்தாங்கு என்புழி, ஆங்கு: அசைநிலை. உளை - துன்பம். களிமதர் - கள்ளுண்டதனால் உண்டான களிப்பு. மதரும் என்புழி, உம்மை இசைநிறை.

(பரிமே.) சுக. (கரப்பார் களிமதரும் போன்ம் - ) அக் களிமதரை மறைப்பாருடைய நிலைமையைப் போலும்.

சுசு - எஅ : கள்ளொடு......................மடுப்ப

(இ - ள்.) கள்ளொடு காமம் கலந்து கரைவாங்கும் வெள்ளம் - இவ் வாற்றால் கள்ளையும் காமத்தையும் பொருந்துதலால் எல்லையற்ற இன்பவெள்ளத்தைத் தாராநின்றது, இப் புனல் - நமது வையையிற் பெருகிய இப் புதுப்புனல், எறி மகர வலயம் அணிதிகழ் நுதலியர் - ஆளை எறிந்துகொல்லும் இயல்புடைய மகரமீனின் வடிவுடைத்தாய்ச் செய்த மகரவலயம் என்னும் தலைக்கோலத்தால் அழகு மேலும் விளங்கும் நெற்றியையுடைய மகளிர், புனல் பொருது மெலிந்தார் திமில் விட-இத்தகைய புதுநீரிலே விளையாடி இளைத்தாராகப் பின்னர்த் தமது புணைகளைக் கைவிட்டுக் கரையேறிய அளவில், கனல் பொருத அகிலின் ஆவி கா எழ - தம்மால் மூடப்பட்ட தீயானே சுடப்பட்ட அகிலின்கண்ணின் றெழுந்த நறுமணப் புகை அக்கரைமருங்கிலுள்ள பூம்பொழிலெல்லாம் மணக்கும்படி எழாநிற்ப அப் புகையின்கண் ஈரம்புலர்த்திக்கொண்டு, நகில்முகடு மெழுகிய அளறு மடைதிறந்து திசை முழுது கமழ - தமது முலை முகட்டிலே மெழுகப்பட்ட கலவைக்குழம்பு மடைதிறந்தாற் போன்று நாற்றிசையினும் பரவிக் கமழாநிற்ப, முகில் அகடுகழி மதியின் - முகிலின் வயிற்றினின்றும் புறப்பட்டுத் தோன்றும் திங்களை ஒத்து, உறை கழி வள்ளத்து - தம்மால் உறையினின்றும் வாங்கப்பட்டுத் திகழும் வெள்ளிக் கிண்ணத்திலே, உறு நறவு வாக்குநர் - வெப்பம் மிக்க தேறலை வார்த்துப் பின்னர், அரவு செறி உவவு மதி என - பாம்பாலே பற்றப்பட்ட முழுத்திங்கள்போலத் தோன்றும்படி, அம் கையில் தாங்கி - அக் கிண்ணத்தைத் தம் அழகிய கையிலே ஏந்தி, மதி உண் அர மகள் என - திங்களினது ஒளியைப் பருகும் தேவமகளிரைப் போன்று, ஆம்பல் வாய் மடுப்ப - அக் கிண்ணத்தைத் தமது செவ்வாம்பல் மலரை ஒத்த வாயின்கண் வைத்துப் பருகாநிற்பவும் ;

(வி - ம்.) திமில் - புணை. புணையைவிட்டுக் கரையேறி என்க. கனல் பொருத - நெருப்புச்சுட்ட. ஆவி - புகை. கா - பூம்பொழில்.

நகின் முகடு - முலை முகடு. அளறு - கலவைக்குழம்பு. உறை கழித்து வாங்கிய வள்ளத்திற்கு முகிலினூடிருந்து வெளிப்பட்ட திங்கள் உவமை. வள்ளம் - கிண்ணம். 'உறுநறவு' என்புழி, உறு மிகுதி குறித்து நின்றது; வெப்பம்மிக்க நறவு என்க. திகை - திசை. உவவு மதி - முழுத்திங்கள். பாம்பாலே பற்றப்பட்ட முழுத்திங்கள் மகளிர் கையாற் பற்றப்பட்ட வள்ளத்திற்கு உவமை. மகரவலயம் - ஒரு வகைத் தலைக்கோலவணி. எறிமகரம்: இயல்படைமொழி. அரமகள் - தெய்வமகள். வள்ளத்தை வாயில்வைத்து நறுப்பருகும் மகளிர்க்குத் திங்களின்கண் வாய்வைத்து அதன் ஒளியைப் பருகும் அரமகள் உவமை. இப் பகுதியில் வருமிவ் வுவமைகளின் அழகு நினைந்து நினைந்தின்புறற்பாலன.

(பரிமே.) எஎ. தலைக்கோலம் அழகு விளங்கும் நுதலியர் சிலர்.

எஅ. மதியது கலையை உண்கின்ற தெய்வமகள் போல்; மடா நிற்ப.

எகூ - அகூ: பூப்பால்......................பொலிகென்பார்

(இ - ள்.) மீபால் வெண்துகில் போர்க்குநர் - சிலர் தம் உடலின் மேலிடத்தே வெண்ணிற மெல்லிய ஆடையைப் போர்த்தா நிற்பர், பூப் பால் வெண்துகில் சூழல் சூழ்ப்ப - பூத் தொழிலைத் தன்பால் உடைய வெள்ளிய துகிலைச் சிலர் கூந்தலின்மேற் சுற்று நிற்ப, மறுக்குநர்-சிலர் அதனை மறுக்குவார், குங்குமச் செழுஞ்சேறு பங்கம்செய் அகில் பல பளிதம் - சிலர் சிவந்த குங்குமக்குழம்பினையும் சேறுக்கப்பட்ட அகிற் குழம்பினையும் பலவாகிய கருப்பூரங்களையும், அறை மறுகுபட - சாத்தம்மியிலிட்டு அவை ஒன்றுபடும்படி, புரைஅறு குழவியின் அவிஅமர் அழல் என அரைக்குநர் - குற்றமற்ற குழவியாலே அவியைப் பொருந்தின யாககுண்டத்தின்கண் எழும் தீயினது நிறம்பெற அரைப்பார், அலையில் நத்தொடு நள்ளி நடை இறவு வயவாளை வித்தி - வேறுசிலர் அப் புதுநீரின்கண் தாம் கொணர்ந்த பொன்னாற்செய்த நத்தை நண்டு காலினையுடைய இறவு வலியமைந்த வாளை என்பனவற்றைவிட்டு, விளைக பொலிக என்பார் - நாடு விளைவதாக உலகம் பொலிவதாக என்று வாழ்த்தாநிற்பர்;

(வி - ம்.) பூப்பால் - பூத்தொழிலைத் தன்பாலுடைய என்க. சூழ்ப்ப - சுற்ற. பங்கம் - சேறு: சேறுக்கப்பட்ட அகிற்சாந்து என்க. பளிதம் - கருப்பூரம். மறுகுபட - ஒன்றுகூட. அறை - அம்மி. புரை - குற்றம். அவி - கடவுட்கிடும் பலிப்பொருள். அழலென - தீயினது நிறம் பெறும்படி.

நத்து - நத்தை. நள்ளி - நண்டு. இறவு - இறுமீன். இது காலுடைய மீனாகலின் 'நடை இறவு' என்றார். நடை: ஆகுபெயர். வய - வலிமை. வித்தி - விதைத்து; போகட்டு என்றபடி. அலை: ஆகு பெயர்; நீர். விளைக பொலிக என வாழ்த்துதல் ஒரு மரபு. இதனை,

சீவகசிந்தாமணியில் உகூ0-ஆம் செய்யுளில் நச்சினார்க்கினியர் "விளைக பொலிக ஒருவழக்கு என்பாருமுளர்" என எழுதிய உரையானும் உணர்க.

(பரிமே.) அச. அம்மிக்குழம்பிற்கு உவமையாவது அவியமர் குண்டத்தின்மீது தோன்றுகின்ற அழலாகலின் 'அவியமரழல்' என்றார்.

அள - கூகூ: இல்லது......................புனல்

(இ - ள்.) இல்லது நோக்கி இளிவரவு கூறுமுன் - வேறு சிலர் இரப்போருடைய வறுமையை அவர்தம் மெய்ப்பாட்டாலேயே உணர்ந்து அவர் ஈமின் எனத் தம்மை இரந்து கூறுதற்கு முன்பே, நல்லது வெஃகி - அறத்தையே விரும்பி, வினை செய்வார் - அவர்க்கு வேண்டுவன ஈதலைச் செய்யாநிற்பார், மண் ஆர் மணியின் வணர் குரல் வண்டு ஆர்ப்ப-வேறுசிலர் கழுவுதலுற்ற நீலமணி போன்ற நிறமுடைய வளைந்த தமது மயிர்க் கற்றைமேல் மொய்த்துள்ள வண்டுகள் இடம்பெறாமல் எழுந்து ஆரவாரஞ்செய்யும்படி, தண் அம் துவர் பல ஊட்டிச் சலம் குடைவார் - அக் கற்றையின்மேல் குளிர்ந்த அழகிய பத்து வகைத் துவர்களையும் தேய்த்துக்கொண்டு நீரின்கண் முழுகா நிற்பார், எண்ணெய் கழல இழை துகள் பிசைவார் - வேறுசிலர் தந்தலையில் எண்ணெயை இட்டு அவ் வெண்ணெய் நீங்கும்படி நுண்ணிய அரைப்புப்பொடியை இட்டுப் பிசையாநிற்பார், கோலங்கொள மாலையும் சாந்தும் மதமும் இழைகளும் நீர்க்குக் கூட்டுவார் - வேறுசிலர் அப் புதுநீர் ஒப்பனைபெறும் பொருட்டு மலர்மாலைகளையும் சந்தன முதலியவற்றின் குழம்புகளையும கத்தூரியினையும் அணிகலன்களையும் அந் நீரின்கண் இடாநிற்பர், அப் புனல் உண்ணுநறவினை ஊட்டுவார் - வேறு சிலர் அந் நீர் உண்ணமாட்டாத தேறலையும் அதன்கட் பெய்யுமாற்றால் அதனை உண்ணச்செய்யாநிற்பார், ஒள் தொடியார் - இவ்வாறாக நீர்விளையாட்டயர்ந்த ஒள்ளிய வளையலை யுடைய அம் மகளிருடைய, வண்ணம் தெளிர முகமும் வளர்முலைக் கண்ணும் கழியச் சிவந்தன நிறம் - நீராட்டானே மேலும் ஒளி பெறுநிற்ப அவருடைய முகமும் முலைக்கண்களும் நீரானே புடையுண்டு மிகச்சிவந்தன, அன்னவகை ஆட்டயர்ந்து பின்னும் புனல் மலர்க் கண் - அத் தன்மையவாகிய நீராடலைத் தங்காதலரோடு ஆடியிருந்தேயும் பின்னரும் அந் நீரினை ஆடல் விருப்பானே நோக்காநிற்கும் அம் மகளிருடைய மலரை ஒத்த கண்கள், அரி படு விரை மாண் ஐ பகழி அரம்தின் வாய் போன்ம் போன்ம் போன்ம் - வண்டு மொய்க்கின்ற மணத்தானே மாட்சிமைப்பட்ட ஐந்தாகிய காமபாணத்தினது அரத்தாற் கூர்மை செய்யப்பட்ட வாயையே பெரிதும் ஒப்பனவாயின ;

(வி - ம்.) இளிவரவு - இழிவு; என்றது, ஈயென இரத்தலை. "ஈயெனவிரத்தல் இழிந்தன்று" (புறநா - உ0௪) எனவும் "ஆவிற்கு நீரென்றிரப்பினும் நாவிற் கிரவின் இளிவந்தது இல்" (குறள். க0௬௬) எனவும், பிறசான்றோரும் ஓதுதலுணர்க.

"இல்லது நோக்கி இளிவரவு கூறுமுன்......வினை செய்வார்" என்னுமிதனோடு,

"இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள." (உஉங)

என்னுந் திருக்குறளை ஒப்பு நோக்குக.

"நல்லது வெஃகி வினை செய்வார்" என்னு மிதனோடு,

"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன்கைவண் மையே." (கங௪.)

எனவரும் புறச் செய்யுளையும்,

"பேணி யாடும் பெரும்புனல் விழவினுள்
நாணிச் செல்லா நல்குர வுடையோர்க்கு
அரும்பொறி அணிகலம் ஆரப் பெய்து
பெரும்பொறிப் பேழை இவையெனக் கூறிக்
கறைவாய் முரசம் கண்ணதிர்ந் தியம்ப
அறையவும் கொள்ளும் குறைவில ராகித்
துறைதுறை தோறும் இறைகொண் டோருள்
அணியா தோரை ஆராய்ந் துழிதரும்
பணியா வேந்தன் பணிநகரைக் காண்மின்." (க-௪0: உங௬-௪௪.)

எனவரும் பெருங்கதைப் பகுதியினையும் நினைவு கூர்க.

நல்லது - நன்னெறி. வினை - அறவினை. மண் - மண்ணுதல்: கழுவுதல். மணி - நீலமணி. குரல் - கொத்து; கற்றை. வணர் - வளைவு; நெறிப்புமாம். பலதுவர்-பத்துவகைத்துவர்; அவையாவன:— "பூவந்தி திரிபலை புணர்கருங்காலி நாவலொடு நாற்பான் மரமே' என்பன.

இழைதுகள் - நுண்ணியபொடி, அஃதாவது அரைப்புத்தூள். சாந்து - சந்தனக்குழம்பு முதலியன. மதம் - கத்தூரி. இழை - அணிகலன். தெளிர - ஒளிபெற. கழிய - மிகுதியாக. மதவேளுக்கு ஐந்து மலர் அம்புகள் உண்மையின் 'ஐமாண் பகழி' என்றார். அரத்தின் வாய் - அரத்தானே அராவப்பட்ட வாய். அரத்தானே அராவப்படும் மலரம்பு இல்லாமையின் இஃது தொழில்பற்றிவந்த இல்பொருள் உவமை என்பர் ஆசிரியர் பரிமேலழகர்.

போன்ம் போன்ம் என்னும் அடுக்கு பெரிதும் ஒத்தது என, துணிவு மிகுதி பற்றிவந்தது.

(பரிமே.) ௯௩. நீர்க்கு ஒப்பனையாதல் கூடாமையிற் கூட்டு வார் என்றார்.

௯௩ - ச. இங்ஙனம் கூட்டுவார் ஊட்டுவார் ஆயது, தமக்கு அப் புனல் செய்த உதவிக்குக் கைம்மாறு கருதி.

இனிப் புனல் பொருது மெலியாத மைந்தரைக் கூறுகின்றார். (௬௩-ஆம் அடி தொடங்கி ௯௯-ஆம் அடிவரையில் புனல் பொருது மெலிந்த மகளிர் செயல் கூறப்பட்டது. இனிப்புனல் பொருது மெலியாத மைந்தர் செயல் கூறப்படும் என்பது கருத்து.)

**க00 - ககக: தண்டி..........................தீநீர்ப்புனல்**

(இ - ள்.) தண்டி- தண்டின் தாய்ச் செல்வோரும் - (இனிமகளிர் செயல் இவ்வாருக நீராடற்கண் இளையாத மைந்த ரிற் சிலர்,) மேலும் நீராடலை விரும்பி வாழைத் தண்டினைத் தழுவிக் கொண்டு நீர்மேலே தாவித்தாவிச் செல்லாநிற்பாரும், திரை நுரை கண்டல் தண் தாது தூவாரும் - வேறு சிலர் அந் நீரின் அலைமேலும் நுரையின்மேலும் தாழம்பூவின் குளிர்ந்த தாதினைத் தூவுவாரும், வெய்ய திமிலின் விரை புனலோடு ஒய்வாரும் - சிலர் விசையாய் ஓடும் ஓடத்தின்கண் ஏறி விரைந்து ஒழுகும் நீரோட்டத்தோடே ஒரு சேரச் செலுத்து வாரும், புனல் எதிர் மாறு ஆடி மெய்யது உழவின் - சிலர் விரைந்தொழுகும் நீரினது எதிரே அதற்குமாருக எதிர் சென்று ஆடித் தம்முடலிலே தோன்றிய இளைப்பினாலே, பைய விளையாடுவாரும் - அங்ஙனம் ஆடுதல் தவிர்ந்து நீரோட் டத்தோடு ஒத்தியைந்து மெல்ல மெல்ல விளையாடுவாரும், மென்பாவையர் செய்த பூஞ் சிற்றடிசில் இட்டு ஏற்பார் - வேறு சிலர் மெல்லியலாராகிய மகளிர் தாமேஇழைத்த அழகிய தமது சிற்றில்லில் தாம் சமைத்த சிறு சோற்றை இடாநிற்ப அதனை உண்ணுதற்குக் கரையிலேறி ஏற்பாரும், இடுவார் மறுப்பார் சிறுகு இடையார் - வேறு சிலர் தாம் கையேற்கும் பொழுது இடுவாராய்ப் பின்னர் இடாது மறுப்பாராய்த் தம்மை அசதி யாடாநின்ற சிறிய இடையினையுடைய மகளிரது, பந்தும் கழங்கும் பல களவு கொண்டு ஓடி - பந்துகளையும் கழங்குகளை யும் இன்னோரன்ன பிற பலபொருள்களையும் அவரறியாதபடி கவர்ந்து கொண்டு ஓடிச்சென்று நீர் அருகே நிற்ப அச் செயலை அறிந்த மகளிர் அவரைத் தொடர்ந்து வாங்கச் சென்றுழி, அந்தண் கரைநின்று பாய்வார் - அழகிய குளிர்ந்த அக் கரையி னின்றும் அம்மகளிர் கைக்கு அகப்படாமல் நீரினுள்ளே பாய் வாருமாய் இவ்வாறு ஆடுதலானே, தீநீர்ப்புனல் - அவ் வையை யாற்றினது இனிய நீர்மையுடைய புதுப்புனல், ஒளிறு இலங்கு எஃகோடு வாள் மைந்தர் மாறு உழக்கி - ஒளிவிடுத

லானே விளங்காநின்ற வேலானும் வாளானும் மறமைந்தர் தம் பகைவரோடு மாறுபட்டுநின்று போர்செய்தலானும், களிறு போர் உற்ற களம்போல - யானைகள் தம்மிற் போர்செய்தலானும் கலங்கிய போர்க்களத்தைப் போன்றிருத்தலான், தெளிவின்று-தெளிவில்லாதாயிற்று;

(வி - ம்.) தண்டி - விரும்பி. தண்டின் - வாழைத்தண்டினாலே. தாய் - தாவி. கண்டல் - தாழை: பூவிற்கு ஆகுபெயர். திரை நுரை-திரையின்மேலும் நுரையின்மேலும் என்க. திமில் - ஒருமரத்தோணி. ஓய்வார் - செலுத்துவார். உழவின் - உழப்பினாலே. புனல் எதிர் மாறுடி என மாறுக. பைய - மெல்ல. சிற்றிலில் அட்ட சிற்றடிசில் என்க. இட்டு என்னும் செய்தெனெச்சத்தை இட எனத்திரித்துக் கொள்க. இடுவார்போன்று பின் மறுப்பாராகிய சிறுகிடையார் என்க. இங்ஙனம் செய்தல் அசதியாடி நகைத்தற் பொருட்டு. களவு கொள்ளுதல் - உடையோர் அறியாவாறு கவர்ந்து கோடல். ஓடிக் கரைநின்று அவர் அறிந்துவந்து கேட்புழிப் பாய்வார் என்க. எஃகம் - வேல். ஒளிறு - ஒளி. மைந்தர் வாட்போர் செய்தகளமும் யானைதம் முட் பொருத களமும் போலத் தெளிவின்று என்க. நீர்ப்புனல் - நீர்மையுடைய புனல்.

இதுவரையில் மைந்தர் செயல் கூறப்பட்டது; மேலே எல்லாரும் நீராடி மீண்டமை கூறப்படும்.

(பரிமே.) கoஉ. (வெய்ய திமில்) - விசையையுடைய ஓடம்.

கககூ - கஉரு : மதிமாலை......................புகை

(இ - ள்.) மதி மாலை மால் இருள் கால்சீப்ப - திங்கள் மண்டிலம் தோன்றி மாலைக்காலத்தே மயக்கத்தைச் செய்கின்ற இருளைப்போக்காநிற்ப, கூடல் வதி மாலை - மதுரையின் கண்ணே தங்கும் இயல்பினை நினைந்து, மாறும் தொழிலான் - எல்லோரும் அவ்விடத்தினின்று மீண்டுபோகுந் தொழிலுடனே, புதுமாலை நாள் அணி நீக்கி - புதிய இயல்பினையுடைய அத் திருநாள் கருதி அணிந்த ஆடையணிகலன்களை அகற்றி, மாலை நகைப்பூ வேய்ந்து - அம் மாலைக்காலத்தே மலராநின்ற முல்லை மல்லிகைமுதலிய மலர்களையணிந்து, தோளணி தோடு சுடர் இழை நித்திலம் - தோளின்கண் அணியும் தொடியும் தோடும் ஒளிமிக்க அணிகலனாகிய முத்துவடமும் ஆகிய இன்னோரன்ன அணிகலன்களையும் அணிந்து கொண்டு, பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல் ஆடுவார் ஆடல் அமர்ந்த சீர்ப்பாணி - அவர் தம்முள் பாடுந்தொழிலை யுடையார் பாடாநின்ற பாடலும் பரவுவார் பரவும் புகழ்வார் புகழ்ச்சியும் ஆடுதற்குரியார் ஆடும் ஆடலும் அவ்வாடலுக்குப் பொருந்தின சீருடன் கூடிய தாளமும், நல்ல கமழ் தேன் அளிவழக்கம் எல்லாமும் - மகளிர் தங் கூந்தலிலே ஆரவாரிக்கின்ற நறுமணங்

கமழாநின்ற தேனைச் செய்யும் வண்டுகள் வழங்கும் வழக்கமும் ஆகிய இவற்றால் எழுந்த ஓசையோடே, பண் தொடர் வண்டு - பாடுகின்ற பண்ணொலியைக் கேட்டுத் தம்மினம் என்று கருதி ஊரினின்று வருகின்ற வண்டுகள், பரிய எதிர்வந்து ஊத - அங்ஙனம் பாடுபவர் வருந்தும்படி அவரெதிரே மொய்த்துப் பாடாநிற்ப, கதுப்பின் கொண்டிய வண்டு இன் குரல் ஊத - முன்னர் முல்லை முதலியவற்றை அணிந்தனர் எனக் கூறப்பட்ட மகளிருடைய கூந்தலில் அம் மலர்களிற் றேனைக் கொள்ளை கொண்டுண்டிருந்த வண்டுகளும் அவற்றோடே கூடி இன்குரலானே ஆரவாரிப்ப, தென்திசை நோக்கித் திரிதர் வாய் - இவ்வாறாக எல்லோரும் தெற்குத்திசையை நோக்கி மீள்கின்ற பொழுது, மணிமாடத்து உள் நின்று தூய பனி நீருடன் கலந்து - மதுரையின்கண் உள்ள அழகிய மேனிலை மாடங்களின் அகத்திருந்து மகளிர்கள் தூவிய பனிநீர் மணத்தோடே கலந்து, கால்திரிய - தென்றல் காற்றுமணமுடையதாய் மாறுதற்கு, ஆக்கும் புகை-அம் மகளிர் அம் மாடத்தின்கண் அகில் முதலியவற்றைத்தீயிலிட்டு எழுப்பும் நறுமணப்புகை, நளிர்மலை பூங்கொடித் தங்குபு மண்டு கால் சார்வா உகக்கும் - செறிந்த மலையின்கண் பூங்கொடிகளிடத்தே தங்கிப் பின்னர் ஆண்டியங்கும் காற்றினைப் பற்றுக்கோடாகக் கொண்டு வானிடத்தே ஏறிச்செல்லும், வளர் பனி ஆவி போனம் - மிக்க பனியாகிய ஆவியை ஒக்கும்;

(வி - ம்.) மதி - திங்கள். மால் - மயக்கம். கால்சீத்தல்: ஒரு சொன்னீர்மைத்து; போக்குதல் என்னும் பொருட்டு. வதிமாலை, புதுமாலை என்னு மீரிடத்தும் மாலை என்பது இயல்பு என்னும் பொருட்டு. நாள்அணி - அந் நீர்விழவுநாள் குறித்தணிந்த அணிகலன் என்க. தோளணி முதலியன நீராட்டுக் கருதி முன்னர்க் களையப்பட்டன வாகலின் மீண்டும் அணிந்தனர் என்க. நித்திலம்: முத்துமாலைக்கு ஆகுபெயர். முதலியவற்றை அணிந்து என வருவித்துரைக்க. பாடுவார் - பாணர். ஆடுவார் - கூத்தர் விறலியர். பரவல் - வேண்டிக்கோடல். பழிச்சுதல்: புகழ்தல் வருவோர் வரும்பொழுதே தெய்வத்தை வேண்டிக் கொண்டும் யாற்றைப் புகழ்ந்துகொண்டும் வருகின்றனர் ஆகலின் அவர்தம் பரவும் பழிச்சும் என்க. ஆடலுக்குத் துணையாக அமைந்த சீரும் பாணியும் என்க. சீர் - தாளம் முடிந்துவிடும் காலத்தினை உடையது. பாணி - தாளந்தொடங்குங் காலத்தினை உடையது. இவ்வேற்றுமையுண்மையால் 'சீர்ப் பாணி' என்றார். சீருடன் கூடிய பாணி என்க. தேனளி - தேனீ. தேனீயாற் செய்யப்படும் தேனுக்கு ஏற்ற அடைமொழிகள் தேனீயின் மேலவாக நின்றன. வழக்கம் - இயக்கம்.

பரிய - வருந்தும்படி. கொண்டிய - கொள்ளைகொள்வனவாகிய. கதுப்பின்கண் பூக்கொத்துக்களிற் றேனைக் கொள்ளைகொள்வன என்க. குரல் - குரலாலே. திரிதர்தல் - திரிதல்.

மாடத்தின்கண் மகளிர் கையிலுள்ள தூபக்காலினின்றும் எழுந்து காற்றிற்கலந்து பரவும் புகைக்கு மலையிற் பூங்கொடிக்கண் தங்கிப் பின் காற்றாலே மேலெழும் பனியாவி உவமை.

'காழிரியவாக்கும் புகை' என்பதே நல்ல பாடம்: 'காழிரியவார்க் கும் புகை' என்றும் பாடம்.

(பரிமே.) நீக்கி வேய்ந்து அணிந்து திரிதர்வாய் என்க. இனி அவ் வின்பங்கட்கு ஏதுவாகிய வையையை வாழ்த்தி முடிக்கின்றான்.

கஉசு - கருக : இலப்படு......................தொழவே

(இ - ள்.) வருந்தாது - உயிர்கள் பசியாலும் பிணியாலும் வருந்தாமல் வாழும் பொருட்டு, வரும்புனல் விருந்து அயர் கூடல் - தானே பெருகி வாராநின்ற வையைப் புதுநீர்க்கு இவ்வண்ணம் விருந்துசெய்யும் மதுரைநகரின்கண், கறை அரு அறை இசை உரிமை வயிரியர் - குற்றம் அரியவாகிய இசைக் கின்ற இசைப்பாடலுக்கு உரிமையுடைய பாணரும் கூத்தரும், அமர் ஆயமொடு ஒருங்கு ஏத்திலர் தொழ - தம்மை விரும்பும் கூட்டத்தோடு ஒருங்கே இன்றுபோல என்றென்றும் ஏத்தி வணங்கும்படி, இலம்படு புலவர் ஏற்ற கை ஒருமர-வறுமையாற் பற்றப்பட்ட புலவருடைய இரத்தற்கேந்திய கைகள் நிரம்பும்படி, பொலம் சொரி வழுதியின் - பொன்னைச் சொரியாநின்ற நம் பாண்டிய மன்னனைப்போலவே, புனல் - இவ் வையைநீர், இறை பரப்பி - அப் பாண்டியனுடைய இறைமைத்தன்மையை உலகெலாம் பரவச்செய்து மேலும், செய்யில் பொலம் பரப்பும் செய்வினை - அவனுடைய நாட்டின்கண் உள்ள கழனிகள் தோறும் பொன்னையும் பரப்பாநின்ற அதன் இயல்பு வினை. ஓயற்க - என்றென்றும் மாறாமல் நிகழ்வதாக.

(வி - ம்.) இலம்படுதல் - வறுமையுறுதல். இலம்பாடு - வறுமை. பொலம் - பொன். வழுதி - பாண்டியமன்னன். வழுதிபோல என்க. செய்-கழனி. இறை-இறைமைத்தன்மை: அஃதாவது செங்கோன்மை. 'நீருயர நெல்லுயரும் நெல்லுயரக் கோலுயரு'மாகலின் 'இறைமை பரப்பி' என்றார். வருந்தாது என்றது, உயிர்கள் வருத்தமுறாதபடி என்றவாறு. அருங்கறை - அரிய கறையினையுடைய; கறையில்லாத என்றவாறு. கறை - குற்றம். அறையிசை - இசைக்கும் இசை. வயிரியர் - கூத்தர் பாணர் முதலியோர். இசையுரிமை வயிரியர் என மாறுக.

(பரிமே.) கஉஅ. செய்வினை - இயல்புவினை.

கஉகூ. வரும்புனல் - தானேவரும் புனல்.

கஙo. வயிரியர் - பாணரும் கூத்தரும்.

---

## பதினோராம் பாடல்

## வையை

### பொருட் சுருக்கம்

**க - ௰:** கோள்கள் மழைபெய்தற்குரிய நிலையிலே நின்றன; ஆதலின் கார்காலத்தே சையமலைக்கண் மழை பெய்ய, வையையாற்றின்கண் வெள்ளம் பெருகிற்று. அவ் வெள்ளம் மலையிலுள்ள சுரபுன்னை முதலிய மரங்களைத் திருமருதந் துறையின்கண்ணே தந்தது. ஆகலின், அத் துறை மலர் மண்டபம் போன்றும், வையைமகளின் ஆடைபோன்றும், தேன் பருகும் நிலமகளின் மிடறுபோன்றும் திகழ்ந்தது.

**௰க - ௨௰:** வளர்பருவத்திணையுடைய திங்களின் ஒளி எங்கும் பரந்தாற்போன்று வையையாறு யாண்டும் தன் நீரைப் பரப்பி உலகிற்குப் பயன்தந்தது; அது தேய்பருவத்துத் திங்கள்போன்று சில சமயங்களில் வற்றினாலும், அமாவாசையிற் போல முழுதும் குறைதல் ஒருபொழுதும் இல்லை; 'வையையே! நீ பெருகிய நாளில் இவ் வுலகம் புதுவருவாயைப் பெறுமாறு போல வற்றின நாளினும் வருவாயைப் பெறும்பொருட்டு இவ் வெள்ளம் சிறிது தணிந்து செல்வாயாக.'

**௨க - ௨௯:** "வையையே! களவொழுக்கம் மேற்கொண்ட மகளிர் சிறந்த அவ் வொழுக்கத்தைவிட்டுத் தாழ்ந்த கற் பொழுக்கத்தை மேற்கொண்டாற்போல, நீ நின் பிறப்பகமாகிய மலையைக் கைவிட்டுக் கடலாகிய நின் தலைவன் இல்லத்திற்கு தனியே செல்லுதல் தகாது. ஆதலின், ஆண்டுச் செல்லற்க" என்று கண்டோர் கூறுநிற்ப, வையையாறு வந்தது. தலைவி யைக் கைக்கொண்டு செல்லும்பொழுது அத் தலைவியின் சுற் றத்தார் சுரத்திடைச்சென்று மறித்துப் பொருதாற்போன்று மதுரையினுள்ளோர் அதன் போக்கினை இடையே தடைசெய்து மறித்தமையால் அது உட்புகுந்து நீராடுதற்கு உரியதாயிற்று.

**௩௰ - ௬க:** அங்ஙனம் நீராடுவாருள் சிலர் நெட்டியா லாகிய வாளைச் சுழற்றுவர்; அதனாலாகிய ஈட்டியை ஏந்துவர்; சிலர் தேரில் ஏறுவர்; சிலர் குதிரைகளையும் யானைகளையும் ஏறி அவற்றை நீரிற் செலுத்தி உழக்குவர்; மூங்கிற்கோலால் நீரைத் தெறிப்பாரைச் சிலர் அரக்குநீர் வட்டிலால் எறிவர்;

மாலையை வீசுவார்மேல் கொம்புநீரை வீசுவார் சிலர்; இங்ஙனம் நீராடலின் வையை போர்க்களத்தை ஒத்தது.

**௬௨ - எ௫ :** இளவேனிற்காலத்தே இவ் வையை வானுலகிற் றிரியும் வானவூர்திகளைக் காட்டும் தெளிந்த நீரோட்டத்தை யுடையது; அக் காலத்தே நீராடுவோர் பாகோடு கூடிய இளந் தேறலை நுகர்ந்து இன்னிசை கேட்டுப் பெரிதும் இன்புறுநிற்பர்; அழகாகிய தேறலைக் கண்ணுளுண்டு களிப்பர்; 'வையையே இங்ஙனம் காரிற் கலங்கி வேனிலிற் றெளிந்து நின்நிலைமை எப்பொழுதும் ஒருபடித்தாயிருப்பதில்லை.'

**எ௬ - ௮எ :** முன்பனியையுடைய மார்கழித் திங்களில் விரிநூல் அந்தணர் திருவாதிரை நாளுக்குரிய சிவபெருமானுக்கு விழாச்செய்யத் தொடங்கினர்; வேறுசில அந்தணர் பொற்கலம் ஏந்தினர்; அம்பாவாடலைச் செய்யும் மகளிர் விடியற்காலத்தே நீராடினர்; அம் மகளிர் குளிர்வாடை வீசுதலானே அந்தணர் வளர்த்த வேள்வித்தீயின் அருகிற்சென்று தம் ஈர ஆடைகளை உலர்த்தினர்; 'வையையே! அவ் வேள்வித்தீயிலிட்ட அவி நினக்கு வாய்ப்புடையதாக இருந்தது.'

**௮௮ - ௯௨ :** 'வையையே! காமம் சாலா இளங்கன்னியர் நின்பால் தந்தாய்மாரருகில் நின்று தைந்நீராடலாகிய தவத்தைச் செய்தற்குப் பண்டு எத்தகைய தவம் செய்திருந்தனரோ கூறுக.'

**௯௫ - ௧௦௦ :** அங்ஙனம் தைந்நீராடுங்கால் ஒருத்தி தன் காதில் நீலமரைச் சூடி வேறொருத்தியை நோக்கினாள்; அவள் தன்காதில் அசோகந்தளிரைச் சூடிக்கொண்டாள்; அவ் வசோகந்தளிரின் ஒளி கதுவுதலானே அந் நீலமலர் இளவெயில் தழுவியது போலாயிற்று; அப்பொழுது அசோகு சூடியவள் நீலஞ்சூடியவளை நோக்கி இவள் தன் காதுகளின் நீலமலர்சூடி இப்பொழுது நான்கு விழி படைத்தாள் என்று கூறி, அவள் உருவம் கொற்றவை போன்று தோன்றும் பொருட்டு அவளுடைய நெற்றியில் கனல்விழிபோல ஒரு திலகமிட்டாள்.

**௧௦௧ - ௧௦௫ :** பவள வளையணிந்திருந்தாளைக் கண்ட ஒருத்தி, குவளைத் தண்டினைப் பச்சைவளையலாகத் தன் கையிலணிந்து கொண்டாள்; செங்கழுநீர்ப் பூவாலே கண்ணி தொடுத்த ஒருத்தியை மற்றொருத்தி தகைப்பாள் போன்று மல்லிகையோடு நெய்தற்பூவை விரவித் தொடுத்தாள்.

**௧௦௬ - ௧௧௪ :** வையையின்கண் வாழைத்தண்டைப் பற்றி நீந்திய ஒருவன் ஒருத்தியைக் கண்டான்; அவன் நெஞ்சத்தை

அவள் கொள்ளை கொண்டாள்; அதனால், அவன் கை சோர்ந்தது; அவன் கண்கள் அம் மடந்தையின் எழிலில் திளைத்தன; நீரோட்டம் அவனைத் தன் போக்கில் தள்ளிச் சென்றது; அது கண்ட அம் மகள் ஆயத்தினின்றும் பிரிந்து அவனைத் தொடர்ந்தாள்; அவளை, 'ஏடி! ஆயத்தை விலகிச் செல்லாதே' என்று அவள் தாய் கடிந்தாள்; அதனால் அவள் ஆற்றாமையால் அரற்றினாள்; இவ்வாறு அரற்றும்படி கார்காலத்து வெள்ளம் கரை பொருது நிமிர்ந்து வந்தது.

**கசரு - கஉக:** இப்பொழுது அங்ஙனம் நிமிர்ந்து வராமல் தைந்நீரே யாம் ஆடத்தகுந்த அளவின் தெளிந்து வருகின்றனை; நீ தக்காய் எனப் பாராட்டுவர் சிலர்; வேறுசிலர் யாம் எம் காதலரைத் தழுவும் வீறு பெறுக என்று வேண்டுவர்; வண்டு தாம் விரும்பிய மலரை நீத்துப் போவது போல எங் கணவர் எம்மை விட்டுப் போகாமல் பாதுகாப்பாராக என்பர் சிலர்; வேறுசிலர், யாமும் எங்கணவரும் முதுமை எய்தாமல் இத் தைந் நீராடற்றவம் நிலைபெற்ற இளமையைத் தருவதாக! யாம் செல்வத்தோடு சுற்றம் சூழ நிலை பெறுக என வேண்டுவர்;

**கஉஉ - கஙஉ:** இனி, ஆடவர் சிலர் அங்குள்ள மகளிரைத் தம் நண்பர்க்குக் காட்டிப் பின்வருமாறு கூறினர்:—

"இவளைக்காண்மின் இவள் தீண்டிவருத்தும் தெய்வம் போல்கின்றாள்; இவளைக்காண்மின்! இவள் காமனுக்குக் கருவூலமும் படையுமாவாள்; அவளுடைய கோதையில் யாழ் போல வண்டுகள் இசைத்தல் கேண்மின்! அதோ பாலைபாடும் வண்டிசை கேண்மின்! உதோ யாமப்பண்பாடும் தும்பியிசை கேண்மின்! தான் விரும்பிய மலரை நெரித்தா ளொருத்தியைப் புடைத்து மீண்டும் புடைக்கவரும் வண்டினைக் காண்மின்!

**கஙங - கசo:** பரிபாடலானே புகழ்பெற்ற வையையே! இவ்வாறு கைக்கிளைக் காமத்தைத் தருகின்ற நின்னிடத்தே இத் தைந்நீராடலை முற்பிறப்பிற் செய்த தவத்தாலே இப் பிறப்பிற் பெற்றேம்; அதனை யாவரும் நயக்கத்தக்க நினது நீர் நிறைவின்கண்ணே மறுபிறப்பினும் பெறுவேமாக.

விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
எரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
ரு வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடேரி

புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்
அங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்குப்பால் எய்த இறையமன்
வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
மதிய மறைய வருநாளில் வாய்ந்த
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
மிதுன மடைய விரிகதிர் வேனில்
எதிர்வரவு மாரி இயைகெனஇவ் வாற்றால்
புரைகெழு சையம் பொழிமழை தாழ
நெரிதரூஉம் வையைப் புனல் ;
வரையன புன்னாகமும்
கரையன சுரபுன்னையும்
வண்டறைஇய சண்பகநிரை தண்பதம்
மனைமாமரம் வாள்வீரம்
சினைவளர் வேங்கை கணவிரி காந்தள்
தாய தோன்றி தீயென மலரா
ஊதை யவிழ்த்த வுடையிதழ் ஒண்ணீலம்
வேய்பயில் சோலை அருவி தூர்த்தரப்
பாய்திரை யுந்தித் தருதலான் ஆய்கோல்
வயவர் அரிமலர்த் துறையென்கோ
அரிமலர் மீப்போர்வை ஆரந்தாழ் மார்பிற்
றிரைநுரை மென்பொதுட்டுத் தேமணச் சாந்தின்
அரிவை யதுதானை என்கோகள் ளுண்ணூஉப்
பருகு படிமிட றென்கோ பெரிய
திருமருத நீர்ப்பூந் துறை ;
ஆநா ணிறைமதி அலர்தரு பக்கம்போல்
நாளி னுளி னளிவரைச் சிலம்புதொட்டு
நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி
உலகுபயம் பகர வோம்புபெரும் பக்கம்
வழியது பக்கத் தமர ருண்டி
மதிநிறை வழிவதின் வரவு சுருங்க
எண்மதி நிறையுவா இருண்மதி போல
நாள்குறை படுதல் காணுநர் யாரே
சேணிகந்து கல்லூர்ந்த மாணிழை வையை

வயத்தணிந் தேகுநின் யாணரிறு நாள்பெற
மாமயி லன்னார் மறையிற் புணர்மைந்தர்
காமங் களவிட்டுக் கைகோள்கற் புற்றென
மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்தல்
இல்லத்து நீதனிச் சேறல் இளிவரல்
எனவாங்கு
கடையழிய நீண்டகன்ற கண்ணளைக் காளை
படையொடுங் கொண்டு பெயர்வானைச் சுற்றம்
இடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப அடன்மதுரை
ஆடற்கு நீரமைந்த தியாறு;
ஆற்றணி, வெள்வாள் விதிர்ப்போர் மிளிர்நந்த மேந்துவோர்
கோள்வார்கோல் கோள்ளக் கொடித்திண்டேர் ஏறுவோர்
புள்ளேர் புரவி பொலம்படைக் கைம்மாவை
வெள்ளநீர் நீத்தத்து ளூர்பூர் புழக்குநரும்
கண்ணருஞ் சாயற் கழித்துரப் போரை
வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோரும்
மணம்வரு மாலையின் வட்டிப் போரைத்
துணிபிணர் மருப்பி னீரேக்கு வோரும்
தெரிகோதை நல்லார்தங் கேளிர்த் திளைக்கும்
உருகெழு தோற்ற முரைக்குங்கா ளைளும்
பொருகளம் போலுந் தகைத்தே பரிகவரும்
பாய்தேரான் வையை யகம் :
நீரணி வெறிசெறி மலருறு கமழ்தண்
தார்வரை யகலத்தவ் வேரணி நேரிழை
ஒளிதிகழ்தகை வகைசெறிபொறி
புனைவினைப்பொலம் கோதையவரொடு
பாக ரிறைவழை மதுநுகர்பு களிபரந்து
நாகரினல் வளவினை வயவேற நளிபுணர்மார்
காரிகைமது ஒருவரினொருவர் கண்ணிற் கவர்புறச்
சீரமை பாடற் பயத்தாற் கிளர்சேவிதேவி
உம்ப ருறையு மொளிகிளர்வா னூர்பாடும்
அம்பி கரவா வழக்கிற்றே யாங்கதை
காரோவ்வா வேனில் கலங்கித் தெளிவரல்
நீரோவ்வா வையை நினக்கு;

கனைக்கு மதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலங்கல மேற்ப
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமணா லருவியின்
ஊதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையன் மகளிர் ஈரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று
மையாடல் ஆடன் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்
தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீர் ஆடுதல்
நீயுரைத்தி வையை நதி ;
ஆயிடை, மாயிதழ் கொண்டோர் மடமாதர் நோக்கினள்
வேயெழில் வென்று வெறுத்ததோ ணோக்கிச்
சாயிழை பிண்டித் தளிர்காதிற் றையினள்
பாய்குழை நீலம் பகலாகத் தையினள்
குவளை குழைக்காதின் கோலச் செவியின்
இவள்சேரீஇ நான்கு விழிபடைத் தாளென்று
நெற்றி விழியா நிறைத்திலக மிட்டாளே
கொற்றவைகோ லங்கொண்டோர் பெண் ;
பவள வளைசெறித்தாட் கண்டணிந்தாள் பச்சைக்
குவளைப் பசுந்தண்டு கொண்டு ;
கல்லகா ரப்பூவாற் கண்ணி தொடுத்தாளை
நில்லிகா வென்பாள்போ னெய்தற் றொடுத்தாளே
மல்லிகா மாலை வளாய் ;
தண்டு தழுவாத் தாவுநீர் வையையுள்
கண்ட பொழுதிற் கடும்புனல் கைவாங்க

நெஞ்ச மவள்வாங்க நீடு புணைவாங்க
நேரிழை நின்றழிக் கண்ணிற்ப நீரவன்
தாழ்வுழி யுய்யாது தான்வேண்டு மாறய்ப்ப
ஆயத்துட னில்லாள் ஆங்கவன் பின்றேடரூஉத்
தாயத் திறமறியாள் தாங்கித் தனிச்சேறல்
ஆயத்திற் கூடேன் றரற்றெடுப்பத் தாக்கிற்றே
சேயுற்ற கார்நீர் வரவு;
நீதக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தாய் என்மாரும்
கழுத்தமை கைவாங்காக் காதலர்ப் புல்ல
விழுத்தகை பெறுகென வேண்டுதும் என்மாரும்
பூவீழ் அரியிற் புலம்பப் போகா
தியாம்வீழ்வார் ஏமம் எய்துக என்மாரும்
கிழவர் கிழவியர் என்னாதேழ் காறும்
மழவீன்று மல்லற்கேண் மன்னுக என்மாரும்
கண்டார்க்குத் தாக்கணங்கிக் காரிகை காண்மின்
பண்டாரம் காமன் படையுவள் கண்காண்மின்
நீனெய்தாழ் கோதை யவர்விலக்க நில்லாது
பூவூது வண்டினம் யாழ்கொண்ட கொளைகேண்மின்
கொளைப்பொருள் தெரிதரக் கொளுத்தாமற் றூரல்கொண்ட
கிளைக்குற்ற உழைச்சுரும்பின் கேழ்கெழுபாலை இசையோர்மின்
பண்கண்டு திறனெய்தாப் பண்டாளம் பெறப்பாடிக்
கொண்டவின் னிசைத்தாளம் கொளைச்சீர்க்கும் விரித்தாடும்
தண்டும்பி யினங்காண்மின் தான்வீழ்பு நெரித்தாளை
முனைகெழு சினநெஞ்சின் முன்னெறிந்து பின்னும்
கனைவர லொருதும்பி காய்சினத் தியல்காண்மின்
எனவாங்கு
இன்ன பண்பின் இன்றைந்நீ ராடல்
மின்னிழை நறுநுதன் மகண்மேம் பட்ட
கன்னிமை கனியாக் கைக்கிளைக் காம
இன்னியன் மாண்டேர்ச்சி இசை பரிபாடல்
முன்முறை செய்தவத் திம்முறை இயைந்தேம்
மறுமுறை யமையத்து மியைக
நறுநீர் வையை நயத்தகு நிறையே

என்பது வரைவுமலிந்த தோழி கன்னிப்பருவத்துத் தைந் நீர் ஆடத் தவம் தலைப்பட்டேமென வையையை நோக்கித் தலைமகன் கேட்பச் சொல்லியது.

**ஆசிரியன் நல்லந்துவனர் பாட்டு; நாகனர் இசை; பண்ணுப் பாலையாழ்.**

## உரை

**க - கரு : விரிகதிர்......................வையைப் புனல்**

(இ - ள்.) வியல் விசும்பு விரிகதிர் மதியமொடு புணர்ப்ப- அகன்ற வானத்தின்கண் பரவாநின்ற ஒளியையுடைய திங்களோடு கூட்டப்படுவனவாகிய, எரிசடை எழில்வேழம் தலை எனக் கீழ் இருந்து தெரு இடைப்படுத்த - கார்த்திகையும் திருவாதிரையும் பரணியுமாகிய நாள்கள் முதலாக இவற்றது பெயரான் இடபவீதி மிதுனவீதி மேடவீதி என வேறுபடுத் தோதப்பட்ட, மூன்று ஒன்பதிற்று இருக்கையுள் - அம் மூவகை வீதியுள்ளும் ஒரோன்று ஒன்பது நாள்களைக்கொண்ட மூவகை இராசிகளுள், உருகெழு வெள்ளி வந்து ஏற்றியல் சேர-நிறமிக்க வெள்ளிக்கோள் வந்து இடபராசியைச் சேராநிற்ப, படிமகன் வருடையை வாய்ப்ப - செவ்வாய்க்கோள் மேடராசியைச் சேரா நிற்ப, பொருள்தெரி புந்தி மிதுனம் பொருந்த - பொருள்களை ஆராய்ந்தறிகின்ற புந்தி என்னும் பெயரையுடைய புதன் மிதுன ராசியிலே நிற்க, அங்கி உயர் நிற்ப புலர் விடியல் - கார்த்திகை நாள் உச்சமாக இருள் புலருகின்ற விடியல் உண்டாக, அந்தணன் பங்குவின் துணையில்லத்துக்கு உப்பால் எய்த - வியாழக்கோள் சனியின் இரட்டை இல்லங்களாகிய மகரகும்பங் களுக்கு மேலே உள்ள மீனராசியைச் சேராநிற்ப, யமன் இறை வில்லின் கடை மகரம் மேவ - இயமனைத் தமையனுகவுடைய சனிக்கோள் தனுராசியின் பின்னுகிய மகரராசியிலே நிற்க, மதிய மறையப் பாம்பு ஒல்லை வருநாளில் - இராகு மதி மறையும் படி வரும்நாளிலே, பொதியின் முனிவன் புரைவரைக் கீறி மிதுனம் அடைய - அகத்தியன் என்னும் மீன் உயர்ந்த தன் இடத்தைக் கடந்து மிதுனராசியைச் சேராநிற்ப, விரிகதிர் வேனில் எதிர்வரவு மாரி இயைக என இவ் வாற்ருல்-முறுகின வெயிலையுடைய முதுவேனிற் பருவத்துப் பின்வரும் கார் காலத்திலே மழை பெய்க என்ற இவ் விதிவழியாலே, புரை கெழு சையம் பொழி மழை தாழ - உயர்ந்த சையமலைக்கண் பொழியாநின்ற மழை மிகாநிற்ப, வையைப் புனல் நெரிதரூஉம்-

வையையாற்றின்கண் நீர் பெருகிவந்து கரைகளை நெரியா நிற்கும் ;

(வி - ம்.) வியல் விசும்பு - அகன்றவானம்· மேலுள்ள நாண் மீன்களை, கீழே மிகத் தொலைவினிற்கும் திங்கள் சேர்ந்திருப்பது போலக் காணப்படுதற்கு அவற்றை நேருக்கு நேராகக் கொண்டுள்ள வானமே காரணமாகலின் விசும்பாற் புணர்க்கப்பட்ட என்பார் 'விசும்பு புணர்ப்ப' என்றார்.

எரி - தீயைத் தெய்வமாகவுடைய கார்த்திகை. இதனால் அதன் முக்காலையுடைய இடபராசி உணர்த்தப்பட்டது.

சடை - சடையையுடைய சிவபெருமானைத் தெய்வமாகவுடைய திருவாதிரை; இதனால் அதனையுடைய மிதுனம் உணர்த்தப்பட்டது.

வேழம் - யானைக்குப் பிறப்புநாளாகிய பரணி ; இதனால் அதனை யுடைய மேடம் உணர்த்தப்பட்டது.

எனவே, இடபவீதி மிதுனவீதி மேடவீதி என வகுக்கப்பட்ட மூவகை வீதிகளுள் ஒவ்வொன்று ஒவ்வொன்பது நாள்களைத் தன்பால் அடக்கிக்கொண்ட நன்னான்கு இராசிகளாகப் பகுக்கப்பட்ட அம் முக் கூற்றுப் பன்னிரண்டு இராசிகளுள் என்றவாறு.

இனி, உருகெழு வெள்ளி என்பது முதலாக இராசிகளுள் கோள்கள் நின்றமுறை கூறுகின்றார். இதன்கண் கூறப்பட்ட கோணிலை வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| வியாழம் | செவ்வாய் | வெள்ளி | புதன் அகத்தியன் |
| | இவ்விராசிச் சக்கரம் ஆவணித் திங்கள் அவிட்ட நாளில் மதிமறைவு நிகழ்ந்த தொரு நாளின் கோணிலை யைக் குறிக்கின்றது. | | கேது |
| சனி மதி இராகு | | | ஆதித்தன் |
| | | | |

இவ்வாறு நிகழ்ந்தது கி - மு. ௧௬௧ ஆன கலி ௨௯௪௧ பிரமாதி யாண்டு ஆவணித் திங்கள் பன்னிரண்டாம்நாள் வியாழக்கிழமை சதுர்த்தசி ௧௫ - ௪, அவிட்டம் ௪௫ - ௫௩. ஆகுமென அறிஞர்கள்

ஆராய்ந்து அறுதியிட்டுக் கூறியுள்ளனர். இம்முடிவே இப்பொழுது பலரானும் ஒப்பமுடிந்தது.

உரு - நிறம். ஏற்றியல் - இடபம். வருடை - மேடம்; ஆடு. படிமகன் - செவ்வாய். புந்தி - புதன். புந்தி என்பதற்கேற்பப் 'பொருள்தெரிபுந்தி' எனப்பட்டது. அங்கி - கார்த்திகை. உயர்நிற்ப - உச்சமாக. அந்தணன் - வியாழன். பங்கு - சனி. துணையில்லம் என மாறுக; இரட்டைவீடு என்றவாறு. அவை மகர கும்பங்கள். இவற்றிற்கு உப்பால் என்றது மேலுள்ள மீனத்தை. யமன்இறை என மாறுக. யமனாகிய தமையனையுடைய சனி என்க. வில் தனுர் இராசி. அதன்கடையாவது மகரராசி. பாம்பு - இராகு. மதிமறைய வரும் நாள் என்றது சந்திரகிரகணம் உண்டாகும்படி வரும் நாள் என்றவாறு. 'பொதியின் முனிவன்' என்றது அகத்தியமீனை. புரை வரை - உயர்ந்த இடம். கிறி - கடந்து.

மேற்கூறியவாறு கோள்நிற்கக் கார் தொடக்கத்தே மழைமிகும் எனச் சோதிடநூலோர் வகுத்த விதிவழியாலே சையமலையில் மழை மிக்கது என்க.

விரிகதிர் வேனில் - வெயில்முறுகின முதுவேனில். மாரி - கார்ப்பருவம். வையைப்புனல் பெருகிக் கரையை நெரிக்கும் என்க.

(பரிமே.) க. மேலவாய நாண் மீன்களைக் கீழாகிய மதி புணர்தலாவது:- அவ்வநேர் நிற்றன் மாத்திரமாகலின், அவற்றை 'விசும்பு புணர்ப்ப' என்றார்.

"இவைமுதலாக இவற்றின் கீழ் இருத்தலாவது இவற்றது பெயரான் இடபவீதி மிதுனவீதி மேடவீதி என வகுக்கப்பட்டு அம் மூவகை வீதியுள்ளும் அடங்குதல். அவற்றுள் இடபவீதி: கன்னி துலாம் மீனம் மேடம் என்பன. மிதுனவீதி தேள் வில்லு மகரம் கும்பம் என்பன. மேடவீதி இடபம் மிதுனம் கற்கடகம் சிங்கம் என்பன. ஓரிராசியாவது இரண்டேகால் நாளாகலின், நன்னான்கிராசி யாகிய இவை ஒரொன்று ஒன்பது நாளாயின. கோட்களுக்கு இடனாகலான் இவை பன்னிரண்டும் 'இருக்கை' எனப்பட்டன.

சு - எ. ஆதித்தன் சேயத்தையடைய என்பார் 'புலர் விடியல் அங்கி உயர் நிற்ப' என்றார்.

கூ - கo: 'பாம்பு மதியமறைய ஒல்லைவருநாள்' என்றது அவ் வாவணி மாதத்து மதிநிறை நாளாகிய அவிட்டத்தை. எனவே மதியும் இராகுவும் மகரத்து நிற்க என்பதூஉம், கேது அதற்கு ஏழாமிடமாகிய கற்கடகத்து நிற்க என்பதூஉம் பெறப்பட்டன.

இதனாற் சொல்லியது ஆவணித்திங்கள் அவிட்டநாளின் இக் கோள்கள் தமக்குரிய நிலமாகிய இவ்விராசிகளில் நிற்பச் சோமனை அரவு தீண்ட என்பதாயிற்று.

கக - கஉ. அகத்தியன் என்னும் மீன் உயர்ந்த தன்னிடத்தைக் கடந்து மிதுனத்தைப் பொருந்த, பொதியிலை விட்டெனவும் தோன்ற நின்றது.

கசு - உஉ: வரையன.............................நீலம்

(இ - ள்.) வரையன புன்னாகமும் - மலையின்கண்ணுள்ள புன்னை மரமும், கரையன சுரபுன்னையும் - யாற்றினது கரையின் கண்ணுள்ள சுரபுன்னைமரங்களும், வண்டு அறைஇய சண்பக நிரை - வண்டுகள் இசைபாடுதற்குக் காரணமான சண்பக மரத்தின் நிரையும், தண்பதம் மனைமாமரம வாள்வீரம் - குளிர்ந்த தன்மையுடைய தேற்றாமரமும் வாள் வீரமரமும், சினைவளர் வேங்கை - கொம்புகள் தழைத்து வளராநின்ற வேங்கை மரமும், கணவிரி காந்தள் - செவ்வலரியும் காந்தளும, தீயென மலரா தாய தோன்றி - நெருப்புப் போன்று மலரும் தழைத்த தோன்றியும், ஊதை அவிழ்ந்த உடை யிதழ் ஒள் நிலம் - காற்றானே அலர்த்தப்பட்ட நெகிழ்ந்த இதழ்களை யுடைய நீலம் என்னும் இவற்றின் மலர்களை ;

(வி - ம்.) வரையன - மலையிடத்துள்ளனவாகிய. கரையன - கரையிடத்துள்ளனவாகிய. புன்னாகம் - புன்னை. வண்டறைஇய - வண்டறைதற்குக் காரணமான என்க. மனைமாமரம் - இல்லமரம்; அஃதாவது தேற்றாமரம். வாள்வீரம் - வீரையென்னும் ஒருவகை மரம். கணவிரி - செவ்வலரி. காந்தள் - கோடல். தீயெனமலரா தாயதோன்றி என மாறுக. ஊதை - காற்று.

இவற்றின் மலர்களை அருவிதூர்த்தர என இயையும்.

உந - நடு: வேய்பயில்...................நீர்ப்பூந்துறை

(இ - ள்.) வேய் பயில் சோலை அருவி தூர்த்தர - மூங்கில் வளராநின்ற மலைச்சாரலின் சோலையிடத்தே அருவிநீர் கொணர்ந்து குவிக்க, பாய்திரை உந்திப் பெரியதிருமருத நீர்ப்பூந்துறை - அவற்றைப் பாயாநின்ற நீர் தள்ளிக்கொண்டு வந்து அகன்ற திருமருதந்துறை என்னும் நீராடுதற்குரிய அழகிய துறையின்கண் தருதலானே அத்துறையை, ஆய் கோல் வயவர் அரிமலர்த்துறை என்கோ - ஆராய்ந்து மலர் பறித்தற்குரிய கோலினையுடைய வலிய குடிகள் தாம் பறித்த நிறமுடைய மலர்களைக் கொணர்ந்து குவித்துவைக்கும் மண்டபம் என்று கூறுவேனோ?, அரிமலர் மீப்போர்வை ஆரம் தாழ் மார்பின் திரை நுரை மென்பொகுட்டு தேம் மணச் சாந்தின் - நிறமுடைய மலராகிய போர்வையினையும், மலையினுள்ள முத்துக் கள் தாழ்ந்த மார்பினையும் அலையினையும் நுரையினையும் மெல்லிய குமிழிகளையும் இனியமணமுடைய சந்தனச் சாந்தினை யும் உடைய, அரிவையது தானை என்கோ - வையையாகிய நங்கையினது ஆடையின் முன்றானை என்று கூறுவேனோ?, கள் உண்ணூஉ பருகுபடி மிடறு என்கோ - கள்ளை வாயிற்

கொண்டு பருகும் நிலமகளினது மிடறு என்று கூறுவேனோ இவ்வுவமைகளுள் எதனைத் தேர்ந்து கூறுவேன்;

(வி - ம்.) வேய் - மூங்கில். மலையருவி சாரலிலுள்ள சோலையிற் கொணர்ந்து குவிக்க அவற்றை நீர் கொணர்ந்து திருமருதந் துறையிற் குவித்ததாக, அங்ஙனம் குவிக்கப்பட்ட அத்துறை மலர்கொணர்ந்து குவிக்கும் மண்டபம் போன்றும் வையைமகளின் முன்றானை போன்றும் நிலமகளின் மிடறுபோன்றும் தோன்றிற்று என்பதாம்.

வயவர் - ஈண்டு அரண்மனைப் பூம்பொழிலில் மலர்பறிக்கும் குடிகள். மண்டபம் - மலர்கட்டும் இடம் என்க. கோல் - பூப்பறித் தற்குரிய கோல். ஆரம் - முத்துமாலை. மென்பொகுட்டு - மெல்லிய நீர்க்குமிழி. அலையும் நுரையும் குமிழியுமாகிய மேலாடையினை யுடைய எனினுமாம். படி - நிலமகள். மிடறு - கழுத்து. மலரானே அணிசெய்யப்பட்ட கழுத்து என்க.

(பரிமே.) வரைவுமலிந்த தோழி வையைச் சிறப்புக் கூறுவாள் இத்துணையும் தான் கருதியவாற்றாற்கூறி, மேல் கண்டார் கூறுகின்ற வாற்றாற் கூறுகின்றாள்.

௩௧ - ௪௦ : ஆநாள்......................நாள்பெற

(இ - ள்.) மதி ஆம் நாள் நாளின் நாளின் நிறை அலர் தரு பக்கம்போல் - பிறை தோன்றிய நாள் தொடங்கி நாளுக்கு நாள் வளர்கின்ற வளர்பக்கம்போல் நாளுக்குநாள் பெருகி, நிலவுப் பரந்தாங்கு - அதன் நிலவொளி உலகில் எங்கும் பரவு மாறு போல, நளிவரைச் சிலம்பு தொட்டு - செறிந்த மலைச் சாரல் தொடங்கி, நிலம் நீர் பரப்பி - நிலமெங்கும் நீரைப்பரப்பி, உலகு பயம் பகர - உலகத்திற்குப் பயனை விளைத்துக் கொடுத்துப் பாதுகாத்து, பெரும் பக்கம் வழியது - அவ் வளர் பக்கத்துப் பிற்பக்கமாகிய தேய்பக்கத்து, அமரர் உண்டி மதி நிறைவு அழிவதின் - தேவர்களுக்கு உணவாகிய அத் திங்கள் நாள்தோறும் தனது நிறைவினின்றும் ஒருகலை அழியு மாறுபோல, வரவு சுருங்க - நீரினது வருவாய் சுருங்குதலானே நாளுக்குநாள் சிறிதுசிறிது வற்றிவருங்காலத்தும், எண் மதி நிறை - எட்டாம்நாள் திங்களின் அளவாதலன்றி, இருள் உவா மதிபோலக் குறைபடுதல் நாள் - அமாவாசையின்கண் திங்கள் முழுதும் தேய்ந்தொழிதல் போன்று நின்கண் நீர்முழுதும் வற்றியொழிந்த நாளினை, யாரே காணுநர் - இவ்வுலகில் யாரே காண்கின்றனர், சேண் இகந்து கல்லூர்ந்த மாண் இழை வையை - அதனால், நெடுந்தூரத்தைக் கடந்து மலைகளிலே ஊர்ந்துவந்த மாட்சிமையுடைய அணிகலன்களையுடைய வையை மகளே!, நின் இறுநாள் யாணர் பெற - நீ பெருகின நாளின் வருவாயேயன்றி நினது வற்றின நாளின் வருவாயையும் இவ்

வுலகம் பெறும் பொருட்டு, வய தணிந்து ஏகு - நினது வலி தணிந்து மெல்லெனச் செல்வாயாக!

(வி - ம்.) ஆம் நாள் - தோன்றும் நாள்; ஆகும் நாள் என்பது ஆம் நாள் என்கின்றது. அலர்தரு பக்கம் - வளர்பக்கம். நாளின் நாளின் - நாளுக்குநாள். நளி - செறிவு. சிலம்பு - மலைச்சாரல். பகர என்னும் செயவெனெச்சத்தைப் பகர்ந்து எனத் திரித்துக் கொள்க, பகர்ந்து - விளைத்துக் கொடுத்து என்க. பகர்தல்-கொடுத்தல். அஃதப்பொருட்டாதல் "பல்வளம் பகர்பூட்டும்" (கலித்தொகை ௨0-க.) என்னும் அடிக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் வரைந்த "பலஉணவுகளையும் விளைந்து கொடுத்து" என்னும் நல்லுரையிற் காண்க. பெரும்பக்கம் - வளர்பக்கம். வழியது - பின்பக்கம்; தேய் பக்கம். அழிவதின் - அழிவதுபோல. அமரர் நாடோறும் மதியின் கலைகளை உணவாக உண்கின்றமையாலே மதிதன் நிறைவு அழி வதுபோல என்னும் பொருள்தந்து அமரர் உண்டி என்பது குறிப்பேதுவாதல் உணர்க. நீர்வரவு சுருங்க என்க. இருள்உவா என மாறுக. அஃதாவது அமாவாசை. அன்று திங்கள் முழுதும் தேய்ந்தொழிதல் போல என்க. எண்மதி நிறை - அட்டமித்திங்க ளளவு. ஆதலன்றி எனவருவித்துக் கூறுக. குறைபடுதல் நாள் என மாறுக. குறைபடுதலையுடைய நாள். யாரே என்னும் வினா காணுநர் ஒருவருமில்லை என்பதுபட நின்றது. சேண் - நெடுந்தூரம். சேணிகந்து கல்லூர்ந்து வந்த என்பது, தான்வருந்தியும் பிறரைவாழ் விக்கும் சான்றாண்மையுடைமை என்பதற்குக் குறிப்பேதுவாய் நின்றது. மாணிழை என்றது முற்கூறப்பட்ட "அரிமலர் மீப்போர்வை ஆரம்" முதலியன. வய - வலி. நீர்க்கு வலிமையாவது மிகுதியே ஆகலின், ஆசிரியர் பரிமேலழகர் வய என்றதற்கு மிகுதி என்றுபொருள் கூறினர். வய என்பதற்கே மிகுதி என்னும் பொருள் உளதாயினும் கொள்க.

௪0. இறுநாள் என்பதே பரிமேலழகர் கொண்ட பாடம் என்பது அவருரையானும் குறிப்பானும் உணரலாம். ஈரிடத்தும் இருநாள் எனஇருத்தல் திருத்தப்படுதல் வேண்டும். இறுநாள் - வற்றும்நாள். இறுநாளும் எனற்பால எச்ச உம்மை தொக்கது. தணிந்தேகுதல் இருநாளும் யாணர்பெற ஏதுவாகாமையான் இருநாளும் என்னும் முற்றும்மை தொக்கது எனக்கோடல் பொருந்தாமையானும் இறுநாள் என்பதே பாடமாதலைத் தெளிக.

(பரிமே.) ௩௪. பகர்ந்தென்பது பகரவெனத்திரிந்து நின்றது.

௪0. இறுநாளும் என்னும் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

௪க - ௪கூ: மாமயில்.......................அமைந்ததியாறு

(இ - ள்.) (௩௯ வையை) மறையிற்புணர் மைந்தர் மாமயில் அன்னார் - களவின்கண் புணர்தலையுடைய காதலரையுடைய சிறந்த மயில்போன்ற மகளிர், காமம் களவிட்டு - காமவின்பச் சிறப்புமிக்க அக் களவொழுக்கத்தை விட்டு, கைகொள் கற்பு உற்றென-இழிந்த தன்மையைக் கொண்ட கற்பொழுக்கத்தினை மேற்கொண்டு அக் கணவனுடைய இல்லிற் சென்று அடங்கிக்

கிடந்தாற்போல, மல்லல் புனல் வையை - வளமுடைய நீராகிய செல்வப்பெருக்கினையுடைய வையைமகளே!, நீ மாமலைவிட்டு - நீ நினது பிறந்தையாகிய பெரிய மலையைக் கைவிட்டு, இருத்தல் இல்லத்துத் தனிச்சேறல் இளிவரல் - நினது கடலாகிய தலைவனது இருத்தற்குரிய இல்லத்திற்குத் தனியே செல்லுதல் இழிவாகும்; ஆதலால் அங்குச் செல்லாதேகொள், என-என்று கண்டோர் சொல்லாநிற்ப, கடை அழிய நீண்டு அகன்ற கண்ணளை - எல்லையற நீண்டு அகன்ற கண்ணையுடைய தலைவியை, காளை படையொடும் கொண்டு பெயர்வானை - தலைவன் உடன்கொண்டு படைக்கலங்களோடு செல்லாநிற்ப அங்ஙனம் செல்கின்றவனை, சுற்றம் இடைநெறி தாக்குற்றது ஏய்ப்ப-அத் தலைவியினுடைய சுற்றத்தார் அச் செயலை அறிந்து அத் தலைவன் செல்லும் இடைச்சுரத்துச் சென்று அவ னோடு போரிட்டாற்போல, அடல் மதுரை - வெற்றியையுடைய மதுரைக்கண் உள்ள மாந்தர், நீர்ஆடற்கு அமைந்தது யாறு - இடையே புகுந்து தடைசெய்து நீராடுதற்கு ஏற்றது இவ் வையையாறு;

(வி - ம்.) மறை - களவு: மைந்தரையுடைய மயிலன்னார் என மாறுக. காமச் சிறப்புடைய களவு என்க. களவு: ஈறு கெட்டுக் 'கள' என நின்றது. மயிலன்னார் களவினைவிட்டுக் கற்பொழுக்க மேற்கொண்டு கணவன் இல்லத்து அடங்கினாற்போல் வையையே நீ கடலிற் றனிச்சென்று அடங்குதல் இளிவரல் என்க. காமத்தாற் சிறந்தது களவொழுக்கம் கற்பொழுக்கம், இழிந்தது என்றதனை கூ-ஆம் பாடலில்,

"வாய்மொழிப் புலவீர்.........என்னும் கஉ-ஆம் அடி தொடங்கி உரு - கொள்ளாரிக் குன்றுப்பயன்" என்னும் அடியீறாகவுள்ள பகுதி யானும் அதன் உரையானும் உணர்க. கைகொள் கற்பு - சிறுமையை யுடைய கற்பொழுக்கம். கை - சிறுமை. 'இளிவந்த' என்பர் பரிமேலழகர்.

மல்லல் - வளம். மாமலை - பெரியமலை. இருத்தல் இல்லம். புக்கவில்லம். இதனால் மாமலையாகிய பிறந்தையை விட்டு என உரை கூறப்பட்டது. பிறந்தை - பிறந்தவில்லம்.

கணவன் உடன்கொண்டு போங்கால் அவனோடு சேறலே மகளிர்க் குச் சிறப்பாதலன்றி அவன் மனைக்குத் தனியே சேறல் இளிவரலாம். ஆகலின் நீ தனியே சேறற்க என்றவாறு.

ஆங்கு: அசை. கடை - எல்லை. காளை - தலைவன். ஒரு தலைவன் தலைவியை அழைத்துக்கொண்டு இடைச்சுரத்தே சென்றானாக, அஃதறிந்த தலைவியின் தமர் இடைச்சுரத்தே அவனை மறித்துப் போர் செய்தாற்போல, மதுரையிலுள்ளோர் வையையின் போக்கை இடையே தடைசெய்து நீராடுதற்கு ஏற்றது வையை என்க. தடை செய்தல் - அணையிட்டுத் தடுத்தல்.

(பரிமே.) சரு. என - என்று கண்டோர் சொல்ல.

சரு. கடையழிய - எல்லையற.

சஅ. இடைநெறி - இடைச்சுரம். மதுரை - மதுரையார்.

சகூ. அமைந்தது - ஏற்றது.

ரு௦ - சுக : ஆற்றணி......................வையையகம்

(இ - ள்.) ஆற்று அணி-இனி அவ் வையையாற்றின்கண் அணி அணியாக நின்று, வெள்வாள் விதிர்ப்போர் - நெட்டியாற் செய்த வெள்ளிய வாட்படையைச் சுற்றுவோரும், மிளிர் குந்தம் ஏந்துவோர் - விளங்காநின்ற குந்தப்படையைக் கையிலேந்தி நிற்போரும், கொள்வார் கோல் கொள்ள - மகளிர் தேர்க்கு மகளிரும் மைந்தர் தேர்க்குப் மைந்தருமாகக் கோல் கொள்ளுதற் குரியோர் கோலினைக் கைக்கொள்ளாநிற்ப, கொடித் திண் தேர் ஏறுவோர் - கொடியையுடைய திண்ணிய தேர்களிலே ஏறு வோரும், புள் ஏர் புரவி பொலம்படைக் கைம்மாவை - பறவை பறப்பதுபோன்று விரைந்துசெல்லும் இயல்பினையுடைய குதிரை களையும் பொன்னாலாகிய நெற்றிப்பட்டத்தையுடைய யானைகளை யும் ஏறி, வெள்ளநீர் நீத்தத்துள் ஊர்பு ஊர்பு உழக்குநரும் - வெள்ளமாகப் பெருகிய அந் நீரின்கண் நீந்துதற்குரிய ஆழிய விடத்தே அவற்றைச் செலுத்திச் செலுத்தி, கலக்குவோரும், கண் ஆரும் சாயல் கழித் துரப்பாரை - கண்ணுக்கு நிறைந்த அழகையுடைய மூங்கிற்குழாயாலே நீரைவாங்கித் தம்மேல் செலுத்துகின்றவர்களை, வண்ணநீர் கரந்த வட்டு விட்டெறி வோரும் - அரக்குநீரை அடக்கிய வட்டாலே எறிவோரும், மணம் வரும் மாலையின் வட்டிப்போரும்- தம்மை நறுமணங் கமழ்தற்குக் காரணமான மலர்மாலையினாற் சுழற்றிப்புடைப்போரையும், துணி இணர் மருப்பின் நீர் எக்குவோரும்-அறுக்கப்பட்ட சருச்சரையை யுடைய கொம்பின்கண் அடக்கப்பட்ட மணநீரினை வீசுவோரும், தெரிகோதை நல்லார் நாளும் தம் கேளிர்த் திளைக்கும் - இவ்வாறாக ஆராய்ந்தணிந்த மாலையினையுடைய மகளிர் தம் காதலரோடு நாடோறும் ஆடி மகிழும், உருகெழு தோற்றம் உரைக்குங்கால்-அழகு பொருந்திய காட்சியினை உவமைகாட்டிக் கூறுமிடத்து, பரி கவரும் பாய்தோரான் வையையகம் - பகைவருடைய குதிரைகளை வென்று கவர்ந்துகொள்ளும் விரைகின்ற தேரினையுடைய பாண்டிய மன்னனது வையை யாற்றினது உள்ளிடம், பொருகளம் போலும் தகைத்து - போர்க்களம்போன்ற தன்மைத்து எனலாம்.

(வி - ம்.) வாள் குந்தம் என்னும் படைகள் நெட்டி முதலிய வற்றாற் செய்யப்பட்டன. குந்தம் - ஒருவகைப் படைக்கலம்.

'கொள்வார் கோல் கொள்ள' என்றது, 'மகளிர்க்கு மகளிரும் மைந்தர்க்கு மைந்தரு(பாகரு)ம் கோல் கொள்ள' என்றவாறு. புள்ளேர் என்புழி, ஏர்: உவமவுருபு. பொலம்படை - பொன்னாற் செய்த நெற்றிப்பட்டம். கைம்மா - யானை. நீத்தம் - நீந்துதற்குரிய ஆழிய இடம் என்க. ஊர்பு: செய்பு என்னும் வாய்பாட்டெச்சம்: ஊர்ந்து: செலுத்தி. உழக்குதல் - கலக்குதல். கண்ணுறும் - கண் ணிறைந்த. சாயல் - அழகு. கழி - ஈண்டு மூங்கிற் குழை. துரத்தல் - செலுத்துதல். வட்டு - வட்டமானதொரு மணநீர் அடைத்த கருவி. இதனை,

"குலிகநீர் நிறைந்த பந்து" (சீவக-௩௬௮) எனவும், "அரக்குறு நறுநீர் அஞ்செங் குலிகம் குங்கும ஊறலொடு கொண்டகத் தடக்கிய எந்திர நாழிகை" (பெருங். க. ௪௧: ௩௭-௮) எனவும் பிறர் கூறுமாற் றானும் உணர்க.

பாய்தேரான் - பாண்டியமன்னன். பாண்டியமன்னனை ஈண்டு நினைந்து கூறுதலின் பொருகளமும் அவன் போர்பொருதும் களம் என்றல் மிகையன்று.

(பரிமே.) ௫0. வாளும் குந்தமும் கிடை முதலியவற்றான் அமைக்கப்பட்டன.

இது காரின்கண் ஆடல்; மேல் இளவேனிற்காலம். (ஈண்டுக் கூறியது வையையின்கண் கார்ப்பருவத்தே நீராடியதனை; இனிமேலே இளவேனிற் காலத்து நிகழ்ச்சி கூறப்படும் என்றவாறு.

௬௨ - ௭௧ : **நீரணி.............................ஆங்கதை**

(**இ - ள்.**) நீர் அணி-நீராடுதற்கேற்ற அணிகலன்களோடு, வெறி செறி மலர் உறு கமழ் தண் தார் வரை அகலத்து-தேன் செறிந்த மலர்களாற் புனைந்த மிக்க நறுமணத்தையுடைய குளிர்ந்த மாலைகளையும் அணிந்த மலைபோன்ற மார்பினிடத்தே, அவ் ஏர் அணி - அவ் வழகிய ஒப்பனையையும், நேர் இழை - அதற்கேற்ற பிற அணிகலன்களையும், ஒளிதிகழ் தகை வகை செறி பொறி புனைவினைப் பொலங் கோதையவரொடு - ஒளி விளங்காநின்ற கட்டுதல் வகைமை செறிந்த மூட்டுவாய் புனைந்த தொழிலையுடைய பொன்னரி மாலையினையுடைய மகளி ரோடே, பாகர் இறை வழை மது நுகர்பு - பாகு தங்கிய இளங் கள்ளைப் பருகி, களிபரந்து - களிப்பு மிகுந்து, நல் வளவினை நாகரின் வயவு ஏற நளிபுணர்மார் - நல்ல செல்வத்தைத் தருகின்ற அறவினையைச் செய்த நாகர்களைப் போன்று விருப்பம் மிக இடைவிடாது இறுகப் புணர்தற்கு, சீர் அமை பாடல் பயத்தால் கிளர் செவி தெவி - தாளம் அமைந்த பாட லின்பத்தாலே தமது கிளர்ச்சியை உடைய செவியை நிறைத் துக்கொண்டு மேலும், ஒருவரின் ஒருவர் காரிகை மது கண்ணிற் கவர்புற - இருபாலரும் ஒருவரிடத்து ஒருவர் அழகாகிய

மதுவைக் கண்ணாலே கவர்ந்து பருகும்படி, உம்பர் உறையும் ஒளிகிளர் வான் ஊர்பு ஆடும் அம்பி - தேவர்கள் உறைதற்கிடமான ஒளிமிக்க வானத்தின்கண் வைமானிகர் ஊர்ந்து செல்லாநின்ற விமானத்தை, கரவாவழக்கிற்று - தெளிவாகக் காட்டாநின்ற தெளிந்த நீரோட்டத்தையுடையது அவ் வையையகம்;

(வி - ம்.) நீர் அணி - நீராடற்கேற்ற அணிகள். வெறி - கள்: தேன். வரையகலம் - தொய்யிலெழுதிய மார்புமாம்: வரை அகலம் என்பதற்கு வரையை ஆகுபெயராகக் கொண்டு நகிலாகிய மலேகளையுடைய மார்பு என்க. இழை - அணிகலன். தகை - கட்டுதல். பொறி - மூட்டுவாய். பொலங்கோதை - பொன்னரிமாலே. பாகர் - பாகு. இறை - தங்கிய. வழைமது - இளங்கள். நுகர்பு - நுகர்ந்து. நாகர் - தேவர்: நாகலோகத்தில உள்ள பாம்புகளுமாம். புணர்ச்சிக்கு நாகர் புணர்ச்சி உவமை என்க 'நல்வளவினே நாகர்' என மாறுக. நளிபுணர்மார் - இறுகப் புணரும் பொருட்டு. காரிகை மது - அழகாகிய மது. சீர் - தாளம். பயம் - இன்பம். உணர்ச்சியாற் கிளர்ச்சியுடைய செவி என்க. ஊர்பு ஆடும் - ஊர்ந்து திரியும். அம்பி - விமானம்: வானவூர்தி. தெவி - கொண்டு.

வானத்திலே செல்லும் வைமானிகருடைய விமானத்தைத் தன்னுட் கரவாது நன்கு காட்டாநின்ற தெளிந்த நீரோட்டம் என்க. வைமானிகர் - விமானமுடையவர்; தேவரில் ஒரு வகுப்பினர்.

இனி, பரிமேலழகர் உரையின்கண் நீரோட்டத்தை என்பதன்றி 'நீரோடத்தை' என்றும் பாடபேதமுளது. கரவா என்றது, மறைவின்றி நன்குகாட்டும் என்பதுபட நின்றது. எனவே தெளிந்த நீரோட்டம் என்பதாயிற்று.

இனி உறை வானூர்பு ஆடும் உம்பர் அம்பி கரவா என மாறி வானின் விமானத்து ஊர்ந்து திரியும் உம்பரை நீரோடம் மறைவின்றிக் காட்டாநிற்கும் எனப் பொருள் கூறி, தெளிந்த நீரின்மேல் ஓடமூர்ந்து செல்லும் மகளிரும் மைந்தரும் வானவெளியில் விமானமூர்ந்துசெல்லும் தேவமகளிரையும் மைந்தரையும் ஒத்துத் தோன்றுகின்றனர் என்பது கருத்தாகக் கொள்ளினும் பொருந்தும்.

ஆங்கு, அதை என்னுமிரண்டும் அசைகள்.

(பரிமே.) ஐம்புலன்களாலும் இன்பம் நுகர்தற்கு இடனுயிற்றென்றவாறு.

கூசா. (திகழ்தகை வகை செறி பொறி) வினைத்தொகை யடுக்கு.

'பரந்து தெவி' என்னும் செய்தென்னெச்சங்கள் கவர்புற என்னும் 'வினைமுதல் வினைகொள்ள அச் செயவனெச்சம் வழக்கிற்று' என்னும் பிறவினை கொண்டது.

'இத்துணையும் வையையைப் படர்க்கையாக்கிக் கூறி மேல் எதிர் முகமாக்கி........' (க் கூறுகின்றாள்.).........

எஉ - எகூ: காரொவ்வா..............பொலங்கல மேற்ப

(இ - ள்.) வையை கார்வேனில் கலங்கி தெளிவரல் - வையையே! இவ்வாறு கார்காலத்திலே கலங்கி வேனிற் காலத்தே தெளிதலானே, நீர் ஒவ்வா நினக்கு - உனக்கு இந் நீர்மை எப்பொழுதும் ஒத்திருக்கின்றதில்லை, கார்வானம் கனைக்கும் அதிர்குரல் நீங்க - கார்ப்பருவத்து முகில்கள் முழங்கா நின்ற திசைகள் அதிர்வதற்குக் காரணமான இடியொலி நீங்காநிற்ப, பனி படு பைதல் விதலைப் பருவத்து - பனி மிகுத லானே குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்தின்கண், ஞாயிறு காயா நளி பின்மாரிக் குளத்து - ஞாயிற்று மண்டிலம் சுடுதலில்லாத குளிர்ந்த கடைமாரியையுடைய மார்கழித் திங்களில், மாஇருந் திங்கள் மறுநிறை ஆதிரை - மிகப்பெரிய திங்கள்மண்டிலம் தன்னகத்துள்ள களங்கத்தோடே வளர்ந்து நிறைந்த திருவாதிரை நாளின்கண், விரிநூல் அந்தணர் விழவு தொடங்க - விரிந்த மெய்ந்நூல்களையுணர்ந்த அறவோர் அத் திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்குத் திருவிழா வைத் தொடங்காநிற்ப, புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏந்த- முப்புரியாகிய பூணூலையுடைய பார்ப்பனர் அவ் விழவின்கண் இறைவனுக்குப் பலிப்பொருள் பெய்த பொன்கலங்களையும் பிறவற்றையும் ஏந்தாநிற்ப ;

(வி - ம்.) கார் கலங்கி வேனில் தெளிவரல் நீர் நினக்கு ஒவ்வா எனக் கூட்டுக. நீர் - நீர்மை : இயல்பு. கார் - கார்ப்பருவம். தெளி வரல் - தெளிதல். 'கார்.........நினக்கு' என்றது, பழிப்பாள் போன்று வையையைப் புகழ்ந்தது. இனி 'கனைக்கு மதிர்குரல்' என்பது தொடங்கி மேலே தைந்நீராடல் கூறுகின்றாள்.

வையை: அண்மைவிளி. கார்வானம் கனைக்கும் அதிர்குரல் நீங்க என மாறுக. வானம்: ஆகுபெயர்: முகில். பைதல் - குளிர். விதலை - நடுக்கம். முன்பனிப்பருவத்தே ஞாயிற்றின் வெயில் சுடுதலின்றாகலின் 'ஞாயிறு காயா மாரி' என்றார். நளி - குளிர்ச்சி: நளி பின்மாரி என மாறிக் கூட்டுக. குளம் - மார்கழித்திங்கள். திங்கள் வளருந்தொறும் மறுவும் வளர்தலின் 'திங்கள் மறுநிறை ஆதிரை' என்றார். மாயிருந் திங்கள் - மிகப்பெரிய திங்கள்: முழுமதி என்றவாறு. ஆதிரை - திருவாதிரைநாள். விரிநூல் அந்தணர் என்றது அறவோரை. புரிநூல் அந்தணர் என்றது பார்ப்பனரை.

பொலங்கலம்-பொற்கலம். இறைவனுக்குப் பலிப்பொருள் பெய்த பொற்கலம் என்க. எடுத்த மொழியின் இனஞ்செப்பிப் பொற்கலமு முதலிய பூசனைப் பொருள்களை ஏந்தி என்க.

(பரிமே.) எகூ. திருவாதிரை நிறைமதி நாளாங்கால் ஆதித்தன் *பூத்தடத்தின்கண் (பூத்தடம் - புனர்பூசம்) நிற்குமாதலின் அதனை யுடைய மார்கழிமாதம் குளம் எனப்பட்டது.

(பாடம்.) * பூராடத்தின்கண்.

எஅ. ஆகமங்களையுணர்ந்த பூசகர் அத் திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு (சிவபெருமானுக்கு) விழாவைத் தொடங்க.

அ0 - அஎ : **வெம்பாதாக..................மடைவாய்த்தன்று**

(இ - ள்.) வியல் நிலவரைப்பு - அகன்ற இந் நிலவுலகம், வெம்பாதாக - ஞாயிற்றின் தெறலாலே வெப்பமுடைத்தாகாமல் மழையாலே குளிர்வதாக என்று வாழ்த்தி, அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர் - அம்பா ஆடுதலையுடைய ஆராய்ந்திட்ட வளையலை அணிந்த கன்னிமைப் பருவத்து மகளிர், முனித் துறை முதல்வியர் - சடங்கறிந்த முதுபார்ப்பனிமார், முறைமை காட்ட-நோன்பு செய்யும் முறைமையினை அறிவிக்க, பனி புலர்பு ஆடி-பனியையுடைய வைகறைப்பொழுதிலே நீராடி, பருமணல் அருவியின் ஊதை ஊர்தர - பரிய மணலிலே ஒழுகாநின்ற நீரின்கண்ணே குளிர்வாடை தவழ்ந்து வருதலானே, உறை சிறை வேதியர்-நினது நீர் உராய்ந்துசென்ற கரையின்கண்ணே உறையாநின்ற அந்தணரது, நெறி நிமிர் நுடங்கு அழல் பேணிய சிறப்பின் - வேதநெறியாலே வளர்க்கப்பட்ட வளைந் தெரியும் தீயினைப் பேணிய சிறப்புடனே, தையல் மகளிர் - ஒப்பனையையுடைய அக் கன்னிமகளிர் சென்று, ஈரணி புலர்த்தர - அதன்கண் தம் ஈர ஆடையை உலர்த்தாநிற்ப, வையை - வையையே, மடை நினக்கு வாய்த்தன்று - அத் தீயின்கண் கொடுக்கும் அவி நினக்கு வாய்ப்புடையதாயிருந்தது ;

(வி - ம்.) வெம்பாதாக என்றது, மழையால் குளிர்வதாக என்பது படநின்றது. அம்பாவாடல் - தைந்நீராடல். அம்பா - தாய். தாயோடு ஆடப்படுதலின் அம்பாவாடல் எனப்பட்டது. கன்னியர் - மணமாகாத இளமகளிர். முனித்துறை - சடங்கு. முதல்வியர் என்றது, பார்ப்பன முதுமகளிரை. முறைமை - நோற்கும் முறைமை. புலர்பு - வைகறைப்பொழுது. புலர்பின்கண் என இடப்பொருட்டாக்குக. மணலருவி என்றது, தெளிந்த நீர் என்பதுபட நின்றது. ஊதை-வடகாற்று. நீரிற் றவழ்ந்து ஊதை வீசுதலானே குளிருடையராய் அக் குளிர்நீங்கத் தீயிற் புலர்த்தர என்க. அத் தீயினை வலம்வந்து வழிபட்டு என்பார், 'பேணிய சிறப்பின்' என்றார். உரைசிறை : வினைத்தொகை. உரைத்தல் - உரிஞ்சுதல். நீரான் உரையப்பட்ட சிறை என்க. சிறை - கரை. சிறைவேதியர் - கரையிலுறையும் அந்தணர். நெறி - வேத நெறி. நிமிர் - வளர்ந்த: வளர்க்கப்பட்ட என்க. நுடங்கு அழல் - வளைந்து வளைந்து எரியும் தீ. தையல் - ஒப்பனை. ஈரணி - ஈரஆடை. வையை : விளி. மடை - அவி. வாய்த்தன்று - வாய்த்தது.

(பரிமே.) புலர்தற்கண் என்னும் ஏழனுருபு தொக்கது.

அஅ - கூஉ : **மையாடல்..................நதி**

(இ - ள்.) மையாடல் மழபுலவர் மாறு எழுந்து-மையோலை பிடித்த இளம் புலவரது விளையாட்டிற்கு மாறாக எழுந்து,

பொய்யாடல் ஆடும் புணர்ப்பின் அவர் - காமக்குறிப்பில்லாத விளையாட்டைச் செய்கின்ற ஆயத்தினையுடைய அக் கன்னி மகளிர், அவர் தாய் அருகா நின்று தவத் தைந்நீர் ஆடுதல் - அவரவர் தாயர் பக்கத்தே நின்று நோன்புடைய இத் தைந்நீராடலை நின்னிடத்தே பெற்றது, எரி தீப்பாலும் செறிதவம் முன்பற்றியோ - இங்ஙனம் நீர்க்கண் நின்றன்றி எரியாநின்ற தீயின் பக்கத்திலே நின்று பொறிபுலன்களை அடக்கிச்செய்தற் குரிய தவத்தினைப் பண்டைப் பிறப்புகளினும் மேற்கொண் டாற்றினமையாலோ, வையைநதி நீ உரைத்தி - வையைநதியே இப் பேற்றிற்குரிய காரணத்தை நீயே கூறுவாயாக ;

(வி - ம்.) மையாடல் - மையோலை பிடித்தல். அஃதாவது, மைதடவப்பெற்ற நெடுங்கணக்கு முதலிய சுவடிகளைக் கையிலேந்திப் பயிலுதல். இங்ஙனம் முதன்முதலாகச் சுவடிபிடித்தலை மையாடல் என்று பண்டையோர் வழங்கினர் என்றுணர்க. மை : ஆகுபெயர் : மையோலை ஓலையின்கண்ணுள்ள எழுத்துக்கள் விளங்கித் தோன்றும்படி சுவடியில் மைபூசுதலைச் செய்தலின் மையாடல் எனப்பட்டதெனினு மாம். இக் காலத்தார் இச் சடங்கினைச் 'சுவடிதூக்குதல்' என்று வழங்குகின்றனர். இச் சடங்குண்மையை,

" நனந்தலை உலகின்மிக்க நன்னுதன் மகளிர்தங்கள்
மனந்தளை பரியநின்ற மதலைமை யாடுகென்றே."

(சீவக - ௩௬௭)

எனவும்,

" ஐயாண் டெய்தி மையாடி அறிந்தார் கலைகள்."

(சீவக - ௨௭௦௬)

எனவும் பிறசான்றோர் கூறுமாற்றானும் உணர்க.

'மழபுலவர்' என்றது கல்வி தொடங்குமளவிலுள்ள இளமாணவர் களை. மழபுலவர்க்கு மாறெழுதலாவது, இவ் விளமாணவரோடு கூடி அவர்க்கு மாறாக நின்று விளையாடுதல். இதனை,

" இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமில் ஆயமொடு

குளித்து மணற்கொண்ட கல்லா இளமை."

(புறநா - ௨௪௩)

எனவரும் புறத்தானும் உணர்க.

மறையெனலறியா மாயமில் ஆயத்தாராகலின், காமக்குறிப்பின்றியே ஆடுதலைப் 'பொய்யாடல் ஆடும்' என்றார். புணர்ப்பு - ஆயம்: கூட்டம். 'தீஎரிப்பாலும்' என்பதனை, 'எரிதீப்பாலும்' என மாறுக. உம்மை எச்ச

வும்மை. ஆகலான் இங்ஙனம் நீரின்கண் நின்று செய்தவமே யன்றி நெருப்பின்கண்ணும் நின்று செய்தவம் பற்றியோ என விரித்துக் கொள்க. செறிதவம் - புலன்களடங்கச் செய்யும் தவம். செறிதல் - அடங்குதல். 'தவமும் தவமுடையார்க்காகும்' ஆகலின் தவம் முன் பற்றியோ இத்தைந்நீர் ஆடற்றவம் இவர் பெற்றது என்க. உரைத்தி-கூறுக. வையை : விளி.

(பரிமே.) அஅ. கல்வி தொடங்கின அளவாதலின் 'மழபுலவர்' என்றார்.

கூரு - க௦௫ : ஆயிடை..............................மாலைவளாய்

(இ - ள்.) ஆயிடை - இங்ஙனமாக அக் கன்னியர் தைந்நீராடுங்கால், வேய் எழில் வென்று வெறுத்த தோள்-மூங்கிலினது அழகை வென்று மிக்க தோள் அழகினையுடையாள் ஒருத்தி, மா இதழ்கொண்டு ஓர் மடமாதர் நோக்கினள் - நீலமலரைத் தன் காதிற் செருகிக்கொண்டு அயல்நின்ற மடப்பமுடைய ஒருத்தியை நோக்கினள், நோக்கிச் சாய் இழை பிண்டித் தளிர் காதில் தையினள் - அவளது குறிப்பறிந்து அப்பொழுது அம் மாது குழைந்த அசோகினது தளிரைத் தன் செவியிற் செருகிக் கொண்டாள், பாய்குழை நீலம் பகலாகத் தையினள் - அவ் வசோகு சூடினவள் அவ் வொளிபாயும் குழையையுடையாள் அணிந்துள்ள நீலமலர் தான் அணிந்த அசோகந்தளிரின் செம்மையாலே இளவெயில் படர்ந்தாற்போன்று ஆகும்படி சூடாநின்றாள், குழைக்காதின் இவள் கோலச்செவியின் குவளை செரீஇ நான்கு விழிபடைத்தாள் என்று-அதுகண்ட பின்னவள் முன்னவளைச் சுட்டிக் குழையணிந்த காதினையுடைய இவள் தன் செவிகளில் நீலமலரை அணிந்து இப்பொழுது நான்கு விழிகளை உடையவள் ஆயினாள் என்று அவளழகைப் பாராட்டாநிற்ப, ஓர் பெண் - அதுகண்ட மற்றொருத்தி பின்னும் அவளழகிற்கு அழகுசெய்வாளாய், கொற்றவை கோலம்கொண்டு - அவ் வழகி கொற்றவைபோலத் தோன்றவேண்டும் என்று கருத்திற் கொண்டு, நெற்றி விழியா நிறைதிலகம் இட்டாள் - நெற்றிக் கண்போலத் தோன்றும்படி அவள் நெற்றியிலே நிறையும்படி திலகமிட்டாள், பவள வளை செறித்தாள் கண்டு - ஒருத்தி பவளவளையல் அணிந்தாளொருத்தியைக் கண்டு, பச்சைக் குவளைப் பசுந்தண்டு கொண்டு அணிந்தாள் - தன் கையில் மரகதமணிபோன்ற நிறமுடைய குவளைமலரின் பசிய தண்டினை வளையலாகச் செய்து அணிந்துகொண்டாள், கல்லகாரப் பூவால் கண்ணி தொடுத்தாளை - ஒருத்தி குளிரிப்பூவாலே மாலை தொடுத்தாளாக அங்ஙனம் தொடுத்தவளை, நில் என்பாள் போல் - நீ இம் மாலை தொடுத்தலை நிறுத்துக என்று தடை செய்வாள் போன்று மற்றொருத்தி அவள் காணும்படி, மல்லிகா

மாலை நெய்தல் வளாய்த் தொடுத்தாள் - மல்லிகைமாலையின் இடையிடையே நெய்தல்மலரை விரவித் தொடுத்தாள்;

(வி - ம்.) மா - கருமை: நீலமலர்க்கு ஆகுபெயர். வெறுத்த - மிக்க; தோளையுடையாள் என்க. நோக்கி - குறிப்பறிந்து. பிண்டி - அசோகு. தையினாள் - அணிந்தாள்: தையினாள் இரண்டனுள் முன்னையது வினையாலணையும் பெயர், பின்னது வினைமுற்று. குழை - தோடு: இரண்டு காதினும் செருகப்பட்ட நீலமலர்கள் இரண்டு விழிகளாக அவளியற்கை விழிகளிரண்டனோடும் நான்கு விழிகள் படைத்தாள் என்றவாறு. இவள் நான்கு விழிபடைத்தாள் என்றது நலம் பாராட்டியது. அதுகண்ட மற்றோர் பெண் கொற்றவை கோலத்தைக் கருத்திற்கொண்டு நெற்றிவிழியாகத் திலகம் இட்டாள் என்க. குழைக்காதினையுடைய இவள் தன் கோலச்செவியின் குவளை செரீஇ என்க. பவளவளையலினும் சிறந்த மரகத வளையலாகக் குவளைத் தண்டால் வளையல்செய்து அணிந்தாள் என்க.

பச்சை-மரகதமணி. கல்லகாரப்பூ - குளிரிப்பூ. தனது மாலையின் எழில்கண்டு கல்லகாரப் பூத்தொடுப்பாள் புனையும் மாலையை மேலே புனையாமல் நிறுத்திவிடும்படி தனது மாலையைத் தொடுப்பாள் என்பார் 'நில்லிகா என்பாள்போல்' என்றார். இக என்னும் முன்னிலையசை இகா என விகாரப்பட்டு நின்றது. மல்லிகா-மல்லிகை. வளாய் - விரவி.

(பரிமே.) கூ௯. ஆயிடை - அவராடுதற்கண்.

கூகூ. திலகம் செம்மையால் நெருப்பாகிய நெற்றிவிழியாயிற்று.

க00. கொற்றவை கோலம் கொண்டது அவற்றின் மிக்க விழி காட்டுதற்கு.

மேல் அவர் கருத்தும் வேண்டிக்கோடலும் கூறுகின்றாள்.

க0சு - ககச : தண்டு..........................வரை

(இ - ள்.) தண்டு தழுவாத் தாவுநீர் வையையுள் கண்ட பொழுதில் - முன்னர் ஒருவன் வாழைத்தண்டினைத் தழுவிப் பாய்கின்ற நீரையுடைய வையையாற்றின்கண் ஆடினனாக அப்பொழுது அவன் அங்கு ஆயத்துள் நின்றாள் ஒருத்தியைக் கண்டான் அங்ஙனம் கண்டபொழுதிலே, கடும்புனல் கைவாங்க- அவன் நெஞ்சழிதலானே கடிதாக ஓடும் நீர் அவனது கையை வலித்து வாங்காநிற்ப, நெஞ்சம் அவள் வாங்க - அவனது நெஞ்சத்தை அம் மகளின் அழகு வலித்து வாங்காநிற்ப, நீடு புணை வாங்க - இவ்வாற்றானே நீர் அவனது நெடிய புணையைத் தனது போக்கோடு வலித்திழுத்துச் செல்லாநிற்ப, நேர் இழை நின்றுழிக் கண் நிற்ப-நேரிய அணிகலன்களையுடைய அம் மகள் நிற்குநிலையிலே அவன் கண்கள் நிலைபெற்று நிற்பனவாக, நீர் அவன் தாழ்வுழி உய்யாது - நீரோ அவன் விரும்பின அவளிடத்தே அவனைக் கொண்டுசெல்லாமல், தான் வேண்டும்

ஆறு உய்ப்ப - தான் விரும்பிய வழியே அவனை ஈர்த்துச் செல்லாநிற்ப, ஆயத்துடன் நில்லாள் அவன்பின் ஆங்குத் தொடரூஉ - அதுகண்ட அப் பெண் அப் பிரிவினை ஆற்றாதவளாய் ஆயமகளிரோடே நில்லாமல் அவன் பின்னே தொடரா நிற்ப, அத் திறம் தாய் அறியாள் - அவள் அங்ஙனம் செல்லுதற்குக் காரணமான அன்பின் தன்மையை அவள் தாய் அறியாதவளாய், தாங்கித் தனிச்சேறல் - அவளைத் தடுத்து ஏடி நீ தனியே செல்லாதே கொள், ஆயத்தில் கூடு என்று - மீண்டு நின் ஆயமகளிரோடே சென்று கூடுவாயாக என்று கூறி விலக்குதலானே, அரற்றெடுப்ப - அப் பெண் அழும்படி, தாக்கிற்று கார் சேயுற்ற நீர்வரவு - கரையினை மோதி வந்தது கார்ப்பருவத்துச் சிவந்த நிறமுடைய வையைநீரினது வரவு;

(வி - ம்.) தண்டு - வாழைத்தண்டு. தழுவா - தழுவி. நெஞ்சம் அவள்பாற் சென்றமையானே கைசோர என்றவாறு. நீர் அவன் தாழ்வுழி உய்யாது தான் வேண்டுமாறுய்ப்ப என்புழி நகைச்சுவை தோன்றுதலுணர்க. தொடரூஉ என்னும் செய்யூவெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. அத்திறம் - அதற்குக் காரணமான அன்பின் றன்மை. தாங்கி - தடுத்து. சேறல்: முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்று; செல்லாதே. கூடென்று, என்புழி, என்றென்பதனை எனவெனெச்சமாகக் கொள்க. அரற்று - அழுகை. கார் - கார்ப் பருவம். சேயுற்ற - செந்நிறமுடைய.

கக௫ - க௨க: நீதக்காய்..............மன்னுகவென்மாரும்

(இ - ள்.) தைந்நீர் நிறம் தெளிந்தாய் நீ தக்காய் என்மாரும் - அக் கார்ப்பருவத்து நீர் போலன்றித் தைந்நீரே நீ யாம் ஆடும் அளவினையுடையையாய் மேலும் நிறமும் தெளிந்துள்ளனை ஆகலான் நீ தக்காய் என்று பாராட்டுவாரும், காதலர் கழுத்து அமைகை வாங்காப் புல்ல விழுத்தகை பெறுகென வேண்டுதும் என்மாரும் - எம் கணவர் எமது கழுத்தில் அமைத்துத் தழுவிய கைகளை அகற்றாமல் எம்மைத்தழுவா நிற்ப அதனால் யாம் வீறு பெறுக என்று நின்னை வேண்டுகின்றேம் அங்ஙனமாக அருள்க என்று வேண்டிக்கொள்வாரும், வீழ்வார் பூவீழ் அரியில் யாம் புலம்பப் போகாது ஏமம் எய்துக என்மாரும் - எம்மால் விரும்பப்பட்ட தலைவர் மலரூதும் வண்டுபோல யாங்கள் தனித்துவருந்தும்படி எம்மை நீத்துப் போகாமல் எம்மோடிருத்தலானே யாம் இன்பம் எய்தும்படி அருள்வாயாக எனவேண்டிக் கொள்வாரும், கிழவர் கிழவியர் என்னாது ஏழ்காறும் மழவு ஈன்று மல்லல் கேள் மன்னுக என்மாரும் - எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியர் என்று உலகத்தாராற் கூறப்படாமல் எமது ஏழாம் பருவத்திற்குரிய ஆண்டு எய்துமளவும், இப்பருவமே நிலைபெறும்படி

இளமையை இத்தைந்நீர்த்தவம் தர யாம் செல்வத்தோடும் சுற்றத்தோடும் நிலைபெறும்படி அருள்க என்று வேண்டிக் கொள்வாரும் ஆக;

(வி - ம்.) தக்காய் - நற்பண்புடைமையாலே தகுதியுடையாய். என்மார் - என்பார். கழுத்தமைகை - கழுத்தைச் சுற்றிய கை. புல்ல - தழுவ. விழுத்தகை-வீறு; அஃதாவது மற்றொன்றிற்கு இல்லாத அழகு. அரி - வண்டு: மலரோரன்னர் மகளிர், வண்டோரனையர் மைந்தராகலின், 'பூவீழ் அரியின் போகாது' என்றார். புலம்ப - யாம் தனித்து வருந்தும்படி விட்டு என்க. இதனால் எங்கணவர் எம்மை நீத்துப் பரத்தையிற்குப் போகாமலிருக்க என்று வேண்டினராதல் பூவீழ் அரியின் என்னும் உவமையாற் பெற்றாம். வீழ்வார் - விரும்பப் பட்டார் என்க.

கிழவர் கிழவியர் - முதிய பருவத்தினர். ஏழ் - ஏழாம் பருவம்; அஃதாவது பேரிளம்பெண். ஏழு பருவமாவன:- பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம் பெண் என்பன. இங்ஙனம் வேண்டுவார் மங்கைப் பருவமகளிர் ஆகலான், யாம் எப்பொழுதும் இப் பருவத்திற்குரிய இளமையுடையராக என வேண்டினர் என்றவாறு.

மல்லல்கேள் : உம்மைத்தொகை ; மல்லலும் கேளும் என்க. மல்லல் - செல்வம். கேள் - சுற்றம்.

வேண்டுதும், எய்துக, மன்னுக இங்ஙன மாமாறு அருள்க என்றபடியாம்.

மழவு - இளமை ; ஈன்று என்பதனை ஈனவெனத் திரித்துக் கொள்க.

(பரிமே.) ஆக என்பது வருவிக்கப்பட்டது.

இனி ஒருவன் உவந்தவை காட்டல் கூறுகின்றாள்.

கஉஉ - கருரு : கண்டார்க்கு.........................எனவாங்கு

(இ - ள்.) கண்டார்க்கு இக் காரிகை தாக்கணங்கு காண்மின் - இப் பெண் தன்னைக் கண்டவரைத் தீண்டிவருத்தும் தெய்வமாவாள், ஆதலால் அத்தகையவளை நீயிரும் காண்மின், உவள்கண் காமன் பண்டாரம் படை காண்மின் - இவளுடைய கண் மதவேளுடைய கருவூலமும் படைக்கலங்களும் ஆகும் அவற்றின் அழகையும் பார்மின், நீல் நெய் தாழ் கோதையவர் விலக்க நில்லாது - நீல நிறத்தையுடைய தேனெய் தங்கிய மலர்மாலையையுடைய அம் மகளிர் ஓச்சித் தடைசெய்யவும் நில்லாமல், பூ ஊது வண்டினம் யாழ்கொண்ட கொளை கேண்மின் - அம் மாலையில் தேன் ஊதாநின்ற வண்டுகள் யாழை ஒத்தற்குக் காரணமான அவற்றின் பாட்டைக் கேண்மின், கொளைப் பொருள் தெரிதரக் கொளுத்தாமல் - பாடலின்

பொருள் விளங்கும்படி பாடாதிருக்கவேயும், குரல் கொண்ட கிளைக்கு உற்ற உழை கேழ் கெழு சுரும்பின் பாலையிசை ஓர்மின் - குரல்கொண்ட கிளையாகிய இளிக்குக் கிளையாகப் பொருந்தின உழைகுரலான நிறம் பொருந்தின வண்டினது அரும்பாலையிற் றோன்றிய மருதப்பண்ணாகிய இசையைக் கேண்மின், பண்கண்டு திறன் எய்தாப்பண் - விளரிப்பாலையிற் றோன்றும் யாம யாழினை, தாளம்பெற - தாளத்தொடு பொருந்தப்பாடி, கொண்ட இன் இசைத்தாளம்-மேற்கொண்ட அத் தாளத்திற்கும் கொளைச் சீர்க்கும் அப் பண்ணினது சீருக்கும், விரித்து ஆடும் தண் தும்பி இனம் காண்மின்-ஏற்பத் தம் சிறகுகளை விரித்து ஆடாநின்ற குளிர்ந்த இசையினையுடைய தும்பித்திரளினைக் காண்மின், ஒரு தும்பி தான் வீழ் பூ நெரித்தாளை முனைகெழு சின நெஞ்சின்முன் எறிந்து பின்னும் கனைவரல் காய்சினத்து இயல் காண்மின் என-ஒருதும்பி தான் படிந்த மலரினை நெரித்தவளாகிய ஒருத்தியை மாறுபாடு பொருந்தின வெகுளியையுடைய நெஞ்சுடனே முன்னரும் தாக்கிப் பின்னரும் தாக்குதற்கு விரைந்து வருதற்குக் காரணமான அதனுடைய சுடுகின்ற வெகுளியின் இயல்பினைக் காண்மின் என்று இவ்வாறு அங்கே நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மைந்தர் ஒருவருக் கொருவர் சுட்டிக் காட்டாநிற்ப ;

(வி - ம்.) தாக்கணங்கு - தீண்டிவருத்தும் தெய்வம்; கண்டார் வருந்துதல் ஒருதலையாகலின் இவள் கண்டார்க்குத் தாக்கணங்கு என்றான். பண்டாரம் - கருவூலம் ; காமன் மயக்குதற்குரிய அழகெல்லாம் அவள்பால் நிரம்பி இருத்தலின் காமன் செல்வமான அழகு குவிக்கப்பட்ட கருவூலமாக இவளிருக்கின்றாள் என்றான். படை - சேனை; படைக்கலமுமாம். அவை வில் அம்பு முதலியன என்க. சேய்மையினுமின்றி அண்மையினுமின்றி இடைநின்றாளை உவள் என்று சுட்டினான். நீல் - நீலம் என்பது ஈறுகெட்டு நின்றது. நீலநிற நெய் என்றது விளைந்துமுதிர்ந்த தேனினை; இஃது நீலநிற முடைத்தாதலையும் இதனை ஓரி என்று வழங்குதலையும், "நீனிற வோரி பாய்ந் தென" (௨௪ - ௫.) எனவரும் மலைபடுகடாத்தானும் உணர்க. யாழ்கொண்ட - யாழை ஒத்தற்குக் காரணமாகிய என்க. கொளை - பாட்டு. வண்டினது பாடல் பண்ணிற்குரிய பொருளறிந்து பாடப் படாதாகவும் என்பான், 'கொளைப்பொருள் தெரிதரக் கொளுத்தாமல்' என்றான். குரல், இளி, உழை என்பன இசைவகைகள். கிளை இடமுறையால் ஐந்தாவதாகிய நரம்பு, இணைநரம்பு, கிளைநரம்பு, பகைநரம்பு, நட்பு நரம்பு என்று நரம்புகள் நால்வகைப்படும். குரல் தாரம் விளரி இளி உழை என எண்ணுமுறையால் குரல் நரம்பிற்கு உழை நரம்பு ஐந்தாவதாதலின் குரலுக்கு உழை கிளை நரம்பாயிற்று.

இனி, கிளை என்பது ஐந்து நரம்பு என்பாருமுளர்; என்னை "கிளையெனப் படுவ கிளக்குங் காலைக், குரலே இளியே துத்தம் விளரி, கைக்கிளை என ஐந்தாகும்" (சிலப் அ: ௩௩ - ௪ உரை) என்பவாகலின். கேழ் கெழு சுரும்பின் என மாறுக.

பாலையிசை - அரும்பாலையிற் றோன்றிய மருதப்பண் : ஆகுபெயர்.

பண்கண்டு திறன் எய்தாப்பண் என்றது பண்மட்டும் பெற்றுத் திறம் பெறுத பண் என்றவாறு. திறம் - குறைநரம்பு. அஃதாவது விளரிப்பாலையிற் றோன்றும் யாமயாழ். அதனைத் தாளத்தோடு பாடி என்க. தாளத்திற்கும் சீர்க்கும் ஏற்ப விரித்தாடும் என்க. தாளத்திற்கும் சீர்க்கும் உள்ள வேற்றுமை முற்கூறப்பட்டது. தண்தும்பி - குளிர்ந்த இசையையுடைய தும்பி என்க. முனை - மாறுபாடு. கனை வரல் - விரைந்து வருதல்.

(பரிமே.) இங்ஙனம் தைந்நீராடல் கூறி மேல் தலைமகன் கேட்ப வையையை நோக்கிக் கூறுகின்றாள்.

கஙச - கசo : இன்னபண்பின்......................நிறையே

(இ - ள்.) இன் இயல் மாண் தேர்ச்சி இசை பரிபாடல் நறு நீர் வையை - இனிய தன்மையில் மேம்பாடுற்ற தேர்ச்சியினையுடைய இசையோடுகூடிய பரிபாடலாலே வாழ்த்தப் படுகின்ற நறிய நீரினையுடைய வையையே!, மின் இழை நறு நுதல் மகள் மேம்பட்ட கன்னிமை கனியாக் கைக்கிளைக் காமம் - மின்னுகின்ற அணிகலன்களையும் நறிய நுதலையும் உடைய மகட்டன்மை மேம்பட்ட கன்னிமைத்தன்மை முதிராத மகளிரிடத்தே மேற்கூறியவாறு கைக்கிளைக் காமத்தைத் தருகின்ற, முன்முறை செய்தவத்தின் இம்முறை இயைந்தேம் - யாங்கள் முற்பிறப்பிலே செய்த தவத்தாலே இப்பிறப்பிலே நின்பால் இத் தைந்நீராடலாகிய தவத்தைப் பெற்றேம், நயத்தகு நிறை மறுமுறை அமையத்தும் இயைக - அத் தவத்தினை யாவரும் விரும்பத்தக்க நினது நீர்நிறைவின் கண்ணே மறுபிறப்பினும் யாங்கள் பெறுவேமாக ;

(வி - ம்.) மின்னிழை - மின்னுகின்ற அணிகலன். மகள் - மகளாந்தன்மை ; பெண்டன்மை என்க. 'கன்னிமை முதிராக் கைக்கிளைக் காமம்' என்றது, முன்னர்க் காமஞ்சாலா இளமையோராகிய கன்னிமகளிரின் அழகிலீடுபட்டு ஏமஞ்சாலா இடும்பை எய்திச் சொல்லெதிர்பெறுது கண்டார்க்குத் தாக்கணங்கு இக் காரிகை காண்மின் என்பது முதலாக மைந்தர் சொல்லி யின்புற்றமையை என்க. என்னை ?

“காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றுஇரு திறத்தால்
தன்னெடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறுஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே.” (தொல். அகத்-ரு0)

என்பதோத்தாகலின்.

பரிபாடல் இயற்றமிழும் இசைத் தமிழுமாக இருத்தலானே 'இன் இயல் மாண் தேர்ச்சி இசை பரிபாடல்' என்றார்.

முன்முறை - முற்பிறப்பு. இம்முறை - இப்பிறப்பு. மறுமுறை - மறுபிறப்பு. வையை : விளி. நிறை - வெள்ளம்.

(பரிமே.) க௩௫. (மக்கட்டன்மை) மகட்டன்மை.

க௩௬. கன்னிமை முதிராத கைக்கிளைக்காமம்.

க௪0. யாவரும் நயக்கத் தக்க நின்னீர் நிறைவின் கண்ணே.

# பன்னிரண்டாம் பாடல்

## வையை

பொருட் சுருக்கம்

*இப் பாடல் தலைமகன் கேட்பத் தோழி இயற்பழித்தது.*

**க - அ :** *சையமலையில் மழை பெய்தமையால் வையை அம் மலைச்சாரலில் உதிர்ந்த மலர்கள் தன்மேற்பரக்க நாக முதலிய மரங்களை வருத்தி, தகரமுதலியவற்றை ஏந்திவருகின்ற வரவு கடல் பொங்கி வருவதனை ஒத்தது.*

**கூ - உகூ :** *அந் நீர், மதுரை மதிலை மோதும் எனக்கேட்டு அம் மதுரை மக்களுட் சிலர் அணிகலன்களையும், பொற்பூவை யும் அணிந்தனர்; சிலர், அகிற்சாந்தைப் பூசினர்; சிலர் கூந்தலைக் குழலாகமுடிந்தனர்; சிலர் கூந்தலின்கண் வெட்டிவேர் விரவிய மலர்மாலையை அணிந்தனர்; சிலர், நீராடற்கேற்ற ஆடைகளை அணிந்தனர்; சிலர் முத்துமாலைகளை அணிந்தனர்; சிலர் மணநெய் தடவிக்கொண்டனர்; சிலர், தம்மழகைக் கண்ணாடியில் நோக்கினர்; சிலர், தாம்பூலம் மென்றனர்; சிலர், வளையலையும் தொடிகளையும் அணிந்தனர்; சிலர், கட்டு வடத்தையும் கான் மோதிரத்தையும் அணிந்தனர்; சிலர், மாலை அணிந்தனர்; சிலர், மணப்பொருளை மெய்யிலணிந்தனர்; இவ்வாறு ஒப்பனை செய்து கொண்டு, மகளிர்கள் குதிரைகளை யும் பிடியையும் ஏறிச் செலுத்தினர்; ஆடவருட் சிலர் குதிரை களையும் களிறுகளையும் தேர்களையும் ஊர்ந்து சென்றனர்.*

**ஙூ0 - ஙூகூ :** *இவ்வாறாக மக்கள் விரைந்து வந்து குழுமி னர்; நீராடல் சிறப்புறும்படியும், யாவரும் தன்னைப் புகழும்படி யும், வையை நீர் வந்தது; அதனைக் காண்போர் திரள் அதன் கரையை ஒத்தது; அந் நீர் கரைகடந்து பெருகிற்று; முன்னர் வந்தோர் பின்னர் வந்தோர்க்குத் தாம் கண்டவற்றைப் பின் வருமாறு கூறுநின்றனர் :—*

*வையைநீர்த்துறையில் நிரலாக நின்றவர் மொழிகள் ஒன்றையொன் றெவ்வாது ஒரே காலத்தில் எழுந்தன; அவற்றைத் தெளிவாக யாருங் கேட்டிலர்; இவற்றைக் கேட்க முடியாமைக்குக் காரணம், ஆண்டெழுந்த இசைக்கருவிகளின் ஓசையே; ஆயினும், யாம் கேட்டவை சிலவுள; அவற்றைக் கூறுவேம்.*

௬0 - ௫௬: சிலர், "தோழியே ஒருத்தி நாணுடைக் குல மகளாயிருந்தும் தன்கணவன் பரத்தையர்பாற் சென்றான் என்று ஊடியிருந்தவள், இப்பொழுது அவ்வூடலைமறந்து அவனோடு இவ் வெள்ளத்திடையே பிடிமேலேறினாள்; அவள் நாணம் என்னாயிற்று" என்றார். "இங்கே ஒருவன் கூட்டத்திடையே நின்று ஒருத்தியின் கொங்கைகளைக் கூர்ந்து நோக்குகின்றான்; அறிவிலி! ஓட்டை மனமுடையோன்" என்றார் சிலர். "இவள் தன் நெஞ்சை ஒருவழிப்போக்கன்பின் செல்லவிட்டுத் திகைக்கின்றாள்; அன்பு மிகுதியால் நிறையழியுமாகலின், யாம் அன்புறாவேமல்லேம்" என்பர்சிலர். "ஒருவன், ஒரு பெண் பூண்டுள்ள முத்துமாலையின் அழகை நோக்குவான்போல இம் மாலைக்கு இவள் கொங்கை மிகவும் ஏற்புடையன," என்று அவற்றைக் கூர்ந்து நோக்கினான்; அவளும் அதற்கு நாணினாளில்லை என்றார் சிலர். இவ்வாறாகத் தாம் கேட்டவற்றைக் கூறித் தாம் விரும்பியவற்றை அவர்க்குப் பின்வருமாறு காட்டாநின்றனர்.

௫எ - எ௫: "ஒருத்தி, தன் கணவனை மற்றொருத்தி நோக்குதல் கண்டு பொறாது தன் கணவனை மாலையாலே புடைத்துத் தன் முத்துவடத்தாலே அவன் முன்கையை இறுக இறுகக் கட்டினாள்; அவன் தன் பிழை யாதும் காணாது அவளைத் தொழுது யான் செய்த பிழை யாது என்று வினவுகின்றான்; அவனைக் காண்மின். ஒருதலைவன் தன்னோடு ஊடிய ஒருத்தியை ஊடல் தீர்க்கவும் தீராளாய் அவன் மார்பில் அரக்கு நீர் வட்டினை எறிந்தாளாக, அந் நீர் அவன் மார்பிற் குருதிபோலச் சோர, அவன் அவளடியில் வீழ்ந்து வணங்கினான்; அது கண்ட அவள் தான் எறிந்த வட்டாலே புண்பட்டுக் குருதி சோர வீழ்ந்தான் என்று அஞ்சி அவனைத் தழுவிக் கொள்ளா நின்றாள்; இவ்வாறு காதலர் கூடும்படி செய்வதில் இவ் வையைப்புனல் இன்றேயன்றி என்றும் வல்லதாகும் இதனைக் காண்மின்."

எ௬ - ௯உ: மல்லிகை முதலிய எல்லாமலர்களும் மணத்தற்கிடமான தனது இருகரைகளினகத்தே அடங்கிச் சென்று மாலையில் தெளிந்து "அணைகளாலே தேங்கிநின்று வானுலகின் நிழலைத் தன்பாற் காட்டும் இயல்புடைய இவ் வையையாறு, காலைப்பொழுதிலே கலங்கிச் செங்குருதி போன்றிருந்தது காண்மின்; ஒருத்தி தன் காதில் அசோகமலரைச் செருகிக் கொண்டு பூங்கொடி போல அசைந்து தன் கையாலே தனது கூந்தலிற் கண்ணியை அழகுறத் திருத்தினாள்; இவள்

செயலாலே இவள் அருகில் இருப்பவன் இவள் காதலனாக இருப்பன் போலும்; இவர்களைக் காண்மின்."

௯௬ - ௯௮ : இவ்வாறு உவந்தவை காட்டாநிற்ப, மகளிரும், மைந்தரும், நீராடினர்; அவர்தம் அணிகலன்களிலிருந்து சிதறின மணிகள் நீரில் நிறைந்தன; அவர் நீராடிய வார்த்தை ஊரின்கண் மலிந்தது; அவர் அழகு அவ் வார்த்தையினும் மிக்கது; அவ்வழகு மிக்குப் பிறர் அழகோடு மாறு கொண்டது; அவர் மார்பினின்று அழிந்து வீழ்ந்த தகரச் சாந்தாலே மணல் சேறுபட்டது; அவர் ஆடையினின்றும் ஒழுகிய நீராலே கரை கார்காலத்துத் தன்மை பெற்றது.

௯௯ - ௧௦௨ : இந் நீர்விழவினால் வானுலகம் சிறப்பொழிந்தது; வையையே! நின்னால் இம் மதுரையில் வாழுமாந்தர்க்கு இன்பமும், அழகும் பலப்பல பலப்பல உளவாயின; அதனால் இவ்வுலகம் அகன்ற இடமுடையதாயிருந்தும் நினது புகழைத் தன்பால் அடக்கமாட்டாதாயிற்று.

இவ்வகைப்பட்ட இன்பத்தையுடைய நின்னையும் தலைவர் நினைத்திலரே (என்று தோழி தலைவன் கேட்பக் கூறினாள்.)

வளிபொரு மின்னொடு வானிருள் பரப்பி
விளிவின்று கிளையோடு மேன்மலை முற்றித்
தளிபொழி சாரற் றதர்மலர் தாஅய்
ஒளிதிக ழுத்தி உருகெழு நாகம்
அகரு வழைஞெமை ஆரம் இனையத்
தகரமு ஞாழலுந் தாரமுந் தாங்கி
நளிகடன் முன்னி யதுபோலும் தீநீர்
வளிவரல் வையை வரவு ;
வந்து மதுரை மதில்பொரூஉம் வான்மலர் தாஅய்
அந்தண் புனல்வையை யாறெனக் கேட்டு
மின்னவி ரொளியிழை வேயு மோரும்
பொன்னடர்ப் பூம்புனை திருத்து வோரும்
அகில்கெழு சாந்த மாற்றி யாற்றுப்
புகைகெழு சாந்தம் பூசு வோரும்
கார்கொள் கூந்தற் கதுப்பமைப் போரும்
வேர்பிணி பன்மலர் வேயு மோரும்
புட்டகம் பொருந்துவ புனைகு வோரும்
கட்டிய கயிலணி காழ்கொள் வோரும்

வாச நறுநெய் யாடி வான்றுகள்
மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமும்
தேசு மொலியுந் திகழ நோக்கி
வாச மணத்துவர் வாய்க்கொள் வோரும்
இடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர்
கட்டுவடக் கழலினர் மட்டு மாலையர்
ஓசனை கமழும் வாச மேனியர்
மடமா மிசையோர்
பிடிமே லன்னப் பெரும்படை யனையோர்
கடுமா கடவுவோருங் களிறுமேல் கொள்வோரும்
வடிமணி நெடுந்தேர் மாமுள் பாய்க்குநரும்
விரைபு விரைபு மிகைமிகை யீண்டி
ஆட றலைத்தலை சிறப்பக் கூடல்
உரைதர வந்தன்று வையைநீர் வையைக்
கரைதர வந்தன்று காண்பவ ரீட்டம்
நிவந்தது நீத்தங் கரைமேலா நீத்தம்
கவர்ந்தது போலும் காண்பவர் காதல்
முன்றுறை நிறையணி நின்றவர் மொழிமொழி
ஒன்றல பலபல வுடனெழுந் தன்றவை
எல்லாந் தெரியக் கேட்குநர் யாரவை
சில்லா கேள்வி கேட்டன சிலசில
ஒத்த குழலி னொலியெழ முழவிமிழ்
மத்தரி தடாரி தண்ணுமை மருளி
ஒத்தளந்து சீர்தூக்கி யொருவர் பிற்படார்
நித்தந் திகழு நேரிறை முன்கையால்
அத்தக வரிவைய ரளத்தல் காண்மின்
நாணுள்கோ ரேழை நயனில் பரத்தையிற்
றேணல முண்டு துறந்தா னெனவொருத்தி
யாணர் மலிபுன னீத்தத் திரும்பிடி
சேண வெரிநிற் சிறந்தானோ டேறினாள்
நாணுக் குறைவில ணங்கைமற் றென்மரும்
கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்
ஓட்டை மனவ னுரமிலி யென்மரும்
சொரிந்ததூஉஞ் சோற்றதூஉம் பற்று ணிறந்திரிந்தாள்

நெஞ்சத்தை நீத்தா ணெறிசெல்வான் பின்னிறை
அஞ்சிக் கழியாமோ அன்புற்றா லென்மரும்
பூணார நோக்கிப் புணர்முலைபார்த் தானவன்
நாணா ளவனையிந் நாரிகை யென்மரும்
அமிர்தன நோக்கத் தணங்கொருத்தி பார்ப்பக்
கமழ்கோதை கோலாப் புடைத்துத்தன் மார்பில்
இழையினைக் கையாத் திறுகிறுக்கி வாங்கிப்
பிழையினை என்னப் பிழையொன்றுங் காணான்
தொழுது பிழைகேட்குந் தூயவனைக் காண்மின்
பார்த்தா ளொருத்தி நினையெனப் பார்த்தவளைப்
பொய்ச்சூளா ளென்ப தறியேன்யா னென்றிரந்து
மெய்ச்சூ ளுறுவானை மெல்லியல் பொய்ச்சூளென்
றெல்லுவ சொல்லா துரைவழுவச் சொல்ல
உறைத்துஞ் செறுத்து முணர்த்து வானைப்
புல்லா தூடிப் புலந்து நின்றவள்
பூவெழில் வண்ணநீர் பூரித்த வட்டெறிய
வேலெழி லுண்க ணெறிநோக்கம் பட்டபுண்
பாய்குருதி சோரப் பகையின் றுளஞ்சோர
நில்லாது நீங்கி நிலஞ்சோர வல்லாந்து
மல்லா ரகலம் வடுவஞ்சி மம்மர்கூர்ந்
தெல்லாத் துனியு மிறப்பத்தன் காதலன்
நல்லே ரெழிலாகஞ் சேர்வித்த லெஞ்ஞான்றும்
வல்லதால் வையைப் புனல் ;
எனவாங்கு
மல்லிகை மௌவன் மணங்கமழ் சண்பகம்
அல்லி கழுநீ ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக நறவஞ் சுரபுன்னை
எல்லாங் கமழு மிருசார் கரைகலிழத்
தேறித் தெளிந்து செறியிருள் மான்மலைப்
பாறைப் பரப்பிற் பரந்த சிறைநின்று
துறக்கத் தொழிலைத்தன் னீர்நிழற் காட்டும்
காரடு காலைக் கலிழ்செங் குருதித்தே
போரடு தானையான் யாறு ;

சுடுநீர் வினைக்குழையின் ஞாலச் சிவந்த
கடிமலர்ப் பிண்டிதன் காதிற் சேரீஇ
விடுமலர்ப் பூங்கொடி போல நுடங்கி
அடிமே லடிமே லொதுங்கித் தொடிமுன்கைக்
காரிகை யாகத்தன் கண்ணி திருத்தினாள்
நேரிறை முன்கை நல்லவள்கேள் காண்மின்
துகில்சேர் மலர்போல் மணிநீர் நிறைந்தன்று
புனலென மூதூர் மலிந்தன் றவருரை
உரையி னுயர்ந்தன்று கவின் ;
போரேற் றன்று நவின்று தகர
மார்பழி சாந்தின் மணலளறு பட்டன்று
துகில்போசி புனலிற் கரைகா ரேற்றன்று
விசும்புகடி விட்டன்று விழவுப்புன லாங்க
இன்பமுங் கவினு மழுங்கன் மூதூர்
நன்பல நன்பல நன்பல வையை
நின்புகழ் கொள்ளாதிம் மலர்தலை யுலகே.

*என்பது கார்ப்பருவத்து வையைநீர் விழவணியிற் பல்வேறு வகைப்பட்ட இன்பம் கூறி, இவ் வகைப்பட்ட இன்பத்தை யுடைய நின்னையும் நினைத்திலரென வையையை நோக்கித் தலைமகன் கேட்பத் தோழி இயற்பழித்தது.*

**நல்வழுதியார் பாட்டு ; *நந்நாகனார் இசை ;**
**பண்ணுப் பாலையாழ்.**

## உரை

*க - அ* : வளி..................................வையை வரவு

(இ - ள்.) *வளி பொரு வான் மின்னொடு இருள் பரப்பி — காற்றாலே மோதப்பட்ட முகில் மின்னலையும் இருளையும் மாறி மாறிப் பரப்பி, கிளையொடு மலைமேல் முற்றி — தன் சுற்றத் தோடே சென்று சையமலையின்மேற் சென்று அதனைச் சூழ்ந்து கொண்டு, விளிவு இன்று தளிபொழி — இடையறாது மழையைப் பொழியாநிற்ப, வையைத் திநீர் — வையையாற்றின்கண் காட்சிக் கினிய அந் நீர், சாரல் ததர் மலர் தாஅய் — அம் மலைச்சார லின்கண் காற்றாலே உதிர்ந்த மலர்கள் தன்மேலே பரக்க,*

*நன்னாகர் என்றும் காணப்படுகின்றது.

ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம் - ஒளி விளங்குகின்ற படப் பொறியினையும் கண்டார் அஞ்சுதல் பொருந்தியதுமாகிய நாகப் பாம்பினது பெயரையுடைய அச் சாரலிலுள்ள நாகமரமும், அகரு வழை ஞெமை ஆரம் இனைய - அகிலும் சுரபுன்னையும் ஞெமைமரமும் சந்தனமரமும் ஆகிய இவை வருந்தும்படிசெய்து, தகரமும் ஞாழலும் தாரமும் தாங்கி - தகரமரம் ஞாழல்மரம் தேவதாரமரம் என்னும் இவையிற்றைச் சாய்த்து ஏந்திக் கொண்டு, வளி வரல் வரவு-காற்றுப்போல விரைந்து வருகின்ற வருகை, நளிகடல் முன்னியது போலும் - ஒரு பெருங்கடல் பொங்கிவருவதனை ஒக்கும் ;

(வி - ம்.) வையையின்கண் நீர்வரவு கடல் கிளர்ந்து வருவதனை ஒக்கும் என்க. வளி - காற்று. மின்னலையும் இருளையும் மாறிமாறிப் பரப்பி என்க. கிளை என்பதனை மலைக்கேற்றி, பக்க மலைகளோடே சையமலையை முற்றி எனினுமாம். விளிவு இன்று - இடைவிடாது. தளி - மழை ததர் - சிதறிய. தாஅய் - பரவ. நாகம் - ஒருவகை மரம் : பாம்பின் பெயராகலின் அப் பாம்பிற்கியைந்த ஒளிகெழு உத்தி உருகெழு என்னும் அடைமொழிகள் புணர்க்கப்பட்டன. இதுபற்றிப் பரிமேலழகர் தரும் விளக்கத்தைக் கீழே காண்க.

உத்தி - படப்பொறி. உரு - அச்சம். அகரு - அகில். வழை - சுரபுன்னை : ஞெமை தகரம் ஞாழல் என்பன மரப்பெயர்கள். ஆரம் - சந்தனமரம். தாரம் - தேவதாரமரம். இம் மரங்களில் சில வருந்தும்படி சிலவற்றை ஏந்திவந்தது என்பதன்கண் நயமுணர்க. நளிகடல் - செறிந்தகடலுமாம். முன்னியது - வந்தது.

(பரிமே.) ௪. "நெட்டிலை வஞ்சிக்கோ" (பழம்பாடல்) என்புழியும், "புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்கும், கல்லென் பொருநை" (புறநா-௩௮௭) என்புழியும், மரவிசேடத்திற்குள்ளன அதன் பெயர்த் தாய ஊரின்கண்ணும், "திங்கள்வெண் குடையினூர்க்குத் திருவிழுக் குற்ற வண்ணம், பைங்கதிர் மதியிற் றெள்ளிப் பகர்ந்தெடுத்துரைத் தும்" (சீவக - ௧௧௯) என்புழிச் சந்திரற்குள்ளது அவன் பெயர்த்தாய அறிவின்கண்ணும் ஏற்றப்பட்டாற்போல் (பி - ம். அவலூரின்கணு நதிங்க காணொவினகணனு மேறபடடாறபொல) ஒளிதிகழாநின்ற உத்தியினையுடைய அச்சத்தைத் தருகின்ற நாகமெனப் பாம்பிற் குள்ளது அதன் பெயர்த்தாய மரத்தின்கண் ஏற்றப்பட்டது.

அ. வளிபோலும் விரைந்த வரவு.

௯ - ௧அ : **வந்து மதுரை..........காழ்கொள்வோரும்**

(இ.- ள்.) அம் தண் புனல் வையையாறு வான் மலர் தாஅய் வந்து மதுரை மதில் பொரூஉம் எனக்கேட்டு - அழகிய குளிர்ந்த நீரையுடைய வையையாறு மேற்கூறியாங்கு தூயமலர் பரக்கப்பட்டு வந்து மதுரையினது மதிலை மோதாநின்றது என்று கண்டோர் கூறக்கேட்டு, மின் அவிர் ஒளியிழை வேயு மோரும் - அந் நகரமாந்தர், மின்னல்போல விளங்கும் ஒளியை

யுடைய அணிகலன்களை அணிந்துகொள்வோரும், பொன் அடர் பூம்புனை திருத்துவோரும் - பொற்றகட்டாலே செய்த பூவாகிய அணிகலன்களை அணிவோரும், சாந்தம் மாற்றி அகில் புகை கெழு சாந்தம் ஆற்றப் பூசுவோரும் - சந்தனச் சாந்தினை மாற்றி அகிற் புகையினாகிய சாந்தினைத் தம்முடம்பின்கண் மிகுதியாகப் பூசிக்கொள்வோரும், கார்கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும் - முகில்போன்ற தமது கூந்தலினைக் குழலாக முடிவோரும், வேர் பிணி பல் மலர் வேயுமோரும் - அக் கூந்தலிலே வெட்டிவேரும் விலாமிச்சவேரும் ஆகிய இருவேரியோடு தொடுத்த பலமலர் மாலையைச் சூடிக்கொள்வோரும், பொருந்துவ புட்டகம் புனைகுவோரும் - நீராடற்குப் பொருந்துவன வாகிய புடைவைகளை உடுத்திக்கொள்வோரும், கட்டிய கயில் அணி காழ்கொள்வோரும் - கட்டப்பட்ட கோக்குவாயானே அழகுடைத்தாகிய வடங்களைப் பூண்போரும் ;

(வி - ம்.) மின்னவிர் ஒளியிழை - மின்னல்போன்று விளங்கும் ஒளியையுடைய அணிகலன் என்க. வேயுமோரும்-வேய்வாரும். பொன்னடர் - பொற்றகடு. பூம்புனை - பூவாகிய அணிகலன். சாந்தம் - சந்தனச் சாந்தம் : கெழுசாந்தமாற்றி அகில்புகை கெழுசாந்தம் ஆற்றப் பூசுவோரும் என மாறுக. ஆற்ற - மிகுதியாக. கார் - முகில். கதுப்பு - கூந்தல் ஒப்பனையுள் ஒன்று, குழலாக முடிதல் என்க. மகளிர் கூந்தல் : உச்சியின் முடிதல், பக்கத்தில் முடிதல், பின்னிச் செருகல், சுருட்டி முடிதல், சடையாகப் பின்னிவிடுதல் என ஐவகையால் ஒப்பனை செய்யப்படும். இவை நிரலே, முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை எனப்படும். இதனால் கூந்தலை ஐம்பால் என்று வழங்குதலுண்டு.

கயில் - அணிகலனிற் கோக்குவாய் : இதனைக் கொக்குவாய் என்பதுமுண்டு. இக் காலத்தார் 'கொக்கி' என்பதுமது. காழ் - வடம். 'வேயுமோரும் என்பதன்கண் இடைநின்ற உம்மை இசைநிறை' என்பர் பரிமேலழகர். வேய்மோரும் என வரற்பாலது வேயுமோர் என வந்தது ஆகலின் அங்ஙனம் கூறினர்.

பொருந்துவ புட்டகம் என மாறுக. புட்டகம் - புடைவை.

(பரிமே.) கக. வேயுமோர்-அணிவோர் : உம்மை: இசைநிறை.

கரு. கதுப்பு - குழல்.

கஅ. கயில் - கோக்குவாய்.

### ககூ - உள : வாச நறுநெய்...........பெடையனையோர்

(இ - ள்.) கண்ணடி மாசு அற வாச நறுநெய் ஆடி வான் துகள் வயக்கி - கண்ணாடியின் அழுக்கு நீங்க நறுமண நெய்யைப் பூசி வெள்ளிய கற்பொடியிட்டுத் துலக்கி, வண்ணமும் தேசும் ஒளியும் திகழ - அக் கண்ணாடியின்கண் தமது இயற்கையழகும்

செயற்கை அழகும் கலவியாலே பெற்ற ஒளியும் விளங்காநிற்ப அவற்றைக் கண்டு களித்து, வாச மணத்துவர் வாய்க்கொள் வோரும் - பஞ்சவாசத்தோடும் கூட்டி இடித்த பாக்கினை வாயின்கண் இட்டு மெல்வோரும், இடுபுணர் வளையொடு தொடு தோள் வளையர் கட்டுவடக் கழலினர் மட்டு மாலையர் - ஆணி யிடும் இரட்டை வளையலோடே செறிக்கப்படும் தோள்வளையினை உடையாரும் கட்டுவடத்தோடு காலாழியை உடையாரும் தேனை துளிக்கும் மாலையினையுடையாரும் ஆகி, வாசம் ஓசனை கமழும் மேனியர் - நாற்காவததூரம் நறுமணங்கமழும் திரு மேனியையுடைய இம் மகளிர், மடமா மிசையோர் - சிலர் மெல்லிய நடையை உடைய குதிரையின்மீது ஏறுவோரும், அன்னப் பெரும்படை அனையோர் பிடிமேல் - பெரிய பெடை யன்னம்போல்வார் சிலர் பெண்யானையின்மீது ஏறுவோருமாய்;

(வி - ம்.) வாச நறுநெய் - வாசவெண்ணெய். வான்துகள் - வெண்மை நிறமுடைய கற்பொடி. வயக்கி - துலக்கி. வண்ணம் - இயற்கையழகு. தேசு - செயற்கையழகு. ஒளி - தங் காதலரோடு புணர்ந்தமையாலுண்டான புதிய ஒளி.

வாசமணத்துவர் - பஞ்சவாசத்தோடு கூட்டி யிடித்த பாக்கு. பஞ்சவாசமாவன: "தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம் கற்பூரம் சாதியோ டைந்து" என்பன. துவர் - பாக்கு. புணர்வளை - இரட்டை வளையல். தொடுதோள் வளை: வினைத்தொகை. கட்டு வடம் - ஒருவகை அணிகலன். கழல் - காலாழி: கான்மோதிரம். உயரிய மணம் ஒருயோசனை தூரம் கமழவல்லது என்பவாகலின், 'ஓசனை கமழும் மேனியர்' என்றார்.

"கமுகின்மேல் விரிந்த பாளையும் ஓரோசனை யுலாவி நாறுமே" எனவும், 'ஓசனை நறும்புகை கமழ' (சீவக. கக - கூ௫௩) எனவும் பிறரும் கூறுதல் காண்க.

(கக) 'மின்னவி ரொளியிழை வேயுமோரும்' என்பது தொடங்கி, 'அன்னப் பெரும் பெடையனையோர்' (உள) என்னுந்துணையும் கூறப் பட்டன மகளிர் செயல்; மேலே மைந்தர் செயல் கூறுகின்றார்.

(பரிமே.) உ0-உக. வண்ணம்-இயற்கையழகு. தேசு-செயற்கை யழகு. ஒளி - கலவியால் வந்த நிறம்.

உ௩. இடுவளை - ஆணியிடும் வளை.

உள. பிடியை நடையால் வென்று ஏறினரென்பது போதர 'அன்னப்பெடையனையோ' ரென்றார்.

இவ்வளவும் மகளிர; மேலன மைந்தர.

உஅ - ௩க: கடுமா......................சிலசில

(இ - ள்.) கடுமா கடவுவோரும் களிறுமேல் கொள் வோரும் - இனி மைந்தருட் சிலர் விரைந்த நடையினையுடைய

குதிரையினை ஏறிச் செலுத்துவோரும், வேறுசிலர் களிற்று யானை மிசையேறிச் செலுத்துவோரும், வடி மணி நெடும் தேர் மா முள் பாய்க்குநரும் - வேறுசிலர் தெளிந்த ஓசையையுடைய மணிகள் கட்டப்பட்ட நெடிய தேரின்கட் பூட்டிய குதிரைகளை முட்கோலாற் குத்திச் செலுத்துவோரும் ஆகி, விரைபு விரைபு மிகை மிகை ஈண்டி - விரைந்து விரைந்து மிகமிக நெருங்கிச் செல்லா நிற்ப, வையைநீர் ஆடல் தலைத் தலைச்சிறப்ப - வையை நீராடல் இடந்தொறும் இடந்தொறும் சிறக்கும்படியும், கூடல் உரை தர வந்தன்று-மதுரையிலுள்ள மாந்தரெல்லாம் தன்னைப் புகழவும் வாராநின்றது, காண்பவர் ஈட்டம் வையைக் கரை தர வந்தன்று - அதனைக் காணவந்த மக்கட் கூட்டம் வையையின் இருமருங்கும் அதன் கரையை ஒப்ப வந்து குழுவிற்று, நித்தம் கரைமேலா நிவந்தது - அந் நீர்வெள்ளம் கரைக்கு மேலே உயர்ந்தது, காண்பவர் காதல் நீத்தம் கவர்ந்தது போலும் - அது தன்னைக் காணவந்த மக்களின் ஆசைவெள்ளத்தையும் கவர்ந்துகொண்டு பெருகியதுபோலப் பெருகிற்று, துறை முன் நிறை அணிநின்றவர் மொழி மொழி - அப்பொழுது அவ் வையையின்கண் நீராடுந் துறையின்முன் நிறைந்த அணி அணியாக நின்றமாந்தர் மொழிகின்ற மொழிகள், ஒன்றல பல பல உடனெழுந்தன்று - ஒன்றை யொன்று ஒவ்வாது பல பலவாக ஒருகாலத்தெழுந்தன; யார் அவை எல்லாம் தெரியக் கேட்குநர் - யாரே அம்மொழிகளை எல்லாம் பொருள்விளங்கக் கேட்க வல்லார், இல்லா - அவை கேட்டல் கூடா, கேட்டன சிலசில - எம்மாற் கேட்கப்பட்டன ஒருசிலவேயாம்;

(வி - ம்.) கடுமா - கடிய நடையையுடைய குதிரை. வடிமணி - தெளிந்த ஓசையையுடைய மணி. முள் - முட்கோல். பாய்க்குநர் - குத்துவோர். இங்ஙனமாக இருபாலாரும் விரைபு விரைபு ஈண்டி என்க. விரைபு - விரைந்து. ஆடல் - நீராடல். தலைத்தலை - துறையிடந்தொறும் துறையிடந்தொறும். கூடல் - மதுரையிலுள்ளார்: ஆகுபெயர். உரை - புகழ். வந்தன்று - வந்தது. கரைதர - கரைபோல. ஈட்டம் - கூட்டம். நீத்தம் - வெள்ளம். நிவந்தது - உயர்ந்தது; பெருகிற்று. கரைமேலாக எனற்பாலது ஈறுதொக்கு 'கரைமேலா' என நின்றது. காண்பவர் காதல் நீத்தம் எனக்கூட்டுக.

காண்பவர் காதல் நீத்தம் கவர்ந்தது போலும் என்னும் இத்துணை யும் பருவவரவும் வையை நீர் வரவும் கூறிற்று.

இனி, அது காணவந்தாருள் முன்னர் வந்து கண்டோர் பின்னர் வந்தவர்க்கு அங்குத் தாம் கேட்டவை கூறுகின்றவாற்றானும் கண்டவை காட்டுகின்றவாற்றானும் விழவணிஇன்பம் கூறப்படு கின்றது.

முன்றுறை நிறையணி என்பது முதலாகக் கண்டோர் கூற்று. துறைமுன் எனற்பாலது முன்றுறை என முன்பின்னாக மாறி நின்ற

தொகைச்சொல். நிறையணி : வினைத்தொகை. மொழி மொழி : வினைத்தொகை. மொழிகின்ற மொழி என்க. ஒன்றல - பொருந்துகில; ஒன்றேடொன்று பொருந்துகில என்க. உடனெழுந்தன்று - ஒரே காலத் தெழுந்தது. எழுந்தன்று : பன்மை ஒருமை மயக்கம். கேட்குநர் யார் என்னும் வினு ஒருவரும் கேட்டனரில்லை என்பதுபட நின்றது. கில்லா - கூடா; கேட்கக் கூடா என்றபடி.

இனி எல்லாம் கேட்கப்படாமைக்குக் காரணங்காட்டி, கேட்கப் பட்டசில இவை என்று கூறுகின்றுர்.

சO - சச : ஒத்த......................அளத்தல் காண்மின்

(இ - ள்.) ஒருவர் பிற்படார் நித்தம் அத்தகத் திகழும் அரிவையர் - தம்முள் ஒருவர்க்கு ஒருவர் பின்னிடாதவராய்க் கூத்தாடுதற்கண் அழகுதக தம்முள் ஒத்துவிளங்கும் ஆடல் மகளிர், ஒத்த குழலின் ஒலி எழ முழவு மத்தரி தடாரி தண்ணுமை மருளி இமிழ் ஒத்து அளந்து - பொருந்திய வங்கியத்தினின்றும் இசை எழாநிற்ப முழவு மத்தரி தடாரி தண்ணுமை மருளி என்னும் இவ்விசைக் கருவிகளினது ஓசை யையுடைய தாளத்தை அளந்து, நேர் இறை முன்கையால் - தமது நேரிய இறையாகிய முன்கையாலே, சீர்தூக்கி அளத்தல் காண்மின் - அத் தாளத்தை அளத்தலைக் காண்மின் ;

(வி - ம்.) குழல் - வேய்ங்குழல். இமிழ் - ஓசை. மத்தரி முதலி யன இசைக் கருவிகள். ஒத்து - தாளம். நித்தம் - நிருத்தம்; கூத்து. அ - அழகு. இறை - வளையலணிதற்குரிய இடமாகிய கைப்பகுதி; எனவே இறையையுடைய முன்கை எனினுமாம்.

இப்பகுதி மொழிகள் கேட்கப்படாமைக்குக் காரணம் கூறிய படியாம்.

இனிக் கேட்டன கூறுகின்றுர்.

சரு - ருசு : நாணுள் கொல்...............நாரிகை யென்மரும்

(இ - ள்.) தோழி ஒருத்தி நாணுக் குறைவு இலள் - தோழியே கேள் ஒருத்தி நாணுக் குறையில்லாத குலமகளா யிருந்தும், சிறந்தான் நயனில் பரத்தை இல் தோள் நலம் உண்டு துறந்தான் என - தனக்குச் சிறந்தவனுகிய கணவன் நன்மையில்லாத பரத்தையரது இல்லத்திற்குச் சென்று அவரது தோளினது அழகை நுகரும் பொருட்டுத் தன்னை நீத்துப் போயினன் என்று அவனேடு ஊடியிருந்தவள், யாணர் மலி புனல் நீத்தத்து - புதுவருவாயினையுடைய மிக்க நீராகிய வெள்ளத்தின்கண், இரும்பிடி சிறந்தானேடுசேண ஏறினள் - பெரிய பிடியானையின் முதுகின்மேல் நீராட்டு விருப்பத்தாலே அவ்வூடலையும் மறந்து தன் கணவனேடு உயர ஏறினள், மற்று

நங்கை நாணுள் கொல் என்மரும் - அந் நங்கை நாணுடையள் ஆவளோ என்று கூறுவோரும், கோட்டியுள் கொம்பர் குவிமுலை நோக்குவோன் - கூட்டத்தின்கண் நின்றே ஒருவன் பூங்கொம்பு ஒப்பா ளொருத்தியின் குவிந்த முலைகளைக் கூர்ந்து நோக்காநிற்பன், ஒட்டை மனவன் உரம் இலி என்மரும் - அவன் இள நெஞ்சன் திண்மையில்லாதவன் என்று இகழ்வாரும், சொரிந்ததூஉம் சொற்றதூஉம் பற்றுள் - இவள் இவனைப் பண்டு மலர் முதலி யன கையுறையாகக் கொணர்ந்து பொழிந்ததும் காதன்மொழி பேசியதுமாகிய செயல்களானே அறிந்தாளில்லை அங்ஙனமிருந் தும், நெறிசெல்வான் பின் - வழிமிசைப் போகின்ற ஏதிலான் ஒருவன் பின்னே, நெஞ்சத்தை நீத்தாள் - தனது நெஞ்சைப் போக்கி, நிறந்திரிந்தாள் - தனது மேனி பசலைபூப்ப நின்றாள், அன்புற்றால் - யாம் காதல் கொண்டவிடத்தும், நிறை அஞ்சி - இங்ஙனம் நிறையழிதற்கு அஞ்சி, கழியாமோ - அம் மிகுதி யினைக் கழிக்கக் கடவேமல்லமோ, என்மரும் - என்றுகூறு வோரும், உவன் இந் நாரிகை பூணாரம் நோக்கிப் புணர் முலை பார்த்தான் - இவன் இம் மடந்தை பூண்டுள்ள முத்தாரத்தின் அழகினை நோக்குவான் போல இவளுடைய ஒன்றனோடு ஒன்று நெருங்கிய முலைகளைப் பார்த்தனன், அவனை நாணுள் என்மரும் - அவன் அங்ஙனம் பார்த்தற்கு இவளும் நாணுகின்றிலள் என்பாருமாயினர் ;

(வி - ம்.) நாணுள்கொல் - நாணுடையள் ஆவளோ. நயனில் - நன்மையில்லாத. யாணர் - புதுவருவாய். யாற்றிற்குப்புதுவருவா யாவது மேலும் மேலும் நீர்வந்து பெருகுதல். சேண - உயர. கணவ னிற்சிறந்த கேளிரின்மையால் கணவனைச் சிறந்தான் என்றார். வெரிந் - முதுகு. நாணுக் குறைவிலள் - நாணுடைமையிற் குறை வில்லாதாள் ; குலமகள் என்றவாறு. நங்கை என்றது, இகழ்ச்சிக் குறிப்பு. கோட்டி - கூட்டம்; வடசொல். கொம்பர் - பூங்கொம்பு; ஆகுபெயர். அடங்காமல் பொறிவழிப் போதலால், ஒட்டைமனவன் என்றார். மனவன் - மனத்தையுடையான். உரம் - திண்மை.

சொறிந்ததூஉம் என்னும் பாடத்திற்கு எவ்வாற்றானும் பொருள் விளங்கவில்லை. ஆகலின் சொரிந்ததூஉம் எனத்திருத்தப்பட்டது. சொரிதல் - மலர்முதலியன கொணர்ந்து சொரிதல். சொற்றல் - சொல்லுதல். முன்னர் எவ்வாற்றானும் அறியப்படாத புதுவோனாகிய நெறிச்செல்வான் பின் நெஞ்சம் போக்கிநிறந்திரிந்தாள் என்று வியந்த படியாம். யாமாயின் இங்ஙனம் நிறையழிதற்கு அஞ்சிக்கழிப்பேம் என்க.

பூணாரம் - பூணுகின்ற முத்துமாலை. முத்துமாலையின் அழகைக் காண்பது தலைக்கீடாக புணர்முலையை உவன் பார்த்தான்; அங்ஙனம் பார்த்தற்கு இவளும் நாணுகின்றிலள். நாரிகை - பெண்.

(பரிமே.) என்று கேட்டன கூறி, மேல் உவந்தவை காட்டல் கூறுகின்றார்.

ருள - ௬௬ : அமிர்தன......................உணர்த்துவானை

(இ - ள்.) அமிர்து அன நோக்கத்து அணங்கு ஒருத்தி பார்ப்ப - ஒருத்தி தன்கணவனை அமிழ்தத்தை ஒத்த இனிய பார்வையாலே மற்றொருத்தி கூர்ந்து நோக்காநிற்ப அதனைப் பொறாதே, கமழ்கோதை கோலாப் புடைத்து - தனது மார்பின் கட் கிடந்த மணங்கமழு மலர்மாலையை வாங்கி அதனையே கோலாகக் கொண்டு தன் கணவனைப் புடைத்து, தன் மார்பில் இழையினைவாங்கிக் கை யாத்து-தன்மார்பில் வடத்தை வாங்கி அவனது முன்கைகளைச் சேர்த்துக் கட்டி, இறுக இறுக்கி - இறுக இறுக்கிப் பிடித்துக் கொண்டு, பிழையினை என்ன - ஏடா நீ குற்றமுடையை என்று கூறுநிற்ப, பிழை ஒன்றுங் காணான் - அங்ஙனம் அவள் கடிதற்குக் காரணமான குற்றம் ஒன்றும் தன்பாற் காணமாட்டாத அவன், தொழுது - அவளை வணங்கி, பிழை கேட்கும் - நல்லாய் யான் புரிந்த குற்றம் யாது என்று அவளையே வினவாநின்ற, தூயவனைக் காண்மின் - பிழையில்லாதவனைக் காண்மின், நினை ஒருத்தி பார்த்தாள் பொய்ச் சூளாள் என - ஏடா நின்னை ஒருத்தி நோக்கினள் அங்ஙனம் நோக்கியவள் நின்னால் சூள் பொய்க்கப் பட்டவளே ஆதல் வேண்டும் என்று அவள் பிழையிது என எடுத்துக் காட்ட, பார்த்தவளை பொய்ச்சூளாள் என்பது யான் அறியேன் - நல்லாய் என்னைப் பார்த்தவளையாதல் அவள் சூள் பொய்க்கப் பட்டவள் என்பது பற்றியாதல் யான் ஏதும் அறியேன் என்று கூறி, இரந்து மெய்ச்சூள் உறுவானை - மேலும் அவளைப் பணிமொழி கூறி இரந்து மெய்யாகவே ஆணையிடுகின்றவனை, மெல்லியல் ஒல்லுவ சொல்லாது பொய்ச்சூள் என்று உரைவழுவச் சொல்ல - அதுகேட்ட மெல்லிய சாயலுடைய அம்மடந்தை அவன் பொறுப்பனவாகிய மொழிகளைக் கூறுமல் ஏடா நீ இப்பொழுது செய்யும் சூள்தான் என்னை? இதுவும் பொய்ச்சூளே என்று தனது மொழி குற்றமுடைத்தாகக் கூறுநிற்ப, உறைத்தும் செறுத்தும் உணர்த்துவானை - அதுகேட்ட அவன் அச்சூளின்கண் மேலும் மிக்கும் வெகுண்டும் அவளது ஊடலைப் போக்க முயன்றுனாக;

(வி - ம்.) அமிர்தன - அமிழ்தம்போன்ற. இது பண்புபற்றி வந்த உவமை. அணங்கு - தெய்வமகள்: ஆகுபெயர். கோலாக எனற் பாலது ஈறு தொக்கது. இழை - அணிகலன். யாத்து - கட்டி: இறுகிறுக்கி-மேலும் மேலும் இறுக்கி என்றவாறு. குற்றமிழைப்போரை அடித்துக் கட்டிவைத்துக் குற்றங்கூறலும் கேட்டலும் உலகியல். பிழையினை - பிழையினை உடையாய். 'நெஞ்சறிந்ததின்மையான் தூயவன்' என்ருர். பொய்ச்சூளாள் - பொய்த்த சூளினையுடையாள்: நின்னுல் சூள் பொய்க்கப்பட்டாள் என்க. பார்த்தவளையும் பொய்ச்

சூளாள் என்பதுபற்றியும் யான் அறியேன் என்க. ஒல்லுவ - அவனாற் பொறுக்கத்தகுவன.

தூயவனாகலின் பொருதவனாய், மீண்டும் சூளின்கண் மிக்கு என்பார் 'உறைத்தும்' என்றார். உறைத்தல்: அதன்கண் ஊன்றிநிற்றல். செறுத்து - செய்யாதன சொல்லுதலிற் சினந்து என்க.

(பரிமே.) ௬௧. தூயவனை - பிழையில்லாதானை.

௬௨. என - என்று அவள் சொல்ல.

௬௩. ஒல்லுவ - பொறுப்பன.

௬௬. உறைத்தும் - அச் சூளின்கண் மிக்கும்.

௬எ - எ௬ : புல்லாது..................என வாங்கு

(இ - ள்.) புல்லாது ஊடிப் புலந்து நின்றவள் - இவ்வாறு ஊடல் தீர்த்துழியும் கூடாமல் ஊடிநின்றவள் அந்நிலைமையினின்றும் புலவி நிலைமைக்கண் நின்று, பூ எழில் வண்ண நீர் பூரித்த வட்டு எறிய - பூவினது மணத்தையும் அழகையுமுடைய அரக்கு நீரால் நிறைக்கப்பட்ட வட்டினை அவன் மார்பில் எறிய, எழில் உண்கண் நோக்கம் எறிவேல் பட்ட புண் பாய் குருதிசோர - அவ்வரக்குநீர் அவளுடைய அழகிய மையுண்ட கண்ணாகிய எறிகின்ற வேல்பட்ட புண்ணினின்றும் குருதி சொரிவது போன்று சொரியாநிற்ப, பகையின்று உளம்சோர நில்லாது அல்லாந்து நீங்கி நிலம் சோர - அவன் அந்நிலைமையினைப் பொருளாய் அவள்பாற் பகைமை இலனாகித் தன் நெஞ்சம் நெகிழ்தலானே அவள் முன்னிலை நில்லாது அலமந்து அவ்விடத்தினின்று நீங்கி நிலத்தின்கண் வீழ்ந்து வணங்க, மல்லார் அகலம் வடுஅஞ்சி மம்மர் கூர்ந்து - வணங்குதற் பொருட்டு அங்ஙனம் நிலத்தில் வீழ்ந்தவனைக்கண்ட அவள் அவனது மற்போர்க்குப் பொருந்திய மார்பின்கண் தான் எறிந்த வட்டாலே உண்டான புண்ணாலே இங்ஙனம் நிலத்தில் வீழ்ந்தானெனக் கருதி அஞ்சி மயங்கி, எல்லாத் துனியும் இறப்ப - முன்புள்ள எல்லாப் புலவியும் நீங்காநிற்ப, நல் ஏர் எழில் ஆகம் சேர்வித்தல்-தன் காதலனாகிய அவனுடைய நல்ல அழகினையுடைய மார்பினைத் தழுவிக்கொண்டாள்; இங்ஙனம் புலந்தாரைப் புலவி தீர்த்துக் கூடச் செய்தலின்கண், வையைப் புனல் என்ஞான்றும் வல்லது என - இவ் வையைநீர் இன்றேயன்றி எக்காலத்தும் வன்மையுடையது ஆகும் இந்நிகழ்ச்சியினையும் காண்மின் என்று காட்டா நிற்ப ;

(வி - ம்.) ஊடல் முதிர்ந்த நிலைமைக்கண் துனி எனப்படும். ஊடிப் பின்னர்ப் புலந்து நின்றவள் என்க. வண்ணநீர் - அரக்காலே நிறமூட்டப்பட்ட நீர் என்க. ஊடல் முதிர்ந்து புலவிநிலை எய்தி

நின்றாளாகலின், வட்டின்கண் நீரையெறியாது வட்டினையே எறிந்தாள் என்க. பூரித்தல் - நிறைத்தல்: நோக்க வேல்பட்ட புண் என மாறுக. நோக்கமாகிய வேல்பட்ட புண். குருதிபோலச் சோர என உவமச் சொல் வருவித் தோதுக. பகையின்று - பகைத்தல் இன்றி: இன்றி என்னும் வினையெஞ்சிகரம் உகரமாயிற்று. சினந்து நிற்றலால் எதிர் நிற்பின் அவள் சினம் பெருகும் என்று எதிர்நில்லாது நீங்கி வணங்கினன் என்க.

வணங்கற்கு நிலத்தில் வீழ்ந்தவனை ஏறுண்டு வீழ்ந்தான் எனக் கருதி அஞ்சி மயங்கிப் புலவி யொழிய மார்பஞ் சேர்ந்தாள் என்க. மம்மர் - மயக்கம். ஏர் - அழகு. ஆகம் - மார்பு: உடம்புமாம். எஞ்ஞான்றும் - எப்பொழுதும்.

சேர்ந்தாள் என்பது வருவித்துக் கூறப்பட்டது.

(பரிமே.) நீரை எறிய வட்டை எறிந்தது, ஊடி, விளையாட்டு ஒழிந்தமையின்.

(ஊடலுண்டாகிய காரணத்தால் மேலே விளையாட்டும் ஒழிந்தமையால் வட்டினையே எறிந்துவிட்டாள் என்பதாம்.)

எசு. என - என்று காட்ட: ஆங்கு: அசை.

எஎ - அசு: மல்லிகை..........................................யாறு

(இ - ள்.) (அசு) போரடு தானையான் யாறு - போரின்கண் பகைவரை வெல்லும் படையினையுடைய பாண்டியனுடைய இவ் வையையாறு, மல்லிகை மௌவல் மணம் கமழ் சண்பகம் அல்லி கழுநீர் அரவிந்தம் ஆம்பல் குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி - மல்லிகைமலரும் முல்லைமலரும் நறுமணம் கமழாநின்ற சண்பகமலரும் வெள்ளல்லிமலரும் செங்கழுநீர்மலரும் தாமரை மலரும் அரக்காம்பல்மலரும் கஞ்சங்குல்லைமலரும் மகிழமலரும் குருக்கத்திமலரும் பாதிரிமலரும், நல் இணர் நாகம் நறவம் சுரபுன்னை எல்லாம் கமழும்-நன்றாகிய பூங்கொத்துக்களையுடைய நாகமரத்தினது மலரும் நறவமலரும் சுரபுன்னை மலரும் ஆகிய இவ் வெல்லாமலரும் கமழ்தற்கிடமான, இருசார் கரை கலிழ - இருமருங்கிலுள்ள கரையை மோதிக் கலங்கிப் பின்னர், பாறைப் பரப்பின் பரந்த சிறை நின்று - பாறைக்கல்லினையுடைய நிலம் போன்று அசையாத பரந்த கல்லணையானே தடையுண்டு தேங்கி நின்று, இருள் செறி மால் மாலை - இருள் செறிதற்கிடமான மயக்கத்தையுடைய மாலைப்பொழுதிலே, தேறித் தெளிந்து - மிகத்தெளிந்து, துறக்கத் தொழிலைத் தன் நீர்நிழல் காட்டும் - வானுலகத்தே நிகழும் தொழிலைத் தனது அந் நீர்நிழலிலே காட்டாநிற்கும், கார் அடு காலை - அவ் விருளை ஓட்டும் காலைப் பொழுதிலே, கலிழ் செங்குருதித்தே - கலங்கிய சிவந்த குருதியினது தன்மையுடையதாகும்;

(வி - ம்.) தானையான் யாறு இருசார் கரையை மோதிக் கலங்கிப் பின்னர் அணை நின்று தெளிந்து மாலையில் தன்னிழலிற் றுறக்கத் தொழிலைக் காட்டும்; காலைப்பொழுதிலோ குருதியின் தன்மைத்தாம் என்க.

மல்லிகை முதலாகச் சுரபுன்னை ஈறுக வுள்ளன எல்லாம் அவற்றின் மலர்க்கு ஆகுபெயர்கள். மௌவல் - முல்லை: காட்டு மல்லிகையுமாம். மணங்கமழ் சண்பகம், நல்லிணர் நாகம் என்பன தம் பொருட்கேற்ற இயற்கை யடையடுத்து நின்றன. அல்லி, வெள்ளாம்பலும்; ஆம்பல், அரக்காம்பலுமாகக் கொள்க. கழுநீர் - செங்கழுநீர். வகுளம்-மகிழம்பூ: நீர்ப்பூ நிலப்பூ கோட்டுப்பூ கொடிப்பூ என்னும் நால்வகைப்பூவும் கமழும் கரை என்பார், 'எல்லாம் கமழும்' என்றார். நீர்க்கரையாதலின் நீர்ப்பூக்களும் கமழ்ந்தன என்க.

'கலிழ' என்னும் செயவெனெச்சத்தைக் கலிழ்ந்து எனச் செய்தெனெச்சமாகக் கொள்க.

தேறித் தெளிந்து - மிகத் தெளிந்து என்க. துறக்கத் தொழில் - வானுலகின்கண் நிகழும் நிகழ்ச்சிகள். கார் - இருள்: ஆகுபெயர். கலிழ் - கலங்கிய.

காலைப்பொழுதிற் கலங்குதற்குக் காரணம் நீராடுதல் என்க. இதனால் நீராடன் மிகுதி கூறியவாறு.

(பரிமே.) அக. கரையென்றது கரையணைந்த நீரோட்டத்தை.

இங்ஙனம் புனலாட.........................

அஎ - கூஉ : சுடுநீர்..........................காண்மின்

(இ - ள்.) (கூஉ) நேர் இறை முன்கை நல்லவள் - நேரிய இறையினையுடைய முன்கையினையுடைய இந் நங்கை, சிவந்த பிண்டிக் கடி மலர் - அசோகினது சிவந்த புதுமலரை, சுடு நீர் வினைக் குழையின் ஞால - தீயிலிட்டுச் சுட்டமையானே ஒளிமிக்க நீர்மையினையுடைய தொழிற் சிறப்புடைய குழைபோலத் தூங்கும்படியாக, தன் காதிற் செரீஇ - தனது செவியிலே செருகிக்கொண்டு, விடுமலர்ப் பூங்கொடிபோல நுடங்கி - கட்டலர்ந்த மலரையுடைய பூங்கொடிபோல ஒல்கி, அடிமேல் அடியொதுங்கி - ஒருவன் இட்டுச்சென்ற அடிச்சுவட்டின்மேல் அடியிட்டு நடந்துசென்றவள் ஒருபால் ஒதுங்கி, தொடி முன்கை தன்கண்ணி காரிகையாகத் திருத்தினாள்-வளையலணிந்த தனது முன்கையாலே தன் தலையிற் சூடியுள்ள மாலையை அழகுறத் திருத்தினாள், கேள் காண்மின் - ஆதலால் அவன் அவளுடைய காதலனே ஆதல் வேண்டும் இக் காட்சியினையும் காணுமின் என இவ்வாறு உவந்தவை காட்டாநின்றனர்;

(வி - ம்.) சுடு நீர் - தீயிலிட்டுச் சுட்ட நீர்மை என்க; சுடச்சுட ஒளிவிடும் பொன் என்பவாகலின், நன்கு ஒளிவிடும் பொன்குழைபோல

என்க. சிவந்த பிண்டிக் கடிமலர் என மாறுக. கடிமலர் - புதுமலர்; அன்றலர்ந்தமலர். "கடியென் கிளவி, வரைவே, கூர்மை, காப்பே புதுமை விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே அச்சம் முன்தேற்று ஆயீரைந்தும், மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே" (உரி-அகு.) என்பவாகலின், கடிமலர் அப்பொருட்டாதலறிக. ஞாலதூங்க. செரீஇ - செருகி. விடுமலர் - கட்டுவிட்ட மலர்; அஃதாவது மலர்ந்த மலர். அடிமேலடிமேல் ஒதுங்குதல் - அடிமேலடியிட்டு நடந்து சேறல்.

ஒருத்தி ஒருவன் அடிமேலடியிட்டுச் செல்கின்றவள் அவன் தனது கொங்கை எழிலைக் காணும் பொருட்டு ஒருபால் ஒதுங்கித் தனது கைகளை உயரத் தூக்கித் தலைமாலையைத் திருத்தாநின்றாள்; இங்ஙனம் செய்தலால் அவள் முன்செல்பவன் அவள் காதலனே ஆதல்வேண்டும் என்றவாறு. கேள் - காதலன்.

மேலே வையையைப் புகழ்ந்து வாழ்த்தி முடிக்கின்றாள்.

(பரிமே.) கூஉ. இவள் செய்த இக்குறிப்புத் தொழிலால், இவன் இந் நல்லவள் கொழுநனாயிருந்தான் இதனைக் காண்மின்.

நெஞ்சம் பிணிப்பதோர் அவயவம் காண்டல் குறித்து அவள் செய்தலால் இது குறிப்புத் தொழிலாயிற்று.

(நெஞ்சம் பிணிப்பதோர் அவயவம் என்றது, கொங்கையை. கைகளை உயரத்தூக்கிக் கண்ணியைத் திருத்துங்கால் அவ்வவயவ எழில் நன்கு தோன்றுமாதலின், அங்ஙனம் செய்தாள் என்பது கருத்து.)

கூ௩ - கூகூ : துகில்சேர்....................விழவுப்புனலாங்க

(இ - ள்.) நீர்மணி துகில் சேர் மலர்போல் புனல் நிறைந்தன்று - நீராடிய மகளிர் அணிகலன்களினின்றும் உதிர்ந்த நீரோட்டத்தையுடைய மணிகள் அவர் ஆடையின்கண் இயற்றப்பட்ட பூத்தொழில்போல நிறைந்து காணப்பட்டன, என அவர் உரை மூதூர் மலிந்தன்று - என்று இவ்வாறு நீராடியோர் பலப்பல மொழிந்த வார்த்தை பழைதாகிய மதுரையின் கண் சென்று மிக்கது, உரையினும் கவின் உயர்ந்தன்று-நீராடியவர் வார்த்தையினுங் காட்டில் அவர் நீராட்டத்தானே எய்திய அழகு மிக்கது, நவின்று போர் ஏற்றன்று - அங்ஙனம் மிக்கு அவ்வழகு பிறர் அழகோடு மாறுபாட்டினைக் கொண்டது, மணல் மார்பு அழி தகரச்சாந்தின் அளறு பட்டன்று - நீராடிய மகளிரின் மார்பினின்றும் வழிந்து வீழ்ந்த தகரச் சாந்தினாலே வையையாற்றின் மணல் சேறாந்தன்மை பட்டது, கரைதுகில் பொசி புனலில் கார் ஏற்றன்று - அவ்வையையாற்றின் கரைகள் நீராடிக் கரை சேர்ந்தாருடைய ஆடையினின்றும் ஒழுகும் நீராலே கார்காலத்துத் தன்மை பெற்றது, புனல் விழவு விசும்பு கடிவிட்டன்று - இந் நீராட்டு விழவு இம் மதுரையில் நடத்தலாலே வானுலகம் சிறப்பொழிந்தது ;

(வி - ம்.) நீர் மணி - நீரோட்டமுடைய மணி என்க. மணி நிறைந்தன்று என இவ்வாறு பலப்பல கூறும் அவருரை என்க. மலிந்தன்று - மலிந்தது : மிக்கது. கவின் - அழகு ; நீராடலாற் பெற்ற புத்தொளியாகிய அழகு என்க. நீராடாதார் கவினிலும் இக் கவின் வேறுகச் சிறத்தலின், 'போரேற்றன்று' என்றார். போரேற்றன்று - மாறுபட்டது

உரைமிக்கது ; அதனினும் கவின் மிக்கது என்க. அளறு - சேறு. பட்டன்று - பட்டது. உயர்ந்தன்று - உயர்ந்தது. பொசி புனல் - ஒழுகும் நீர். கடி - சிறப்பு. விசும்பு - வானுலகம் ; வானுலகத்தினுங் காட்டில் இந் நீர் விழவினால் மதுரை சிறத்தலின், இவ் விழாப் பெறுத வானுலகம் சிறப்பிலதாயிற்று என்க. ஆங்க : அசை.

(பரிமே.) இவ்வின்பங்கட் கெல்லாம் காரணமாகிய வையையை வாழ்த்தி முடிக்கின்றாள்.

௧00 - ௧0௨ : இன்பமும்....................மலர்தலையுலகே

(இ - ள்.) வையை அழுங்கல் மூதூர் - வையையே ! இவ் வாரவாரமுடைய பழைதாகிய மதுரையில் வாழுமக்களுக்கு, இன்பமும் கவினும் நன்பல நன்பல நன்பல - நின்னால் இன்பமும் அழகும் பல நல்லன பல நல்லன பல நல்லன உளவாயின, இம் மலர்தலை உலகு நின்புகழ் கொள்ளாது - ஆதலால் இம் மண்ணுலகம் அகன்ற இடமுடைத்தாயினும் நின்புகழ் அதனினும் சால விரிந்ததாகலின், நினது புகழைத் தன்கண் அடக்கமாட்டாது.

(வி - ம்.) அழுங்கல் - ஆரவாரம். மூதூர் - பழைதாகிய ஊர், என்றது மதுரையை. வையை : அண்மைவிளி.

உலகம் அகலிட முடைத்தாயினும் என்பார் 'மலர்தலை உலகு' என்றார்.

(பரிமே.) ௧0௧. அடுக்கு பன்மைபற்றி வந்தது.

---

## பதின்மூன்றாம் பாடல்

# திருமால்

பொருட் சுருக்கம் :

க - கரு : பொன்னுடையையும், திருமுடியையும், காத்தற்றொழிலையும் உடைய திருமாலே! ஆழிப்படையையும் சங்கையும் ஏந்திய நின் திருக்கைகளுடனே மார்பினையும் தொழுபவர்க்கு நினது வைகுண்டமும் உரியதாம்.

கசு - உரு : அண்ணலே! ஐம்புலன்களும், அவற்றை அறிகின்ற பொறிகளும், ஐம்பெரும்பூதங்களும் நீயே! மூலப்பகுதியும், அறமும், காலமும், ஐம்பெரும் பூதங்களும் கூடிய மூவேழுலகத்தும் வாழும் உயிர்கள் எல்லாம் நின்னிடத்தனவேயாம்.

உசு - ருஎ : திருப்பாற்கடலிலே அறிதுயில் கொண்டவனும், பகைவர் மார்பை உழும் கலப்பைப் படையேந்தியவனும், நிலத்தை நீரினின்று எடுத்த ஆதிவராகமும், பிரமனும், உருத்திரனும், திருமாலுமாகிய மூன்று கடவுளராகப் பிரிந்தவனும் ஆகிய ஒருவன் நீ.

ருஅ - சரு : நினது திருமேனி, முகில் காயாம்பூ கடல் இருள் நீலமணி என்னும் இவ்வைந்தனையும் ஒக்கும்; நினது அருண்மொழி, வலம்புரி முழக்கத்தை ஒக்கும்; நினது செறல் மொழி முகில் முழக்கத்தையும் இடி முழக்கத்தையும் ஒக்கும்.

சசு - சகூ : நீ தோன்றியதும் தோன்றுகின்றதும் தோன்றுவதுமாகிய முக்காலக் கூறுபாட்டையுங் கடந்து, அக்காலங்கள் தாமே பொருந்திய திருவடி நீழலினையுடையை; நின்னை வழிபடுவோர் இருவினையும் இலராவர்; நீ காத்தற்றொழில் ஒன்றிலேயே விருப்பமுடைய திருவுளமுடையை.

ருo - ருஎ : நின் திருவடியும் கைகளும் கண்களும் திருவாயும் தாமரை மலரை ஒக்கும்; நினது தோள்வளையும் திருவுந்தியும் வாகுவலயமும் திருவடிகளும் தோளும் பிடரியும் பெரியன; நின் கேள்வியும் அறிவும் அறமும் நுண்ணியன; நீ வேள்வியிடத்து விருப்பமும் மறமும் உடையை.

*ருஅ - கூஅ : சிவந்த கண்ணினையும் ஆழிப் படையினையும் உடைய செல்வனே! துழாய் மாலையணிந்த திருமார்பினை உடையோனே! நீ அத் தன்மையுடையை என நினைந்து நினைந்து முற்பிறப்புக்களிலே யாம் செய்த தவப்பயனால் இப்பிறப் பின்கண் நின் திருவடியைத் தொழுதிறைஞ்சி வாழ்த்தும் பேறுபெற்றேம்; யாம் மேலும் மேலும் ஆசைப்படுகின்ற பொருளும் இவ்வாறு நினது திருவடியைத் தொழுதிறைஞ்சி வாழ்த்துவதேயாம்.*

மணிவரை யூர்ந்த மங்குன் ஞாயிற்
றணிவனப் பமைந்த பூந்துகில் புனைமுடி
இறுவரை யிழிதரும் பொன்மணி யருவியின்
நிறனொடு மாறுந்தார்ப் புள்ளுப்பொறி புனைகொடி
விண்ணளி கொண்ட வியன்மதி யணிகொளத்
தண்ணளி கொண்ட அணங்குடை நேமிமால்
பருவம் வாய்த்தலி னிருவிசும் பணிந்த
இருவேறு மண்டிலத் திலக்கம் போல
நேமியும் வளையு மேந்திய கையாற்
கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூண்
அருவி யுருவி னாரமோ டணிந்தநின்
திருவரை யகலம் தொழுவோர்க்
குரிதமர் துறக்கமு முரிமைநன் குடைத்து
சுவைமை இசைமை தோற்ற நாற்றமு
றவையு நீயே யடுபோ ரண்ணல்
அவைஅவை கொள்ளுங் கருவியு நீயே
முந்தியாங் கூறிய ஐந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பு நீயே
இரண்டி னுணரும் வளியு நீயே
மூன்றி னுணரும் தீயு நீயே
நான்கி னுணரு நீரு நீயே
ஐந்துடன் முற்றிய நிலனு நீயே
அதனால், நின்மருங் கின்று மூவே ழுலகமும்
மூலமும் அறனு முதன்மையி னிகந்த
காலமும் விசும்புங் காற்றொடு கனலும்
தன்னுரு வுறழும் பாற்கட னுப்பண்
மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த

கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத்
துளவஞ் சூடிய அறிதுயி லோனும்
மறமிகு மலியொலி மாறடு தானையாற்
றிறனிகந்து வரூஉ மவருயி ரகற்றும்
விறன்மிகு வலியொலி பொலிபகழ் புழுதியின்
நிறனுழு வளைவாய் நாஞ்சி லோனும்
நானிலந் துளக்கற முழுமுத லுற்றிய
பொலம்புனை யிதழணி மணிமடற் பேரணி
இலங்கொளி மருப்பிற் களிறு மாகி
மூவுரு வாகிய தலைபிரி யொருவனை
படர்சிறைப் பன்னிறப் பாப்புப் பகையைக்
கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை
ஏவலின் முதுமொழி கூறும்
சேவலோங் குயர்கொடிச் செல்வநற் புகழவை
கார்மலர்ப் பூவை கடலை யிருண்மணி
அவையைந்து முறழு மணிகிளர் மேனியை
வலம்புரி வாய்மொழி யதிர்புவான் முழக்குச்செல்
அவைநான்கு முறழு மருள்சேறல் வயின்மொழி
முடிந்தது முடிவது முகிழ்ப்பது மவைமூன்றும்
கடந்தவை யமைந்த கழலி னிழலவை
இருமை வினையுமில ஏத்துமவை
ஒருமை வினைமேவு முள்ளத்தினை
அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை
அடியுங் கையுங் கண்ணும் வாயும்
தொடியு முந்தியுந் தோளணி வலயமும்
தாளுந் தோளு மெருத்தொடு பெரியை
மார்பு மல்குலு மனத்தொடு பரியை
கேள்வியு மறிவு மறத்தொடு நுண்ணியை
வேள்வியு மறனும் விருப்பொடு வெய்யை
அறாஅ மைந்திற் செறாஅச் செங்கட்
செருமிகு திகிரிச் செல்வ வெல்போர்
எரிநகை யிடையிடு பிழைத்த நறுந்தார்ப்
புரிமலர்த் துழாஅய் மேவன் மார்பினோய்
அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம்

பன்மா ணடுக்க விறைஞ்சினேம் வாழ்த்தினேம்
முன்னு முன்னும்யாஞ் செய்தவப் பயத்தால்
இன்னு மின்னுமெங் காம மிதுவே

**கடவுள் வாழ்த்து**

**நல்லெழுநியார் பாட்டு; பண்ணோதிறம்.**

## உரை

க - சு : **மணிவரை.........................நேமிமால்**

(இ - ள்.) *மணிவரை ஊர்ந்த மங்குல் ஞாயிற்று அணி வனப்பு அமைந்த பூந்துகில் புனைமுடி - நீலமணிமலையின் மிசைப் படர்ந்த இருளைக்கெடுக்கும் ஞாயிற்றுமண்டிலத்தின் ஒளியினது அழகுபோலும் அழகமைந்த பொன்னுடையினையும் புனைந்த திருமுடியினையும், இறுவரை இழிதரும் பொன் மணி அருவியின் நிறனொடு மாறும் தார் - அப் பெரிய நீலமலையினின்றும் வீழும் பொன்னையும் மணியையும் உடைய அருவியினது நிறத்தொடு மாறுபடாநின்ற மலர்மாலையினையும், புள்ளுப்பொறி புனைகொடி - கருடப் பறவை எழுதப்பட்ட ஒப்பனை செய்த கொடியினையும் உடையையாய், விண் அளிகொண்ட வியல் மதி-வானத்தின்கண் ணிருந்து உலகினைக் காத்தற்றொழிலை மேற்கொண்ட நிறை வெண்டிங்களினது, அணி கொள் அத் தண் அளி கொண்ட - அழகிய அக் குளிர்ந்த காத்தற்றொழிலை மேற்கொண்ட, அணங் குடை நேமி மால் - அசுரரை வருத்துதலையுடைய ஆழிப் படையை ஏந்திய திருமாலே ;*

(வி - ம்.) *மணிவரை - நீலமணியாகிய மலை. இது திருமாலுக்கு உருவுவமை. மங்குல் ஞாயிறு - இருளைக் கெடுக்கும் ஞாயிறு என்க. இதனை நோய் மருந்து என்றாற்போலக் கொள்க. ஞாயிறு அதன் ஒளிக்கு ஆகுபெயர். ஞாயிற்றொளி பொன்னுடைக்கும், பொன்முடிக் கும் உவமை. ஞாயிற்றின் அணிபோன்ற வனப்பமைந்த என்க. அணி - அழகு. வனப்பு - அழகு. இறுவரை - பெரிய மலை. பெரிய அந் நீலமலை என்க. பொன்னையும் மணியையும் வரன்றிவரும் அருவி என்க. அருவி : மலர்மாலைக்கு உவமை. புள் - கருடப்பறவை. பொறிபுனை கொடி : வினைத்தொகையடுக்கு. அளி - காத்தற்றொழில். திங்கள் மண்டிலத்தின் நிலவொளியாலே உலகத்துயிர்கள் செழித்து வளர் கின்றன என்பவாதலின், திங்கள் காத்தற்றொழிலை மேற்கொண்டமை உணர்க.*

*திங்கள் பூதவெளியினின்று உயிர்களைத் தன் ஒளியாலே காத்தல் போன்று இறைவன் அறிவுவெளியினின்று உயிர்களைத் தன் அருளாலே*

காத்தருளுகின்றான் எனவரும் இவ் வுவமை, பொருள்களின் அழகினை நினைந்தின்புறுக. வியன்மதி - முழுவெண்டிங்கள். அணங்கு - வருத்தம்: பகைவரைத் துன்புறுத்தும் என்க. இதன்கண் இறைவனுடைய அருளுருவமும் அவனது அளியுடைமையும் தெறலுடைமையும் நன்கு கூறப்பட்டனவாதலுணர்க.

(பரிமே.) ௬. அணங்குதல் - அசுரரை வருத்துதல்.

௭ - ௧௩: பருவம்....................உரிமை நன்குடைத்து

(இ - ள்.) பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த இருவேறு மண்டிலத்தின் இலக்கம் போல - கார்ப்பருவம் வாய்த்தலையுடைய பெரிய முகில் ஒன்றனை இருமருங்கும் நின்று அழகுசெய்த ஒன்றற்கொன்று மாறுபட்ட ஞாயிறும் திங்களும் ஆகிய இரண்டு மண்டிலங்களினது இரண்டுவகைப் பட்ட விளக்கம்போன்று விளங்காநின்ற, நேமியும் வளையும் ஏந்திய கையால் - ஆழிப்படையினையும் சங்கத்தினையும் ஏந்திய திருக்கைகளுடனே, கருவிமின் அவிர் இலங்கும் பொலம்பூண் அருவி உருவின் ஆரமொடு அணிந்த - தொகுதியையுடைய மின்னலினது விளக்கத்தை ஒத்து விளங்காநின்ற பொன்னாரத்தை வெள்ளிய மலையருவியின் வடிவத்தையுடைய முத்தாரத்தோடு அணியப்பட்ட, நின் திரு வரை அகலம் தொழுவோர்க்கு - நினது அழகிய மலைபோன்ற திருமார்பினை நினைந்து வழிபடுவோர்க்கு, உரிது அமர் துறக்கமும் உரிமை நன்குடைத்து - பெருமானே நீ நினக்கு உரியதாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கும் திரு வைகுண்டமாகிய மேனிலையுலகமும் நன்கு உரிமையாதலை உடைத்து;

(வி - ம்.) பருவம் - கார்ப்பருவம்: இனி அங்ஙனம் ஒரு செவ்வி வாய்க்கப்பெற்றமையின் விசும்பினை அணிந்த இருவேறு மண்டிலத்து இலக்கம்போல, எனக் கூறினுமாம். என்னை? அங்ஙனம் செவ்வி வாய்த்தல் அருமையின் ஒரோவழி வாய்த்துழி என்பது கருத்து. 'வாய்த்தலினை உடைய எனற்பால இரண்டனுரு(பும் பயனும் உடன்) தொக்கன' என்பர் பரிமேலழகர்.

இறைவனுக்குப் பெரிய முகில் உவமை. ஆழிப்படைக்கு ஞாயிற்றுமண்டிலம் உவமை; சங்கிற்குத் திங்கள்மண்டிலம் உவமை எனக் காண்க. இவ் வுவமைகளோடு,

"விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
.......................................
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு

பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்.''
(சிலப். கக : சங - ருக)

எனவரும், சிலப்பதிகாரப் பகுதியினையும்;

"கருமுகில் தாமரைக் காடு பூத்துநீடு
இருசுடர் இருபுறத் தேந்தி .........
வருவபோல் கலுழன்மேல் வந்துதோன்றினான்.''
(கம்ப. திருவவதா - கங)

எனவரும் கம்பநாடர் செய்யுளையும் ஒப்புக் காண்க.

கருவி - முகில் இடி முதலிய தொகுதிகள் என்க. பொலம்பூண் - பொன்னணிகலன் : 'அருவியுருவின் ஆரம்' என்றது, முத்துமாலையை என்க. திருவரை - அழகிய மலை : கையுடனே மார்பினையும் தொழுவார்க்கு என்க இவற்றைத் தொழுதலாவது இவற்றின் எழிலை மனத்தானே நினைந்து நினைந்து அன்பானே நெகிழ்தல் என்க. உரிது - உரியது. துறக்கம் - ஈண்டு வைகுண்டம். துறக்கமும் என்புழி உம்மை சிறப்பு. எச்சவும்மையாகவும் கொண்டு இவ் வுலகத்துப் போகம் உரியனவாதலோடு துறக்கபோகமும் உரித்து எனவும் கூறிக்கொள்க. என்னை? இறைவனை அன்பானினைந்து தொழுவார்க்கு இம்மையின்பமும் மறுமையின்பமும் வீட்டின்பமும் உளவாதல் ஒருதலையாகலின் என்க. இதனை,

"குலந்தரும் செல்வந் தந்திடும் அடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாஎன்னும் நாமம்.''
(திருமொழி. க : க - க)

எனவரும் அனுபவமுடைய ஆழ்வார் திருமொழியானும் உணர்க.

(பரிமே.) எ. வாய்த்தலினை என்னும் இரண்டாவது விகாரத்தால் தொக்கது.

கங. துறக்கமும் என்னும் உம்மை, சிறப்பும்மை.

கச - உரு : சுவைமை..........................கனலும்

(இ - ள்.) அடுபோர் அண்ணல் - பகைவரைக் கொல்லும் போர் வென்றியையும் தலைமைத்தன்மையையும் உடைய பெருமானே, சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு அவையும் நீயே - சுவையும் ஒலியும் ஒளியும் நாற்றமும் ஊறும் ஆகிய அவ் வைம்புலன்களும் நீயே, அவை யவை கொள்ளும்

கருவியும் நீயே - அப் புலன்களேயன்றி அவற்றை அறிந்து கொள்ளாநின்ற வாயும் செவியும் கண்ணும் மூக்கும் மெய்யு மாகிய அறிகருவிகளும் நீயே, யாம் முந்திக் கூறிய ஐந்த னுள்ளும் - எம்மால் முன்னர்க் கூறப்பட்ட சுவை முதலிய ஐம்புலன்களுள் வைத்து, ஒன்றனில் போற்றிய விசும்பும் நீயே - முதற்புலனுகிய ஓசையுடைமையாலே எம்மால் உணரப்பட்ட வானமும் நீயே, இரண்டின் உணரும் வளியும் நீயே - ஓசையும் ஊறுமாகிய இரண்டு புலன்களும் உடைமையாலே உணரப்பட்ட காற்றும் நீயே, மூன்றின் உணரும் தீயும் நீயே-ஓசையும் ஊறும் ஒளியுமாகிய மூன்று புலனுனும் உணரப்படுவதாகிய தீயும் நீயே, நான்கின் உணரும் நீரும் நீயே - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் ஆகிய நாற்புலனுனும் உணரப்படுவதாகிய நீரும் நீயே, ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் நாற்றமும் ஆகிய ஐம்புலனுனும் உணரப்படுவதாகிய நிலனும் நீயே, அதனுல் மூலமும் அறனும் முதன்மையின் இகந்த காலமும் விசும்பும் காற்ருெடு கனலும் மூவேழுலகமும் நின்மருங்கின்று-இங்ஙனம் ஆதலானே மூலப்பகுதியும் அறமும் அநாதியான காலமும் வானமும் காற்ருெடு தீயும் நீரும் நிலனும் கூடிய இம் மூவேழுலகத்து உயிர்கள் எல்லாம் யாண்டிருந்தும் நின்னிடத்தனவே யாயின ;

(வி - ம்.) ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என வைத்தலே முறையாயினும் சுவைமை யிசைமை தோற்றம் நாற்றம் ஊறு எனச் செய்யுளாதலின் முறை பிறழவைத்தார். இறைவனே பூத முதலியன வாய்ப் பரிணமிப்பன் என்பது வைணவர் கொள்கை. இதனை,

"மாயையாய் உயிராய் மாயா காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தம் செய்து வாங்கிடும் அவனு லன்றி
மாயைபோ காதென் றெண்ணி மாயனை வணங்கப் பின்னை
மாயைபோம் போனுல் மாயன் வைகுண்டம் வைப்ப னன்றே."
(சிவ - சித்தி - பாஞ்ச - மதம் : எ)

என்பதனுன் உணர்க.

இசைமை - ஓசை. தோற்றம் - ஒளி. கொள்ளும் கருவி-அறியும் கருவி. அவை மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பொறிகள் என்க. போற்றிய - உணரப்பட்ட. ஒன்று - ஓசை : முதற்பூதத்தின் குணமாதலின் ஒன்று எனப்பட்டது. வளி - காற்று.

அதனுல், மூலப்பகுதி முதல் நிலம் ஈருகவுள்ள தத்துவங்கள் எல்லாம் நீயேயாயிருத்தலால். மூவேழுலகமும் என்றது ஆகுபெயரான அவற்றில் உள்ள உயிர்களைக் குறித்துநின்றது.

மூலம் - மூலப்பகுதி. அறம் - நல்வினை : நல்வினை கூறவே தீவினை யும் அடங்கிற்று. முதன்மை - ஆதி : ஆதியில்லாத (அநாதி) காலம் என்பார் 'முதன்மையின் இகந்தகாலம்' என்ருர். விசும்பொடு காற்றும் கனலும் கூறவே இனம்பற்றி எஞ்சிய நீரும் நிலனும் கொள்க.

(இப் பகுதியோடு ஆசிரியர் பரிமேலழகர், 'சுவையொளி யூறோசை நாற்றம் என்றைந்தின் வகைதெரிவான் கட்டே உலகு' [உள] என்னும் திருக்குறட்கு வரைந்த விளக்கவுரை ஒப்புக் காண்டற்பாலது.

அது வருமாறு : "அவற்றின் கூறுபாடாவன பூதங்கட்கு முதலாகிய அவைதாமைந்தும், அவற்றின்கட் டோன்றிய அப் பூதங்களைந்தும், அவற்றின் கூறுகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்களைந்துமாக இருபதுமாம். வகைதெரிவான் கட்டெனஉடம்பொடு புணர்த்ததனுல் தெரிகின்ற புருடனும் அவன் தெரிதற்கருவியாகிய மான் அகங்கார மனங்களும் அவற்றிற்கு முதலாகிய மூலப் பகுதியும் பெற்றும்.........இவ் விருப்பத்தைந்துமல்லது உலகெனப் பிறிதொன்றில்லை" எனவரும்.)

(பரிமே.) கஎ - உஉ. இவற்றுள் முன்னர்க் கூறப்பட்ட புலன்களுள், ஒன்று - ஓசை : இரண்டு - ஓசையும் ஊறும் ; மூன்று - ஓசையும் ஊறும் ஒளியும் ; நான்கு - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் ; ஐந்து - ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் நாற்றமும்.

இவ்வ குணங்களால் உணரப்படுவனவாகிய பூதங்களும் நீ.

உச. மூலப்பகுதியாவது, சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் குணங்கள் மூன்றும் தம்முள் ஒத்த நிலைமையதாதலால் அது கூறவே அறிவறியாமைகள் இன்பதுன்பங்கள் என்னும் உயிர்க்குணங்களும் அடங்கின.

அறமாகிய சிறப்புடைக்குணம் கூறவே சிறப்பில் குணமாகிய பாவமும் அடங்கிற்று.

இதனுல், ஈண்டு எண்ணப்பட்டவற்றது கூட்டம் உயிரென்பது உணர்த்தப்பட்டது.

உரு - உசு : தன்னுரு.......................அறிதுயிலோனும்

(இ - ள்.) தன் உரு உறழும் பால் கடல் நாப்பண் - தன் நீலத்திருமேனியோடு மாறுபட்ட வெண்மை நிறத்தினையுடைய திருப்பாற்கடல் நடுவே, மின் அவிர் சுடர் மணி கவை நா விரித்த ஆயிரம் அருந்தலை காண்பு இன் சேக்கை - மின்னல் போன்று விளங்காநின்ற ஒளியினையுடைய மணிகளோடே பிளவுபட்ட நாவினையும் படம்விரிக்கப்பட்ட ஆயிரம் அரிய தலைகளையுமுடைய காண்பதற்கு இனிதாகிய அரவப் பாயலிலே துயிலாநின்ற, துளவம் சூடிய - துழாய்மாலையை அணிந்த, அறிதுயிலோனும் - யோக நித்திரையை உடையவனும்;

(வி - ம்.) திருமாலின் நீலநிறத்தோடு மாறுபடும் வெண்ணிறமுடைய பாற்கடல் என்பார், 'தன்னுரு உறழும் பாற்கடல்' என்றார். உரு - நிறம். உறழும் - மாறுபடும். நாப்பண் - நடு. கவைநா - பிளவுபட்ட நாக்கு : பாம்பின் நா பிளவுபட்டிருத்தல் இயல்பு. பிறவுயிர்களிடத்துக் காண்டற்கரிய தலை என்க. ஆதிசேடனுக்கு ஆயிரந்தலை உள என்பது புராணம். காண்பு - காண்டல் : காட்சிக்கினிய என்க. சேக்கை - படுக்கை. துளவம் - துளசி. அறிதுயில் - யோகநித்திரை.

**கூO - கூகூ : மறமிகு..............................நாஞ்சிலோனும்**

(**இ - ள்.**) மறம் மிகு ஒலிமலி மாறு அடு தானையால் - தறுகண்மைமிக்கதும் முழக்கமிக்கதும் பகைவரைக் கொல்லுமியல்புடையதுமாகிய படைகளுடனே, திறன் இகந்து வரூஉம் அவர் உயிர் அகற்றும் - ஒழுக்கமுடைமையைக் கடந்து போரை மேற்கொண்டு தன்மேல் வாராநின்றபகைவர் உயிரைப்போக்கும், விறல் மிகு வலி - வெற்றிமிக்க ஆற்றலும், ஒலி பொலிபு அகழ் புழுதியின் - ஆரவாரத்தாலே பொலிந்து தன்னால் அகழப்படும் புழுதியை உழுமாறுபோல, நிறன் உழு வளைவாய் நாஞ்சிலோனும் - அப் பகைவருடைய மார்பினை உழாநின்ற வளைந்த வாயினையுடைய கலப்பைப்படையை உடைய பலதேவனும் ;

(**வி - ம்.**) மறம் - தறுகண். மாறு - பகை : தானையால் என்புழி ஆலுருபு ஒடு உருபின்பொருட்டு. இனி தானை உடைமையானே என ஏதுப்பொருட்டாக்கினுமாம். திறம் - ஒழுக்கமுடைமை : நல்லொழுக்கத்தின் இழுக்காது நிற்றற்கு மனத்திட்பமே காரணமாகலின் ஈண்டு ஒற்றுமைபற்றிக் காரியத்தைக் காரணமாகக் கூறினர் என்க. இறைவனுக்குப் பகைவர் என்போர் நல்லொழுக்கத்தினின்று விலகித் தீயொழுக்கின்கண் செல்வோரே என்பதும் இறைவன் அவரை ஒறுத்தல் அவர் தீவினைக்கண் மிக்கபோதே என்பதும் உணர்த்தற்கு 'திறனிகந்து வரூஉம் அவர் உயிரகற்றும்' என்றார். அகழ்புழுதி: வினைத்தொகை. பொருளின்கட் கூறிய உழுதலை உவமையினுங் கூட்டிப் புழுதியை உழுமாறுபோல என்க. புழுதியை உழுதலும் அதன் றொழிலேயாகலின் அதனையே உவமையாக்கினார். நாஞ்சில் - கலப்பை. நாஞ்சிலோன் - பலதேவன்.

**கூச - கூஎ : நானிலம்..............................ஒருவனை**

(**இ - ள்.**) நானிலந் துளக்கு அற - நான்கு கூறுபட்ட இம் மண்ணுலகத்து வாழும் உயிர்களின் நடுக்கந்தீரும் பொருட்டு அதனை நீரினின்று மேலே எடுத்தற்கு, முழு முதல் நாற்றிய பொலம்புனை இதழ் அணி மணி மடல் பேரணி - பரிய அடிப்பகுதிவரை பொருந்தக் கவித்த பொன்னாலாகிய மலரானே அழகிய மணிகளையுடைய மடலையுடைய பெரிய கிம்புரியையுடைய, இலங்கு ஒளி மருப்பின் களிறுமாகி - விளங்காநின்ற ஒளியினையுடைய கொம்புகளையுடைய ஆண் பன்றியும் ஆகத் திருவுருக்கொண்டும், மூவுருவாகிய தலைபிரி ஒருவனை - சாத்துவிக இராசத தாமதங்களாகிய முக்குண வேறுபாட்டாலே பிரமனும் உருத்திரனும் திருமாலும் ஆகிய மூன்று முதற் கடவுளராகப் பிரிந்தவனுமாகிய ஒரே முழுமுதற் கடவுளாகிய பெருமான் நீ ;

(**வி - ம்.**) நானிலம் - குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்னும் நான்கு கூறுபாடுடைய நிலவுலகம் என்க. ஊழிக்காலத்தே இந் நில

வுலகம் நீரினுட் கிடந்தமையால் அதனை அதனினின்றும் ஆதிவராக மாகி யிறைவன் மேலே எடுத்துக் காத்தருளினுர் என்பது கதை.

நானிலம் : ஆகுபெயர். அதன்கண் வாழும் உயிர்கள் துளக்கற என்க. துளக்கு - நடுக்கம்; ஈண்டுத் துன்பம் என்னும் பொருள் குறித்து நின்றது. மூழுமுதல் - மருப்பினது பரிய அடிப்பகுதி என்க. மருப்பின் அடிப்பகுதிவரை கவிக்கப்பட்ட பேரணி என்க. பொன்னுற் செய்த அணி பூவேலை பொருந்திய பேரணி நாற்றிய பேரணி மணி மடல் பேரணி எனத் தனித்தனிக் கூட்டுக. களிறு - ஆண்பன்றி என்றது, ஆதிவராகப் பெருமானை.

தன்னுரு என்பது தொடங்கி, ஒருவனை என்னுந்துணையும் கூறிய திருவுருவங்களுள் அறிதுயிலோன் என்றது பாற்கடற் பரமனை யும், நாஞ்சிலோன் என்றது பலதேவனையும், களிறு என்றது ஆதிவராக மூர்த்தியையும், ஒருவன் என்றது பரமபதப் பரமனையும் என்க. இப் பகுதியால் வேறு வேறு பெயரின் மேவிய தெய்வமனைத் தும் நீயே என்றபடியாம்.

(பரிமே.) அவ்வுயிர்களின் பொருட்டு அறிதுயிலோனும், நாஞ்சி லோனும், களிறும் ஆயதுவேயன்றி முக்குணங்களது வேறுபாட்டான் மும்மூர்த்திகளுமாகிய தலைபிரிந்த ஒருவனை என்க.

௩௧ - எ. ஆகி என்னும் வினையெச்சம் ஆகிய என்னும் பெய ரெச்சத்து ஆதலொடு (என்னும் வினையோடு) முடிந்தது.

௩௮ - ௪௫ : படர்சிறை..........................மொழி

(இ - ள்.) பல் நிறம் படர்சிறை பாப்புப் பகையை - பெருமானே நீ பலவாகிய நிறமமைந்த விரிந்த சிறகினையுடைய தும் பாம்பினது பகையுமாகிய கருடப்பறவையினை, கொடி எனக் கொண்ட கோடாச் செல்வன் - கொடியாகக் கொண்ட மனக்கோட்டமில்லாத திருவருட் செல்வன் ஆவாய், சேவல் ஓங்கு உயர் கொடிச் செல்வ - கருடச்சேவல் எழுதப்பட்ட மிக வுயர்ந்த கொடியினையுடைய செல்வனே நீ, ஏவல் இன் முது மொழி கூறும் நல்புகழவை - ஓதுதற்கு இனிய வேதத்தாற் கூறப்படுகின்ற நல்ல புகழினை உடையை, கார் பூவைமலர் கடல் இருள் மணி அவை ஐந்தும் உறழும் அணிகிளர் மேனியை - எம்பெருமானே நீ முகில் காயாமலர் கடல் இருள் நீலமணி என்னும் இவ்வைந்தின் நிறத்தையும் ஒத்த அழகு ததும்புகின்ற திருமேனியினை உடையை, அருள்வயின் மொழி - நினது அருளுடைமை நிலைக்களனுகத் தோன்றுகின்ற மொழி களும், செறல் வயின் மொழி - நினது தெறுதற்பண்பு நிலைக் களமாகத் தோன்றுகின்ற மொழிகளும் நிரலே, வலம்புரி வாய் மொழி அதிர்புவான் முழக்கு செல் அவை நான்கும் உறழும் - வலம்புரிச்சங்கின் முழக்கமும் வேதமுழக்கமும் அதிர்ந்து முகில் முழங்கும் முழக்கமும் இடியேற்றின் முழக்கமும் ஆகிய இந் நான்கு முழக்கத்தையும் ஒக்கும்;

(வி - ம்.) கருடப்புள்ளின்பால் சிவப்பும் வெண்மையும் காணப் படுதலால் 'பன்னிறப் படர்சிறை' என்றார். சிறை - சிறகு. பாப்புப் பகை : அன்மொழித் தொகை; கருடனுக்குப் பெயராய் நின்றது. பாம்பு என்பது வேற்றுமைப் புணர்ச்சிக்கண் மென்றொடர் வன்றொட ராயிற்று. கோடாச் செல்வன் என்றது, நடுநிலைமையுடைய திருவருட் செல்வத்தை உடையன் என்றவாறு. 'மனக்கோட்ட மில்லது செப்பம்' ஆகலின் அங்ஙனம் கூறினார். செல்வனை - என்புழி ஐகாரம் பகுதிப்பொருளது. ஏவல் - ஓதுதல். முதுமொழி - வேதம். கார் - மேகம். மலர்ப்பூவை : முன்பின் மாறித்தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. நின் அருண்மொழி வலம்புரிமுழக்கத்தையும், வேதமுழக்கத்தையும், செறல்மொழி முகில் முழக்கத்தையும் இடி முழக்கத்தையும் ஒக்கும் என்க. செல் - இடி. அருள்வயின் மொழி செறல்வயின் மொழி என இயைக்க. அருளிடமாகப் பிறக்கும் மொழி; செறல் இடமாகப் பிறக்கும் மொழி என்க.

(பரிமே-) ௩௮. பகை - கருடன். ௩௯. கோடாமை - சலியாமை.

௪௩ - ௫௩ : முடிந்தது......................வெய்யை

(இ - ள்.) முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதும் அவை மூன்றும் கடந்து - பெருமானே நீ தோன்றியதும் இனித் தோன்றுவதும் இப்பொழுது தோன்றா நின்றதுமாகிய அம் மூன்றுகாலக் கூறுபாடுகளையும் கடந்து, அவை அமைந்த கழல் நிழலவை - அக்காலக் கூறுகள் தாம் பொருந்தப்பெற்ற திருவடி நிழலையுடையை, ஏத்துமவை - நின்னை வழிபடும் உயிர்கள், இருமைவினையும் இல-பிறப்பிற்குக் காரணமான இருவகை வினைகளும் இல்லன வாகும், ஒருமை வினைமேவும் உள்ளத்தினை - நீ முத்தொழிலுடையை எனினும் எவ்வாற்றானும் உயிர்களைக் காத்தற்றொழிலாகிய ஒரு தொழிலிடத்தேயே பொருந்திய திருவுள்ளத்தினையுடையை, அடியும் கையும் கண்ணும் வாயும் அடைஇறந்து அவிழ்ந்த வள் இதழ்த் தாமரை - நின் திருவடியும் திருக்கைகளும் திருக்கண்களும் திருவாயும் இலைப் பரப்பினின்றும் உயர்ந்து மலர்ந்த பெரிய இதழ்களையுடைய தாமரைப்பூவை ஒப்பனவாம், எருத்தொடு தொடியும் உந்தியும் தோள் அணி வலயமும் தாளும் தோளும் பெரியை - பெருமானே நின் பிடரியுடனே தொடியும் திருவுந்தியும் தோளின்கண் அணியும் வாகுவலயமும் திருவடியும் திருத்தோளும் பரியன, மார்பும் அல்குலும் மனத்தொடு பரியை - நின் திருமார்பும் பின்புறமும் திருவுள்ளமும் பருமையுடையன, கேள்வியும் அறிவும் அறத்தொடு நுண்ணியை - நின் கேட்டற்பண்பும் அறிவுடைமையும் அறமுடைமையும் மிக நுண்ணியனவாகும், வேள்வியும் மறனும் விருப்பொடு வெய்யை - நீ வேள்வியிடத்தேயும் தீவினையிடத்தேயும் நிரலே விருப்பமுடையவனும் கொடுமையுடையவனும் ஆவாய் ;

(வி - ம்.) முடிந்தது : இறந்தகாலம். முடிவது : எதிர்காலம் முகிழ்ப்பது : நிகழ்காலம். ஆகிய அம்மூன்று காலக் கூறுபாட்டையும் கடந்து மேலும் அவைமூன்றும் தன்கீழ் அமைந்துள்ள அடி என்க.

காலம் என்னும் அருவப்பொருள் இறைவன் போன்று அநாதியாக உள்ளது. அக்காலத்தை நிலைக்களனாகக் கொண்டு இறைவன் படைப்புத் தொழில் முதலிய முத்தொழிலையும் நிகழ்த்துவன்; அங்ஙனம் தொழில் பற்றித் தோன்றிய பொருள்களையே அளவையாக வைத்துக் காலத்தை உலகியனடத்தற் பொருட்டுக் கூறுபட்டதாக வழங்கப் படுவதல்லது அது தானே கூறுபடாது ; இக் கூறுபட்ட முக்காலமும் படைத்தற் றொழிலோடு தொடங்கி அழித்தற் றொழிலோடு முடிவன வாகும். படைத்தற்கு முன்னும் அழித்தற்குப் பின்னுமுள்ள இறைவன் அவற்றை முன்னும் பின்னும் கடந்தவனாகின்றான்; ஆதலின், முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதுமாகிய அவை மூன்றையும் கடந்து என்றும் கூறுபடாத அருவமாகிய காலந்தானும் இறைவன் படைப்பிற்குத் துணைக்காரணமாய் அவனது ஆட்சிக்கண் அடங்கிநிற்றலால், "அவை அமைந்த கழலி னிழலவை" என்றும் கூறினார். இதனை,

"காலமே கடவு ளாகக் கண்டனம் தொழி லுக் கென்னில்
காலமோ அறிவின் றாகும் ஆயினும் காரி யங்கள்
காலமே தரவே வேண்டும் காரணன் விதியி னுக்குக்
காலமும் கடவு ளேவ லாற்றுணைக் கார ணங்காண்."
(சிவ - சித்தி - சுப. ௧0)

எனவரும் அருமைச் செய்யுளானும் உணர்க.

நிழலவை - நிழலினையுடையை : முன்னிலை ஒருமை வினைமுற்று. ஏத்துமவை : ஏத்துபவை எனப் பலவறி சொல்லாகக் கோடல் நன்று. இதற்கு ஏத்தாநின்ற உயிர்கள் எனப் பொருள்கொள்க. ஏத்துமவை இருவினையும் இல என முடியும். இனி ஆசிரியர் பரிமேலழகர் இதனைப் பலர்பாற் படர்க்கை வினையாலணையும் பெயராகக்கொண்டு 'ஏத்து மன்பர்' எனப்பொருள் கூறியுள்ளமை ஆராய்தற்குரியதாம்.

இறைவன் படைத்தல் காத்தல் அழித்தல் என மூன்று வகைப் பட்ட தொழில் செய்வானாயினும் அவைமூன்றும் ஊன்றி நோக்கு வார்க்கு உயிர்களைப் பாதுகாத்தற் பொருட்டே ஆதல் தெற்றெனத் தோன்றும். இறைவன் பற்பல செய்யினும் அவையெல்லாம் ஓரே நோக்குடையன என்பார் 'ஒருமை வினை மேவு முள்ளத்தினை' என்றார். ஒருமைவினை - காத்தற்றொழில். இதனை,

"அழிப்பிளைப் பாற்றல் ஆக்கம் அவ்வவர் கன்ம மெல்லாம்
கழித்திடல் நுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பில்
தெழித்திடல் மலங்க ளெல்லாம் மறைப்பருள் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடின் அருளே எல்லாம்."
(சிவ - சித்தி - சுப. ௩௭)

எனவரும் பெரியார் மொழியானும் உணர்க.

அடை - இலை. ஈண்டுத் தாமரையிலை. அவன் திருமேனிக்கு டவமையாதல் குறிப்பான் உணர்த்தினமையும் உணர்க. இலைப்பரப்பி

னின்றும் உயர்ந்து மலர்ந்த தாமரை என்க. வள் - வளவிய எனினு மாம். தொடியும் தோளணி வலயமும் பெரியை என்றது, அவை யிற்றை அணிவதற்குரிய உறுப்புக்களின் பெருமை கூறியபடியாம். உந்தி உலகம் பூத்தலின் பெரிதாயிற்று. பெரியை முதலியன சினைப் பண்பு முதல்மேனின்றன. அல்குல் - பின்புறம். மனம் - திருவுள்ளம். மறம் - தீவினை.

(பரிமே.) ௫௫. அன்பர் தம் குறை தம்முள்ளே கூறியும் அறிதலால் கேள்வி நுண்ணியை என்றார். அருளிச்செய்த அறத்தொடு, இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேனின்றது.

௫௬. யாகத்தை விரும்புதலோடு மறம் வெவ்வியை.

௫௭ - ௬0 : அறாஅ..........................மார்பினேய்

**(இ - ள்.)** அறாஅ மைந்தின் - நீங்காத ஆற்றலினையும், செறாஅச் செங்கண் - சினத்தலானன்றி இயல்பாகவே சிவந்த கண்ணையும், செருமிகு திகிரி வெல்போர் செல்வ - போரின்கண் மேம்பட்ட ஆழிப்படையாலே வெல்லாநின்ற போரினையும் உடைய திருவருட் செல்வனே !, எரி நகை இடை இடுபு இழைத்த புரிமலர் துழாஅய் நறுந்தார் மேவல் மார்பினோய் - நிறத்தாலே நெருப்பை யொத்த வெட்சிமலரை இடையிட்டுத் தொடுத்த முறுக்குடைய மலரையுடைய துளவமாகிய நறிய மாலை பொருந்துதலுடைய திருமார்பினை உடையோனே !

**(வி - ம்.)** வரம்பிலாற்றல் என்பார், 'அறாஅ மைந்து' என்றார். இயல்பாகவே சிவந்தகண் என்பார், 'செறாஅச் செங்கண்' என்றார். இறைவனுக்கு மாற்றாரிலராகலின் செறுதலின்மையும் உணர்க. செரு - போர். திகிரி - ஆழிப்படை. செல்வம் - அருட்செல்வம். எரி - நெருப்பு. நகை ஆகுபெயராய் மலர்க்காயிற்று. நகை - விளக்கம், மலர்ச்சி. எரிமலர் எனவே, வெட்சிமலர்க்காயிற்று. இடுபு - இட்டு. புரிமலர் - முறுக்குடைய மலர் ; விரும்புதற்குரிய மலருமாம். மேவல் - பொருந்துதல். மேலே தமது விருப்பங்கூறி வேண்டுதலானே பன் முறையும் விளித்து எதிர்முகமாக்கினார்.

(பரிமே.) ௫௧. எரியை ஒத்த வெட்சிமலர்.

௬0. மேவலையுடைய மார்பினோய்.

௬௧ - ௬௪ : அன்னை..........................காமமிதுவே

**(இ - ள்.)** முன்னும் முன்னும் யாம் செய் தவப் பயத்தால் - பண்டும் பண்டும் பற்பல பிறப்புக்களிலே யாம் செய்த தவப்பயன் கூட்டுவித்தலானே, அன்னை என நினைஇ - நீ அத்தன்மை உடையை என்று இப்பிறப்பினும் நினைந்து, நின் அடி தொழுதனெம் - நின்திருவடியினைக் கைகுவித்துக் கும்பிட்டு, அடுக்கப் பன்மாண் இறைஞ்சி வாழ்த்தினேம் -

அடுத்தடுத்துப் பலகாலும் வணங்கி வாழ்த்தாநின்றேம், எம் காமம் இன்னும் இன்னும் இதுவே - எளியேங்கள் நின்பால் வேண்டுவது யாதெனின் எம்பெருமானே! மேலும் மேலும் இங்ஙனமே நின் அடி இறைஞ்சி வாழ்த்தும் இவ்வழிபாடேயாம்; அருள்வாயாக !

(வி - ம்.) அன்னை - அத்தன்மையுடையை; முன்னர் சுவைமை முதலாகக் கூறியவற்றை எல்லாம் தொகுத்து அன்னை எனச்சுட்டினார்.

நினைஇ - நினைந்து. இறைவனை நினைதற்கே தவம்வேண்டும் என்பார், "முன்னும் முன்னும் யாம் செய் தவப் பயத்தால்" என்றார். முன்னும் முன்னும் என்றது, பண்டு எய்திய பற்பல பிறப்புக்களினும் என்றவாறு. இன்னும் இன்னும் என்றது வருகின்ற பிறப்புக்களினும் என்றவாறு, "காணப்பெற்றால் மனித்தப்பிறவியும் வேண்டுவதே" என்ற பெரியார் மொழியும் நினைக.

இறைவன்பால் அன்புடைமை யன்றி வீடும் வேண்டாச் சிறப்பினையும் ஈண்டு நினைக.

(பரிமே.) அடுக்குகள் காலநீட்டங் குறித்து வந்தன.

## பதினொன்காம் பாடல்

# செவ்வேள்

**பொருட் சுருக்கம் :**

க-அ. சூரபன்மாவினைக் கிளையோடறுத்த வேற்படையுடைய முருகவேளே!

**க - கூ :** முகில் மிக்க மழையைப் பெய்தமையாலே சுனைப் பூக்கள் மலர்ந்தன; கடப்பமலர்த் தாதூதும் வண்டுகளின் குரல் பண்போன்றிருந்தன; மூங்கில்கள் அடியுறை மகளிர் தோளை ஒத்தன; மயில்கள் அகவும் குரல் தலைவியரைப் பிரிந்து சென்ற தலைவர்களைக் காலந்தாழாமே வம்மின் என அழைப்பவர் சொற்போன்றன.

**கo - கஎ :** கொன்றைப் பூங்கொத்துக்கள் பொன்மாலை போன்றன; பாறைகளில் வேங்கைமலர்கள் பரந்து கிடந்தன; காந்தள்கள் மலர்ந்தன; அவற்றிடையே செங்காந்தள் மலர்கள் பரந்தன; இவ்வாறு நினது திருப்பரங்குன்றம் கார்காலத் தன்மை மிக்கது.

**கஅ - உஅ :** அகின் முதலியவற்றூற் புகைக்கப்படும் நறுமணப் புகையை விரும்புவோனே! ஆறுதிருமுகத்தோடும் பன்னிரு கைகளோடும் தோன்றி வள்ளியை மணந்தோனே! தலைவர் வந்து மீண்டும் பிரியாதிருக்கும் பொருட்டு மகளிர் நின்னைப் பாடும் பாட்டை விரும்புவோனே! தோன்றிய இளம் பருவத்திலேயே இந்திரன் முதலியோர் அஞ்சிய சிறப்புடையோனே! அந்தணரது அறத்தை விரும்புவோனே!

**உகூ - ௩உ :** நீ அத் தன்மையுடையை யாகலின், யாங்கள் நின்னைப் பெரிதும் விரும்பி அடுத்தடுத்து வழிபாடு செய்கின்றோம்! அங்ஙனம் வழிபடுதலின் பயனாக மேலும் மேலும் அவ் வழிபாடுகளே மிகுவனவாக.

**கார்மலி கதழ்பெய றலைஇ யேற்ற**
**நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே**
**தண்ணறுங் கடம்பின் கமழ்தா தூதும்**

வண்ணவண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே
அடியுறை மகளி ராடுந் தோளே
நெடுவரை யடுக்கத்து வேய்போன் றனவே
வாகை யொண்பூப் புரையு முச்சிய
தோகை யார்குரன் மணந்து தணந்தோரை
நீடன்மின், வாரு மென்பவர் சொற்போன் றனவே
நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன
மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின
அழுகை மகளிர்க் குழுவை செப்ப
நீரயற் கலித்த நெரிமுகைக் காந்தள்
வார்குலை யவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்
விடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றிப்
பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்
கார்மலிந் தன்றுநின் குன்று போர்மலிந்து
சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே
கறையில் கார்மழை பொங்கி யன்ன
நறையி னறும்புகை நனியமர்ந் தோயே
அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே
கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே
பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே
இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்
தொருபெய ரந்தணர் அறனமர்ந் தோயே
அன்னை யாகலின் அமர்ந்தியா நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்
இன்னு மின்னுமவை யாகுக
தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே.

*என்பது, பருவங்கண்டு அழிந்த தலைமகள் கேட்ப முருகவேளைப் பரவுவாளாய், இப் பருவத்தே தலைமகன் வருமென்பது படத் தோழி வற்புறுத்தியது.*

கேசவனார் பாட்டு. இசையும் அவர்; பண்ணோதிறம்.

## உரை

க - கூ : கார்மலி........................சொற்போன்றனவே

(இ - ள்.) கார் மலி கதழ் பெயல் தலைஇ - மேகம் மிக்க விரைந்த மழையைப் பெய்தலானே, ஏற்ற நீர்மலி நிறை சுனை பூ மலர்ந்தன - அந் நீரை ஏற்றமையானே நீர் மிக்கு நிறைந்த சுனைகள் மலர்களை மலராநின்றன, தண் நறு கடம்பின் கமழ தாது ஊதும் வண்ண வண்டு இமிர் குரல் - குளிர்ந்த நறிய கடம்பினது மணங்கமழாநின்ற மலரில் தாதினை ஊதாநின்ற நிறமிக்க வண்டுகள் முரலும் இசை, பண்போன்றன - பண்களை ஒத்தன, நெடுவரை அடுக்கத்து வேய் - பெருமானே நினது நெடிய திருப்பரங்குன்றத்துச் சாரலிலே தழைத்த மூங்கில்கள், ஆடும் அடியுறை மகளிர் தோள்போன்றன-நினது திருமுன்னர்க் கூத்தாடும் அடியுறை மகளிருடைய தோளை ஒத்தன, வாகை ஒண் பூ புரையும் முச்சிய தோகைஆர் குரல் - வாகையினது ஒள்ளிய மலரை ஒக்கும் சூட்டினையுடையனவாகிய மயில்களின் நிறைந்த அகவற் குரல், மணந்து தணந்தோரை நீடன்மின் வாரும் என்பவர் சொல்போன்றன - தலைவியரைப் புணர்ந்து பின்னர்ப் பிரிந்துசென்ற தலைவரைக் காலம் நீட்டியாதே வம்மின் என அழைப்பவருடைய சொல்லை ஒத்தன ;

(வி - ம்.) கார் : ஆகுபெயர் : மேகம். கதழ்தல் - விரைதல். பெயல் - மழை. தலைஇ -என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. ஏற்ற என்னும் பெயரெச்சம் சுனை என்னும் பெயர் கொண்டது. சுனை மலர்ந்தன என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது.

பண்ணை என்பதன்கண் ஐகாரம் பகுதிப்பொருள் விகுதி. ஆடும் அடியுறை மகளிர் எனவும், வேய் தோள் போன்றன எனவும் மாறுக. அடியுறை மகளிர்-இறைவன் கோயிலில் உறைந்து கூத்தாடும் மகளிர். நெடுவரை என்றது திருப்பரங்குன்றத்தை என்க. வாகைப்பூ மயிலுச்சிக் கொண்டைக்குவமை. தோகை : ஆகுபெயர்; மயில். ஆர் குரல் - நிறைந்த குரல். தலைவியரை மணந்து பின்னர்ப் பிரிந்த தலைவரை என்க, நீடன்மின் - காலநீட்டியாதே கொண்மின். வாரும் என்பது மரபு வழுவமைதியாகக்கொள்க. என்னை? செய்யும் என்னும் முற்று முன்னிலைக்கண் வருதல் மரபன்மையான் வம்மின் என்னும் பொருட்டு. இச் சொல் இக் காலத்து முன்னிலைப்பன்மையில் வருத லுணர்க. சொல் - அழைக்கும்சொல். "ஊடினீர் எல்லாம் உருவிலான் தன்னுணை, கூடுமின் என்று குயில் சாற்ற" (சிலப்-அ: இறுதிவெண்பா) என்றார் பிறரும்.

(பரிமே.) எ - அ. சூட்டினவாகிய மயில்களின் குறைவற்ற குரல்.

அ. கூடிப்பிரிந்தோரை.

௧௦ - ௧௭ : நாண்மலர்.........................குன்று

(இ - ள்.) கொன்றை நாள் மலரும் பொலம் தார் போன்றன - கொன்றையின் புதுமலர்தாமும் பொன்மாலை போன்று மலர்ந்தன, அழுகை மகளிர்க்கு உழுவை செப்ப மெல் இணர் வேங்கை வியல் அறை தாயின - அழாநின்ற சிறுமிகளுக்கு அவ் வழுகை தீர்தற்பொருட்டுத் தாயர் அதோ புலிபுலி என்று சுட்டிச் சொல்லும்படி மெல்லிய பூங்கொத்துக் கலையுடைய வேங்கையின் மலர் அகன்ற பாறைக்கல்லின் மேல் உதிர்ந்து பரவாநிற்க, நீர் அயல் கலித்த நெரிமுகை காந்தள் வார்குலை அவிழ்ந்த வள்ளிரை இதழ்தொறும் - இவற்றோடு நீர்நிலையின் பக்கத்தே தழைத்த நெரிப்புடைய அரும்பு கலையுடைய காந்தளின் நெடிய பூங்கொத்துக்கள் மலர்ந்த ஒழுங்குபட்ட இதழ்கள்தோறும், தோன்றி விடு கொடிப்பிறந்த மெல்தகை - தோன்றியினது கொழுந்துவிட்டுப் படர்ந்த கொடியின்கண் தோன்றிய மெல்லிய அழகுடைய, பவழத்து அன்ன செம்பூ தாஅய் - பவழம்போன்ற செந்நிறமுடைய மலர் பரக்க, நின் குன்று கார் மலிந்தன்று - பெருமானே ! நினது திருப்பரங்குன்றம் கார்காலத்துத்தன்மை மிக்கது ;

(வி - ம்.) பெருமானே ! நின்குன்று கார்ப்பருவம் அல்லாத வேனிற்பருவத்தும் முகில் மழையை மிகப் பெய்தலானே சுனைப்பூ மலர்ந்தும், வண்டுகள் இசைபாடியும், மூங்கில்கள் தோள்போன்று தழைத்தும், மயில் அகவாநிற்பவும் கொன்றை காந்தள் தோன்றி என்னும் இவையும் பூத்துப் பொலிதலானே கார்ப்பருவத்தின் தன்மை பெற்றது என்க.

கார் மலிந்தன்று என்றது, அது கார்ப்பருவம் அன்மை குறித்தவாறு இங்ஙனம் முருகனுடைய திருப்பரங்குன்றத்தின் வளங் கூறுமாற்றான் தலைவிக்குத் தோழி கார்ப்பருவ வரவினைக் குறிப்பான் உணர்த்தி, இப் பருவத்தே மயில்கள் முதலியன அகவுதல் கேட்டும் நின்தலைவர் நீட்டித்திரார்; இஃது அப் பருவத் தொடக்கமே யாதலின், நின்தலைவர் விரைந்து வருவர் நீ ஆற்றியிரு எனக் குறிப்பான் உணர்த்தி, ஆற்றுவிக்கும் நுணுக்கம் உணர்க.

பாறைக்கல்லின்மேல் வேங்கைப்பூ உதிர்ந்துகிடத்தல் புலிபோன்று தோன்றும்; ஆதலால், மகளிரின் அழுகையை அச்சுறுத்தித் தீர்க்கக் கருதிய தாயர் அக் கல்லினைக் காட்டி, 'அதோ புலிபுலி' என்று அச்சுறுத்தும்படி என்க.

வேங்கைப்பூ உதிரப்பட்ட பாறை புலிபோலத் தோன்றும் என்பதனை, "கருங்கால் வேங்கை வீயுகு துறுகல், இரும்புலிக் குருளையிற் றோன்றும்". (குறுந் - ௪௭) எனவும், "வேங்கை மாத்தகட்டு ஒள்வீ தாய துறுகல் இரும்புலி வரிப்புறங் கடுக்கும்" (புறநா - ௨௦௨) எனவும் பிறசான்றோரும் ஓதுதலானும் உணர்க.

தாயர், சிறுவர் அழுங்கால் புலிபுலி என்று அச்சுறுத்தும் வழக்க முண்மையை "உள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு, மறப்புலி யுரைத்தும்" (புறநா - ௧௬0) எனவரும் புறப்பாட்டானும் உணர்க.

ஆண் பெண் இருபால் மகாரையும் தாயர், 'புலிபுலி' என்று அச்சுறுத்துவர் எனினும், இது கூறுவாள் தோழியாகலின் தன்னின மகளிரையே கூறினள் என்க.

உழுவை - புலி. நீர் அயல் - சுனை முதலியவற்றின் அருகே என்க. கலித்தல் - தழைத்தல்: இதற்கு நீரயல் நிற்றல் குறிப்பேது என்க. நெரி - நெரிப்பு. முகை - மொட்டு. வார்குலை - நெடிய பூங் கொத்து: இதழ்நிரை என மாறுக. தோன்றி - ஒருவகைக் கொடி. காந்தள்-வெண்காந்தள். இதன் மலர் வெண்ணிறமுடையன. தோன்றி மலர் செந்நிறமுடையன ஆகலின், அவ் வெண்ணிற மலர்மேல் இச் செந்நிறமலர் பரந்த காட்சி யினிதாதல்பற்றி விதந்து கூறினள் என்க.

இத்துணையும் தோழி திருப்பரங்குன்றத்தைப் புகழ்ந்து மேலே அக் குன்றத்துறையும் முருகவேளை முன்னிலைப்படுத்திப் பரவுகின்றாள்.

(பரிமே) ௧௩. இவற்றேடென்பது வருவிக்கப்பட்டது.

௧௬. தாவ என்பது தாஅயெனத் திரிந்தது.

**௧௭ - உ௪ : போர்மலிந்து................பாட்டமர்ந்தோயே**

(இ - ள்.) போர் மலிந்து சூர் மருங்கு அறுத்த சுடர்ப் படையோயே - போரின்கண் மிக்குச் சென்று சூரபன்மாவாகிய மாமரத்தினைக் கிளையோடு அறுத்தருளிய ஒளியுடைய வேற் படையை ஏந்திய பெருமானே !, கறைஇல் கார் மழை பொங்கி அன்ன நறையின் நறும்புகை நனி அமர்ந்தோயே - களங்கம் இல்லாத கார்காலத்து வெண்மேகம் கிளர்ந்தெழுந்தாற் போன்ற நறிய அகில் முதலியவற்றானே புகைக்கப்பட்ட நறு மணப்புகையை மிக விரும்பியவனே, அறுமுகத்து ஆறுஇரு தோளால் வென்றி நறுமலர் வள்ளிப்பூ நயந்தோயே - ஆறு முகமும் பன்னிரண்டு கைகளும் உடையையாய்ச் சென்று அழகானே பிறமகளிரை வென்றவெற்றியினையுடைய வள்ளியை நயந்தோனே, கேளிர் கெழீஇச் சுற்ற எழீஇ நின்னைப் பாடும் பாட்டு அமர்ந்தோயே - தலைவியர் தம்மைப் பிரிந்துசென்ற தங் கணவர் விரைந்துவந்து புணர்ந்து பின்னர் நீங்காமைப்பொருட்டு யாழிசை எழுப்பி நின்னைப் பரவிப் பாடாநின்ற பாட்டினை விரும்புவோனே !;

(வி - ம்.) போர் மலிந்து - போர்த்தொழிலிலே மிக்குச் சென்று; அஃதாவது: "பாயிரும் பனிக்கடல் பார்துகள்படச் சேய்உயர் பிணி முகம் ஊர்ந்துபுக்கு அமருழக்கி" என்றவாறு. சூர் - சூரபதுமன் என்னும் அசுரன். அவன் கடலின் நடுவே மாமரமாக நின்றான் என்ப. அதற்கேற்ப 'மருங்கறுத்த' என்றார். மருங்கு - கிளை : சுற்றமுமாம். சுடர்ப்படை என்றது வேற்படையை.

கறை - களங்கம், குற்றம்; ஈண்டுக் கறுப்புநிறத்தைக் குறித்து நின்றது. சிறிதும் கறுப்புநிறம் விரவாது முழுதும் வெண்மைநிறமுடைய மேகம் என்றவாறு. இது நறுமணப்புகைக்கு உவமை என்க. "அகிலெழு நறும்புகை மஞ்சி னுடவும்" (சூளா. நகர - ௬) என்றார் பிறரும்.

நறை - அகில் முதலிய நறுமணப் பொருள்கள். அமர்தல் - விரும்புதல். நறுமலர் வள்ளிப்பூ என்றது, வள்ளிக்கொடிக்குள்ள அடைமொழி. அப் பெயருடைய வள்ளிக்காயிற்று. வள்ளியாகிய பூவினை நயந்தோயே என்க. வள்ளிப்பூ: ஆகுபெயர்: தோளால் என்புழி ஆல் உருபு ஒடு உருபின் பொருட்டு. தோளுடனே சென்று என்க. கேளிர் - கணவர். கெழீஇ - புணர்ந்து. சுற்ற என்றது பின் நீங்காது எம்மைச் சூழ்ந்தே இருக்கும்படி என்றவாறு. மகளிர் தங் கணவர் தம்மைப் பிரியாதிருப்பச் செவ்வேளை வேண்டிப் பாடுகின்ற வழக்கத்தை,

"கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதல்
மயிலியல் மடவரல் மலையர்தம் மகளார்
செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
அயன்மண மொழி யருளவர்மணம் எனவே.

"மலைமகள் மகனைநின் மதிநுதல் மடவரல்
குலமலை உறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுள்நின் னிணையடி தொழுதேம்
பலரறி மணமவர் படுகுவர் எனவே.

"குறமகள் அவளெம குலமகள் அவளொடும்
அறுமுக வொருவநின் அடியிணை தொழுதேம்
துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்
பெறுகநன் மணம்விடு பிழைமணம் எனவே."

(குன்றக்குரவை. பாட்டுமடை : ௧௫ - ௧௬ - ௧௭)

எனவரும் சிலப்பதிகாரத்தான் உணர்க.

பாட்டமர்ந்தோயே என்பதற்குப் பாட்டின்கண் இருப்பவனே எனினுமாம். என்னை? பாட்டின்கண் சுவையாக உணரப்படுவது இறைப்பொருளே ஆகலின், 'ஏழிசையும் இசைப்பயனும் ஆனான் கண்டாய்' எனப் பெரியாரும் பணித்தனர்.

(பரிமே.) ௧௮. சூரைக் கிளையொடறுத்த.

உ௨. நறுமலர் வள்ளி என்பது தன் பொருட்கேற்ற அடை யடுத்துநின்ற ஆகுபெயர்.

உ௪. எழீஇ - யாழை யெழுவி.

**உ௫ - உ௮ : பிறந்த..................அறனமர்ந்தோயே**

(**இ - ள்.**) பிறந்த ஞான்றே - பெருமானே "நிவந்தோங்கு இமயத்து நீலப்பைஞ்சுனைப் பதுமத்துப் பாயலில்" நீ

கார்த்திகை மகளிர்பால் பிறந்த அவ் விளம்பருவத்திலேயே, சிறந்தோர் நின்னை உட்கி அஞ்சிய சீருடையோயே - நின்னை "எரியுமிழ் வச்சிரங்கொண்டு இகந்து வந்து எறிந்த அரிதமர் சிறப்பின் இந்திரன் முதலியோர் மிகவும் அஞ்சுதற்குக் காரணமான ஆற்றலுடைமையானே உண்டாகிய புகழினையுடையோனே !, இருபிறப்பு இருபெயர் ஈரநெஞ்சத்து ஒருபெயர் அந்தணர் அறன் அமர்ந்தோயே - உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒருபிறப்புமாகிய இரண்டு பிறப்பினையும் அப்பிறப்பாலே வந்த இரண்டு பெயரினையும் அருளுடைய நெஞ்சத்தினையும் ஒப்பற்ற புகழினையும் உடைய அந்தணரது வைதிக அறத்தைப் பொருந்தியவனே ;

(வி - ம்.) முருகப்பெருமான் தோன்றியபொழுதே இந்திரன் முதலிய தேவர்கள் அப் பெருமானை எதிர்த்து ஆற்ருது அஞ்சினமையை இந் நூல் ஐந்தாம் பாடலின்கண்,

"பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே
அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன்
எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென
அறுவேறு துணியு மறுவ ராகி
ஒருவனை வாழி யோங்குவிறற் சேஎய்
ஆராவு டம்பினீ அமர்ந்து விளையாடிய
போரால் வருங்கைக்குப் புரந்தரன் உடைய." (ௌ0 - ௬)

எனவரும் பகுதியிற் காண்க.

பிறந்த ஞான்றே என்றது, இளங்குழவிப் பருவத்திலேயே என்றவாறு. உட்கி அஞ்சிய: ஒருபொருட் பன்மொழி; நிவந்தோங்கிய என்ருற்போன்று; மிகவும் அஞ்சி என்க. சிறந்தோர் - தேவர்கள். ஈரநெஞ்சம் - அவருடைய நெஞ்சம் 'எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்ட நெஞ்சம்' என்றவாறு. ஒருபெயர் - ஒப்பற்ற புகழ். அஃதாவது, 'பார்ப்பனவாகை.' இதனை,

"ஓதம் கரைதவழ்நீர் வேலி யுலகினுள்
வேதம் கரைகண்டான் வீற்றிருக்கும்—ஏதம்
சுடுசுடர் தாளுகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து." (வாகை: ௯)

எனவரும் புறப்பொருள் வெண்பா மாலையானும் உணர்க.

அந்தணர் அறம் என்றது, ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்னும் அறுவகை ஒழுக்கமுமாம். அவற்றுள் சிறப்புப்பற்றி வேட்டல் ஒன்றனையே ஈண்டு அறம் என்பது சுட்டி நின்றதென்க. வைதிகஅறம் - வேத வொழுக்கம்.

(பரிமே.) உஎ. இருபெயர் - இரண்டுநாமம்.(?)

உக - கூஉ : அன்னை.................................பலவே

(இ - ள்.) அன்னை ஆகலின் - நீ அத் தன்மையுடையை யாதலால், யாம் நின்னை அமர்ந்து துன்னித் துன்னி வழி படுவதன் பயம் - அடியேங்கள் நின்னைப் பெரிதும் விரும்பி நின்னை அடுத்தடுத்து வழிபடாநின்றேம் அங்ஙனம் வழிபடுவது எப் பயனைக் கருதியோ என்பையாயின், அவை - அவ் வழிபாடு கள்தாமே, இன்னும் இன்னும் - மேலும் மேலும், நின் தொல் முதிர் மரபின் புகழினும் பல ஆகுக - நின்னுடைய மிகவும் பழைதாகிய மரபினையுடைய புகழ்களையுங் காட்டில் சாலப்பல ஆகுக என்பது கருதியேயாம் அருள்வாயாக ;

(வி - ம்.) அன்னை - அத் தன்மையுடையை. அமர்ந்து - விரும்பி. துன்னி - அடுத்து. வழிபடாநின்றேம், அங்ஙனம் வழிபடுவதன்பயம் பலவாகுதலே என்றவாறு. அவை - அவ் வழிபாடுகள். தொன்முதிர் - மிகவும் பழைய.

(பரிமே ) வாரும் என்பவர் சொற்போன்றன (கூ) என்றதனு லும், எழீஇப் பாடும் பாட்டமர்ந்தோயே (உச) என்றதனுலும் இப் பருவத்தே தலைமகன் வருமென்பது பட்டவாறு கண்டுகொள்க.

---

# பதினைந்தாம் பாடல்

## திருமால்

### பொருட் சுருக்கம்

**க - கச :** அறிவெல்லையால் அறியப்படாத புகழுடனே பொலிந்து நிலத்தைத் தாங்கும் சக்கரவாளமுதலாகத் தொல்லிசைப் புலவர்கள் ஆராய்ந்துரைத்த மலைகள் பற்பல உள்ளன; அப் பலவற்றுள்ளும் பசி வெம்மையாற்றி நிறைந்த பயன் பலவும் தரும் மலைகள் சிலவேயாம்; அவற்றுள்ளும் தெய்வங்கள் விரும்பும் மலைகள் ஒருசிலவே உள்ளன; அவற்றுள்ளும் மாயோனையும் பலதேவனையும் தாங்கும் திருமாலிருங்குன்றம் சிறந்ததாகும்.

**கரு - கஎ :** திருமால் அருள்புரிந்தாலன்றி வீறுபெறு துறக்கம் ஏறுதல் எளிதன்று; அரிதாகப் பெறத்தகுந்த துறக்கத்தை எளிதாகப் பெறச்செய்யும் அத் திருமாலிருஞ் சோலை மலையை யாம் ஏத்தக்கடவேம்.

**கஅ - உஅ :** அம் மலையினின்றும் பலதேவனுடைய திரு மார்பில் அணியப்பட்ட வெண்கடப்பமாலை போன்ற அருவி வீழ்வதனாலே சிலம்பாறு அழகுபெறும்; திருமாலிருஞ்சோலை என்னும் பெயர் உலகெலாம் பரவும்படி மகளிரும் மைந்தரும் காமம் விதைத்து விளைக்கும் யாமத்தின் இயல்பைத் தன்பாலுடைய இவ் விருங்குன்றத்திலே பொன்னுடைபுனைந்த திருமால் பலதேவனோடு அமர்ந்து நின்றருளும் திருக்கோலத்தை மாந்தர்களே எல்லீரும் நினைமின்! அக் குன்றத்தின் சிறப்பைக் கேண்மின்!

**ஙo - ஙச :** சுனைகளெல்லாம் நீலமலர் மலர்தலானும், அச் சுனையைச் சூழ அசோகும் வேங்கையும் மலர்தலானும் அம் மலை மாயோனை ஒத்து விளங்காநிற்கும்; அம் மலை கண்டோர் மயக்கறுக்கும் ஒரு தெய்வமே ஆகுங் கண்டீர்; ஆண்டுச் சென்று திருமாலைத் தொழமாட்டாதீர் அம் மலையையேனும் கண்டு தொழுமின்!

**ஙரு - சரு :** அம் மலையின்கண் மகவாலே தழுவப்பட்ட மந்தி ஒரு சிகரத்தினின்று ஒரு சிகரத்தே பாயவும், மயில்கள்

*அகவவும், குருக்கத்தி இலையுதிர அதன்கண் இருந்து குயில்கள் கூவவும், முழையிடத்தே எழுகின்ற எதிரொலி என்றும் ஒழியாது.*

சகூ - சஅ: *அதனை நும் மனைவியரோடும் இருமுது குரவரோடும் குழவிகளோடும் சுற்றத்தாரோடும் கூடித் தெய்வமாக மதித்துத் திசை நோக்கித் தொழுது செல்லுமின்.*

சக - ருஉ: *தாமரைபோன்ற திருக்கண்களையும், மேகத்தையும், நீலமணி முதலியவற்றையும் ஒத்த திருமேனியையும் உடையவனாய், எல்லா வுலகத்தும் வெளிப்பட்டு உயிர்க்கூட்டங்களின் பிறவித் துன்பத்தை அகற்றும் திருமால், அக்குன்றத்தே ஆர்வத்தோடு எழுந்தருளியிருக்கின்றான்.*

ருச - கூகூ: *திருமாலே! நீ துளவமாலையினையுடையை; நீலமலைபோன்றனை; ஒளிமிக வுடையை; ஒற்றைக்குழையினையுடையை; கருடக்கொடியை உடையை; கலப்பையை உடையை; சங்கு முதலிய ஐந்து திருப்படைக்கலனை யுடையை; இவ்வாறு வேதம் அவன் பெருமை கூறுதலானே யாமும் யாமறியளவையின் கூறித் திருமாலையும் பலதேவனையும் தொழுது அத் திருமாலிருஞ்சோலை மலையின் அடியிலுறைந்து வாழும் பேறு எமக்கு அருள்க! என வேண்டுவேமாக.*

புலவரை அறியாப் புகழொடு பொலிந்து
நிலவரை தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுதல் தொல்லிசை யமையும்
புலவராய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே பலவினும்
நிலவரை யாற்றி நிறைபயன் ஒருங்குடன்
நின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ் சிறந்தன தெய்வம் பெட்புறும்
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினும்
சிறந்தது, கல்லறை கடலுங் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம், வேறுவே றுருவின் ஒருதொழில் இருவர்த்
தாங்கு நீணிலை யோங்கிருங் குன்றம்
நாறிணர்த் துழாயோ னல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்

அரிதிற்பெறு துறக்க மாலிருங் குன்றம்
எளிதிற் பெறலுரிமை ஏத்துகஞ் சிலம்ப
அராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்
மராமலர்த் தாரின் மாண்வரத் தோன்றி
அலங்கு மருவி ஆர்த்திமிழ் பிழியச்
சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்
தாம்வீழ் காமம் வித்துபு விளைக்கும்
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மையிவ் வையிருங் குன்றத்து
மன்புனல் இளவெயில் வளாவவிருள் வளர்வெனப்
பொன்புனை உடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே
நினைமின் மாந்தீர் கேண்மின் கமழ்சீர்
சுனையெலா நீல மலரச் சுனைசூழ்
சினையெலாஞ் செயலை மலரக் காய்கனி
உறழ நனைவேங்கை ஒள்ளிணர் மலர
மாயோ ளொத்தஇன் னிலைத்தே
சென்றுதொழு கல்லீர் கண்டுபணி மின்மே
இருங்குன் றென்னும் பெயர்பரந் ததுவே
பெருங்கலி ஞாலத்துத் தோன்றியல் புகழது
கண்டுமயர் அறுக்குங் காமக் கடவுள்
மகமுயங்கு மந்தி வரைவரை பாய
முகிழ்முயங்கு முல்லை முறைநிகழ்வு காட்ட
மணிமரு ணன்னீர்ச்சினை மடமயில் அகவக்
குருகிலை உதிரக் குயிலினங் கூவப்
பகர்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்
நாநவில் பாடல் முழவெதிர்ந் தன்ன
சிலம்பிற் சிலம்பிசை ஓவா தோன்றார்க்
கடந்தட்டான் கேழிருங் குன்று;
தைய லவரொடுந் தந்தா ரவரொடும்
கைம்மக வோடுங் காத லவரொடும்
தெய்வம் பேணித் திசைதொழு தனிர் சென்மின்
புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்
வெளவற் காரிருண் மயங்குமணி மேனியன்

எவ்வயின் உலகத்துந் தோன்றி அவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்
அன்பது மேஎ இருங்குன் றத்தான்
கள்ளணி பசுந்துளவினவை கருங்குன் றனையவை
ஒள்ளொளியவை ஒருகுழையவை
புள்ளணி பொலங்கொடியவை
வள்ளணி வளைநாஞ்சிலவை
சலம்புரி தண்டேந்தினவை
வலம்புரி வயநேமியவை
வரிசிலை வயவம்பினவை
புகரிணர்சூழ் வட்டத்தவை புகர்வாளவை
எனவாங்கு
நலம்புரீஇ அஞ்சீர் நாம வாய்மொழி
இதுவென உரைத்தனெம் உள்ளமர்ந் திசைத்திறை
இருங்குன்றத் தடியுறை இயைகெனப்
பெரும்பெயர் இருவரைப் பரவுதும் தொழுதே.

**கடவுள் வாழ்த்து**

**இளம்பெருவழுதியார் பாட்டு; மருத்துவன் நல்லச்சுதனார் இசை; பண்ணோதிறம்.**

## உரை

க - எ : புலவரை........................குன்றவை சிலவே

(இ - ள்.) *புலவரை அறியாப் புகழொடு பொலிந்து - அறிவினது எல்லையாலே அறியப்படாத புகழுடனே விளங்கி, நிலவரை தாங்கிய நிலைமையில் பெயரா - நிலத்தினது எல்லையைத் தாங்காநின்ற நிலைமையினின்று நீங்காத, தொலையா நேமிமுதல் - கெடாத சக்கரவாளம் முதலாக, தொல் இசை அமையும் புலவர் ஆய்பு உரைத்த - பழைதாகிய புகழமைந்த நல்லிசைப்புலவர் ஆராய்ந்து கூறிய, புனை நெடுங் குன்றம் பல - கொண்டாடப்பட்ட நெடிய மலைகள் சிறப்புவகையானன்றிப் பொதுவகையாற் கூறுமிடத்துப் பல உள்ளன என்று கூறப்படும், அவைபலவே எனின் - அவர் கூறுமாற்றால் அம் மலைகள் பற்பல உள எனல் வாய்மையே என்றாலும், பலவினும் - அம் மலைகள் பலவற்றினும், நிலவரை ஆற்றி*

நிறைபயன் ஒருங்குடன் நின்று பெறநிகழும் குன்றவை சிலவே- இந் நிலவுலகத்துள்ள மக்களுடைய பசிவெப்பத்தை ஆற்றி மேலும் பொன் மணி மரம் முதலிய நிறைந்த பயன்கள் எல்லா வற்றையும் எப்பொழுதும் மக்கள் பெறும்படி பயன்படாநின்ற மலைகள் சிலவே யாகும்;

(வி - ம்.) புலவரை - அறிவெல்லை. மலைகள் நிலம் சலிப்பின்றி நிலைபெறும்படி செய்கின்றன என்பர் ஆதலின் 'நிலவரைத் தாங்கிய நிலைமையிற் பெயரா நேமிமுதல் நெடுங்குன்றம்' என்றார். இக்காரணத் தானே மலைகள் 'பூதரம்' எனவும் கூறப்படும். பூதரம் - பூமியைத் தரிப்பது.

நேமி - சக்கரவாளமலை. இது மலைகளுள் சிறந்தது என்பது பற்றி முற் கூறப்பட்டது. ஆய்பு - ஆராய்ந்து. புனைதல் - புகழ்ந்து கொண்டாடுதல். ஆற்றி என்ற வினைக்கேற்பப் பசிவெம்மை என்று பொருள் கூறப்பட்டது. நிறை பயன் என்றது - மலையிற்றோன்றும் பொருள்களை. அவை, பொன் மணி அகில் முதலியன.

(பரிமே.) இ. சிறப்புவகையாற் கூறுது பொதுவகையாற் பல வென்றுரைக்கின்: ஆங்கு - அசை.

எ - கச: சிலவினும்......................குன்றம்

(இ - ள்.) சிலவினும் - அச் சிலமலைகளுள்ளும், தெய்வம் பெட்புறும் - தெய்வங்கள் தாமே விரும்பும், மலர் அகல் மார்பின் மைபடி குடுமிய குலவரை சிலவே சிறந்தன - மலரை யுடைய அகன்ற தடங்களுடனே மேகங்கள் படியும் சிகரங்களை யுடைய குலமலைகள் சிலவே சிறப்புடையனவாகும், குலவரை சிலவினும் - அக் குலவரை சிலவற்றினுள்ளும், கல்லறை கடலும் கானலும் போலவும் - கல்லெனு முழங்கும் கடலும் அக் கடற்கரைப்பரப்பும் தம்முள் நிறம் வேறுபட்டாற் போல, வேறு வேறு உருவின் - தம்முள் வேறு வேறாகிய கருமையும் வெண்மையுமாகிய நிறத்தினையும், புல்லிய சொல்லும் பொரு ளும் போலவும் - பிரிவில்லாத சொல்லும் பொருளும் போலத் தம்முள் வேறுபடாத தொழிலினையும் உடைய, எல்லாம் இருவர்த் தாங்கும் - எல்லாப்பொருளும் தாமேயாகிய மாயோ னும் பலதேவனும் ஆகிய இருவரையும் தாங்காநின்ற, நீள் நிலை ஓங்கு இருங்குன்றம் சிறந்தது - நீண்ட நிலைமையினையுடைய புகழான் உயர்ந்த இருங்குன்றம் சிறந்ததாகும்;

(வி - ம்.) பெட்பு - விருப்பம். குலவரை என்றது சிறப்புடைய மலை என்றவாறு. கல்: ஒலிக்குறிப்பு. அறைகடல்: வினைத்தொகை. கானல் என்றது மணற்பரப்பினையுடைய கடற்கரையினை. கடல் மாயோனுக்கும், கானல் பலதேவனுக்கும் நிறம்பற்றிவந்த உவமை கள். "மாயவனும் தம்முனும் போலே மறிகடலும், கானலும்சேர் வெண் மணலுங் காணுயோ" (திணைமா - ருஅ.) எனவும், "மணிகிளர்

நெடுமுடி வானவனும் தம்முனும்போன், றணிகிளர் நெடுங்கடலும் கானலுந் தோன்றுமால்" (யாப் - வி. எசு. இ - வி. எஙூஅ மேற்.) எனவும் பிற சான்றோரும் ஓதுதல் உணர்க.

உரு - நிறம். வேறு வேறு - ஒன்றையொன்று முரணிய. ஒரு தொழில் - காத்தலாகிய ஓரேதொழில் என்க. மாயோன் - கருநிற முடையன்; என்றது கண்ணபெருமானை. தம்முன் - தமையன்; என்றது, நம்பி மூத்த பிரானை. (பலதேவன்) எல்லாம் தானேயாகிய மாயோன் எனக்கூட்டுக. தாங்கும் என்றது தாங்குதலருமைதோன்ற நின்றது;

"வேதங்கள் அறைகின்ற வுலகெங்கும் விரிந்தனவுன்
பாதங்கள் இவையென்னிற் படிவங்கள் எப்படியோ
ஓதங்கொள் கடலன்றி ஒன்றினோ டொன்றொவ்வாப்
பூதங்க டொறுமுறைந்தால் அவையுன்னைப் பொறுக்குமோ."
(விராதன் வதை - சஅ.)

என்றார் கம்பநாடரும்.

ஓங்கு - புகழானே ஓங்காநின்ற என்க. இருங்குன்றம் - திருமாலிருஞ் சோலைமலை.

(பரிமே.) கஉ. பிரிவில்லாத சொல்லும் பொருளும் போல.

கரு - கஅ: நாறிணர்..........................சிலம்ப

(இ - ள்.) வீறுபெறு துறக்கம் - வேறொன்றிற் கில்லாத சிறப்பினையுடைய மேனிலையுலகத்தின்கண், நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை - மணங் கமழாநின்ற பூங் கொத்துக்களையுடைய துளசி மாலையினை அணிந்த நம்பெருமான் திருவருள் செய்தவிடத்து ஏறுதலன்றி அருள் செய்யா விடத்து, ஏறுதல் எளிதோ - உயிர்கள் தம் முயற்சியானே ஏறுதல் இயல்வதன்றாம், அரிதில் பெறு துறக்கம் எளிதிற் பெறல் உரிமை - அங்ஙனம் பெறற்கரிய மேனிலையுலகினை எளிதாகப் பெறுதற் குரிமை நல்கும் சிறப்பினையுடைய, மாலிருங் குன்றம் சிலம்ப ஏத்துகம் - திருமாலிருங் குன்றத்தினை உலகத்தாரெல்லாரும் கேட்கும்படி ஏத்தித் தொழக்கடவேம்;

(வி - ம்.) இறைவனுடைய திருவருள் பெற்றார்க்கன்றித் துறக்கம் எய்தவியலாது. அவ் விறைவன் திருவருளை எளிதிற் கூட்டுவித்துத் துறக்கம் எய்துவிக்கும் சிறப்பு இருங்குன்றத்திற்கு உண்டு; ஆதலின் அதனை ஏத்துமாற்றானே யாம் அவ்வரிதுபெறு துறக்கத்தை எளிதாக எய்துவோமாக. எல்லோரும், கேட்கும்படி முழங்கி ஏத்துவேம் என்றவாறு. சிலம்ப - முழங்க. சிலம்ப என்றது, பிறரும் இதனை அறிந்து ஏத்தும் பொருட்டு என்பதுபடக் குறிப்பேதுவாய் நின்றது. ஏத்துகம்: தன்மைப் பன்மை.

இப் பகுதியில் "துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" என்பதனோடு,

"வான் ஏற வழிதந்த வாட்டாற்ருன் பணிவகையே
நான் ஏறப் பெறுகின்றேன் நரகத்தை நகுநெஞ்சே
தேனேறு மலர்த்துளவம் திகழ்பாதன் செழும்பறவை
தானேறித் திரிவான்றன் தாளிணையென் றலைமேலே."
(திருவாய்மொழி க௦-ப. சு: ரு)

எனவும்,

"அவனருளாலே அவன்ருள் வணங்கி" எனவும், "காண்பார்யார் கண்ணுதல் ஆய் காட்டாக்காலே" எனவும், நிகழும் பெரியோர் அருள் மொழிகளையும் நினைக.

(பரிமே.) கரு. நல்கினல்லது - வெளிப்பட்டுக் கொடுப்பினல்லது. என்று ஏத்துகின்ருர் :-

கசு - உசு : அராவணர்.............................மாந்தீர்

(இ - ள்.) அணர் கயந்தலை அரா தம்முன் மார்பின் - கிளர்ந்த மென்மையுடைய ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேடனின் அவதாரமாகிய நம்பி மூத்தபிரானுடைய திருமார்பின்கண் அணியப்பட்டு நாலுகின்ற, மராமலர்த் தாரின் மாண்வரத் தோன்றி - வெண்கடம்பின் மலராற்றெடுத்த மாலைபோல மாட்சிமையுண்டாகக் காணப்பட்டு, அலங்கும் அருவி ஆர்த்து இமிழ்பு இழிய - அசையாநின்ற தனது அருவி மிகவும் ஆரவாரித்து இழிதலானே, சிலம்பாறு அணிந்த - சிலம்பாற்றினை அழகு செய்த, சீர்கெழு திருவின் சோலையொடு மாலிருங் குன்றம் தொடர்மொழி - அழகு பொருந்திய திரு என்னும் சொல்லோடும் சோலை என்னும் சொல்லோடும் மாலிருங்குன்றம் என்னும் சொல் தொடர்ந்த மொழியாகிய, நாமத்தன்மை நன்கனம் படி எழ - திருமாலிருஞ் சோலைமலை என்னும் பெயரினது பெருமை நன்ருக இந் நிலவுலகத்தின்கண் பரவாநிற்ப, தாம் வீழ் காமம் வித்துபு விளைக்கும் யாமத்தன்மை - மகளிரும் மைந்தரும் தாம் ஒருவரை ஒருவர் விரும்புதற்குக் காரணமான காமத்தை விதைத்து அதன் பயனை விளைவிக்கும் கூதிர் யாமத்தைத் தனக்கு இயல்பாகவுடைய, இவ் ஐ இருங் குன்றத்து - இந்த வியக்கத் தக்க இருங் குன்றத்தின்கண்ணே, மன் புனல் இளவெயில் வளாவ இருள் வளர்வு என - நிலை பெற்ற குளிர்ச்சியை யுடைய இளவெயில் தன்னைச் சூழாநிற்ப அதனிடையே இருள் வளர்தலை ஒத்து, பொன்புனை உடுக்கையோன் - பொன்னுடையினை அணிந்து திகழ்பவனுகிய மாயோன், புணர்ந்து அமர் நிலை - நம்பி மூத்தபிரானேடு கூடி அமர்ந்து நிற்கின்ற திருக்கோலத்தை, மாந்தீர் நினைமின் - மாந்தர்களே எல்லீரும் நினைமின்கள் ;

(வி - ம்.) அணர் கயந்தலை அராத் தம்முன் எனக் கூட்டுக. அணர் - கிளர்ந்த ; கய - மென்மை. அரா - பாம்பு; என்றது ஆதி சேடனை. அராவின் அவதாரமாகிய தம்முன் என்க. தம்முன் என்றது முறைப்பெயர்ப் பொருட்டாய் நில்லாது பலதேவன் என்னும் பெயர்ப் பொருட்டாய் நின்றது. பலதேவன் - ஆதிசேடனுடைய அவதாரம் என்பது புராணம்.

மரா - வெண்கடம்பு. பலதேவன் மார்பின் வெண்கடப்பமாலை இருங்குன்றத்தினின்றும் வீழும் அருவிக்கு உவமை என்க. அலங்கும் - அசையாநின்ற. ஆர்த்திமிழ்பு : ஒருபொருட் பன்மொழி ; மிக ஆரவாரித்து என்க.

தன்கண் வீழும் அருவிகொண்டு சிலம்பாற்றை அணிசெய்த இருங்குன்றம் என முடிக்க. சீர் - அழகு. திருவிறொடு என ஓடு உருபை மூன்றுங் கூட்டுக. மால் குன்றம் என்னும் இரண்டு சொல் புணர்ந்த மொழியின்கண் முன்னின்ற சொல் திருவொடும் பின்னின்ற குன்றம் என்பது சோலையொடும் நிரலே தொடர்ந்த நாமம் என்றவாறு. எனவே திருமால் சோலைக் குன்றம் என்றாகும் அங்ஙனம் வழக்கின்மையின் அப்பொருளின் வழங்கும் திருமாலிருஞ்சோலைமலை என்பார் நாமம் என்றார். தன்மை - ஈண்டுப்பெருமை குறித்து நின்றது.

திருமாலிருஞ் சோலைமலை என்னும் நாமத்தின் பெருமை உலகெலாம் பரவ என்றது, அதன்பெயர் சொல்லி ஏத்துமளவானே இறைவன் திருவருள் நிரம்ப அருள்வான் என்பதனை உலகத்திலுள்ள மாந்தர் எல்லாம் அறியும்படி என்றவாறு. அந் நாமத்தின் பெருமையை,

> "திருமாலிருஞ் சோலைமலை என்றேன், என்னத்
> திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்."
> (திருவாய் - க0 : அ : க.)

எனவும்,

> "அருளையீ என்னம்மானே என்னும் முக்கண் அம்மானும்
> தெருள்கொள் பிரம னம்மானும் தேவர்கோனும் தேவரும்
> இருள்கடியும் முனிவரும் ஏத்தும் அம்மான் திருமலை
> மருள்கடியும் மணிமலை திருமாலிருஞ் சோலை மலையே."
> (திருவாய் - க0 : எ : எ.)

எனவும் நம்மாழ்வார் ஓதுமாற்றானும் உணர்க.

படி - நிலவுலகம். குறிஞ்சிக்கு யாமம் சிறுபொழுதாகலின், யாமத்தன்மை இருங்குன்றம் என்றார். நள்ளியாமம் போன்று எப்பொழுதும் இருண்டுள்ள சோலைகளையுடைய மலை என்றும் ஒருபொருள் தோன்றிற்று. ஐ - வியப்பு. இறைவனுடைய எனினுமாம்.

புனல் : குளிர்ச்சிக்கு ஆகுபெயர். இளவெயில் பொன்னுடைக்கும், இருள் மாயோனுக்கும் உவமைகள். நினைமின் என்றது நினையுமளவானே வீறு பெறு துறக்கம் ஏறுதல் எளிதாம் என்பது பட நின்றது. மாந்தராகப் பிறந்தோர் செய்யத் தகுந்த செயல் இதுவே என்பார் 'மாந்தீர்' என்றார்.

(பரிமே.) கக. அரவின் மெல்லிய தலையாற் கவிக்கப்பட்ட தம்முன்.

உகூ - ௬எ : கேண்மின்.......................கடவுள்

(இ - ள்.) கேண்மின் - இனி அத் திருமாலிருஞ் சோலை மலையினது சிறப்பைக் கேண்மின்!, சுனை எலாம் கமழ்சீர் நீலம் மலர - அம் மலையின்கண் உள்ள சுனையிடமெல்லாம் நறுமணங் கமழாநின்ற அழகிய நீலோற்பலம் மலராநிற்ப, சுனை சூழ் செயலை சினை எலாம் மலர - அச் சுனைகளைச் சுற்றிநிற்கும் அசோகமரத்தினது கிளைகள் எல்லாம் மலர்தலானும், காய் கனி உறழ - ஆண்டுள்ள காய்களும் பழங்களும் நிறம் மாறுபட, வேங்கை ஒள்ளிணர் நனை மலர - வேங்கைமரத்தினது ஒள்ளிய கொத்தின்கண் அரும்புகள் மலர்தலானும், மாயோன் ஒத்த இன்னிலைத்து - அம் மலை தானும் திருமாலை ஒத்த காட்சிக்கினிய தோற்றமுடைத்தாகும், பெருங்கலி ஞாலத்து இருங்குன்று என்னும் பெயர்பரந்த அது தொன்று இயல் புகழது - கடல் சூழ்ந்த நிலவுலகத்தின்கண் திருமாலிருஞ் சோலைமலை என்னும் பெயர் பரவிய அம் மலை அத்துணைப் பழைதாய் இயலுகின்ற புகழையும் உடையதாகும், கண்டு மயர் அறுக்கும் காமக்கடவுள்- அம்மலை தன்னைக்கண்ட வளவானே காண்பார்தம் மயக்கத்தைப் போக்குவதொரு வழிபடுங் கடவுளேயாகும், சென்று தொழுகல்லீர் கண்டு பணிமின்-அதனால் அம் மலைக்குச்சென்று அதன்கண் எழுந்தருளியிருக்கும் திருமாலை நேரிற்கண்டு வழிபடமாட்டாதீர் நும்மிடத்தேயிருந்தே நெடுந்தூரம் தோன்றும் அம் மலையையேனும் கண்டு வணங்குமின் ;

(வி - ம்.) செயலை - அசோகு. அவ் வேங்கையின் காய்களும் கனிகளும் நிறத்தான் மாறுபட என்க. நனை - அரும்பு.

நீலமலரைச் சூழ்ந்த அசோகமலர் அப் பெருமான் அணிந்துள்ள பொன்னுடைக்கு உவமை. மலையின்மேல் காயும் கனியும் மாறுபட மலர்ந்த வேங்கை அவன் மணிகள் வைத்திழைத்த பொன்றிரு முடிக்கு உவமை என்க.

பெருங்கலி: அன்மொழித் தொகை; கடல் என்னும் பெயராய் நின்றது. ஞாலம் - உலகம். காண்டற்கும் இனிதாகலின் கண்டு தொழுமின் என்பார், 'மாயோன் ஒத்த இன்னிலைத்து' என்றார்.

தொன்று இயல் - தொன்றுதொட்டு நடக்கும். மயர் - பிறப்பிற்குக் காரணமான மயக்கம். மயர் அறுக்கும் எனவே பிறவிப் பிணியை அறுத்து வீடுநல்கும் என்றவாறு. என்னை? "காம வெகுளி மயக்கம் இவைமூன்ற, னாமங் கெடக்கெடு நோய்" என்பவாகலின் காமவெகுளிகட்குக் காரணமான மயர்கெடவே பிறப்பு அறும் என்க.

(பரிமே.) ௬ரு - சு. பெருங்கலி ஞாலத்து இருங்குன்றென்னும் பெயர்பரந்த அத்துணையே பழைதாய் இயல்கின்ற புகழையுடைய அது.

௬எ. காமக்கடவுள் - வழிபடுதெய்வம்.

**௫அ - சகு : மகமுயங்கு...................கேழிருங் குன்று**

(இ - ள்.) மக முயங்கு மந்தி - குட்டியாலே தழுவப்பட்ட குரங்கு, வரை வரை பாய - ஒரு சிகரத்தினின்று மற்றொரு சிகரத்திலே தாவாநிற்ப, முகிழ் முயங்கு முல்லை முறை நிகழ்வு காட்ட-அரும்புகள் நெருங்கின முல்லை மகளிரின் கற்பு நிகழ்ச்சியைக் காட்ட, சினை மணிமருள் நன்னீர் மடமயில் அகவ - மரக்கிளைகள் தோறும் நீலமணியை ஒத்த நிறமுடைய நன்ருகிய நீர்மையுடைய மயில்கள் இருந்து அகவாநிற்ப, குயிலினம் குருகு இலை உதிரக் கூவ - குயில்கள் குருக்கத்தியின் இலைகள் உதிரும்படி அதன்கட் புகுந்திருந்து கூவாநிற்ப, பகர் குழல் பாண்டில் இயம்ப அகவுநர் நாநவில் பாடல் முழவு எதிர்ந் தன்ன - சுருதியை உணர்த்துகின்ற குழலும் தாளமும் இயம்ப அவ் வோசையினைப் பாடுவாரது மிடற்றுப்பாடல் முழவு என்னும் இவற்றின் இசை சென்று எதிர்ந்தாற் போன்று, ஒன்ருர்க் கடந்து அட்டான் கேழ் இருங்குன்று - அவுணரை நேர்நின்று போர்செய்து கொன்றவனது நிறத்தையுடைய குன்றத்தின்கண், சிலம்பில் சிலம்பு இசை ஓவாது-முழைஞ்சில் முழங்குகின்ற எதிரொலி ஒழியாது ;

(வி - ம்.) குயில், குழல்ஒலியும் மிடற்றுப்பாடலும் போலக் கூவா நிற்ப, மயில் தாள வொலியும் முழவொலியும்போல அகவா நிற்ப, அவ்விசையினை எதிர இவ்விருவகை யிசையானும் குன்றின்முழையில் உண்டாகும் எதிரொலி என்றும் ஒழியாது என்க.

மக - குட்டி. மந்தி - பெண் குரங்கு. வரை - சிகரம். ஒரு சிகரத்திலிருந்து மற்றொரு சிகரத்திற் பாய என்க.

௬௧. 'முகிழ் முயங்கு முல்லை' எனப் பரிமேலழகர் பாடங் கொண்டார் என ஊகிக்க அவர் உரை இடந்தருகின்றது; ஆராய்க. முறை - கற்பு. நன்னீர் - நல்ல நீர்மை என்க. குருகிலை உதிரும்படி அதன்கட்புகுந்து என்க. பகர் - உணர்த்தா நின்ற; சுதியை உணர்த்தா நின்ற. பாண்டில் - தாளம். சிலம்பு - முழை. சிலம்பிசை - முழங்கும் இசை. கேழ் - நிறம். குன்று - ஈண்டு திருமாலிருஞ்சோலைமலை. ஒன்ருர் - அவுணர். கடந்தட்டான் - நேர்நின்று போர்செய்து கொன்ருன்.

(பரிமே.) இசை என்றவழி, குழலொலியும் மிடற்றுப்பாடலும் குயிலினத்தது கூவற்கும் அதன் எதிரொலிக்கும் உவமை. தாளவொலி யும் முழவொலியும் மயிலது அகவற்கும் அதன் எதிரொலிக்கும் உவமை.

மந்திபாய முல்லை காட்ட என நின்ற செயவெனெச்சங்கள் இசையோவா தென்னும் பிறவினை கொண்டன.

௪௯ - ௪௮ : **தையலவரொடும்......................சென்மின்**

(இ - ள்.) தையலவரொடும் தந்தாரவரொடும் - அம் மலையினை நுங்கள் மனைவியரோடும் நும்மையீன்ற இருமுதுகுரவரொடும், கைம்மகவொடும் - குழவிகளோடும், காதலவரொடும் - நும்பால் அன்புடைய சுற்றத்தாரொடும், தெய்வம் பேணி - தெய்வமாக மதித்து, திசை தொழுதனிர் சென்மின் - அம் மலை நிற்கின்ற திசையை நோக்கிக் கும்பிட்டுச் செல்லுமின் ;

(வி - ம்.) தையல் - அழகி. ஈண்டு மனைவி என்னும் பொருட்டு. தந்தார் - ஈன்றோர். கைம்மகவு என்பது மகார் என்னும் பொருட்டாய் நின்றது. முன்னர் மயர் அறுக்கும் தெய்வம் என்றவர் மீண்டும் அது தெய்வமே ஆதலின் தெய்வமாகக் கொண்டு தொழுமின் என வற்புறுத்தோதினர்.

இங்ஙனமே நம்மாழ்வாரும்,

"என்னை முற்று முயிருண்டு என்மாய வாக்கை யிதனுள்புக்கு
என்னை முற்றுந் தானேயாய் நின்ற மாய அம்மான்சேர்
தென்னன் திருமா லிருஞ்சோலைத் திசைகைகூப்பிச் சேர்ந்தயான்
இன்னும் போவே னேகொலோ என்கொல் அம்மான் திருவருளே."

(திருவாய் - ௧0 - எ : ௩)

என அருளிச்செய்தல் காண்க.

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பது'' பெரியோரியல்பாகலின் எல்லீரும் மனைவி முதலியவரோடு தொழுது சென்மின் என்றார்.

தொழுதனிர் : முற்றெச்சம். தொழுது என்க.

௪௯ - ௫௩: **புவ்வத்தாமரை................இருங்குன்றத்தான்**

(இ - ள்.) புவ்வத் தாமரை புரையும் கண்ணன் - தனது திரு உந்தித்தாமரையையே ஒக்கும் திருக்கண்ணையுடையனும், வெளவல் கார் இருள் மணிமயங்கு மேனியன் - நீரைக் கவர்தலையுடைய மேகம் இருள் நீலமணி என்னும் இவைபோன்ற திருமேனியுடையனும், எவ்வயின் உலகத்தும் தோன்றி - எல்லா உலகத்தினும் வெளிப்பட்டு, அவ்வயின் மன்பது மறுக்கத் துன்பம் களைவோன் - அவ்வவ் விடத்துமுள்ள உயிர்க்கூட்டங்களின் மறுக்கத்தைச் செய்யும் பிறவித் துன்பத்தைக் களைவோன், அன்பது மேஎ இருங்குன்றத்தான் - அன்புபட்டு அத்திருமாலிருஞ் சோலைமலையிடத்தே எழுந்தருளியிருக்கின்றான் ஆதலால் ;

(வி - ம்.) புவ்வம் - உந்தி. புரையும் - ஒக்கும் : வெளவல் - கடல் நீரை வெள்வுதலையுடைய என்க. கார் - மேகம் ; மணிமுயங்கும் என மாறுக. காரோ காரிருளோ நீலமணியோ எனக் கண்டோர் மயங்கு

தற்குக் காரணமான திருமேனி என்க. ஏழேழுலகமும் என்பார் 'எவ்வயின் உலகத்தும்' என்றார்.

இனி, எல்லா உலகத்தினும் பல்வேறு சமயம் பற்றிவாழும் மக்கட் கூட்டத்தே அவ்வச் சமயத் தெய்வமாய் வெளிப்பட்டுப் பிறவித் துன்பம் போக்குவோனாகிய கண்ணன் எனினுமாம். மன்பது - உயிர்த் தொகுதி. மறுக்கம் - மயக்கம். மேஎ - பொருந்தி : குன்றத்தான் - குன்றத்தின்கண் உள்ளான்.

(பரிமே.) ௪௧. புவ்வம் - நாபி : புவ்வம் என்பது பாகதச் சிதைவு.

இவ்வளவும் குன்றத்தை ஏத்திக் கண்டார்க்கும் அதன் சிறப்புக் கூறி, மேல் அதன்கணின்ற இருவரையும் வாழ்த்தி வேண்டிக்கொள் கின்றார்.

௫௪ - ௬௨ : **கள்ளணி......................எனவாங்கு**

**(இ - ள்.)** கள் அணி பசுந் துளவினவை - தேன்துளிக் கும் அழகிய பசிய துளவமாலையினையுடையை, கருங்குன்று அனையவை - கரியமலையை ஒத்தனை, ஒள் ஒளியவை - மிக்க ஒளியினையுடையை, ஒருகுழையவை - ஒற்றைக்குழையினை யுடையை, புள்அணி பொலம் கொடியவை - கருடப்பறவை எழுதிய அழகிய பொன்கொடியினை யுடையை, வள்அணி வளை நாஞ்சிலவை - கூர்மை அணிந்த வளைந்த கலப்பையினை யுடையை, சலம்புரி தண்டு ஏந்தினவை - சினமிக்க தண்டப் படையினை ஏந்தினை, வலம்புரி வய நேமியவை - வலம்புரிச் சங்கினொடு வெற்றிமிக்க ஆழிப்படையினையும் உடையை, வரி சிலை வய அம்பினவை - வரிந்த விற்படையுடனே வெற்றிமிக்க அம்புகளையுமுடையை, புகர்இணர் சூழ் வட்டத்தவை - புள்ளி ஒழுங்குசூழ்ந்த பாராவளையினையுடையை, புகர் வாளவை-புள்ளி கள் அமைந்த வாட்படையினையுடையை, என - என்று;

(வி - ம்.) கள் - தேன். அணி - அழகு : பசுந்துளவினவை முதலியன முன்னிலை ஒருமை வினைமுற்றுதல் (முன் கூறியதனால்) உணர்க. துளவு - துளசி : கருங்குன்று திருமேனிக்கும் திருவுருவத் திற்கும் உவமை. ஒள்ளொளி - மிக்கவொளி என்க. இறைவன் ஒளி யுருவமானவன் ஆகலின் ஒள்ளொளியை என்றார். புள் - கருடன். பொலம் - பொன். வள் - கூர்மை. நாஞ்சில் - கலப்பை. சலம் - சினம்.

இவ் வாழ்த்துக்களில் ஒள்ளொளியவை, ஒரு குழையவை, வளை நாஞ்சிலவை, தண்டேந்தினவை என்பன பலதேவனுக்குரியன. பசுந் துளவினவை, கருங்குன்றனையவை, புள்ளணி பொலங்கொடியவை, வலம்புரி வயநேமியவை வரிசிலை வயவம்பினவை வட்டத்தவை வாளவை என்பன கண்ணனுக்குரியன என்றுணர்க. வலம்புரி - வல மாக முறுக்குடைய சங்கு. ஈண்டுப் பாஞ்சசன்யம். வய - வெற்றி : நேமி, ஆழிப்படை, வட்டம், பாராவளை, சுழல்படை. ஈண்டுத் திரு

மாலின் ஐந்து படைக்கலனும் கூறப்பட்டமை அறிக. (௬௨) என்று வாய்மொழி உரைத்தெனம் என்றியையும். ஆங்கு: அசை.

௬௨ - ௬௬ : நலம்..............................தொழுதே

(இ - ள்.) அம் சீர் நாம வாய்மொழி - அழகிய சீரினையும் அஞ்சப்படுதலையும் உடைய வேதம், நலம்புரீஇ - தனக்கு நன்மையுண்டாதலை விரும்பி, இது என - அவர் பெருமை இத்தகையது என்று உரைத்ததாகலின், உள் அமர்ந்து இசைத்து - யாமும் உள்ளத்தானே பெரிதும் விரும்பி அவற்றில் யாமறிந்தவற்றைக் கூட்டி, உரைத்தனெம் - கூறினேமாய், பெரும்பெயர் இறை இருவரை - பெரும் புகழுடைய நம்பி மூத்த பிரானும் வாசுதேவனுமாகிய இறைவர் இருவரையும், தொழுது - வழிபாடுசெய்து, இருங்குன்றத்து அடியுறை இயைகென - எளியேங்கட்கு இத் திருமாலிருஞ்சோலைமலை அடியின்கண் உறைந்துவாழும் பேறு எய்துமாறு அருள்புரிக என்று, பரவுதும் - வேண்டிக்கொள்வோம்.

(வி - ம்.) வாய்மொழி - வேதம்: மெய்ம்மொழி என்பது கருத்து. வேதம் ஓதும் சான்றோர் வினை ஈண்டு வேதத்தின் மேற்றாகக் கூறப் பட்டது. எனவே வேதமுணர்ந்த வானவரும் மேலோரும் அவ் வேதங் கூறியாங்கு முறையே நின்னை வாழ்த்துவர்; அவர் வாழ்த்துவது நினக்கு நலம் உண்டாகும் பொருட்டன்று, நின்னை வாழ்த்துவது தமக்கே வீடுபேறு முதலிய நலந்தருவதாம் என்று கருதியே என்பார், 'வாய்மொழி நலம்புரீஇ இதுவென உரைத்தெனம்' என்றார். இதனை,

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனநின்பால்
தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டி."

(திருச்சதகம்)

எனவரும் மணிவாசகப்பெருமான் மணிவாசகத்தோடு ஒப்புக்காண்க.

புரீஇ - புரிந்து: விரும்பி. நாமம் - அச்சம்: வேதம் தன்னைப் பயில்வார்க்கு அஞ்சவேண்டுவன இவை என்று காட்டி அஞ்சுவித்த லான் நாமவாய்மொழி என்றார். "அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்" எனவரும் திருக்குறளும் ஈண்டு நினைக.

உரைத்தெனம் - உரைத்தேமாய்: யாமும் என எழுவாய் வருவித் தோதுக. உள்ளமர்ந்து - உள்ளத்தானே பெரிதும் விரும்பி. 'உள்ளம் உள்கலந்து ஏத்த வல்லார்க் கல்லாற் கள்ளம் உள்ளவர்க்கு' இறைவன் அருளானாகலின் 'உள்ளமர்ந்து' என்றார். இசைத்து என்றது, அவ் வாய்மொழி உரைப்பதுபோன்று முறையானன்றி அங்குமிங்குமாக யாம் எம் சிற்றறிவினாலே அறிந்தவற்றைக் கூட்டி என்பதுபட நின்றது.

இறைவன் உறையும் திருப்பதியில் வாழுதலை பெறும்பேறுக அடியார் கருது மியல்பினை,

" ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்கமிடத் தான்தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே."
............ ............ ............ ............

" உம்பருல காண்டு ஒருகுடைக் கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்
செம்பவள வாயான் திருவேங் கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே."
(ச - ஆம் திருமொழி : க - கo)

எனவரும் குலசேகர ஆழ்வார் பத்திச்சுவை பழுநிய திருமொழியானும் உணர்க.

(பரிமே.) சுஎ. தனக்கு நன்மையை விரும்பி அஞ்சப்படுதலை யுடைய வேதம்.

சுஅ. அறிந்தவற்றைக் கூட்டி உரைத்தேமாய்.

# பதினாறாம் பாடல்

## வையை

### பொருட் சுருக்கம்

இப் பாடல்: ஒரு தலைவன் காதற்பரத்தையுடன் நீராடி வந்து தோழியின்பால் வாயில்வேண்ட அவள், வையைநீர் விழாவை அவனுக்குக் கூறுவாள் போன்று அவன் பரத்தமையைக் குறிப்பாற் கூறி வாயின்மறுப்பாளுடைய கூற்றாக அமைந்துளது.

**க - ச:** வையையாற்றின்கண் நீர்பெருகி மலையிடத்துள்ள மிளகு சந்தனமரம் முதலியவற்றையும் பிற பொருள்களையும் கொணர்ந்து பாண்டியன் வழங்குவதுபோல அலைகளாலே கரையிடத்தே வீசாநிற்கும்.

**ரு - கக:** நீர்முத்துவடம் மத்தகநித்திலம் பொன்னணி இளஞ்சிறார் மூஞ்சம் முதலியவற்றைக் கொணர்ந்து துறைகடோறும் பெருகாநின்றது; வயல்கள அந் நீரானே நாடக அரங்கம்போன்று அழகுபெற்றன; பூம்பொழில்கள் தமக்கு விருந்தளித்த அந்நீர்க்கு எதிர்விருந்தளிப்பன போன்று அதற்கு நறிய மலர்களை வழங்கின; அந்நீரானே சோலைகளினும் குளங்களினும் ஆற்றிடைக் குறையினும் வண்டுகள் தேன் உண்டு பாடும்படி மலர்கள் மிக்குத் திசையெலாம் பொலிவுற்றன.

**உ0 - ௩க:** வையைக் கரைக்கண் நீராடிநின்ற காதற் பரத்தையின்மேல் அவளுடைய ஆயமகளிர் அரக்குநீரை மூங்கில் சிவிறியால் வீசினர்; அந் நீர் அப் பரத்தையின் கொங்கையின் மேற்பட்டது; அதனை அவள் துடையாது தனது ஆடையின் தானையால் ஒற்றி நின்றனள்; அப்பொழுது அவள்பால் தலைவன் வந்தனன்; அவன் வரவினைக் கண்ட தோழியர் 'ஐய இவள் பூப்பெய்தினள்; அவளை அணுகாமல் அகலப்போ!' என்றனர்; அவன் உண்மையுணர்ந்து நகைத்து அக் காதற் பரத்தையுடனே இல்லிற்கேகி அவ் வரக்குநீரைத் துடைத்து அவளுடன் கூடி மகிழ்ந்தான்; தோழியர் இல்லிலுள்ளார் கேட்கும்படி நங்கை பூத்தனள் பொலிக என்று அசதியாடினர்; அதுகேட்ட காதற்பரத்தை நாணினள்; இங்ஙனம் நாணும்படி செய்வது எப்பொழுதும் இவ் வையையின் இயல்பேயாகும்.

௩௨ - ௪௭ : மேலும் ஒருதலைவன் கள்ளாலும் நீராட்டாலும் புலவியாலும் சிவந்த பரத்தையர் கண், மேலும் சிவக்கும்படி நீராடுங்கால் அப் பரத்தையரை அடுத்தடுத்துத் தழுவினன்; அவன் மார்பின்கண் குங்குமக்குழம்பு அழிந்ததும் அழியாதது மாகக் காணப்பட்டமையானே அவன் தோற்றம் மூங்கிலாலே தாக்குண்டு தேன்ஒழுகும் மலையின் தோற்றத்தை ஒத்தது; இங்ஙனம் தோன்றச்செய்வதும் இவ் வையையின் இயல்பேயாம்.

௪௮ - ௪௯ : மலையின்மேல் முகில் முழங்கிய அளவானே, இவ் வையையின்கண் நீர் பெருக அலைகள் கரையை மோதி ஆரவாரிக்கும்.

௫௦ - ௫௫ : வையையே! மைந்தரும் மகளிரும், பொருள்களைத் தானம்பண்ணி அதன் பயனாகிய போகத்தை நுகர வேண்டி நாடோறும் ஆடுதலால், அவர் கையுறையாகிய பொன்மீன் முதலியவும், அவர் அணிந்த சாந்தும் மாலையும், ஈர ஆடையைப் புலர்த்தும் புகையும், நினக்குத் தரும் உண்டியும் இடையறாமல் மழை மறாதொழிக; அம் மழையினாலே வெள்ளம் பெருகி நினக்கு என்றும் வற்றாதொழிக.

கரையே, கைவண் தோன்றல் ஈகை போன்மென
மைபடு சிலம்பிற் கறியொடுஞ் சாந்தொடும்
நெய்குடை தயிரி னுரையொடும் பிறவொடும்
எவ்வயி னானு மீதுமீ தழியும்
துறையே, முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்
பொலம்புனை யவிரிழை கலங்கலம் புனன்மணி
வலஞ்சுழி யுந்திய திணைபிரி புதல்வர்
கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தத்தந் துணையோ டொருங்குட னாடும்
தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே
செறுவே, விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலிற்
படுகண் இமிழ்கொளை பயின்றனர் ஆடும்
களிநாள் அரங்கின் அணிநலம் புரையும்
காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉ
நரந்த நறுமலர் நன்களிக் கும்மே
கரைபொழுது தீம்புனற் கெதிர்விருந் தயர்வபோற்
கானலங் காவும் கயமுந் துருத்தியுந்தேன்
தேனுண்டு பாடத் திசைதிசைப் பூநலம்

பூத்தன்று வையை வரவு;
சுருங்கையின் ஆயத்தார் சுற்று மெறிந்து
குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்
பெருந்தகை மீளி வருவானைக் கண்டே
இருந்துகிற் றானையி னேற்றிப் பொருந்தலை
பூத்தன ணீங்கெனப் பொய்யாற்றால் தோழியர்
தோற்றமோர் ஒத்த மலர்கமழ் தண்சாந்தின்
நாற்றத்திற் போற்றி நகையோடும் போத்தந்
திருங்கடற் கூங்கிவரும் யாறெனத் தங்கான்
மகிழக் களிப்பட்ட தேன்றேறன் மாற்றிக்
குருதி துடையாக் குறுகி மருவினியர்
பூத்தன ணங்கை பொலிகென நாணுதல்
வாய்த்தன்றால் வையை வரவு;
மலையின் இழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க்
கரைமரஞ் சேர்ந்து கவினி மடவார்
நனைசேர் கதுப்பினுள் தண்போது மைந்தர்
மலர்மார்பிற் சோர்ந்த மலரிதழ் தாஅய்
மீனாரம் பூத்த வியன்கங்கை நந்திய
வானம் பெயர்ந்த மருங்கோத்தல் எஞ்ஞான்றும்
தேனிமிர் வையைக் கியல்பு;
கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்
ஒள்ளொளி சேய்தா ஒளிகிளருண் கட்கெண்டை
பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்
சென்னீர் வீவயிற் றேன்சோரப் பன்னீர்
அடுத்தடுத் தாடுவார் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தார் அகலத்தான்
எடுத்தவேய் எக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலுந் தோற்றம்
கொடித்தேரான் வையைக் கியல்பு;
வரையார்க்கும் புயல்கரை
திரையார்க்குமித் தீம்புனல்
கண்ணியர் தாரர் கமழ்நறுங் கோதையர்
பண்ணிய வீகைப் பயன்கொள்வா னுடலால்
நாணு லுறையு நறுஞ்சாந்துங் கோதையும்

பூத்த புகையும் அவியும் புலராமை
மறுஅற்க வான மலிதந்து நீத்தம்
(ருரு) அருஅற்க வையை நினக்கு.

என்பது, காதற்பரத்தையுடன் புனலாடிய தலைமகன் தோழியை வாயில்வேண்ட அவள் புனலாடியவாறு கூறி வாயில் மறுத்தது.

நல்லழிசியார் பாட்டு; நல்லச்சுதனுர் இசை; பண் நோதிறம்

உரை

க - கo: கரையே................................வருமே

(இ - ள்.) (ககூ) வையை வரவு - வையையாற்றின்கண் வெள்ளம் பெருகிவரும் வருகையினுலே, மைபடு சிலம்பின் கறியொடும் சாந்தொடும் - முகில்கள் படியும் மலையிடத்துளவாகிய மிளகினேடும் சந்தனமரத்தினேடும், நெய்குடை தயிரின் நுரையொடும் - வெண்ணெய் படுதற்பொருட்டுக் கடைதற்குக் காரணமான தயிர்போன்ற நுரையொடும், பிறவொடும் - மலர் பொன் மணி முதலிய பிறபொருள்களோடும் அந் நீர் பெருகி, கரை எவ்வயினுனும் - வையையின் கரையில் எவ்விடத்தும் அப் பொருள்களை, கை வண் தோன்றல் ஈகை போன்ம் என - இச் செயல் கைவண்மையுடைய பாண்டியனது ஈகையையே ஒப்பதாம் எனக் கண்டோர் கூறும்படி, மீதுமீது அழியும் - மேலும் மேலும் வாரிவாரித் தன் அலைக்கரங்களாலே வீசி அக்கரையினை அழியாநிற்கும், துறை - இனிப் பிற நீராடுந் துறைகடோறும், வலஞ்சுழி கலங்கல் அம் புனல் - வலம் சுழித்துப் பாயும் கலங்கலையுடைய அழகிய அந் நீர் ஆண்டாண்டு நீராடுவாரது, நேர்பு முத்துப்புணர் காழ் மத்தக நித்திலம் பொலம்புனை அவிர் இழை மணிஉந்திய - தம்முள் ஒத்து முத்துச் சேர்ந்த வடம் தலைக்கோலமுத்து பொன்னுலே இயற்றிய விளக்கமுடைய அணிகலன்கள் மணி முதலிய தன்னுல் உந்தப்பட்டவற்றை, திணைபிரி புதல்வர்-தம் இல்லிடத்தினின்றும் பிரிந்து தமியராய் நீராடிய சிறுவர்களுடைய, கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇ- மெல்லிய தலைமுச்சியிடத்தனவாகிய முஞ்சம் என்னும் அணிகலனேடு சேரக்கொண்டு, அரிதத்துகண்ணுர் தம்தம் துணையோடு ஒருங்குடன் ஆடும் தலைத்தலை வரும் - செவ்வரி கருவரி ஓடிய கண்களையுடைய மகளிர் தங்கள் தங்கள் காதற் றுணைவரோடே

ஒருங்கு கூடி நீராடாநின்ற மதுரையிடத்து நீர்த்துறை தோறும் வாராநிற்கும் ;

(வி - ம்.) வையையில் வெள்ளம் வந்த வருகையின்கண் நீர் தோன்றல் போன்ம் எனக் கறி முதலியவற்றை அலையானே கரையின் எவ்வயினுனும் மீது மீது வீசி அதனை அழியாநிற்கும். வலஞ்சுழித் தோடும் அக் கலங்கலம்புனல் தான் வரும்வழியில் ஊர்தொறும் துறையில் ஆடுவார் முத்துநேர்பு புணர்காழ் முதலியனவாகத் தான் உந்தியவற்றைப் புதல்வர் முஞ்சமொடு தழீஇக்கொண்டு மதுரை யிடத்தே கண்ணார் துணையோடாடும் தலைத்தலைவரும் என இயைபு காண்க.

இப் பகுதியின்கண் பிரித்து கூட்டப்பட்டவற்றையும் அவாய் நிலையான் வருவித்துக் கூறப்பட்டவற்றையும் உணர்க.

கைவண் தோன்றல் - கைவண்மையிற் சிறந்த தலைவனாகிய பாண்டியன் என்க. தோன்றல் - தலைமைத்தன்மையுடையோன் : யாவரினும் மிக்குத் தோன்றுபவன் என்பது பொருள். மை - முகில். சிலம்பு - மலை ; ஈண்டுச் சையமலை என்க. கறி - மிளகு. சாந்து - சந்தனமரம். நெய் - வெண்ணெய். வெண்ணெய் குடைதற்குக் காரணமான தயிர் என்க. தயிர் நுரைக்கு உவமை. பிறவென்றது, பிற மரஞ் செடிகொடிகளும் மலர் காய்கனி பொன்மணி முதலியனவும் என்க. எவ்வயினுனும் - எவ்விடத்தும் : அழிக்கும் எனற்பாலது அழியும் என நின்றது. நேர்தல் - தம்முள் உருவொத்தல் : நேர்பு முத்துப்புணர் என மாறுக. காழ் - வடம். மத்தகநித்திலம் - தலைக் கோலமாகிய முத்தணிகலன்.

திணைபிரிபுதல்வர் என்றது, வீட்டினின்றும் தமியராய்ச் சென்ற சிறார் என்றவாறு. வலஞ்சுழி கலங்கல் அம்புனல் என மாறுக. உந்திய: பலவறிசொல் : உந்தப்பட்டவற்றை முஞ்சமொடு தழுவி எனக் கூட்டுக. கயந்தலை - மெல்லிய தலை. முஞ்சம் - ஒருவகைத் தலைக் கோலம். அரி தத்து கண்ணார் என மாறுக. செவ்வரி கருவரி ஓடிய கண்ணையுடைய மகளிர் என்க. இவர் மதுரைக்கண் வையைத்துறையில் ஆடுவோர்.

வையைநீர் வழியிலுள்ள துறைதொறும் ஆடுவார் அணிகலன் களைக் கவர்ந்து மதுரைமகளிர்க்குப் பரிசிலாக ஏந்தித் தலைத்தலை வரும் என்பது கருத்து. தலைத்தலை-துறையிடந்தோறும் துறையிடந்தோறும் என்க.

(பரிமே.) ௪. நீர்பெருகல் என்பது அவாய் நிலையான் வந்தது.

௫. தலைக்கோலமுத்து.

௭. இல்வாயில் போந்து நீராடும் புதல்வர். திணைபிரிதல் - இல்லினின்று சேறல்.

௧௧ - ௧௩ : **செறுவே..............................பூந்தன்று**

**(இ - ள்.)** செறு - கழனிகள், விடுமலர் சுமந்து பூநீர் நிறை தலின் - மலர்ந்த பூக்களைச் சுமந்து பொலிந்த வையை நீர் புக்கு

நிறைதலாலே, படுகண் இமிழ்கொளை பயின்றனர் ஆடும்-இசை தோன்றுதற் கிடமான முழவு முதலிய இசைக்கருவிகளின் கண்ணிடத்தே எழாநின்ற ஒலியையும் பாட்டினையும் பயின்ற ஆடன்மகளிர் கூத்தாடுகின்ற, களிநாள் அரங்கின் அணிநலம் புரையும்-மகிழ்தற்குரிய நாளிலே இயற்றிய கூத்தாட்டரங்கினது ஒப்பனை செய்யப்பட்ட அழகினை ஒக்கும், கா - பூம்பொழில்கள், கரைபு ஒழுகு தீம் புனற்கு - தமக்கு விருந்தளித்த முழங்கி ஒழுகாநின்ற இனிய வையை நீருக்கு, எதிர்விருந்து அயர்வ போல் - கைம்மாறாக எதிர்விருந்து அளிப்பனபோன்று, தலைத் தலை மிகூஉம் சுரும்பு இமிர் தாதொடு - மேலும் மேலும் நெருங்காநின்ற வண்டுகள் முரலுதற்குக் காரணமான பூந்தாதுகளுடனே, நரந்த நறுமலர் நன்கு அளிக்கும் - நரந்தம்போலக் கமழும் நறியமலர்களை மிகவும் வழங்காநிற்கும், கான் காவும் கயமும் துருத்தியும் - நறுமணமுடைய பூம்பொழில்களினும் குளங்களினும் ஆற்றிடைக் குறைகளிடத்தும், தேன் தேன் உண்டு பாட - வண்டுகள் கள்ளுண்டு களித்து இசை பாடும்படி, பூநலம் திசைதிசை பூத்தன்று - பூக்களாலே ஆகிய அழகு திசைகள் எங்கும் பொலியாநின்றது ;

**(வி-ம்.)** செறு-(மருதநிலத்துக்) கழனிகள். கழனிகள் விடுமலர் சுமந்த நீர்புக்குப் பொலிதலானே அரங்கின் அழகினை ஒத்த அழகுடையவாயின என்க. இது, கழனிகட்கு அரங்கினைச் சிலேடை வகையால் உவமை கூறியவாறு. இரண்டற்கும் பொதுத்தன்மை விடுமலர் சுமந்து பூநீர் நிறைதல் ஆகும். ஆகவே, கழனிக்குக் கொள்ளுங்கால் அவிழ்ந்த மலர்களைச் சுமந்து பொலிவுடைய (வையை) நீர் நிறைதலும், அரங்கிற்குக் கூறுங்கால் ஆடன் மகளிர் கமல வர்த்தனை காட்டுங்கால் தூவிய மலர்களைச் சுமந்து பூதர்க்கு இயற்றும் அருச்சனைப்பூவும் நீரும் நிறைதலாகவும் கொள்க.

விடுமலர் - மலர்ந்தமலர் : தூவியமலர். பூநீர் - பொலிவுடைய நீர்; பூவும் நீரும். கண் - இசைக்கருவிகளின் கண்ணும் துளையும் என்க. படுகண் - இசைதோன்றும் கண் என்க. இமிழ் - இசை. கொளை - பாட்டு. மக்கள் களியாட்டத்தின் பொருட்டே ஆடரங்கம் இயற்றப் படுதலான் 'களி நாள் அரங்கு' என்றார். களிக்கும்நாளில் இயற்றப் படும் அரங்கு என்க. அரங்கு - கூத்துமேடை. அணிநலம் - ஒப்பனை யழகு. புரையும் : உவமவுருபு.

கமலவர்த்தனை - ஆடலரங்கின் ஏறிய விறலியர் முதன்முறை கைகாட்டுதல். முதன்முறை காட்டும் கை தாமரைமலர் வடிவிற் காட்டப்படுதலான் இது கமலவர்த்தனை எனப்பட்டது. கமல வட்டனை என்றும், வட்டணை என்றும் வழங்கும். இதனை, "வலக்கால் முன் மிதித்தேறி வலத்தூணைச் சேர்ந்து கைத்தலங் காட்டுதல் கமல வர்த்தனை" என ஆசிரியர் நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணியின்கண் "காற்கொசி கொம்புபோலப் போந்து கைத்தலங்கள் காட்டி" (காந்தரு - கககூ) எனவரும் அடிக்கு வரைந்த நல்லுரையானும்,

"வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி" (எ: ௬௩) எனவரும் மணிமேகலையானும் உணர்க.

அங்ஙனம் கமலவர்த்தனை காட்டுங்கால் ஆடன்மகளிர் ஆண்டு எழினியில் எழுதப்பட்ட வருணப்பூதர்க்குப் பூவும் நீருந் தூவி வழி படுதல் உண்மையை, ஆசிரியர் அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரத்தே அரங்கேற்று காதையில், "தோற்றிய வரங்கிற் றொழுதன ரேத்த மேனிலை வைத்து" (௧௦எ) என்ற அடிக்கு, "இப்படியாகச் சமைக்கப் பட்டு நூல் சொல்லுகின்றபடியெல்லாம் தோற்றிய அரங்கென்க: அந்தணர் அரசர் வணிகர் சூத்திரர் என்று சொல்லப்பட்ட நால்வகை வருணப் பூதரையும் எழுதி மேனிலத்தே யாவரும் புகழ்ந்து வணங்க வைத்தென்க" என நிறுத்திய நல்லுரையானும் உணர்க.

மிகூஉம் - நெருங்கும். நரந்தம் - நரந்தம்பூவாற் செய்ததொரு நறுமணப்பொருள் என்க.

எதிர் விருந்தயர்வபோல் நறுமலர் நன்களிக்கும் என இயைக்க.

காக்கள் நீர் தமக்களித்த விருந்திற்கு எதிர்விருந்து அளிப்பன போன்று மலர் அளிக்கும் என்க.

'கானலங் காவும்' என்புழி கான் அல் அம் காவும் எனக் கண் ணழித்துக்கொள்க. இவற்றுள், கான் - மணம்: அல்லும் அம்மும் சாரியைகள். கயம் - குளம். துருத்தி - ஆற்றிடைக்குறை. தேன் தேனுண்டு என்புழி முன்னையது வண்டு; பின்னையது கள்.

வையை நீர் வரவானே யாண்டும் மலர்கள் நிறைய மலர்ந்து பொலிவுற்றன என்பதாம். பாட என்னும் செயவெனெச்சம் நெல் விளைய மழைபெய்தது என்புழிப் போலக் காரியப் பொருட்டாய் நின்றது. பூத்தன்று - பொலிந்தது.

(பரிமே.) ௧௩. விடுமலர் சுமத்தலும் பூநீர் நிறைதலும் வயலுக் கும் அரங்கிற்கும் சிலேடையாகலின், வயலுக்கு அவிழ்ந்த மலர்களைச் சுமந்து பொலிந்த நீர்நிறைதலாகவும், அரங்கிற்குக் கமலவர்த் தனைக்கண் தூவிய மலர்களைச் சுமந்து பூதர் அருச்சனைப் பூவும் நீரும் நிறைதலாகவும் உரைக்க.

௧எ. கானலங்கா வென்புழி அல்லும் அம்முஞ் சாரியை.

உ௦ - ௩௧: சுருங்கையின்....................வையைவரவு

(இ - ள்.) (௩௧.) வையை வரவு - இவ் வையையாற்றினது வெள்ள வருகை மேலும், ஆயத்தார் சுற்று சுருங்கையின் எறிந்து - நீராடிக் கரைசேர்ந்த மகளிர்களுள் வைத்து ஆய மகளிர் ஒரு காதற்பரத்தையைச் சூழ்ந்து நின்று மூங்கிலா லாகிய துருத்தியினாலே அரக்குநீரை வீசாநிற்ப, குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்-அப் பரத்தை தன்னுடைய தெங் கிளங்காயை ஒத்த முலைகளின் மேலே பட்ட பொலிவுடைய அவ் வரக்குநீரைத் துடையாதவளாய், இருந்துகில் தானையின்

ஒற்றி - தனது பெரிய ஆடையினது முன்றானையாலே ஒற்றி நிற்ப, பெருந்தகை மீளி வருவானைத் தோழியர் கண்டு - அப்பொழுது அக் காதற்பரத்தையின்பால் பேரழகும் மீளிமையும் உடைய தலைவன் வாராநின்றானாக அவனை அத்தோழியர் கண்டு, பொய்யாற்றால் - பொய் கூறு மாற்றானே அத்தலைவனை நோக்கி ஐய, பூத்தனள் பொருந்தலை நீங்கு என - நங்கை பூப்பெய்தினாள் ஆதலாலே அவளை அணுகாதேகொள் நீங்குக என்று கூறினாராக, தோற்றம் ஓரொத்த மலர்கமழ் தண்சாந்தின் நாற்றத்தில் போற்றி - அதுகேட்ட தலைவன் பூப்பின் தோற்றத்தை ஒருதலையாக ஒத்திருந்த மலர்மணங்கமழும் சிவந்த அவ்வரக்குநீரின் நறுமணத்தாலே பூப்பின்மையை அறிந்துவைத்தும், நகையொடும் போத்தந்து - தோழியர் செய்த அசதியாட்டாலே தோன்றிய நகைப்புடனே அவ் விடத்தினின்றும் போந்து, ஊங்கு இருங் கடற்கு இவரும் யாறு என - இவ்விடத்தே பெரிய கடலிற் புகுதற்குச் செல்லும் இவ் வையையாற்றுநீர் போன்று விரைந்து, தங்கான் மகிழ - அவ்விடத்தே சிறிது பொழுதும் தங்காமல் விரைந்து அப் பரத்தையோடும் இல்லிலே கூடி மகிழும்படி சென்று, களிப்பட்ட தேன் தேறல் மாற்றி - அவ் வில்லிடத்தே களிப்புமிக்க பழத்தேனாற் செய்த தேறலையும் பருகானாய், குறுகிக் குருதி துடையா - அக் காதற் பரத்தையை அணுகி அவள் குரும்பை முலைமேற்பட்ட குருதிநிற மமைந்த அரக்குநீரை நன்கு துடைத்து, மருவ - மருவாநிற்ப, இனியர் பூத்தனள் நங்கை பொலிக என - அத் தோழியர் இல்லினுள்ளார்க்கு இவ் வசதியாடலைக்கூறி நகைத்தற்பொருட்டு நம் நங்கை பூத்தனள் அவள் பொலிவுடையளாகுக என வாழ்த்தாநிற்ப, நாணுதல் வாய்த்தன்று - அதுகேட்டு அக் காதற்பரத்தை நாணுதலைப் பயந்தது ;

(வி - ம்.) சுருங்கை - குழாய், ஈண்டு நீர் வீசும் துருத்தி. இது மூங்கிலாற் செய்யப்படுதலின் 'வேய்' என்றார் உரையாசிரியர். ஆயத்தார் - தோழியர் கூட்டம். குரும்பை - தெங்கங் குரும்பை, பனங் குரும்பையுமாம். பூநீர் - மலர்மணமுடைய அரக்குநீர். எறிந்து என்னும் எச்சத்தை எறிய எனச் செயவெனெச்சமாக்குக. பூநீர் துடையாள் இருந்துகில் தானையான் ஒற்றி என இயைத்து நிற்ப என ஒரு சொல் வருவித்துக் கூறுக. இருந்துகில் - பெரியஆடை. தானை - ஆடையின் முகப்பு. பெருந்தகை - பெரிய அழகு. மீளி - மீட்கும் வன்மையுடைமை. பொருந்தலை - பொருந்தாதே !, அவளை அணுகாதே என்றவாறு. பூத்தனள் - பூப்பெய்தினள். பூத்தனள் என்றது பொருந்தாது நீங்குதற்கு ஏதுக்காட்டியவாறு. பொய்யாறு - பொய் பேசுநெறி. காட்சியாலே பூப்போடு பெரிதும் ஒத்துள்ள தண்சாந்து என்க. தோற்றத்தானே ஒத்திருப்பினும் அதன் மணத்தானே உண்மையறிந்து அவராடிய அசதிகுறித்து நகைத்து என்க.

இது தன்னை வாயில் வேண்டிய தலைமகனுக்குத் தோழி, அவன் வையையில் காதற்பரத்தையோடாடிய செய்தியையே பிறர் மேலிட்டுக் கூறுகின்றாள் என உணர்க.

குலமகளிர்க்காயின் இங்ஙனம் இழிந்தன கூறி அசதியாடல் பொருந்தாமையும், பரத்தையர்க் காயின் பொருந்துதலும் உணர்க.

பரத்தையோடு கூடும் ஆர்வ மிகுதியில் தேன்தேறல் பருகவும் மறந்தான் என்னும் நயம் உணர்க. மருவ என்னும் செயவெனெச்சத் திறு கெட்டு மரு என நின்றது. இனியர் என்றது பரத்தையின் ஆய மகளிரை. வையைக் கரையிற்றும் அசதியாடியதனை இல்லிலுள்ள முதுபரத்தையர்க்குக் கூறி நகைத்தற்பொருட்டு பூத்தனள் நங்கை பொலிகென அம் முதுமகளிர் கேட்பத் தோழியர் கூறினர் என்க. வாய்த்தன்று - வாய்த்தது. நாளும் தொழிலைச் செய்தது என்றவாறு. ஆல் : அசை.

(பரிமே.) இதுவும் வருகின்றனவும் காதற் பரத்தையைக் குறித்துக் கூறியன.

கூஉ - கூஅ : மலையின்......................வையைக் கியல்பு

(இ - ள்.) மலையின் இழி அருவி - மலையினின்றும் இழிந்த அருவி போந்து, கரைச் சார் சார் இணர் மல்கு மரம் சேர்ந்து கவினி - வையையினது இரண்டு கரையிடந் தோறும் இடந்தோறும் உள்ளனவாகிய பூங்கொத்துக்கள் நிறைந்த மரத்தைச் சேர்ந்து சேர்ந்து அவற்றது மலர்கள் உதிரப்பெற்ற மையாலே அழகு பெற்று மேலும், மடவார் கதுப்பினுள் நனை சேர் தண்போதும் - தன்கண் ஆடுகின்ற மடப்பமுடைய மகளிர் கூந்தலிலே நின்று சோர்ந்த தேன் சேர்ந்த குளிர்ந்த மலர்களும், மைந்தர் மலர் மார்பின் சோர்ந்த மலரிதழ் தாஅய் - மைந்தர்கள் அகன்ற மார்பினின்றும் சோர்ந்த மலர்களும் இதழ்களும பரக்கப்பட்டு, ஆரம்பூத்த மீன்வானம் நந்திய வியன் கங்கை பெயர்ந்த மருங்கு ஒத்தல் - முத்துப்போன்று பூத்த மீன்களையுடைய விசும்பின்கண்ணதாகிய பெருகிய அகன்ற கங்கை ஒழுகாநின்ற கூற்றை ஒத்தல், தேன் இமிர் வையைக்கு என்றும் இயல்பு - வண்டுகள் இசைபாடா நின்ற இவ் வையை யாற்றிற்கு எக்காலத்தும் இயல்பாகும்;

(வி. - ம்.) சார் - இடம் என்னும் பொருட்டு. இணர் மல்கு மரம் என்க. கவினி - அழகெய்தி. நனை - தேன். கதுப்பு - கூந்தல். கதுப்பினின்றும் சோர்ந்த என முன்னும் சோர்ந்த என்பதனைக் கூட்டுக. மலர் மார்பு : வினைத்தொகை. மலரிதழ் : உம்மைத்தொகை. ஆரம் - முத்து. ஆரம்பூத்த மீன் - முத்துப்போன்று பூத்த விண்மீன். ஆரம் பூத்த மீன் வானம் நந்திய வியன் கங்கை எனக்கூட்டுக. நந்திய - பெருகிய. வியன் - அகன்ற; பெயர்ந்த மருங்கு ஒத்தல் என்றது பெயர்ந்ததனை ஒத்தல் என்றவாறு. கங்கையின் எழிற் கூறுகளுள் வைத்துப் பெயர்ந்த எழிற் கூற்றினை ஒத்தல் என்பது கருத்து வானக்

கங்கையின் நீரொழுக்கினை வையையின் நீரொழுக்கு என்றும் ஒக்கு மென்க. தேன் - வண்டு.

(பரிமே.) மீனாகிய முத்துப் பூத்து விளங்கிய வானத்தின்கட் கங்கை பெயர்ந்த கூற்றை ஒத்தலுடைமை.

௩௧ - ௪எ : கள்வே......................இயல்பு

(இ - ள்.) ஒளிகிளர் உண்கண் கெண்டை - மகளிருடைய ஒளிமிக்க மையுண்ட கண்ணாகிய கெண்டைமீன், கள் புனல் புலவி இம் மூன்றினும் - கள்ளுண்டமை நீரில் ஆடினமை தங் காதலரோடு ஊடினமை என்னும் இம்மூன்று காரணங்களா னும், ஒள் ஒளி சேய்தா - சிவந்த ஒள்ளியநிறம் மேலும் சிவவா நிற்பவும், பல் வரி வண்டினம் வாய் சூழ் கவினொடும் - பல வாகிய வரிகளையுடைய வண்டுக்கூட்டம் தமது வாயினில் சூழ்ந்து மொய்க்கும் அழகுடனே, செல் நீர் வீவயின் தேன் சோர - கூந்தலினின்று நீங்கும் நீர்மையுடைய மலரினின்றும் தேன் துளியாநிற்பவும், பல்நீர் ஆடுவார் அடுத்தடுத்துப் புல்ல - ஒருதலைவன் மிக்க நீரின்கண் ஆடும் பரத்தையரை மீண்டும் மீண்டும் தழுவுதலானே, குழைந்து வடுப்படுமான் மதச் சாந்து ஆர் அகலத்தான் - நெகிழ்ந்து அழிந்ததும் அழி யாததுமாகிய கத்தூரிக் குழம்பு பொருந்திய மார்பையுடையவ னை அத் தலைவன் தோற்றம், எடுத்த வேய் - பனியாலே வளைந்து நின்று அப் பனிப்பாரம் உலர்ந்தவுடனே காற்றானே எடுக்கப்பட்ட மூங்கில், நூக்கு உயர்பு - அக் காற்றின் தள்ளுத லானே உயர்ந்து, தாக்கத் தொடுத்த தேன் சோரும் வரை தோற்றம் போலும் - தாக்குதலானே தன்பால் தொடுக்கப்பட்ட தேன் உடைந்து ஒழுகாநின்ற மலையினது தோற்றத்தை ஒக்கும், கொடித்தேரான் வையைக்கு இயல்பு - இங்ஙனம் தோன்றச் செய்தல் வெற்றிக்கொடியையுடைய பாண்டியனது வையையாற்றின் இயல்பாம் ;

(வி - ம்.) இதுவும் தோழி தலைவன் காதற்பரத்தையரோடு நீராடியதனைப் பிறர்மேலிட்டுக் கூறிக் குறிப்பால் வாயின்மறுத்த படியாம்.

பரத்தையர் கண் மிகச் சிவக்கும்படியும் அவர் கூந்தலினின்று நெகிழும் மலர் தேன் சிந்தவும், நீராடாநின்ற அவரை அடுத்தடுத்துப் புல்லுதலானே வடுப்பட்ட அகலத்தான் தோற்றம் வரைத் தோற்றம் போலும்; அங்ஙனம் தோன்றச் செய்தல் வையைக்கு இயல்பு என்க.

கள் நீர் புலவி ஆகிய மூன்றேதுக்களானும் முன்னரே சிவந்த கண் மேலும் சிவக்கப் புல்ல என்க.

கள் முதலியன கண்சிவக்கும்படி செய்தல் இயல்பு. கட் கெண்டை - கண்ணாகிய கெண்டை ஒளி சேய்தாக என்க. என்றது கெண்டையை ஒத்த கண் சிவக்க என்றவாறு.

வாய் - மலரின் வாய் என்க. செல்நீர் - கூந்தலினின்றும் நீங்கும் நீர்மை என்க. வீ - பூ. பன்னீர் - மிக்கநீர். மிக்கநீரைப் பன்னீர் என்றும் சிறிதாகிய நீரைச் சின்னீர் என்றும் கூறுதல் வழுவமைதி யாகக் கொள்க.

இங்ஙனம் எப்போதும் நீராடுதல் நினக் கியல்பென்பாள் வையை யின் மேலேற்றி 'வையைக் கியல்பு' என்றாள்.

இப் பகுதியில் அவாய் நிலையானும் தகுதியானும் வருவித் துரைக்கப்பட்ட சொற்களை ஆராய்ந்துணர்க.

கொடித்தேரான் என்றது, பாண்டியனை. கொடி-மீன்கொடியுமாம்.

(பரிமே.) ௪0. கெண்டைநிறம் சிவக்க எனப் பண்பின்றொழில் பொருண்மேல் நின்றது. (அஃதாவது கெண்டையின் நிறம் சிவக்க எனற்பாலது, கெண்டை சிவக்க எனப்பட்டது என்றவாறு.)

௪அ - ௪௯ : வரை.....................தீம்புனல்

(இ - ள்.) புயல் வரை ஆர்க்கும் - முகில் மலையின் கண்ணே முழங்காநிற்கும் அவ்வளவிலேயே, இத் தீம்புனல் திரை கரை ஆர்க்கும் - இவ்வியல்புகளையுடைய வையையின் கண்ணே பெருகாநிற்கும் இனிய நீரினது அலைகள் கரையின் கண்ணே மோதி ஆரவாரியாநிற்கும்;

(வி - ம்.) இஃது வையையின் சிறப்புக் கூறியபடியாம்.

(பரிமே.) திரைகரைக்கண்ணே ஆராநிற்கும்.

இவ்வளவும் தோழி தன்னுள்ளே கூறுவாளாய்ப் புனலாடிய வரலாறு கூறி, மேல் வையையை நோக்கிக் கூறுவாளாய் வாயின் மறுக் கின்றாள்.

௫0 - ௫௫ : கண்ணியர்............................நினக்கு

(இ - ள்.) (௫௫) வையை-வையையே! கண்ணியர் தாரர்- தலையிடத்தே மாலையுடையராய் மார்பிடத்தே மாலையுடையராய் மைந்தர்களும், கமழ்நறும்கோதையர் - நறுமணங்கமழும் மலர் மாலைகளையுடையராய் மகளிரும், பண்ணிய ஈகைப் பயன்கொள் வான்நாள்நாள் ஆடலால் - பொருள்களைத் தானம்பண்ணி அதன்பயனாகிய போகத்தை நுகரவேண்டி நாள்தோறும் நின் னிடத்தே நீராடுதலாலே, உறையும் நறுஞ்சாந்தும் கோதையும் பூத்த புகையும் அவியும் புலராமை - அவர் நினக்குக் கொணரும் கையுறையாகிய பொன் மீன் முதலியனவும் அவர் அணிந்த நறிய சந்தனக்குழம்பு முதலியனவும் அவர் ஈரணி உலர்த்தும் பொலிவுற்ற அகிற்புகையும் நினக்குத் தரும் உண்டியும் குறையாமல் நிறைதற்பொருட்டு, வானம் மாறுஅற்க - முகில் மழை மறுத்து நிரம்பப் பெய்வதாக, நினக்கு நீத்தம் மலிதந்து

அருஅற்க - நினக்கு அம் மழையினாலே உண்டான வெள்ளம் பெருகி என்றும் வற்றாது நிறைவதாக.

(வி - ம்.) கண்ணி - தலையிற்சூடும் மாலை. தார் - மார்பி லணியும் மாலை. கோதை - மாலை: பெரும்பாலும் மகளிர் அணியும் மாலையையே இச்சொல் குறிக்கும். ஈகைபண்ணி அதன் பயன் கொள்ளும்பொருட்டு ஆடலால் என்க. நாள்நாள் - நாள்தோறும். கையுறை - பொன்மீன் பொன்னண்டு பொன்னிறவு முதலியன. பூத்த - பொலிந்த. புகை - நறுமணப்புகை. அவி - தெய்வத்திற் கிடும் உண்டி. புலராமை - இப் பொருள்கள் சுருங்காமைப்பொருட்டு. மருஅற்க - மருதொழிக. அருஅற்க - வற்றுதொழிக. வையை: அண்மை விளி.

இங்ஙனம் கூறித் தலைவனை நினது பரத்தமையை யாங்கள் நன்கறிந்தோம். இவ் வையைவெள்ளம் அருதாக நீ இன்னும் அவரோடே ஆடப்போதலே நன்றென்று தோழி குறிப்பாலே வாயில் மறுத்தமை உணர்க.

(பரிமே.) கக. ஈகை - தானம். பயனாகிய போகத்தை நுகர வேண்டி.

கஉ. கையுறையாகிய பொன்மீன் முதலியனவும்.

கரு. ஈரணிபுலர்த்தும் பொலிந்த புகையும்.

---

## பதினேழாம் பாடல்

---

# செவ்வேள்

பொருட் சுருக்கம்

**க - அ :** கோல்விளக்கையும் (தீவர்த்தி), இசைக் கருவிகளையும், சந்தன முதலிய நறுமணப் பொருள்களையும், புகையையும், கொடிகளையும் சிலர் ஏந்திவரத் தாம் மலர் தளிர் பூந்துகில் மணி வேல் முதலியவற்றைச் சுமந்துவந்து கடிமரத்தை ஏத்தி இசைபாடி மாலைதொறும் திருப்பரங்குன்றத்தின் அடியில் தங்குவோருள் வானுலகத்தில் உறைதலை விரும்புவார் உளரோ ?

**கூ - உக :** அத் திருப்பரங்குன்றத்தின்கண் ஒருசார் யாழிசை எழும்; அதற்கு மாறாக ஒருசார் வண்டிசை எழும்; ஒருசார் குழலிசை எழும்; அதற்கு மாறாக ஒருசார் தும்பியிசை எழும்; ஒருசார் முழவு முழங்கும்; அதற்கு மாறாக ஒருசார் அருவி முழங்கும்; ஒருசார் விறலியர் ஆடுவர்; அவர்க்கு மாறாக ஒருசார் பூங்கொடிகள் ஆடும; ஒருசார் பாடினி பாடும் பாலைப் பண்ணினது நிறைகுறைகள் தோன்றும்; அதற்கு மாறாக மயிலின் நிறைகுறை அரிக்குரல் தோன்றும். இங்ஙனமாக அக் குன்றம் கல்விகட்கு மாறுபாட்டினை உடைத்தாகும்.

**உஉ - உரு :** மதுரைக்கும் திருப்பரங்குன்றத்திற்கும் இடையே உள்ள நிலம் மிக அணித்தாயினும், மகளிரும் மைந்தரும் நெருங்கி விளையாடுதலால் மிகச் சேய்த்தாகா நின்றது.

**உசா - ௩உ :** அம் மகளிர் மைந்தருடைய மாலைகள் வீழ்ந்தமையால் செல்லும்வழி இல்லையாயிற்று; அக் குன்றின்கண் உலகத்தார் செய்யும் பூசைக்கண் முருகன் ஆவியாகக்கொள்ளும் அகிற்புகை வானுலகத்தும் பரவுதலானே தேவர்கள் இமையாநிற்பர்; ஞாயிற்று மண்டிலமும் அப் புகையால் மறையும்.

**௩௩ - ௩கூ :** வளையல் அணிந்த மகளிரும், அவர்தம் காதலராகிய மைந்தரும், மகிழ்ந்து கூடிப் பாய்ந்து ஆடுதலானே, சுனையின்கண் வண்டுகள் அஞ்சித் தாதூதாவாயின; திருப்பரங்குன்றின் அணி அத்தகையது.

**ச0 - சக :** பரங்குன்றினின்றும் இடையறாது வீழும் அருவிநீர் உழவர் வயலின்கட் பாய்ந்து பரவாநிற்கும்; மேல்

*விளையாடும் மகளிர் இயங்குதலால், அவர் அணிகலனினின்றும் வீழ்ந்த மணி அவ் வுழுநிலத்தைச் சிதைக்கும.*

**சஉ - சசு :** *தம்மைப் பிரிந்துசென்ற தலைவர் விரைவில் மீண்டுவந்து கூடுதற்பொருட்டுத் தலைவியர் செய்யும் தெய்வ விழாவும், அத் தலைவர் வந்து கூடியபின்னர் அம் மகளிர் வையைக்கண்ணும் அவர் கூடற்கண்ணும் செய்யும் விருந்தும் தம்மில் காரணகாரியங்களாய்த் தடுமாறிவருதல் இல்லற நெறியாதலால், அவர்க்கு நல்லொழுக்கமாயிற்று.*

**சஎ - ருரு :** *மயிலையும் கோழிக்கொடியையும் பிணிமுக மூர்ந்துசெய்யும் வெல்போரையும உடைய இறைவனே! மக்களைப் பணிந்து வாழ்த்தும் புன்செயலை விடுத்து, யாமும் எம்சுற்றத்தாரும் நின் புகழை ஏத்தி நின் திருப்பரங்குன்றத்தை எம் பிறவித்துன்பம் நீங்கி இன்பம் மலிந்த நாட்களை யாம் பெறுக என்று வேண்டிப் பாடித் தொழுகின்றேம்.*

தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
விடையரை அசைத்த வேலன் கடிமரம்
பரவினர் உரையொடு பண்ணிய விசையினர்
விரிமலர் மதுவின் மரநனை குன்றத்துக்
கோலெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ
மாலை மாலை அடியுறை யியைநர்
மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்
ஒருதிறம், பாணர் யாழின் தீங்குர லெழ
ஒருதிறம், யாணர் வண்டின் இமிரிசையெழ
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபெழ
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத
ஒருதிறம், மண்ணார் முழவின் இசையெழ
ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப
ஒருதிறம், பாடல்நல் விறலியர் ஒல்குபு நுடங்க
ஒருதிறம், வாடை யுளர்வயிற் பூங்கொடி நுடங்க
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற
ஒருதிறம் ஆடுசீர் மஞ்ஞை அரிகுரல் தோன்ற
மாறுமா றுற்றனபோன் மாறெதிர் கோடல்
மாறட்டான் குன்றம் உடைத்து;

பாடல் சான்று பல்புகழ் முற்றிய
கூடலொடு பரங்குன்றினிடைக்
கமழ்நறுஞ் சாந்தின் அவரவர் திளைப்ப
நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து
மகிழ்மிகுதேஎங் கோதையர் கூந்தல் குஞ்சியிற்
சோர்ந்தவிழ் இதழின் இயங்குமா றின்று
வசைநீங்கிய வாய்மையால் வேள்வியால்
திசைநாறிய குன்றமர்ந் தாண்டாண்
டாவி யுண்ணும் அகில்கெழு கமழ்புகை
வாய்வாய் மீபோய் உம்பர் இமைபிறப்ப
தேயா மண்டிலங் காணுமா றின்று
வளைமுன்கை வணங்கிறையார்
அணைமென்றோள் அசைபோத்தார்
தார்மார்பிற் றகையியலார்
ஈரமாலை இயலணியார்
மனமகிழ் தூங்குநர் பாய்புட ளுடச்
சுனைமலர்த் தாதூதும் வண்டூதே லெய்தா
அனையபரங் குன்றின் அணி ;
கீழோர், வயல்பரக்கும் வால்வெள்ளருவி பரந்தாளுதரோ
மேலோர், இயங்குதலால் வீழ்மணி நீலம் செறுவுழக்குமரோ
தெய்வ விழவுந் திருந்து விருந்தயர்வும்
அவ்வெள் ளருவி அணிபரங் குன்றிற்கும்
தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையைக்கும்
கொய்யுளை மான்றேர்க் கொடித்தேரான் கூடற்கும்
கையூழ் தடுமாற்ற நன்று ;
எனவாங்கு
மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ
பணியோரீஇ நின்புகழ் ஏத்தி
அணிநெடுங் குன்றம் பாடுதுந் தொழுதும்
அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுதும்
ஏம வைகல் பெறுகயாம் எனவே.

## கடவுள் வாழ்த்து

**நல்லழிசியார் பாட்டு ; நல்லச்சுதனார் இசை ; பண் நோதிறம்.**

## உரை

க - அ : தேம்படு..............................யாஅர்

(இ - ள்.) கோல் எரி கொளை நறை புகை கொடி ஒருங்கு எழ - கோல்விளக்கும் இசைக்கருவிகளும் சந்தனம் முதலிய நறுமணப் பொருள்களும் அகிற்புகையும் கொடிகளும் ஆகிய இவற்றைப் பலர் ஏந்தித் தம்முடனே வாராநிற்ப, தேம்படு மலர் குழை பூந்துகில் வடிமணி ஏந்துஇலை சுமந்து - தாம் தேன் விளைதற்கிடமான மலர் தழை பூத்தொழிலையுடைய துகில் வடித்த மணி ஏந்தப்படும் இலையினையுடைய வேல் என்னும் இவற்றைச் சுமந்துவந்து, விரிமலர் மதுவின் மரம்நனை குன்றத்து அடியுறை - மலராநின்ற பூக்களினின்றும் ஒழுகும் தேனாலே மரங்கள் நனைதற்குக் காரணமான வளப்பமுடைய திருப்பரங்குன்றத்து அடியின்கண், வேலன் சாந்தம் விரைஇ விடை அரை அசைத்த கடிமரம் உரையொடு பரவினர் - வேன்மகன் சந்தனந்தெளித்து ஆட்டுக்கிடாயினை அடியிலே கட்டின முருகவேளின் பூசனைக்குரிய மரமாகிய கடம்பை உரையாலே புகழ்ந்தனராய், பண்ணிய இசையினர்-ஆளத்தியா லாக்கிய இசையை உடையராய், மாலைமாலை இயைநர் - மாலைப் பொழுது தோறும் தங்கும் வழக்கமுடையோருள், மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர் - மேனிலை உலகத்தின்கண் ணும் உறைதலை விரும்புவாருளராவரோ?

(வி - ம்.) கோல் எரி - தீவர்த்தி: கோலின் நுனியில் துணி சுற்றி எண்ணெயிட்டு ஏற்றுவதொரு விளக்காதலின் இது கோலெரி எனப்பட்டது. இக் காலத்தார் 'தீவட்டி' என்பதுமிது. கொளை - இசை; ஆகுபெயரான் இசைக்கருவிகளுக்காயிற்று. நறை - சந்தனம் குங்கிலியம் முதலிய நறுமணப்பொருள்கள். புகை - மணப்புகை. கொடி - கோழிக்கொடி; மயிற்கொடியுமாம். தம்மோடு பிறர் ஏந்தி வர என்பார் 'ஒருங்கு எழ' என்றார். தேம் - தேன். குழை - தளிர். வடிமணி-வார்த்தமணி; தெளிந்த ஓசையுடைய மணியுமாம். ஏந்திலை: அன்மொழித்தொகை: வேல் என்னும் பொருட்டு.

வேலனால் சந்தனம் தெளிக்கப்பட்டுக் கிடாயினை அடியிலே கட்டப்பட்ட கடிமரம் என்க. கடிமரம்: கடி - ஈண்டுச்சிறப்பு என்னும் பொருட்டு; முருகவேள் பூசனைக்குச் சிறந்துரிமையுடைய (கடப்ப) மரம் என்பதாம். விடை - ஆட்டுக்கிடாய். "மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடை" (திருமுருகு - உஙஉ) என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க.

ஆட்டுக்கிடாய் பலிகொடுத்தற்பொருட்டுக்கட்டப்பட்டது என்க. உரையொடு பரவினர் என மாறுக. ஒடுவுருபு கருவிப்பொருள் தறித்து நின்றது. பண்ணிய - ஆக்கிய: ஆளத்தியாலாக்கிய இசை என்க. ஆளத்தியாவது:

"மகரத்தின் ஒற்றுற் சுருதி விரவும்
பகரும் குறினெடில்பா ரித்து—நிகரிலாத்
தென்னு தெனுவென்று பாடுவரேல் ஆளத்தி
மன்னுவிச் சொல்லின் வகை."

"முதலிற் பாடுமிடத்து மகரத்தின் ஒற்றுலே நாதத்தை உச்சரிக்கும் மரபு பகரில் பாரித்து முற்கூறிய நாதத்தினைத் தொழில் செய்யுமிடத்துக் குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலுஞ் செய்யப்படும்."

"அவை அச்சு பாரணை என்று பெயர்பெறும்; அச்சுக்கு எழுவாய் குற்றெழுத்து. பாரணைக்கு எழுவாய் நெட்டெழுத்து. அச்சு, தாளத்துடன் நிகழும். பாரணை, கூத்துடன் நிகழும்."

ஆளத்தி செய்யுமிடத்துத் தென்னுவென்றும், தெனுவென்றும் இரண்டசையுங் கூட்டித் 'தென்னுதெனு' என்று பாடப்படும்; இவைதாம், "காட்டாளத்தி நிறவாளத்தி பண்ணுளத்தி என மூன்று வகைப்படும்" எனவரும் சிலப்பதிகாரத்தின்கண் அரங்கேற்று காதை உ௬ - ஆம் அடிக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய விளக்கவுரையானும் உணர்க. இஃது இக்காலத்தே 'ஆலாபனம்' என்று வழங்கப்படும்.

திருப்பரங்குன்றத்தின் வளப்பம் தெரித்தோதுவார், "விரிமலர் மதுவின் மரநனை குன்றம்" என்றார்.

கோடலெரி முதலியன ஒருங்கெழத் தேம்படு மலர் முதலியன சுமந்துவந்து கடிமரம் பரவினராய்ப் பண்ணினராய்க் குன்றத்தின் அடியின்கண் மாலைதோறும் உறைவோர் வானுலகத்தையும் விரும்ப மாட்டார் என்பது கருத்து.

மேலோர் - வானவர்: உறையுளும் என்புழி உம்மை சிறப்பு.

(பரிமே.) ௬. கோடலெரி - தீபம்.

எழ, எனவும் சுமந்து எனவும் நின்ற வினையெச்சங்களும் பரவினர் இசையினர் என்னும் முற்றுவினையெச்சங்களும் இயைநர் என்னும் தொழிற்பெயருள் இயைதலோடு முடிந்தன.

௧௮ - ௨௧: ஒருதிறம்......................குன்றம் உடைத்து

(இ - ள்.) (௨௧) மாறு அட்டான் குன்று - பகைவரை வென்றருளிய முருகவேளினது திருப்பரங்குன்றம், ஒருதிறம் பாணர் யாழின் தீம் குரல் எழ - ஒரு பக்கத்தே பாணருடைய யாழின் இனிய இசை எழாநிற்ப, ஒரு திறம் யாணர் வண்டின் இமிர் இசை எழ - மற்றொருசார் பூக்களாகிய புதுவருவாயினையுடைய வண்டுகளினது முரற்சியாலுண்டாகிய இசை எழாநிற்ப, ஒருதிறம் கண் ஆர் குழலின கரைபு எழ - மற்றொருசார் கணுப்பொருந்திய வேய்ங்குழலின் இசை எழாநிற்ப, ஒருதிறம் தும்பி பண் ஆர் பரந்த இசை ஊத - மற்றொருசார் வண்டுகள் பண் போன்று பரவாநின்ற இசையை முரலாநிற்ப, ஒருதிறம் மண் ஆர் முழவின் இசை எழ - மற்றொருசார் மண்பூசப்பெற்ற

முழவினது முழக்கம் எழாநிற்ப, ஒருதிறம் அண்ணல் நெடு வரை அருவி நீர் ததும்ப - மற்றொருசார் தலைமைத் தன்மை யுடைய நெடிய சிகரங்களினின்றும் வீழும் அருவிநீர் ஆர வாரியாநிற்ப, ஒருதிறம் பாடல் நல் விறலியர் ஒல்குபு நுடங்க - மற்றொருசார் பாடற் றொழிலிலே நல்ல ஆடன் மகளிர் அசைந் தாடாநிற்ப, ஒருதிறம் வாடை உளர் வயின் பூங்கொடி நுடங்க - மற்றொருசார் காற்று அசைந்தவிடத்துப் பூங்கொடி கள் அசையாநிற்ப, ஒருதிறம் பாடினி முரலும் பாலை அங் குரலின் நீடு கிளர் கிழமை நிறை குறை தோன்ற - மற்றொருசார் பாண்மகள் பாடாநின்ற பாலைப்பண்ணாகிய அழகிய மிடற்றுப் பாடலின் நெடிய கிளர்ச்சியுடைய நாலு தாக்குடைய கிழமையும் நிறையும் இரண்டு தாக்குடைய குறையும் தோன்றாநிற்ப, ஒருதிறம் சீர் ஆடு மஞ்ஞை அரிகுரல் தோன்ற - மற்றொருசார் சீருக்கு இயைய ஆடாநின்ற மயிலினது அரிந்த குரல் தோன்றா நிற்ப, மாறுமாறு உற்றனபோல் மாறு எதிர் கோடல் உடைத்து - இவ்வாறாக ஒன்றற் கொன்று வேறு வேறாகும் தன்மை யுற்றன போன்ற இவ்விசை மாறுபாடுகளை ஏற்றுக் கொள்ளுதலை உடையதாகும்;

(வி - ம்.) குன்றம் இவ்விசை மாறுபாட்டினை ஏற்றுக்கொள்ளல் உடைத்து, என்க.

இஃதென் சொல்லியவாறோ எனின், யாழிசைக்குமாறாக வண் டிசைப்பவும், குழலிசைக்குமாறாகத் தும்பி இசைப்பவும், முழவிசைக்கு மாறாக அருவி யிசைப்பவும், விறலியர் ஆடற்குமாறாகப் பூங்கொடிகள் ஆடவும் பாடினியின் நிறை கிழமை குறைகளின் தோற்றத்திற்கு மாறாக மயிலின் அரிக்குரல் தோன்றாநிற்பவும், இவ்வாறாக மாறட் டான் குன்று பாடலும் ஆடலுமாகிய இக் கலைகளுக்கு மாறுபா டாவன சிலவற்றையும் தன்பால் உடைத்து என்றவாறு. அவை உண்மையில் மாறுபாடுடையன அல்லவாகலின் 'மாறுமாறுற்றன போன் மாறு' என்றார். எனவே, திருப்பரங் குன்றத்தின்கண் கலையின்ப மும் இயற்கையின்பமும் எப்பொழுதும் நிரம்பியிருக்கும் என்றவாறு.

வண்டிற்கு யாணர் ஆவது புதிது புதிதாக மலர்கள் தோன்றுதல் என்க. இதுவும் மலைவளத்திற்குக் குறிப்பேதுவாதல் உணர்க. இமிரிசை: வினைத்தொகை. கண் - கணு. கரைபு - கரைதல்; இசை. பண்ணார் - பண்போன்ற. பரந்த இசை: பரந்த என்பதன் ஈற்றுயிர் கெட்டுப் பரந்திசை என நின்றது செய்யுள் விகாரம். மண் - மார்ச்சனை. முழவு - மத்தளம். அண்ணல் நெடுவரை - தலைமைத் தன்மையுடைய சிகரம் என்க. ததும்ப - முழங்க; "ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (புறநா - கஙச.) என்புழியும் அஃதப் பொருட்டாதலுணர்க.

வாடை என்பது ஈண்டு வடகாற்று என்னும் பொருள் குறியாது வாளா காற்று என்னுந்துணையாய் நின்றது. பாடினி - பாணிச்சி. பாலை அங்குரல் - பாலைப்பண்ணின் அழகிய இசை என்க. கிழமை

நிறை குறை என்பன ஆளத்தியின் பாகுபாடுகள். இதனை "இசைப் புலவன் ஆளத்திவைத்த பண்ணீர்மையை முதலும் முறைமையும் முடிவும் நிறைவும் குறைவும் கிழமையும் வலிவும் மெலிவும் சமனும் வரையறையும் நீர்மையும் என்னும் பதினொரு பாகுபாட்டினானும் அறிந்து" (சிலப் - அ: சுக-உ.) எனவரும் அடியார்க்கு நல்லார் நல்லுரையானும் உணர்க.

தாக்கு - இசைத்தொழில் எட்டனுள் ஒன்று; என்னை? "எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு," என்னுமிவை இசைக்கிரியைகள் என்பவாகலின்.

மயிலின் குரல் கிழமை நிறை குறையுடைய பாலையிசையை ஒத்தது என்றவாறு.

மாறு - பகை. மாறட்டான் : முருகன்.

(பரிமே.) ககு. பாடுதல் நல்ல விறலியர்; வினையது நன்மை வினைமுதன்மேனின்றது.

கஎ - அ. பாலையையுடைய அழகிய மிடற்றுப் பாடற்கண் நாலு தாக்குடைய கிழமையும் இரண்டு தாக்குடைய......குறையும் தோன்ற.

உ௦. கல்விகளால் மாறுமாறுந்தன்மை யுற்றனபோல இகலை ஏற்றுக் கோடல்.

உஉ - உஎ : பாடல்......................இயங்குமாறின்று

(இ - ள்.) பாடல் சான்று பல்புகழ் முற்றிய கூடலொடு பரங்குன்றின் இடை - நல்லிசைப் புலவரின் பாடல் அமைந்து மேலும் பலவேறு புகழும் முற்றுப்பெற்ற மதுரைக்கும் திருப்பரங்குன்றிற்கும் இடையே கிடந்த நிலம், நணிநணித்தாயினும் - மிகவும் அணித்தேயாயினும், கமழ நறுஞ்சாந்தின் அவரவர் - மணங்கமழாநின்ற நறிய சாந்தினை அணிந்த ஆடவரும் மகளிரும், திளைப்பச் சேஎய்ச் சேய்த்து-நெருங்கி விளையாடுதலானே மிகவும் சேயதாகாநின்றது, மகிழ்மிகு தேஎம் கோதையர் கூந்தல் குஞ்சியில் சோர்ந்த - மகிழ்ச்சி மிக்க தேன்றுளிக்கும் மாலையினையுடைய அம் மகளிர் மைந்தருடைய கூந்தலினின்றும் குஞ்சியினின்றும் வீழ்ந்த, அவிழ் இதழின் - அவிழ்ந்த மாலையாலே தடுக்கப்பட்டு, இயங்கும் ஆறு இன்று - அவ்விடை நிலத்தே செல்லுதற்குரிய வழி இல்லையாயிற்று;

(வி - ம்.) நல்லிசைப் புலவர்களின் பாடல் அமைந்து என்க. ஈதல் போர் வென்றி முதலிய பல்வேறு புகழானும் நிரம்பி என்க. பாடல்சான்று பல்புகழ் முற்றிய என்னுமிது கூடற்கும் திருப்பரங் குன்றத்திற்கும் பொது. இடை - இடைக்கிடந்த நிலம். மிகவும் நணித்து, மிகவும் சேய்த்து என்க. நணித்து - அண்மைத்து; சேய்த்து - தூரியது. கூந்தல் - மகளிர் கூந்தல். குஞ்சி ஆடவர் குஞ்சி என்க. இதழின் - மாலையாலே. இயங்குமாறு - செல்வழி,

உ அ - ௩ ௯ : வசை....................குன்றின் அணி

(இ - ள்.) வசை நீங்கிய வாய்மையால் - குற்றமற்ற புகழாலே, திசை நாறிய குன்று அமர்ந்து - நாற்றிசையினும் பரந்த திருப்பரங்குன்றின்கண் எய்தி, ஆண்டு ஆண்டு வேள்வியால் - உலகத்தார் பலவிடத்தும் செய்கின்ற பூசைக்கண், ஆவி உண்ணும் அகில் கெழு கமழ்புகை - முருகப்பெருமான் ஆவியாகக் கொள்ளாநின்ற அகிலிட்டெழுப்பிய நறுமணங் கமழும் புகை, - வாய் வாய் மீபோய் - அவ்வவ் விடந்தொறும் மேலே மேலே போதலால், உம்பர் இமைபு இறப்ப - இமையா நாட்டமுடைய தேவர்களும் இமைத்து அவணின்றும் அகலா நிற்ப, தேயாமண்டிலம் காணுமாறு இன்று - ஞாயிற்று மண்டிலமும் அவ்விடத்தே காணும் இயல்புடைத்தன்று, சுனை - அப் பரங் குன்றினிடத்தே உள்ள சுனைகளிலே, ஈரமாலை இயல் அணியார் வளை முன்கை வணங்கு இறையார் - குளிர்ந்த மாலையினையும் இயற்கையழகினையும் வளையல் அணிந்த முன்கையினையும் வளைந்த இறையினையும் உடைய மகளிரும், அணை மெல் தோள் அசைபு ஒத்தார் - அம் மகளிருடைய அணை போன்ற மெல்லிய தோளின்கண் தங்கி அவர்தம் அன்போடு ஒத்த அன்புடையரும், தார் மார்பின் தகை இயலார் - மாலையணிந்த மார்பினையும் இயற்கையழகுடையருமாகிய ஆடவரும், மனமகிழ் தூங்குநர் - மனத்தின்கண் மகிழ்ச்சிமிக்கு, பாய்பு உடன் ஆட - பாய்ந்து ஒருசேர நீராடுதலானே, தாது ஊதும் வண்டு மலர் ஊதல் எய்தா - தாதூதும் இயல்புடைய வண்டுகள் அஞ்சி அச் சுனையின்கண் உள்ள மலரின்கட் சென்று தாதூதப்பெறா, பரங்குன்றின் அணி அனைய - திருப்பரங் குன்றினது அழகுகள் அத்தன்மையன ;

(வி - ம்.) வாய்மை - ஈண்டுச் சிறப்புப் பற்றி புகழ்மேனின்றது. என்னை? "உரைப்பா ருரைப்பவையெல்லாம் இரப்பார்க்கொன் றீவார் மேனிற்கும் புகழ்" என்பவாகலான். இங்ஙனமே, சொல் உரை இசை என்பனவும் சிறப்பானே புகழைக் குறித்தலும் உணர்க.

வாய்மையால் திசைநாறிய எனவும், வேள்வியால் ஆவியுண்ணும் எனவும் கூட்டுக. குன்று - திருப்பரங்குன்று. வேள்வியால் என்புழி ஏழனுருபு மூன்றனுருபின் மயங்கிற்று. வேள்வியில் என்க. வேள்வி - பூசனை. ஆண்டாண்டு என்னும் அடுக்குப் பன்மை பற்றிவந்தது. ஆவி - புகையின்கண் உள்ள நறுமணப் பண்பென்க.

முருகன் ஆவியாக நுகரும் புகை என்க. வாய்வாய் - அவ்வவ் விடந்தொறும். உம்பர் - தேவர், அவர் இமையாக் கண்ணுடையர். அவரும் இமைத்து அகல என்றார். எனவே பிறர் இமைத்தல் கூற வேண்டா என்றவாறாயிற்று. உம்பரும் என வேண்டிய சிறப்பும்மையும், மண்டிலமும் என வேண்டிய சிறப்பும்மையும் செய்யுள் விகாரத் தால் தொக்கன.

தேயாமண்டிலம் - ஞாயிற்று மண்டிலம். திங்கள் மண்டிலம் தேயு மண்டிலமாகலின் இது 'தேயா மண்டிலம்' எனப்பட்டது.

அசைபு - தங்கி. ஒத்தார் - அன்புடைமையில் ஒத்தவர், என்க. தகை - அழகு. பாய்பு - பாய்ந்து.

அணைய என்றது மேலே கூறுகின்றவற்றைக் கூட்டி.

(பரிமே.) உஅ. வாய்மை - புகழ். வேள்வி - பூசை.

உகூ. நாறிய - பரந்த.

௩0. முருகன் ஆவியாகக் கொள்ளும் அகிற்புகை.

௩உ. ஆதித்தமண்டிலம் ; தேயா மண்டிலம் என்றார், ஏனை மண்டிலம் தேய்தலின்.

ச0 - சசு : கீழோர்..............................நன்று

(இ - ள்.) வார் வெள் அருவி ஆறுது பரந்து கீழோர் வயல் பரக்கும் - அக் குன்றினின்று வெள்ளிய அருவி இடையறுது ஒழுகி உழவருடைய வயல்களிலே பரவும், மேலோர் இயங்குதலால் வீழ் நீலமணி செறு உழக்கும் - அக் குன்றின் மேலே விளையாடு மகளிர் இயங்குதலாலே அவர் அணிகலத்தினின்று வீழ்ந்த நீலமணிகள் அவ் வருவியோடுவந்து அவ் வயல்களைச் சிதையாநிற்கும், அவ் வெள் அருவி அணி பரங்குன்றிற்கும் - அவ் வெள்ளிய அருவியாலே அழகு செய்யப்பெற்ற திருப்பரங் குன்றின்கண், தெய்வ விழவும் - தலைவியர் தம்மைப் பிரிந்து சென்ற தலைவர் விரைவின் மீண்டு வருதற்பொருட்டுச் செய்யும் தெய்வவிழாவும், தொய்யா விழு சீர் வளங்கெழு வையைக்கும் - அங்ஙனமே அத் தலைவர் மீண்டு வந்து தம்மைக் கூடியவழி கெடாத பெரும்புகழையுடைய வளம் பொருந்திய வையையாற்றின்கண் அத் தலைவியர் மகிழ்ச்சி காரணமாகச் செய்யும், திருந்து விருந்து அயர்வும் - திருந்திய புதுப்புனலாட்டும், கொய்யுளை மான் தேர்க் கொடித்தேரான் கூடற்கண் திருந்து விருந்து அயர்வும் - அத் தலைவியர் பின்னர்த் தந்தலைவர் கொணர்ந்த பொருளானே ஏனைய அரசருடைய கத்தரிகையால் மட்டம் செய்யப்பட்ட பிடரிமயிரையுடைய குதிரை பூட்டிய தேர்களாலே சூழப்பட்ட மீனக்கொடியை உடைய தேரினை உடைய பாண்டியனது மதுரையிடத்தே தம்மில் இருந்து பகுத்துண்ணும் திருந்திய விருந்தோம்பலும், கை ஊழ் தடுமாற்றம் நன்று - தம்மில் காரணகாரியங்களாய்த் தடுமாறி வருதல் இல்லறநெறியே ஆதலின், அவர்க்கு நல்லொழுக்க மாயிற்று ;

(வி - ம்.) கீழோர் - அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும் கீழ்உள்ள வேளாளர். வார்: வார்கின்ற - ஒழுகுகின்ற; நெடிய எனினுமாம். வார்வெள் ளருவி ஆறுது பரந்து கீழோர் வயல் பரக்கும் என மாறுக.

மேலோர் - மேலிடத்துள்ளோர். நீலமணி என மாறுக. செறு - வயல் - பண்பட்ட வயலின்கண் கற்கள் கிடத்தலும் அப் பண் பாட்டிற்கு அழிவே தருதலின், 'மணி செறு உழக்கும்' என்றார். இது செல்வமிகுதி நீர்வள முதலியவற்றை உணர்த்தியபடியாம். தெய்வ விழா - ஈண்டுத் தலைவியர் தம்மைப் பிரிந்து சென்ற தலைவர் மீண்டு விரைவின் வருதற்பொருட்டும் அவர்க்கு வினை வாய்க்கும் பொருட்டும் இறைவனை வேண்டி எடுக்கும் விழா என்க. இங்ஙனம் மகளிர் வேண்டுதலை "கனவிற் றொட்டது கைபிழையாகாது நனவிற் சேஎப்ப நின் னளிபுனல் வையை வருபுனல் அணிகென வரங்கொள்வோரும்," "செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்" "ஐ அமர் அடுகென அருச்சிப்போரும்," எனவரும் இந்நூல் ௮-ஆம் பாடற் பகுதி களானும் உணர்க.

முன்னர் (௬0) 'வார் வெள்ளருவி' என்றாராகலின் (௬௩) 'அவ் வெள்ளருவி' என்று சுட்டினார். குன்றிற்கும் வையைக்கும் கூடற்கும் என்பன வேற்றுமை மயக்கம். ஏழனுருபு விரித்தோதுக.

தொய்யா - கெடாத. வையைக்கண் விருந்து செய்தலாவது அத் தலைவரோடே கூடிப் புதுப்புனலாடுதல் என்க. கை ஊழ்: முன்பின்னாக மாறித்தொக்க உம்மைத் தொகை; ஊழும் கையும் என்க. ஊழ் - ஈண்டுக் காரணம் என்னும் பொருள் குறித்தும், கை-காரியம் என்னும் பொருள் குறித்தும் நின்றன. தம்மில் காரண காரியமாகத் தடுமாறுத லாவது, இல்லிலிருந்து விருந்தயர்தல் காரணமாகத் தலைவன் பிரியத் தலைவி விழாவயர்தலாகிய காரியம் நிகழ்வதாயிற்று. மீண்டும் அவ் விழாக் காரணமாகத் தலைவன் பொருள்தேடி மீண்டு வந்து விருந் தயர்வு ஆகிய காரியம் நிகழ்வதாயிற்று. எனவே, விருந்தயர்தல் காரணமாய் விழவும், விழவுகாரணமாய் விருந்தயர்தலும் எனக் காரண காரியங்களாய்த் தடுமாறியவாறு காண்க. அரோ: இரண்டும் அசைகள்.

தெய்வம் போற்றலும் விருந்தோம்பலும் ஆகிய இரண்டு செயலும் இல்லறமே ஆகலின் இரண்டும் அவர்க்கு அறவொழுக்கமே யாயின என்க.

(பரிமே.) ௬உ. தெய்வவிழா - பிரிந்த தலைவர் வினைமுடித்துக் கடிதின் வந்து கூடுதற்குத் தலைவியர் செய்யும் தெய்வவிழா.

௬௬. காரண காரியங்களாய்த் தடுமாறி வருதல். (நன்று - ) இல்லற நெறியாதலின் அவர்க்கு நல்லொழுக்கமாயிற்று.

கற்புடைமகளிரும் தலைவரது அறம் நிமித்தமாகப் பூசைசெய்து அதன்பயன் நுகர்வர் என்றலின், இதுவும் கடவுள் மேலதாயிற்று.

இவ்வளவும் முருகனது பரங்குன்றத்தைப் புகழ்ந்து, மேல் அவனை எதிர்முகமாக்கி வாழ்த்துகின்றார்.

சஎ - ருக: எனவாங்கு.........................எனவே

(இ - ள்.) என - என்றிவ்வாறு, மணிநிற மஞ்ஞை ஓங்கிய புள் கொடி பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ - நீலமணி போலும் நிறமுடைய மயிலினையும் உயர்ந்த கோழிக்கொடியினையும் பிணிமுகம் என்னும் யானையை ஊர்ந்து செய்யப்பட்ட வெற்றியுடைய போரினையும் உடைய இறைவனே, யாமும் எம் சுற்றமும் - யாங்களும் எம்முடைய சுற்றத்தாரும், பணி ஒரீஇ - எம்மை ஒத்த மனிதரை எய்தி அவரைப் புகழ்ந்து பாடும் பணிவுடைய மொழியினை ஒழிந்து, நின் அணி நெடுங் குன்றம் பாடுதும் - இனி எப்பொழுதும் நின்னுடைய அழகிய நெடிய திருப்பரங் குன்றத்தைப் பாடி, நின் புகழ் ஏத்தித் தொழுதும் பரவுதும் - நினது புகழையே ஏத்தித் தொழுது வேண்டிக் கொள்ளாநிற்போம், அவை யாம் ஏம வைகல் பெறுக என - அங்ஙனம் பாடுதலும் தொழுதலும் பரவுதலும் எற்றுக்கெனின் யாங்கள் பிறவித்துன்பம் சாராத இன்பநிறைந்த நாளைப் பெறுக என்றேயாம்;

(வி - ம்.) மணி - நீலமணி. மஞ்ஞை - மயில். புள் என்றது, சண்டுக் கோழிச் சேவலை என்க. பிணிமுகம் - முருகன் ஏறும் யானை. ஊர்ந்து செய்யப்பட்ட போர் என்க. பணி - பணிவுடைமையைக் காட்டும் முகமன் மொழி அவை "மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக் கிவனென்றும், கொடுக்கிலாதானைப் பாரியே என்றும்" கூறும் புன்மொழிகள், அங்ஙனம் தம்மையே ஒத்த சின்னுட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனிதரைப் பொய்யே புகழ்ந்தவிடத்தும் அவர் கொடுத்தலும் இல்லை; ஓரோவழிக் கொடுப்பினும் அப்பொருள் போதப் பயன்றருதலும் இல்லை. ஆதலின், இப் பேதைமைத் தொழிலை இனி அறவே ஒழித்து இம்மையின்பமும் மறுமையின்பமும் அந்தமிலின்பத்து வீட்டின்பமும் தரவல்ல நின்னையே ஏத்தித் தொழுவேம். அவற்றுள்ளும் நிலையுதலில்லாத இம்மை மறுமை யின்பங்களைப் பெறுதல் எம் கருத்தன்று; என்றென்றும் நிலைத்த நின்திருவடியின்பமே யாங்கள் பெறக்கருதி இறைஞ்சுகின்றேம் என்றவாறு. இதனோடு,

"உளனாகவே எண்ணித் தன்னை ஒன்றாகத் தன்செல்வத்தை
வளனா மதிக்கும் இம்மானிடத்தைக் கவிபாடியென்."

என்றும்,

"ஒழிவொன் றில்லாத பல்லூழிதோ றூழிநிலா வப்போம்
வழியைத் தரும் நங்கள் வானவ ரீசனை நிற்கப்போய்
கழியமிக நல்ல வான்கவி கொண்டு புலவீர்காள்
இழியக் கருதி ஓர்மானிடம் பாடல் என்னாவதே."

என்றும்,

"என்றுவது எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள்
மன்று மனிசரைப் பாடிப் படைக்கும் பொருள்.''

என்றும்,

"கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்ந்தன்ன செல்வத்தை
வள்ளல் புகழ்ந்து நும்வாய்மை இழக்கும் புலவீர்காள்.''

என்றும்,

"வம்மின் புலவீர் நும் மெய்வருத்திக் கைசெய்து உய்மினோ.''

என்றும்,

"மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால்
தன்னாகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே.''
(திருவாய்மொழி. ௩: ௯:)

" தம்மை யேபுகழ்ந் திச்சைபேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதேயெங்கள்
புகலூர்பாடுமின் புலவீர்காள் ''

என்றும்,

" வஞ்சநெஞ்சனை மாசழக்கனைப் பாவியைவழக் கில்லியைப்
பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று பாடினுங் கொடுப்பாரிலை
பொன்செய்செஞ்சடைப் புண்ணியன்புக லூரைப்பாடுமின்
புலவீர்காள்

நெஞ்சினேயறுத் துஞ்சுபோவதற் கியாதுமையுற வில்லையே ''
(சுந்தரர் தேவா, பதிகம், ௩௪ : க; ௭.)

என்றும் நிகழும் செவியறிவுறூஉவினை ஒப்பு நோக்குக.

பாடுதும் தொழுதும் என்பன முற்றெச்சங்கள். ஏமவைகல் - இன்பமுறுவைகல்.

(பரிமே.) ௯0: மக்கண்மாட்டுப் பணிமொழியை ஒழிந்து.

௯௩. பிறவித்துன்பம் சாராத வைகல்.

---

# பதினெட்டாம் பாடல்

## செவ்வேள்

**பொருட் சுருக்கம்**

**க - ரு :** தம்முள் கூடிப் போரை ஏற்ற அவுணரது பெருமிதம்கெடக் கடற்பரப்பினுள் பரந்து சுற்றிய சூரபன்மா வாகிய மாமரத்தை அழித்தோனே! நீ விரும்புதலால் இப் பரங்குன்று நின்னை யீன்ற இமயம்போலப் புகழ்பெற்றது.

**எ - கச :** ஒரு காதலன் திருப்பரங்குன்றத்தின்கண் ஆலும் மயிலைநோக்கி அதன் அழகையும் களிப்பினையும் நெஞ்சாலே குறிக்கொண்டு நின்றான்; அதுகண்ட அவன் காதலி, நீ அம் மயிலைநோக்கி நினைத்ததறிந்தேன்; நீ எம்மை நோக்காது இகழாநின்றனை என்று ஊடினாள்; அவள் ஊடிய தறிந்த அக் காதலன் காதலுடையோய்! அம் மயில் கொள்ளற் கரிய நினது சாயலைக் களவுகொள்ள எண்ணி, அதுதான் பெறாது வருந்தாநின்றது; இதனைக்கண்டு நினது சாய லருமையை நினைத்தேனாக, நீ நின்னை இகழ்ந்ததாகக் கருதா நின்றனை எனா, அவ் வூடலை அப்பொழுதே தீர்த்தனன்; இஃது இப் பரங்குன்றத்தின் இயல்பு ஆகும்.

**கரு - உக :** ஒருதலைவன் தலைவியின் ஊடல் தீர்த்தற்குப் பாணனை அவள்பால் விடுத்தான்; அப் பாணன் தலைவியிடம் வந்து தலைவன் தூயன் என்னும் பொருளுடைய பாட்டைப் பாடினான்; அதுகேட்ட தலைவி, 'ஏடா! தலைவன் உடம்பிலுள்ள வடுக்களே அவன் பரத்தைமையை எமக்குணர்த்த யாம் அறிந்தேம்; நின் பாட்டுப் பொய்வளம் பூத்தன' என்றாள்.

**உஉ - ௩எ :** வேலையுடையவனே! நினது திருப்பரங்குன்றத் தின் சிகரம் தன்பால் முகில் முழங்கி மின்னப்படுதலானே நினது ஓடையையுடைய களிற்றை ஒக்கும்; நினது குன்றத்தின்கண் உள்ள எழுதெழில் அம்பலம் காமவேளின் படைக்கலக் கொட் டிலை ஒக்கும்; மலர்செறிந்த சோலைகளும் சுனைகளும் அக் காம வேளின் அம்புப்புட்டிலை ஒக்கும்; காந்தட்பூக்கள் அவன் போரிற் றோற்றுக் கட்டுண்டார் கைகளை ஒக்கும்; தும்பியினாலே கட் டவிழ்க்கப்படும் காந்தள் முகைகள் யாழ்நரம்பின் கட்டவிழ்ப்பா ருடைய கைகளை ஒக்கும்.

ருஅ - ௬௦ : *அழகிய முகில்கள் முன்பனிக்காலத்தில் முழங்கி இந்திரவில்லை வளைத்தது; நினது பரங்குன்றத்திலுள்ள மரங்கள் அவ் வில்லால் சொரியப்படும் அம்புகளைப்போல மெல்லிய மலரைப் பரப்பின; அக் குன்றத்தின்கண் தாளவொலியும் இசைக்கருவிகளின் முழக்கமும் முகில் முழக்கமும் போர்முழக்கம் போன்று எழுந்தன; அருவிகள் ஒலித்து விழுதலானே சிகரங்கள் முத்துமாலை அணிந்தனபோன்றுள்ளன; குருவிகள் ஆரவாரிக்கும்படி தினைகள் விளைந்தன; சுனைகள் கரையினின்று சாய்ந்த கொறுக்கைச்சியால் முட்டப்பட்ட பன்னிறமலர்கள் நிறைதலால் இந்திரவில்லை வளைத்த வானத்தை ஒத்து வண்டூதும் அழகுடையவாயின.*

௬க - ௬௬ : *வேற்படையையுடைய செல்வனே! நினது பூசையின்கண் எழுப்பப்பட்ட யாழிசையும், புலவர் பாடிய இயற்பாட்டொலியும், வேதவொலியும், பூவும் புகையும் விளக்கும் ஆகிய உபசாரங்களை ஏற்றருளிய நின் அடியின்கண், எமக்குரிய ஊரின்கண் உறையுமாறுபோல, எம் சுற்றத்தோடு கூடி யாம் உறைதலை என்றும் பிரியேமாகுக.*

போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக்
காரெதிர்ந் தேற்ற கமஞ்சூல் எழிலிபோல்
நீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச்
சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்நின்
சீர்நிரந் தேந்திய குன்றொடு நேர்நிரந்
தேறுமா றேற்குமிக் குன்று ;
ஒள்ளொளி மணிப்பொறி யான்மஞ்ஞை நோக்கித்தன்
உள்ளத்து நினைப்பானைக் கண்டனள் திருநுதலும்
உள்ளிய துணர்ந்தேனஃ துரையினி நீயெம்மை
எள்ளுதன் மறைத்தலோம் பென்பானைப் பெயர்த்தவன்
காதலாய் நின்னியல் களவெண்ணிக் களிமகிழ்
பேதுற்ற இதனைக்கண் டியானோக்க நீயெம்மை
ஏதிலா நோக்குதி என்றாங்கு உணர்ப்பித்தல்
ஆய்தேரான் குன்ற வியல்பு ;
ஐவளம் பூத்த அணிதிகழ் குன்றின்மேல்
மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்
கைவளம் பூத்த வடுவொடு காணாய்நீ
மொய்வளம் பூத்த முயக்கம்யாங் கைப்படுத்தேம்
மெய்வளம் பூத்த விழைதகு பொன்னணி

கைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வளம்
பூத்தன பாணுநின் பாட்டு ;
தண்டளிர் தருப்படுத் தெடுத்துரைஇ
மங்குன் மழைமுழங்கிய விறல்வரையால்
கண்பொருபு சுடர்ந்த டர்ந்திடந்
திருள்போழுங் கொடிமின்னல்
வெண்சுடர் வேல்வேள் விரைமயின்மேல் ஞாயிறுநின்
ஒண்சுடர் ஓடைக் களிறேய்க்கு நின்குன்றத்
தெழுதெழில் அம்பலங் காமவே ளம்பின்
தொழில்வீற் றிருந்த நகர் ;
ஆர்ததும்பு மயிலம்பு நிறைநாழி
சூர்ததும்பு வரைய காவால்
கார்ததும்பு நீர்ததும்புவன சுனை
ஏர்ததும்புவன பூவணி செறிவு
போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ கார்தோற்றும்
காந்தள் செறிந்த கவின் ;
கவின்முகை கட்டவிழ்ப்ப தும்பிகட் டியாழின்
புரிநெகிழ்ப்பார் போன்றன கை ;
அச்சிரக் காலார்த் தணிமழை கோலின்றே
வச்சிரத் தான்வான வில்லு ;
வில்லுச்சொரி பகழியின் மென்மலர் தாயின
வல்லுப்போர் வல்லாய் மலைமேன் மரம்
வட்டுருட்டு வல்லாய் மலைய நெட்டுருட்டுச்
சீர்ததும்பு மரவமுடன் சிறந்து
போர்ததும்பு மரவம் போலக்
கருவி யார்ப்பக் கருவிநின்றன குன்றம்
அருவி யார்ப்பமுத் தணிந்தன வரை
குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை
எருவை கோப்ப எழிலணி திருவில்
வானி லணித்த வரியூதும் பன்மலராற்
கூனி வளைத்த சுனை ;
புரியுறு நரம்பு மியலும் புணர்ந்து
சுருதியும் பூவுஞ் சுடருங் கூடி
எரியுரு ககிலோ டாரமுங் கமழும்

செருவேற் றானைச் செல்வநின் அடியுறை
௫௫ உரிதினி னுறைபதிச் சேர்ந்தாங்குப்
பிரியா திருக்கவெஞ் சுற்றமோ டுடனே.

கடவுள் வாழ்த்து.

குன்றம்பூதனார் பாட்டு; நல்லச்சுதனார் இசை;
பண் காந்தாரம்.

## உரை

க - சு : போர்..............................இக் குன்று

(இ - ள்.) எதிர்ந்து போர் ஏற்றார் மதுகை மதம் தப - தம்முள் கூடிநின்று நின்னோடு போர்த்தொழிலை ஏற்றுக் கொண்ட அவுணர்களுடைய வலிகாரணமாக உண்டாகிய செருக்குக்கெட, நீர்நிரந்து ஏற்ற நிலம் தாங்கு அழுவத்து - நீரைப் பரந்து ஏற்ற நிலத்தால் தாங்கப்படும் கடற்பரப்பினுள், கார்எதிர்ந்து கமம் சூல்ஏற்ற எழிலிபோல் - கார்ப்பருவத்தை எதிர்ந்து நிறைந்த சூல்கொண்ட முகில்போல் இருண்டு, நிரந்து சுற்றிய சூர்மா தபுத்த வேலோய் - பரந்து சுற்றிய சூரபன்மாவை அழித்தவனே, நின் சீர் நிரந்து ஏந்திய குன்றொடு - நின்னைப் பெற்றதனாலே உண்டாகிய புகழைத் தான் பரந்துநின்று தாங்கிய இமயமலையோடு, நேர்நிரந்து ஏறுமாறு ஏற்கும் இக் குன்று - நேர்நின்று ஏறுமாறுதலை ஏற்கும் நீ விரும்பி எழுந் தருளிய இத் திருப்பரங்குன்று ;

(வி - ம்.) எதிர்ந்து போர் ஏற்றார் என மாறுக. எ, தம்முட் கூடி என்க. போர் ஏற்றார் என்றது அவுணரை. மதுகை வலி. கார் - கார்காலம். கமம் - நிறைவு. எழிலி - மேகம் : மேகம் போலக் கடற்பரப்பினுள் சுற்றிய சூர்மா என்க. சூர்மாவை அழித்தமை அவுணர் மதங்கெட ஏதுவென்க. மதம் - செருக்கு ; பெருமிதம் என்பர் பரிமேலழகர். நிரந்து - பரந்து ; நேர்நிரந்து - நேர்நின்று. சூர் மா எனக் கூட்டுக. தபுத்த - அழித்த. சீர் - புகழ் : புகழின் பெருமைதோன்ற இமயந்தானும் அகன்றுநின்று ஏந்தியதென்பார் 'நின்சீர் நிரந்து ஏந்திய குன்று' என்றார். ஏறுமாறு - மாறுபாடு : 'பகைப்போர் வலிபுகழ் முதலியவற்றால் ஒப்பாய்நின்றே பகைப்ப ராகலின் இமயத்தோடு ஒத்துநின்று ஏறுமாறு ஏற்கும்' என்றார். இப் பரங்குன்று என்றது நீ விரும்பி எழுந்தருளிய சிறப்புடைய இப் பரங்குன்று என்பதுபடநின்றது.

(பரிமே.) மதந்தப மாதபுத்தோயென இயையும்.

உ. விசும்பின்கட் பரந்து கார்காலத்தை எதிர்ந்த, நீ விரும்புத லால் இப் பரங்குன்று நின்னைப் பயந்த இமயம்போலப் புகழ்பெற்றது என்றவாறு.

இனி, முருகவேளைப் படர்க்கையாக்கி இம் மலைச்சிறப்புக் கூறுகின்றார்.

எ - கச : ஒள்ளொளி......................இயல்பு

(இ - ள்.) ஒள்ஒளி மணிப்பொறிஆல் மஞ்ஞை நோக்கித் தன் உள்ளத்து நினைப்பானை-ஒரு கானவன் ஒள்ளிய நிறத்தினையுடைய மணிபோன்ற புள்ளியினையுடையதாய் ஆடாநின்றதொரு மயிலை நோக்கி அதன் அழகையும் களிப்பினையும் தன் உள்ளத்தால் குறிக்கொண்டு கருதி நின்றானாக அங்ஙனம் நின்றவனை, திருநுதலும் கண்டனள் - அவன் காதலியாகிய அழகிய நெற்றியினையுடைய கொடிச்சியும் கண்டாள், இனி உள்ளியது உணர்ந்தேன் நீ எம்மை எள்ளுதல் மறைத்தல் ஓம்பு அஃது உரை என்பானை - அங்ஙனம் கண்டவள் அவனை நோக்கி 'ஏடா நீ இப்பொழுது நின் உள்ளத்தே நினைப்பதனை யாம் அறிந்துகொண்டேம் அஃதியாதெனின், நீ இம் மயில் இவளினும் எழிலிற் சிறந்தது என்று நினைக்குமாற்றால் எம்மை இகழ்வதேயாம்; ஏடா அதனை மறைத்தல் ஒழிக இனி அதனை எமக்குச் சொல் என்று ஊடினாள் அங்ஙனம் ஊடியவளை, அவன் பெயர்த்துக் காதலாய் நின் இயல் களிமகிழ் களவு எண்ணிப் பேதுற்ற இதனைக் கண்டு யான் நோக்க - அக் கானவன் அதனை மாற்றிக் காதலுடையோயே தன்னால் களவுகொள்ள அரிதாகிய நினது சாயலைத் தனது களிப்பு மகிழ்ச்சியாலே களவுகொள்ள எண்ணி அஃதியலாமையாற் பெரிதும் வருந்தும் இம் மயிலினைக் கண்டு நினது சாயலின் அருமையையே நினைத்து நின்றேனாக, நீ எம்மை ஏதிலா நோக்குதி - நீ அஃதறியாது எம்மை இகழ்ந்தேமாகக் கருதுகின்றனை, என்று ஆங்கு உணர்ப்பித்தல் - என்றுகூறி அவ் ஊடலை அப்பொழுதே உணர்ப்பித்தல், ஆய்தேரான் குன்ற இயல்பு - கண்டோர் நன்றென்று ஆராய்தற்குக் காரணமான தேரினையுடைய முருகவேளினது இத் திருப்பரங்குன்றத்தின் இயல்பு இத்தகையது ஆகும்;

(வி - ம்.) குறிஞ்சி நிலமாதல்பற்றிக் 'கானவன்' என்றார் உரையாசிரியர். ஒள்ளொளி - மிக்கஒளி. பொறி - புள்ளி. மணிப்பொறி: உவமத்தொகை. ஆல்மஞ்ஞை: வினைத்தொகை; ஆடாநின்ற மயில் என்க. அதன் அழகையும் களிப்பையும் நினைந்து நின்றான் என்க. 'திருநுதல் அம் மயிலையும் அதனை நோக்குபவனையும் கண்டாள் என்பார் இறந்தது தழீஇய எச்சஉம்மை கொடுத்து திருநுதலும் கண்டனள்' என்றார். நான் உணர்ந்துகொண்டேன்; இனி, நீ அதனை மறைத்துப் பயனில்லை ஆதலால் மறைத்தலொழி; உண்மையை உரை என்றவாறு. அவன் பெயர்த்து என மாறுக. எம் மழகினும் இம் மயில் அழகு மிக்குடையதென்றன்றோ எம்மை நோக்காது அதனை நோக்

இனை; இவ்வாற்றால் நீ எம்மை இகழ்ந்தனையல்லையோ என்று ஊடினள் என்க. இயல் - சாயல். அஃதாவது: மாதர் உருவிற் கிடப்பதொரு மென்மை. களிமகிழ் உடைமையால் ஆராயாது களவுகொள்ள எண்ணி அஃதியலாமையால் வருந்துமிதனை என்க. இதனை - இம் மயிலை. யான் அதன் அறியாமையையும் நின் சாயலருமையையும் நினைந்து நின்றேனாகை என்றான் என்க. யான் என்னும் ஒருமை எம்மை என்னும் பன்மையொடு மயங்கியது ஒருமைப்பன்மை மயக்கம். பேது-துன்பம்; அறியாமையுமாம். ஏதிலா - அயன்மையாக, என்றது இகழ்ந்தேமாக என்றவாறு. என்று பணிமொழி பலகூறி உணர்ப்பித்தல் என்க.

ஆய்தேரான் என்றது முருகவேளை. தேர்த் திருவிழா வெடுத்தலின் 'ஆய்தேரான்' என்றார் என்க.

'இக் குன்றம் தன்பாற் குறிஞ்சி ஒழுக்கமேயன்றி மருதவொழுக்கமு முடையதென்பார் இக் குன்றவியல்பு' என்றார்.

இப் பகுதியிற் கூறிய புலவி நுணுக்கத்தின் அருமையோடு,

"நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று." (கஉ௨0)

எனவரும் அருமைத் திருக்குறளையும் நினைக.

கரு - உக: ஐவளம்.............................பாட்டு

(இ - ள்.) மெய் வளம் பூத்த விழைதகு பொன் அணி பாணு-உடம்பு அழகுற்றுப் பொலிதற்குக் காரணமான விரும்பத் தகுந்த பொன்னாலாகிய அணிகலன்களை அணிந்த பாணனே, ஐ வளம் பூத்த அணிதிகழ் குன்றின் மேல் - தனக்குரிய ஐந்து வளமுமிக்குப் பொலிந்த அழகு விளங்காநின்ற இத் திருப்பரங்குன்றின்மேல் வாழாநின்ற, மைவளம் பூத்த மலர்ஏர் மழைக் கண்ணார்-மையிட்டமையானே அழகுமிக்குப் பொலிந்த தாமரை மலரை ஒத்த குளிர்ந்த கண்ணையுடைய மகளிரது, மொய் வளம் பூத்த முயக்கம் - இறுகல் மிக்க முயக்கத்தை, கைவளம் பூத்த வடுவொடு யாம் கைப்படுத்தேம் - தலைவன் மெய்யின்கண் கிடந்த அப் பரத்தையரது உகிர்செய்த வடுவினாலேயாம் நன்கு அறிந்துகொண்டோம், நீ காணாய் - அதனை நீ கண்டிலையோ, நின் நைவளம் பூத்த நரம்பு இயைசீர்ப் பாட்டுப் பொய்வளம் பூத்தன - நின்னுடைய நட்டபாடை என்னும் பண்ணைத் தருகின்ற யாழ்நரம்பிற்கு இயைந்த தாளத்தையுடைய பாட்டு, நின்னையல்லது பரத்தைமையான் அல்லன் தலைவன் என்னும் பொருளோடு புணர்தலானே பொய்ம்மிகுதியை உணர்த்தின;

(வி - ம்.) ஐவளம் - ஐந்துவகையான மலைதரும் பொருள். அவை: அரக்கு இறலி செந்தேன் மயிற்பீலி நாவி என்பனவாம். இறலி என்னுமிடத்து 'உலண்டு' என்று கூறுவாருமுளர். உலண்டு - பட்டுப்புழு. பூத்த - பொலிவுபெற்ற. மை - கண்ணுக்கிடும் மை

என்க. ஏர்: உவம உருபு. மழைபோலும் குளிர்ந்த கண்ணூர் என்க. என்றது பரத்தையரை. கை: ஆகுபெயரான் உகிர் என்னும் பொருள் குறித்து நின்றது. கைப்படுத்தேம் என்றது, நன்கு உணர்ந்தேம் என்றவாறு. நீ காணுய் என்றதனை எடுத்தோதி வினவாக்குக. அதனைக் கண்டனையேல் இங்ஙனம் பொய்கூறுவாயல்லை என்றிகழ்ந்தவாறு. நின் மெய்வளம் பூத்ததே அன்றி உள்ளம் வளம்பூத்ததன்றென்பாள் 'மெய்வளம்பூத்த பொன்அணி பாணு' என்ருள். இத்தகைய பொன்னணியைத் தலைவன்பாற் பரிசிலாகப் பெறுதல் கருதியே அவனைப் புகழ்ந்து பாடுகின்றனை என இடித்துரைத்தாளுமாயிற்று. கேள்விக்கின்னுத பொய்யினைக் கேள்விக்கினிய இசையோடுகூட்டிக் கெடுத்தொழிந்தாய் என்பாள், 'நின் நைவளம் பூத்த நரம்பியை சீர்ப் பாட்டு, பொய்வளம் பூத்தன' என்ருள். நைவளம் - நட்டபாடை என்னும் பண். நரம்பு - யாழ்நரம்பு.

தலைவன் பரத்தமையுடையனுதல் யாம் காட்சியளவையானே கண்டனம் ஆகவும் நீ தலைவன் தூயன் பரத்தமையுடையான் அல்லன் என்னும் பொருளை இயைத்துப்பாடா நின்றனை, ஆதலின் நின் பாட்டுப் பொய்ம் மிக்கது என்றவாறு.

(பரிமே.) மலைவளம் ஐந்தாவன: "அரக்கிறலி செந்தேன் அணிமயிலின் பீலி திருத்தகு நாவியோ டைந்து" என்பதனுலறிக.

இது பாணனுக்குத் தலைவன் பரத்தமை கூறுகின்ருளொரு தலைவி கூற்று. இதனுல் அத்தன்மைத்தாகிய இன்பத்ததென்பது பெறப் பட்டது.

இனி, அவனை எதிர்முகமாக்கி:

உஉ - உகூ : தண் டளிர்.......................நகர்

(இ - ள்.) வெண் சுடர் வேல் வேள் விரை மயில்மேல் ஞாயிறு-வெள்ளிய ஒளியுடைய வேற்படை யேந்திய செவ்வேளே! விரைந்த செலவினையுடைய மயிலின்மேல் ஏறிவரும் கடவுள் ஞாயிறே !, தண் தளிர் தருப்படுத்து எடுத்துரைஇ மழை முழங்கிய விறல் வரையால் - குளிர்ந்த தளிரை மரங்களிலே தோற்றுவித்து அச் செயலை உலகத்தார்க்கு எடுத்துக் கூறுமாறுபோல இருண்ட முகில்கள் முழங்காநின்ற சிகரமும், கண் பொருபு சுடர்ந்து அடர்ந்து இருள இடந்து போழும் கொடி மின்னல் - காண்போர் கண்களை மழுக்கிச் சுடர்விட்டு நெருங்கி இருளைப் பெயர்த்துப் பிளக்கும் கொடிமின்னலும், நின் களிறு ஒண்சுடர் ஓடை ஏய்க்கும் - நினது பிணிமுகம் என்னும் களிற்று யானையையும் அதன்கண் அணியப்பட்ட ஒள்ளிய ஒளியுடைய நெற்றிப்பட்டத்தையும் ஒத்தற்கு இடமான, நின் குன்றத்து எழுது எழில் அம்பலம்-நின்னுடைய திருப்பரங்குன்றத்தின்கண் ஓவியம் எழுதப்பட்ட அழகையுடைய அம்பலம், காமவேள் அம்பின் தொழில் வீற்றிருந்த நகர் - காமவேளினது அம்பினது ஏவுதற்றொழில் நிலைபெற்றிருந்த சிரமச்சாலையை ஒக்கும்;

(வி - ம்.) தருக்களிடத்தே தண்டளிரைப்படுத்து என்க; முகில் தன் பெயலாலே மரங்களைத் தளிர்க்கச்செய்து அச் செயலை உலகத்திற்கு எடுத்தோதுவது போன்று முழங்கிற்று என்றவாறு. இது, தற்குறிப்பேற்றம் என்னும் அணி. மங்குல் - இருள்: இருண்ட மழை என்க. மழை, முகிலுக்கு ஆகுபெயர். விறல் - வெற்றி. வரை - ஈண்டுச் சிகரம். ஆல்: அசைகள்: முகில் முழங்கிய சிகரத்திற்குக் களிறும் அதன் ஓடைக்குக் கொடிமின்னலும் உவமை எதிர் நிரனிறை. இருள் இடந்து போழும் என மாறுக. நெருங்கிய கொடிகளையுடைய மின்னல் என்பார் 'அடர்ந்து' எனஞர். இடந்து - பெயர்த்து. வேல் வேள் - முருகவேள். தேரின்மேல்வரும் உலக ஞாயிறல்லாத கடவுள் ஞாயிறே என்பார் 'மயில்மேல்வரும் ஞாயிறு' என்றார். எழுதெழிலம்பலம் - ஓவியம் வரையப்பட்ட அழகையுடைய திருக்கோயில் என்க. காமவேள் அம்புத்தொழில் பயிலும்சாலை என்றது, 'கண்டோர் விருப்பத்தை மேல்மேலும் எழுப்புதல்பற்றி. நகர் - வீடு: ஈண்டுச் சிலம்பக்கூடம். சிரமச்சாலை - சிலம்பக்கூடம்; படைக்கலம் பயிலிடம்.

(பரிமே.) '...............த்துமின்னும் வழக்குநோக்கி............... அம்பின் தொழில்' என்றார்.

மழைக்கு முழக்கம் கூறினமையின் யானைக்கும் முழக்கம் கொள்ளப்படும்.

௩௦ - ௩௭ : ஆர்ததும்பு.................போன்றன கை

(இ - ள்.) சூர் ததும்பு வரைய கா - இக் குன்றத்தின்கண் தீண்டிவருத்தும் தெய்வங்கள் நிறைந்த சிகரங்களிடத்தவாகிய சோலைகளும், கார்ததும்பு நீர்ததும்புவன சுனை - மேகங்கள் துளித்த நீர் நிறைந்து துளும்புவனவாகிய சுனைகளும், பூஅணி செறிவு - மலர்களை அணிந்த செறிவினாலே, ஏர்ததும்புவன - அழகு துளும்புகின்றவை, ஆர்ததும்பும் அயில் அம்பு நிறை நாழி - அழகு ஒழுகும் கூர்த்தமலர் அம்புநிறைந்த அம் மன்மத வேளின் ஆவ நாழிகையை ஒக்கும், கார் தோற்றும் காந்தள் செறிந்த கவின் - கார்ப்பருவத்தாலே தோன்றுவிக்கப்பட்ட காந்தட்குலைகள் நெருங்கிய அழகாலே, போர் தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ-அக் காமவேளின் போரிலே தோற்றுக் கட்டுண்டவருடைய கைகளை ஒத்தன, தும்பி கட்டு அவிழ்ப்ப கவின்முகை - வண்டுகளாலே அலர்த்தப்படுவனவாகிய அழகிய காந்தளரும்புகள், கட்டு யாழின் புரிநெகிழ்ப்பார் கைபோன்றன - கட்டுதலையுடைய யாழின் நரம்பினது புரியை நெகிழ்ப்பவருடைய கைகளை ஒத்தன;

(வி - ம்.) அக் குன்றத்தின்கண் உள்ள காவும் சுனையும் தம்பால் நிரம்பிய மலர்களை உடைமையால் ஆவநாழிகையை ஒத்தன; செறிந்த காந்தட்குலை கட்டுண்டார் கையை ஒத்தன; வண்டலர்த்திய முகை யாழ்நரம்பின் புரியவிழ்ப்பார் கையை ஒத்தன என்றவாறு.

ஆர் - அழகு : இதற்கிப்பொருளுண்மை ஆசிரிய நிகண்டில் (அ - சா) காண்க. மலரம்பு என்பது தோன்ற 'ஆர்ததும்பு அயிலம்பு' என்றார். எய்யப்பட்டார் உளத்தே தப்பாது ஊடுருவிச் செல்லு தலாலே மலரம்பிற்கும் கூர்மை கூறினார். அயில் - கூர்மை.

நாழி - ஆவநாழிகை: அம்புத்தூணி. சூர் - தீண்டி வருத்தும் தெய்வம் : சூரரமகளிர். திருப்பரங்குன்றத்தே சூரரமகளிர் நிறைந் திருப்பர் என்பதனை,

"கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூரர மகளிர் ஆடுஞ் சோலை." (திருமுரு. கூஅ - சக)

என ஆசிரியர் நக்கீரனார் ஓதுமாற்றானும் உணர்க.

கார் - முகில் : ஆகுபெயர். கார் ததும்புதலாலே நீர்ததும்பு சுனை என்க. அம் மதவேளின் போரில் தோற்று என்க. கட்டவிழ்த்தல் - கிண்டி அலர்த்துதல் : கைபோன்றன என மாறுக.

(பரிமே.) உவமை (கூசா - கூஎ) மலராது குவியாது இடைய தாகிய நிலைமைபற்றி நின்றது.

கூஅ - சரு : அச்சிரக்கால்........................குன்றம்

(இ - ள்.) அணிமழை அச்சிரக்கால் ஆர்த்து வச்சிரத் தான் வானவில்லுக் கோலின்று - அழகிய மேகம் முன்பனிக் காலத்தே முழங்கி வச்சிரப்படையையுடைய இந்திரனது வான வில்லை வளைத்தது, வல்லுப்போர் வல்லாய் - சூதுப்போர் வல்ல முருகவேளே !, மலைமேல் மரம் வில்லுச்சொரி பகழியின் மென் மலர் தாயின - நினது மலையின்மேலுள்ள மரங்கள் அவ் விந்திர வில் சொரியும் அம்புகள் உளவாயின் அவ் வம்புகள் பரக்குமாறு போல மெல்லிய மலர்களை யாண்டும் பரப்பின, வட்டு உருட்டு வல்லாய் - சூதுப்போரின்கண் உருண்டை உருட்டுதற் றொழிலில் வல்ல பெருமானே !, மலைய குன்றம் - நினது மலையிடத்துக் கோட்டத்தின்கண், போர் ததும்பும் அரவம்போல-போரின்கண் மிக்கெழாநின்ற முழக்கம்போல, கருவி சீர்ததும்பு அரவமுடன் சிறந்து ஆர்ப்ப - இசைக்கருவிகள் தாளம் ஒலிக்கும் ஒலியோ டியைந்து சிறப்புற்று முழங்காநிற்ப, கருவி நின்றன - மேகத் தொகுதியும் அம் முழக்கத்தோடொத்து முழங்கிநின்றன ;

(வி - ம்.) அச்சிரம் - முன்பனிக்காலம்: காலம் என்பது அம்மீறு கெட்டு அத்துச்சாரியை பெறுமல் காலார்த்து எனப் புணர்ந்து நின்றது. மழை - மேகம்: ஆகுபெயர். வச்சிரத்தான் - இந்திரன். வானவில்லினை இந்திரவில் என்னும் வழக்குப்பற்றி 'வச்சிரத்தான் வானவில்லு' என்றார். கோலின்று - கோலிற்று : வளைத்தது.

ஹ0 - ஆர்ததும்பும் அயிலாழி நிறைநாழி என்பது முதலாக அணி மழை கோலின்று என்பதிருகவுள்ள கா, சுனை, காந்தள், முகை, வான வில் என்பவற்றின்முன் உள - ஆம் அடிக்கண் உள்ள "நின்குன்றத்து" என்னும் தொடரைத் தனித்தனி அதிகாரத்தாற் கூட்டியுரைக்க.

அவ் வானவில் அம்பு சொரிதல் உளவாயின் அவ் வம்பு யாண்டும் பரவுமாறு மரங்கள் மலரைப் பரப்பின என்க. தாயின - பரப்பின.

வல்லுப்போர் - சூதுப்போர். வட்டு - சூதுப்போரின்கண் உருட்டப்படும் உருண்டை. "கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக், கல்லாச் சிறுஅர் நெல்லிவட் டாடும்" (நற்றிணை - ஹ) எனவும், "அரங்கின்றி வட்டாடி யற்றே" (குறள் - ௪0க) எனவும் பிறரும் ஓதுதலறிக. கருவி இரண்டனுள் முன்னையது இசைக்கருவி, பின்னையது தொகுதி; மின் முதலிய தொகுதியையுடைய முகிலுக்கு ஆகுபெயர். நின்றன - ஒத்து நின்றன. (௪க) மலைய (௪௫) குன்றம் எனக் கொண்டு கூட்டுக. மலையிடத்துக் குன்றம் என்க. குன்றம் என்றது முருகவேள் கோட்டத்தை; ஆகுபெயர்.

(பரிமே.) ஈண்டுக் குன்றம் என்றது, முருகவேள் கோட்டத்தையும் அதனைச் சூழ்ந்த இடத்தையும்.

௪௬ - ௫0 : அருவி..........................சுனை

(இ - ள்.) வரை அருவி ஆர்ப்ப முத்து அணிந்தன - நின் குன்றத்தின் சிகரங்கள் வெள்ளிய அருவி ஆரவாரித்து இழிதலாலே முத்துமாலை அணிந்தாற் போன்றன, தினை குருவி ஆர்ப்பக் குரல் குவிந்தன - நினது குன்றத்தின்கண் தினைப் பயிர்கள் குருவிகள் ஆரவாரிக்கும்படி கதிர்கள் விளைந்தன, சுனை எருவை கோப்ப பல் மலரால் - நின் குன்றத்துள்ள சுனைகள் கரையினின்று சாய்ந்த கொறுக்கச்சியைத் தம்பால் நின்று நீண்டுயர்ந்து முட்டுவனவாகிய பல்வேறு நிறமுடைய நீர்ப்பூக்களாலே, கூனி எழில் அணி திருவில் வானின் - கூனற் பட்டு அழகுற்ற இந்திரவில்லை வளைத்த வானத்தைப் போன் றனவாகி, வரி ஊதும் அணித்த - வண்டுகள் ஊதாநின்ற அழகுடையவாயின;

(வி - ம்.) வெள்ளிய அருவி இடையறாது சிகரத்தினின்றும் வீழ்தல் அச் சிகரம் முத்துமாலை அணிந்தாற்போன்று தோன்றும் என்றவாறு. தினைகதிர் முற்றியபொழுது அக் கதிரைத் தின்னும் குருவிகள் அங்கு ஆரவாரிக்கும் ஆகலின் 'தினை குருவியார்ப்பக் குரல் குவிந்தன' என்றார். எருவை - கொறுக்கைச்சி என்னுமொரு புல். இது நீர்க்கரைகளிலே செழித்து வளரும் இயல்புடையது. கரையினின்றும் நீரின்மேலாய்ச் சாய்ந்துள்ள கொறுக்கைச்சியினைச் சுனைநீரினின்றும் வளர்ந்த பன்னிற நீர்ப்பூக்கள் சென்று முட்டுவன என்க. பன்னிற நீர்ப்பூக்கள் செறிந்த சுனைக்குப் பன்னிறமுடைய வானவில்லையுடைய வானம் உவமை என்க. திருவில் என்றது இந்திரவில்லினை. அணித்த - அழகுடையன. வரி - வண்டு.

(பரிமே.) இவ்வளவும் மலைச்சிறப்புக்கூறி மேல் வாழ்த்தி முடிக்கின்றார்.

ருக - ருகா: புரியுறு.......................சுற்றமோடுடனே

(இ - ள்.) செரு வேல் தானைச் செல்வ - போர்வென்றியையுடைய வேற்படையேந்திய செல்வனே! நினது பூசைக்கண், புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து - முறுக்குதல் உற்ற யாழ் நரம்பினது இசையும், நல்லிசைப் புலவர் பாடிய இயற்பாடல்களும் பொருந்தி, சுருதியும் பூவும் சுடரும் கூடி - வேத வொலியும் உபசாரமாகிய மலர்களும் விளக்குகளும் கூடி, எரி உருகும் அகிலோடு ஆரமும் கமழும் - தீயிலிடப்பட்டு உருகும் அகிற்புகையும் சந்தனப்புகையும் கமழாநிற்கும், நின் அடியுறை - நினது திருவடியின்கண் உறைதலை, எம் சுற்றமோடுடனே - யாம் எம் சுற்றத்தாரோடு ஒருங்கு கூடி, உரிதின் உறைபதிசேர்ந்தாங்கு - எமக்குரித்தாகிய ஊரின்கண் உறையுமாறு போல, பிரியாதிருக்க - எப்பொழுதும் பிரியாது உரிமையோடு உறைவேமாக; அங்ஙனம் உறையும்படி அருள்புரிவாயாக;

(வி - ம்.) புரி - முறுக்குதல். நரம்பு ஆகுபெயராய் அதன் இசையைக் குறித்து நின்றது. இயல் என்றது, நல்லிசைப்புலவர் பாடிய இயற்பாட்டுகளை. அவையாவன:- திருமுருகாற்றுப்படை போல்வன என்க. சுருதி - வேதம். பூ, சுடர் முதலியன பூசையில் இறைவனுக்குச் செய்யப்படும் உபசாரங்கள். இவை பதினாறு வகைப்படும். அவையாவன:- ஆவாகநம், தாபநம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேநுமுத்திரை, பாத்தியம், ஆசமநீயம், அருக்கியம், புட்பதாநம், தூபம், தீபம், நைவேத்தியம், பாநீயம், செபசமர்ப்பணை, ஆராத்திகை என்பனவாம். இவை சைவ சம்பிகள் கூறும் உபசாரம். இவ் வுபசாரம் சமயங்கடோறும் வேறுபடுதலும் உண்டு.

எரி - தீ. அகிலும் சந்தனமும் இட்டு எழுப்பிய நறும்புகை கமழாநின்ற நினது திருவடி என்க. செரு - போர். போரின்கண் வென்றியை யுடைய வேல் என்க. உலகத்திலுள்ள எல்லாப் பொருளும் இறைவனுடைய உடைமையே ஆதலின் செல்வ என்று விளித்தார். இதனை,

"எல்லாம் உன்னுடைமையே எல்லாம் உன் அடிமையே
எல்லாம் உன்னுடைய செயலே!" (தாயுமானவர்)

எனவரும் ஆன்றோர் மெய்ம்மொழியானும் உணர்க.

யாங்கள் எம்முடைய ஊரின்கண் உரிமையோடு உறைதல் போன்று நினது திருவடி நீழலிலே என்றும் பிரியாதுறைதலை விரும்புகின்றேம்; அங்ஙனமே உறையுமாறு அருள்புரிக என்று வேண்டியபடியாம். அங்ஙனமே உறையுமாறு அருள்புரிக என்பது இசையெச்சப்பொருள்.

---

## பத்தொன்பதாம் பாடல்

# செவ்வேள்

பொருட் சுருக்கம்

(௩௬) குருகுபெயர்க் குன்றம் எறிந்த வேற்படையேந்திய செவ்வேளே !

௧ - ௭ : வானவர் உலகத்திலே நீ எழுந்தருளியிருப்ப தற்குக் காரணமான விருப்பத்தைப் போலவே இம் மண்ணுலகத்தும் எழுந்தருளும் விருப்பம் உடையையாகி, அறிவெல்லையாலே அறியப்படாத கடப்பமரத்தை மேவி, அவ்வானவர் எய்தும் இன்பத்தை இம் மண்ணவரும் எய்துக என்று திருவுளங் கொண்டு நீ எழுந்தருளியிருக்கும் திருப்பரங்குன்றத்தின் கண்ணே, வள்ளியை மணம்புரிந்தருளியது, நீ வானவர்பால் தேவசேனையை மணந்தாற் போன்று இம் மண்ணவர் மகளொருத்தியையும் மணந்து இவருடன் உறவுகொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தாற் போலும்.

அ - ௧௯ : அறிவுப் போராலும், மறப்போராலும் பிறரை வெல்லுமியல்புடைய மதுரையிலுள்ள மைந்தரும் மகளிரும் புணர்ச்சி யின்பத்தோடே வந்த இரவு கழிந்த வைகறைப் பொழுதின்கண் இவ்வுலகத்தில் அறத்தைப் பெரிதாகச்செய்து அதன் பயனை நுகரவேண்டித் தேவருலகத்திற்குச் செல்வார் போன்று தத்தமக்கு ஏற்ற அணிகலன்களையும் ஆடைகளையும் அணிந்து கொண்டு குதிரையின்மேலும் தேரின்மேலும் ஏறிப் போந்து நின் திருப்பரங்குன்றத்திற்கும் மதுரைக்கும் இடைநிலமெல்லாம் நெருங்கி யாத்திரை செய்யும் வழி அவருடைய மலர் மாலையணிந்த தலைகள் இடைவெளியின்றி நிறைதலால், ஒத்த மலர்களைச் செறியவைத்துக்கட்டி நிலமகளிற்கிட்டதொரு மாலைபோலத் தோன்றும்.

௨௦ - ௩௭ : யானையையுடைய முருகவேளே ! அறிவிற் சிறந்த பாண்டியன் மகளிரோடும் அமைச்சர்களோடும் பிற மக்களோடும் நினது மலையில் ஏறி நின் திருக்கோயிலை வலம் வந்தான் ; அக் காட்சி விண்மீன்கள் தன்னைச் சூழத் திங்கள் மேருவை வலம் வரும் காட்சியை ஒத்தது ; அம் மன்னனோடு வந்தோருட் சிலர், தலையில் பரிவட்டங் கட்டியிருந்தனர் ; பலர்

நின்னை ஏத்திப்புகழ்ந்து கொண்டே வந்தனர்; சிலர் தம்மோடு வந்த யானைகளை வழியினின்றும் அகற்றி மரங்களில் கட்டி அவற்றிற்குக் கரும்பை முறித்துக் கொடுத்தனர்; சிலர் குதிரைகளை வழியினின்றும் அகற்றினர்; சிலர் தேர்களை வழியினின்றும் அகற்றினர்; இவற்றால் நின் திருப்பரங் குன்றத்தின் கீழுள்ள நிலப்பரப்புப் பாசறை போலத் தோன்றிற்று.

௩௨ - ௪௫: பாண்டியனுடன் மலை மீதேறிச் சென்றவருள் சிலர், குரங்குகளுக்குத் தின்பண்டம் வழங்கினர்; சிலர், முசுக்கலைகளுக்குக் கரும்பை வழங்கினர்; சிலர், பிரமவீணை யென்னும் இசைக்கருவியை இயக்கினர்; சிலர், குழல் ஊதினர்; சிலர், யாழியக்கினர்; சிலர் பூசைச் சிறப்பைப் புகழ்ந்தனர்; சிலர் முரசை முழக்கினர்.

௪௬ - ௫௭: இவர்கள் இங்ஙனமிருப்ப, வேறுசிலர் அக் குன்றத்திலுள்ள எழுத்துநிலை மண்டபத்தினுள் புகுந்து அங்குத் தீட்டப்பட்ட ஓவியங்களைக் கண்டு களிப்பாராயினர்; சிலர், துருவசக்கரத்தைப் பொருந்திவரும் ஞாயிறு முதலிய கோள்களின் நிலைமைகளை விளக்கும் ஓவியத்தைக் கண்டு நின்றனர்; சிலர், தம் மனைவியர் தம்மை வினவுந்தோறும், அவ் வோவியங்களைச் சுட்டிக்காட்டி இவள் இரதி; இவன்றான் காமன் என்றும், இப் பூனை, இந்திரன் கொண்ட பூனையுருவம்; இவள் அகலிகை; இவன் கௌதமன்; இவன் சினத்தலாலே கல்லுருப்பெற்ற அகலிகை உரு இது என்று விளக்கம் கூறு நின்றனர்; இவ்வாறு வினவவும் விடையிறுப்பவும் இத்தகைய பற்பல சித்திரம் தீட்டப்பெற்ற மண்டபங்களை உடைய மங்கல நிலை உடையது இப் பரங்குன்றம்.

௫௮ - ௬௬: பேதைப் பருவத்தாள் ஒருத்தி, தன் உறவினரிடமிருந்து பிரிந்து போய்விட்டாள்; அவள் அவ்வுறவினரைக் காண்டல் கருதி அக் குன்றத்திலுள்ள கற்களிடையே புகுந்து 'ஏஎ' 'ஓஒ' என்று கூப்பிட்டாள்; அக் கற்களினின்றும் 'ஏஎ' 'ஓஒ' என்ற எதிரொலி எழுந்தது; அஃது எதிரொலி என்பதை உணராத அச் சிறுமி, அவ்வொலி தன் உறவினர் தன்னைக் கூப்பிடும் ஒலி எனக் கருதி அவ்வொலி எழுமிடனெல்லாம் சென்று சென்று தடுமாறு நின்றாள்; இவ்வாறு திருப்பரங்குன்றம் சிறுவர்க்கு மடமை செய்யா நின்றது.

௬௭ - ௭௪: நெடியோனே! நின் திருப்பரங்குன்றத்தின்கண் உள்ள சுனையருகே நின்ற மரங்களின் இளந்தளிர்களை

இளமகளிர் சுனையில் வீழும்படி உதிர்த்து விளையாடினர்; அத் தளிர்கள் அச் சுனையிலுள்ள நீர்ப்பூவையும் அரும்புகளையும் பொருந்தித் தலைதூக்கிக் கிடந்தன; பின்னர் அச் சுனையருகே வந்த மகளிர் சிலர், அவற்றுள் மலர்ந்த மலரோடு கிடந்த பூங் கொத்தினைக் கண்டு இஃது ஐந்துதலைப் பாம்பு என்றும், அத னருகே பேரரும்போடு கிடந்ததொன்றனை இஃது அதன் மூத்த பிள்ளை என்றும், சிறிய அரும்போடு கிடந்தவொன்றனை இஃது அதன் இளையபிள்ளை என்றும் கருதி மயங்கா நின்றனர்.

**௭௫ - ௮௪:** அதனருகே பச்சிலையின் இளங்கொழுந்தும், ஆம்பலும், காந்தளும், பஞ்சாய்க் கோரையும், வேங்கையும், தோன்றியும், நறவமும், கோங்கமும், இலவமும் ஆகிய இவை யெல்லாம், கட்டிய மாலைகள் போன்று செறிந்தும், கோத்த மாலை போன்று நிறம் மாறுபட்டும், தொடுத்த மாலைகள்போல இடையிட்டும், தூக்கிக் கட்டின மாலைகள் போல நெருங்கியும் பூத்தன. இங்ஙனம் விரவிப்பூத்த மலர்ப்பரப்பு நின் பரங் குன்றத்தின்கண் விடியற்காலத்திலே பன்னிற முகில்கள் நிறைந்த வானப்பரப்புப் போன்று விளங்கும்.

**௮௫ - ௯௪:** மணமான மகளிரும், கன்னி மகளிரும், நின் பரங்குன்றத்தை அடைந்து, நினது கொடியேற்றப்படும் யானை யின் கும்பத்தைக் குங்குமத்தாலே அணிசெய்து மலரும் நீருந் தூவி செவிக்கவரிகளைச் சாத்திப் பொற்குடையை மேலே கவித்து வழிபட்டனர்; அவ் வழிபாட்டின்கண் அந்த யானை யுண்டெஞ்சிய கவளத்தை அவர்கள் உவந்து உண்டனர்; அங்ஙனம் உண்ணுவிடின், அம் மகளிர் நிரலே தங்காதலர் அன்பையும், கண்ணிறைந்த கணவரையும் எய்தார்.

**௯௫ - ௯௬:** குறக்கொடியை மணந்தவனே! எம் வாழ்த் தினை நின் செவிக்குச் சிறப்புணவாக ஏற்றருள்க.

**௯௭ - ௧0௩:** நின் ஆடையும் மாலையும் சிவந்தன; நின் வேற்படையும் பவழம் போன்ற நிறமுடையதே; நின் திருமேனி செந்தீயை ஒக்கும்; திருமுகம் இளஞாயிற்றை ஒக்கும்; சூர பன்மாவை அழித்தோனே! குருகு மலையில் வேலை எறிந்து அதனை உடைத்தோனே!

**௧0௩ - ௧0௫:** நீ இம் மலையில் கடப்பமரத்தின்கண் விரும்பிப் பொருந்திய நிலையை உடன்மேவிய சுற்றத்தாரொடு ஏத்தித் தொழுது வாழ்த்தினேம். எமக்கு அருள்புரிவாயாக!

நிலவரை யழுவத்தான் வானுறை புகறந்து
புலவரை யறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்
தருமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சிமன்
இருநிலத் தோரும் இயைகென ஈத்தநின்
தண்பரங் குன்றத் தியலணி நின்மருங்கு
சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோலு மயிற்கொடி வதுவை
புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடற்
கலப்போ டியைந்த இரவுத்தீர் எல்லை
அறம்பெரி தாற்றி யதன்பயன் கோண்மார்
சிறந்தோர் உலகம் படருநர் போல
உரிமாண் புனைகலம் ஒண்டுகில் தாங்கிப்
புரிமாண் புரவியர் போக்கமை தேரர்
தேரிமலர்த் தாரர் தெருவிருள் சீப்பநின்
குன்றொடு கூடல் இடையெல்லாம் ஒன்றுபு
நேர்பூ நிறைபெய் திருநிலம் பூட்டிய
தார்போலு மாலைத் தலைநிறையால் தண்மணல்
ஆர்வேலை யாத்திரைசெல் யாறு ;
சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் புலமாண் வழுதி
மடமயி லோரு மனையவ ரோடும்
கடனறி காரியக் கண்ணவ ரோடுநின்
சூருறை குன்றிற் றடவரை யேறிமேற்
பாடு வலந்திரி பண்பிற பழமதிச்
சூடி யசையுஞ் சுவன்மிசைத் தானையிற்
பாடிய நாவிற் பரந்த வுவகையின்
நாடு நகரு மடைய அடைந்தனைத்தே
படுமணி யானை நெடியோய்நீ மேய
கடிநகர் சூழ்நுவலுங் கால் ;
தும்பி தொடர்கதுப்ப தும்பி தொடராட்டி
வம்பணி பூங்கயிற்று வாங்கி மரனசைப்பார்
வண்டார்ப் புரவி வழிநீங்க வாங்குவார்
திண்டேர் வழியிற் செலநிறுப்பார் கண்டக்
கரும்பு கவழ மடுப்பார் நிரந்து

பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே
குருகெறி வேலோய்நின் குன்றக்கீழ் நின்ற
இடைநிலம் யாமேத்து மாறு;
குரங்கருந்து பண்ணியங் கொடுப்போரும்
கரும்பு கருமுகக் கணக்களிப் போரும்
தெய்வப் பிரமஞ் செய்கு வோரும்
கைவைத் திமிர்புகுழல் காண்கு வோரு
மியாழின் இளிகுரல் சமங்கொள் வோரும்
வேள்வியின் அழகியல் விளம்பு வோரும்
கூர நாண்குரல் கொம்மென வொலிப்ப
ஊழுற முரசின் ஒலிசெய் வோரும்
என்றூ ழுறவரும் இருசுடர் நேமி
ஒன்றிய சுடர்நிலை யுள்படு வோரும்
இரதி காமன் இவளிவன் எனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை இவளக லிகையிவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்
இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்
துன்னுநர் சுட்டவுஞ் சுட்டறி வுறுத்தவும்
நேர்வரை விரியறை வியலிடத் திழைக்கச்
சோபன நிலையது துணிபரங் குன்றத்து
மாஅன் மருகன் மாட மருங்கு;
பிறந்த தமரிற் பெயர்ந்தோரு பேதை
பிறங்கல் இடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்
வந்த நெறியு மறந்தேன் சிறந்தவர்
ஏஎ யோஒ எனவிளி ஏற்பிக்க
ஏஎ யோஒவென் றேலா அவ்விளி
அவ்விசை முழையேற் றழைப்ப அழைத்துழிச்
செல்குவள் ஆங்குத் தமர்க்காணாமை
மீட்சியுங் கூஉக்கூஉ மேவு மடமைத்தே
வாழ்த்துவப்பான் குன்றின் வகை;
கனிதுனி நயவரு சாய்ப்பின் நாறிணர்ச்
சினைபோழ் பல்லவந் தீஞ்சுனை யுதிர்ப்ப

உதிர்த்த சுனையின் எடுத்த தலைய
அலர்முகிழுற அவைகிடப்பத்
தெரிமலர் நனையுறுவ
ஐந்தலை அவிர்பொறி அரவ மூத்த
மைந்தன் அருகொன்று மற்றிளம் பார்ப்பென
ஆங்கிள மகளிர் மருளப் பாங்கர்
பசும்பிடி இளமுகிழ் நெகிழ்ந்தவா யாம்பல்
கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்
எருவை நறுந்தோ டெரியிணர் வேங்கை
உருவமிகு தோன்றி ஊழிணர் நறவம்
பருவமில் கோங்கம் பகைமல ரிலவம்
நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க
மணந்தவை போல வரைமலை யெல்லாம்
நிறைந்தும் உறழ்ந்து நிமிர்ந்துந் தொடர்ந்தும்
விடியல் வியல்வானம் போலப் பொலியும்
நெடியாய்நின் குன்றின் மிசை ;
நினையானைச் சென்னி நிறங்குங் குமத்தாற்
புனையாப்பூ நீருட்டிப் புனைகவரி சார்த்தாப்
பொற்பவழப் பூங்காம்பிற் பொற்குடை யேற்றி
மலிவுடை யுள்ளத்தான் வந்துசெய் வேள்வியுள்
பன்மண மன்னு பின்னிருங் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலத் தார்நின்
கொடியேற்று வாரணங் கொள்கவழ மிச்சில்
மறுவற்ற மைந்தர்தோள் எய்தார் மணந்தார்
முறுவற் றலையளி எய்தார்நின் குன்றம்
குறுகிச் சிறப்புணாக் கால் ;
குறப்பிணாக் கொடியைக் கூடியோய் வாழ்த்துச்
சிறப்புணாக் கேட்டி செவி ;
உடையும் ஒலியலுஞ் செய்யைமற் றாங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்
உருவும் உருவத்தீ ஒத்தி முகனும்
விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி
எவ்வத் தொவ்வா மாமுதல் தடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவேல் அழுத்தி

அவ்வரை யுடைத்தோய்நீ இவ்வரை மருங்கிற்
கடம்பமர் அணிநிலை பகர்ந்தேம்
௬௦ உடங்கமர் ஆயமொ டேத்தினந் தொழுதே.

கடவுள் வாழ்த்து

நப்பண்ணனார் பாட்டு; மருத்துவன் நல்லச்சுதனார் இசை;
பண் காந்தாரம்.

உரை

௧ - ௭ : நிலவரை.................................வதுவை

(இ - ள்.) (௩௬) குருகு எறி வேலோய் - கிரௌஞ்சம் என்னும் மலையை உடைத்த வேற்படையை யேந்திய பெருமானே!, வான் உறை புகல் அழுவத்து நிலவரையான் தந்து - நீ வானவர் உலகிலே உறைதற்குக் கொண்டுள்ள அத்துணை விருப்பமே கடல் சூழ்ந்த இந்நில எல்லையிலே உறைதற்கும் கொண்டு, புலவரை அறியாத புகழ் பூத்த கடம்பு அமர்ந்து - அறிவு எல்லையால் அறியப்படாத பெரும்புகழையுடைய கடப்ப மரத்தின்கண் பொருந்தி, அரு முனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சி இரு நிலத்தோரும் இயைக மன் என - பெறுதற்கரிய தலைமைத் தன்மையான் நிரம்பிய தேவர்கள் தன் திருவடி தொழுது பெறுநின்ற இன்பத்தினை இந்தப் பெரிய மண்ணுலகத்து வாழும் மக்களும் எய்தி உய்க எனத் திருவுளத்தடைத்து, ஈத்த நின் தண்பரங்குன்றத்து - எழுந்தருளி நின் திருவடி தொழுதலாகிய அப் பேரின்பத்தை நல்கிய இத் தண்ணிய திருப்பரங் குன்றத்திலே, இயல் அணி மயில் கொடி வதுவை - நீ ஆடுகின்ற அழகிய மயில் போன்ற வள்ளியைத் திருமணம் புரிந்தருளும் இச் செயல், துறக்கத்து நின் மருங்கு சாறுகொள் அவளொடு மாறுகொள்வது போலும் - அவ்வானவர் உலகத்திலே நின் பக்கலிலே அமர்ந்து விழாக்கொண்ட அவ் வானவர் மகளாகிய தேவசேனையினது திருமணத்தோடு மாறுபட்டதொரு செயல்போலும்;

(வி - ம்.) நிலவரை - நில எல்லை. அழுவம் - கடல். அழுவத்து நிலவரையான் என மாறுக. நிலவரையான்: உருபுமயக்கம். வானுறை புகல் - வானுலகில் உறைதற்குக் காரணமான விருப்பம் என்க. வானுலகிலே உறையும் அவ்வளவு விருப்பத்தோடேயே இந் நிலவுலகத்தினும் உறைந்து என்றவாறு.

வானுலகின்கண் உறைந்து அவ் வானவர்க்கு அணுக்கனாய் இருந்து காட்சியின்பம் நல்கினாற் போன்று, இம் மண்ணவர்க்கும் அணுக்கனாய் இருந்து இவர்க்கும் பேரின்பம் நல்கும் பொருட்டுத்

திருப்பரங்குன்றத்திலே எழுந்தருளினாய்; மேலும் அவ் வானவர் மகளொருத்தியை மணந்து அவர்க்கு மருகன் ஆனாற்போல, இம் மண்ணவர் மகளொருத்தியையும் மணந்து இவர்க்கும் மருகனாய் இன்பம் நல்குதல் வேண்டும் என்றும், அவ் வானவர் மகளொருத்தி நம் பக்கலிலே இருந்து விழாக் கொள்ளுமாறு, இம் மண்ணவர் மகளொருத்தியும் நம் பக்கலிலே இருந்து விழாக் கொள்க என்றும் கருதிப்போலும் நீ வள்ளியை மணம்புணர்ந்தருளினாய் என்பது இப் பகுதியின் கருத்து. இக் கருத்தினை உன்னுந்தோறும் உன்னுந் தோறும் மண்ணவராகிய நம்முள்ளத்தே உவகை பொங்கி எழாநின்றதன்றே?

"நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து" எனக் கம்ப நாடரும், "நரர்களுக்கும் சுரர்களுக்கும் நடுநின்ற நடுவே" என இராமலிங்க அடிகளாரும் கூறிய மொழிகளையும் நினைக.

"இறைவனே விரும்பி உறைதற் கிடமாயின் அதன் பெருமை அறியும் தரம் மாந்தர்க்குளதோ," என்பார் "புலவரையறியாத புகழ் பூத்த கடம்பு" என்றார். புலவரை - அறிவுஎல்லை. முனிமரபு - தலைமைத்தன்மை. ஆனறவர் - தேவர். மன் ஆக்கப் பொருளில் வந்தது. நுகர்ச்சி என்றது, இறைவன் திருவடி தொழுதலான் உண்டாகும் பேரின்பத்தை.

நினைக்கு மளவிலே உள்ளங்குளிரும் இயல்புடைய பரங்குன்றம் என்பார், 'நின் தண்பரங்குன்று' என்றார். இயலணி மயிற்கொடி வதுவை எனக் கூட்டுக. வதுவை - திருமணம். வானவர்மகளை மணத்தற்கு மாறாக மண்ணவர் மகளையும் மணத்தல் வேண்டும் என்னும் கருத்தாற் போலும் மயிற்கொடி வதுவை நிகழ்த்தியது என்க.

துறக்கத்தவள் என்றது, தேவசேனையை. மயிற்கொடி என்றது, வள்ளியை. வள்ளியை மணம் புணர்ந்தமையானே மண்ணவர் முருகனை உறவு கொண்டாடுதலையும் அவன்பால் உரிமையோடே வரங் கேட்டலையும் ஆசிரியர் இளங்கோவடிகளார் இயற்றி அருளிய சிலப்பதிகாரத்தே குன்றக்குரவை (பாட்டு மடை: ௧௫ - ௯ - ௭.) யின்கண்,

"கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதல்
மயிலியல் மடவரல் மலையர்தம் மகளார்
செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
அயன்மண மொழிஅருள் அவர்மணம் எனவே."

"மலைமகள் மகனைநின் மதிநுதன் மடவரல்
குலமலை உறைதரு குறவர்தம் மகளார்
நிலையுயர் கடவுள்நின் னடியிணை தொழுதேம்
பலரறி மணமவர் படுகுவர் எனவே."

"குறமகள் அவள்எம குலமகள் அவளொடும்
அறுமுக ஒருவனின் அடியிணை தொழுதேம்

துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்
பெறுகநன் மணம்விடு பிழைமணம் எனவே.''

எனவரும் செய்யுள்களான் உணர்க.

(பரிமே.) அலங்காரத்தையுடைய வதுவை என இயையும்.

அ - கஅ: புலத்தினும்.........................யாறு

(இ - ள்.) புலத்தினும் போரினும் போர் தோலாக் கூடல் - பெருமானே நின்னை வழிபடும் பொருட்டு அறிவாலும் மறத்தாலும் செய்யும் சொற்போர் படைப்போர் என்னும் இருவகைப் போரிடத்தும் தோற்றலின்றி வெல்லும் இயல்புடைய மதுரையின்கண் வாழும் மகளிரும்மைந்தரும் ஆகிய மக்கள், கலபபோடு இயைந்த இரவு தீர் எல்லை - புணர்ச்சி யின்பத்தோடேவந்து பொருந்திய அவ் வின்பவிரவு நீங்கிய வைகறைப் பொழுதிலே விழித்தெழுந்து, பெரிது அறம் ஆற்றி அதன் பயன் கொண்மார் சிறந்தோர் உலகம் படருநர் போல - இவ்வுலகத்தே பெரிதும் அறத்தைச்செய்து அவ் வறத்தின பயனாகிய இன்பத்தை நுகரும்பொருட்டு வானவர் உலகத்திற்கு மகிழ்ந்து செல்வார் போன்று, உரி மாண் புனைகலம் ஒண் துகில் தாங்கி - தத்தமக்கு உரிய மாண்புடைய அணிகலன்களையும் ஆடைகளையும் அணிந்துகொண்டு, புரி மாண் புரவியர் போக்கு அமை தேரர்-கண்டோர் விரும்புதல் மாட்சிமையுடைய குதிரைகளை ஊர்வோரும் நல்ல ஓட்டம் அமைந்த தேர்களை ஊர்வோருமாய், தெரிமலர்த்தாரர் - ஆராய்ந்து புனைந்த மலர்மாலைகளை அணிந்தோருமாய்; தெருவு இருள் சீப்ப - தங்கள் அணிகலங்களின் சுடர் அத் தெருவின்கட் படர்ந்த அவ் வைகறையிருளை அகற்றும்படி போந்து, நின் குன்றொடு கூடல் இடை எல்லாம் ஒன்றுபு - நினது திருப்பரங்குன்றத்திற்கும் மதுரைக்கும் இடையிலே கிடந்த நிலமெல்லாம் நெருங்கி, யாத்திரை செல் ஆறு - யாத்திரை செல்லாநின்ற வழி, மாலைத்தலை நிறையால் - அவர் தம் மலர்மாலையணிந்த தலைகள் இடைவெளியின்றி நிறைதலானே, நேர்பூ நிறை பெய்து இருநிலம் பூட்டிய தார் போலும் - நினது குன்றின்மேல் நின்று நோக்குவார்க்கு ஒத்த பூக்களை நிறைய வைத்துக் கட்டி பெரிய நிலமகளுக்குச் சூட்டப்பட்டதொரு மாலைபோன்று தோன்றுநிற்கும், ஆர் தண் மணல் வேலை - அவர்கள் ஆரவாரிக்கும் முழக்கம், குளிர்ந்த மணற்பரப்பிலே மோதி முழங்கும் கடல் முழக்கம் போன்று கேளாநிற்கும்;

(வி - ம்.) புலம்-அறிவு. அறிவுப்போர் என்றது, புலவர் பட்டிமண்டபம் ஏறி இயற்றும் சொற்போர். போரினும் என்றது மறத்

தாற் செய்யும் களப்போர் என்க. எனவே, மதுரைமக்கள் அறிவு வன்மையும் உடல் வன்மையும் ஒருங்கேயுடையர் என்பது கருத்து.

மதுரையின்கண் அறிவுடையோர் தாம் பிற நாட்டினரோடு சொற்போர் செய்து வென்றமைக்கு அறிகுறியாக வெற்றிக்கொடி உயர்த்திருத்தலும் மறவர் தம் வெற்றிக்கு அறிகுறியாக வெற்றிக் கொடி உயர்த்திருத்தலும் ஆகிய செயல்களை,

"வேறுபல் பெயர ஆரெயில் கொளக்கொள
நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி
நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு
புலவுப்படக் கொன்று மிடைதோ லோட்டிப்
புகழ்செய் தெடுத்த விறல்சால் நன்கொடி
..................................நன்பல
பல்வேறு குழூஉக் கொடி பதாகை நிலைஇ." (௩௬௭ - ௭௩.)

எனவரும் மதுரைக்காஞ்சியானும், இதனுள் நன்பல பல்வேறு குழூஉக் கொடி என்பதற்கு, "'நன்பல' என்றார், கல்வி கொடை தவம் முதலியவற்றை" என, ஆசிரியர் நச்சினார்க்கினியர் தரும் விளக்கத்தானும் உணர்க.

இராப்பொழுதும் எல்லையற்ற இன்பத்தோடு கழிதற்கிடமான மதுரை யென்பார் 'கலப்போ டியைந்த இரவு' என்றார். கலப்பு - காதலர்கூட்டம். இரவுத் தீரெல்லை - வைகைறைப் பொழுதென்க.

அறஞ்செய்தோர் துறக்கம் எய்தி அதன்பயனை நுகர்வர் என்பதும், தீவினை செய்தோர் நரகமெய்தி வருந்துவர் என்பதும் மெய்ந்நூற்றுணிபு. இதனை,

"மேனிலை உலகத் தவருடன் போகும்
தாவா நல்லறஞ் செய்திலர்."

என்றும்,

"நற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்
அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்
பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவ தன்றே தொன்றியல் வாழ்க்கை."
(சிலப் - ௩0; ௧௨௪-௫; ௧௩௬ - ௪0)

என்றும்,

"வண்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போல்."
(கலி - ௧௧௮: ௧ - ௩.)

என்றும் பிறசான்றோரும் கூறுதலான் உணர்க.

கொண்மார் - கொள்ளும் பொருட்டு. உரி - உரிமை. புனைகலம் - அணிகலம். போக்கு - நல்ல ஓட்டம். தெரிமலர் - ஆராய்ந்த மலர். ஒன்றுபு - நெருங்கி. நேர்பூ - தம்முள் ஒத்தமலர். யாத்திரை செல்லா நின்றவழி செல்வார்தம் மலர் சூட்டிய தலைகள் இடைவெளியின்றி நிறைதலானே நிலமகட்கு இட்டதொரு மாலைபோலத் தோன்றும் என்க. அவர்தம் ஆர்வேலை போலும் என்க. ஆர் - ஆரவாரம்.

போரினும் என்பதன்கண் உள்ள போர் என்பதும், கூடல் என்பதும் ஆகுபெயர்கள். மறம், கூடலில் வாழ்வோர் என்னும் பொருளன.

(பரிமே.) சீப்ப என்னும் எச்சத்திற்கு முடிபாகிய போந்து என்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது.

தாங்கிப் புரவியராய்த் தேரராய்த் தாரராய் வைகறைக்கட் போந்து நெருங்கிப் படருநர்போலச் செல்கின்றவழி தார்போலும் என்க.

கக - உக : கூடரொடு......................நுவலுங்கால்

(இ - ள்.) படுமணி யானை நெடியாய் - ஒலிபடாநின்ற மணியையணிந்த பிணிமுகம் என்னும் களிற்றையும் நீண்ட புகழையும் உடைய பெருமானே!, புலம் மாண் வழுதி - அறிவு மாட்சிமைப்பட்ட பாண்டியன், மடமயில் மனையவரோடும்-மடப்பமுடைய மயில்போன்ற சாயலையுடைய தன் மனைவிமாரோடும், கடன்அறி காரியக் கண்ணவரோடும் - வினைக் கடமைகளை அறிந்த தன் கண்ணாகிய அமைச்சரோடுங் கூடி, பழமதி சூடி சுவல்மிசை அசையும் தானையின் பாடிய நாவின் பரந்த உவகையின் நாடும் நகரும் அடைந்து-பழைய வரிசையாலே சூடப்பட்டுப் பிடரிற் கிடந்து அசையாநின்ற துகிலினை உடையரும் நின்னை ஏத்திப்புகழ்ந்து பாடாநின்ற நாவினையுடையரும் மிகுந்த மகிழ்ச்சியுடையருமாய் நாட்டிலுள்ளோரும் நகரத்திலுள்ளோரும் வந்து தன்னைச் சூழாநிற்ப, நின் சூர் உறை குன்றில் தடவரை ஏறி - நின் சூரரமகளிர் உறைதற்கு இடமான திருப்பரங்குன்றினது பெரிய சிகரத்தின்மேலே ஏறி, பாடுவலம் திரிபண்பின்-பெருமையுண்டாக வலமாக வருகின்ற பண்பினோடே, நீ மேய கடிநகர் சூழ் நுவலுங்கால் - நீ எழுந்தருளிய திருக்கோயிலைச் சுற்றுதலை உவமை கூறுமிடத்து, சுடர் சூழ்வரு தாரகையொடு மேருப் புடைவரு சூழல் அனைத்து-திங்கண்மண்டிலம் தன்னைச் சூழ்ந்து வரும் விண்மீன்களோடே மேருமலையின் பக்கத்தே அதனைச் சுற்றுதலை ஒக்கும் என்னலாம்;

(வி - ம்.) படுமணி - ஓசையுண்டாகும் மணி. யானை - முருகப் பெருமான் ஊர்தியாகிய பிணிமுகம் என்னும் களிற்றியானை என்க. நெடியாய் என்றது அளத்தற்கியலாதபடி நீண்டவனே என்று இறைமிலக்கணம் உரைத்தவாறு. என்னை?

" சிலமோ உலகம் போலத் தெரிப்பரி ததனல் நிற்கும்
கோலமும் அறிவா ரில்லை.'' (சிவ. சித். சுப: ௫0)

எனவும்,

" பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமும் ஆதி யில்லான் அளப்பிலன் ஆத லாலே
எந்தைதான் இன்னன் என்றும் இன்னது ஆம் இன்னது ஆகி
வந்திடான் என்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே."
(சிவ. சித். சுப: ௬௪)

எனவும், மெய்கண்டவித்தகர் விளம்புதல் காண்க.

கடிநகர் - பூசனையுடைய திருக்கோயில். பாண்டியன் மனைவியரும் அமைச்சரும் பிறமக்களும் தன்னைப் புடைசூழ நின் திருக்கோயிலை வலம்வருதல், திங்கள் விண்மீன்சூழ மேருவை வலம்வருதலை ஒக்கும் என்க.

பாண்டியன் - திங்கள் மரபினன் என்பதுபற்றி அத் திங்களையே உவமையாக எடுத்தமை உணர்க. திங்களுக்கு அசுவினி முதலிய மீன்கள் மனைவியர் என்பவாகலானும், வியாழன் வெள்ளியாகிய மீன்கள் அமைச்சுத்தொழிலன என்பவாகலானும், பிறவற்றானும் உவமையும் பொருளும் பொதுத்தன்மை பெரிதும் சிறந்தனவாதல் உணர்க.

புலம் - அறிவு. வழுதி - பாண்டியன். மயிலோரும் என்புழி ஓரும்: அசைச்சொல்: காரியக்கண்ணவர் என்றது, அமைச்சரை. பாடு - பெருமை. மதி - வரிசை. சுவல் - பிடரி. தானை - துகில்: பரிவட்டம். இஃது அரசனுற் சிறப்புடைமை கருதி வழங்கப்படுவதொரு அடையாளப் பொருள் ஆகலின், அதனை விதந்தெடுத்தோதினர். எனவே, சிறப்புப்பட்டம் பெற்ற சான்றோரும் தற்சூழ எனப் பெரியோர் கேண்மையுடைமை வழுதிக்கு ஓதியவாறுமாயிற்று. மக்கள் எல்லாம் இறைவனைப் புகழ்ந்து பாடிக்கொண்டு மலையேறுதல் இன்றுங் காணலாம். நாடும் நகரும் என்பன ஆகுபெயரான் அவற்றில் வாழும் மக்களைக் குறித்தன.

(பரிமே.) ௨௨. " ஒற்றும் உரைசான்ற நூலு மிவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.''
(குறள் - ௫௮௧)

என்பதனுற் கண்ணவரென்முர்.

௨௪ - எ. பழைய வரிசையாற் சூடிச் சுவன்மிசை யசையும் பரிவட்டத்தினும் ஏத்திய நாவினும் பரந்த உவகையினும் நாடும் நகரும் அடையவெனக் கூட்டுக.

௩0 - ௩எ: துப்பி.......................யாமேத்துமாறு

(இ - ள்.) (௩௬ - எ) குருகு எறி வேலோய் - கிரௌஞ்ச மலையை உடைத்த வேற்படையை ஏந்திய இறைவனே, நின் குன்றம்கீழ் நின்ற இடைநிலம் - நினது திருப்பரங்குன்றத்தின்

கீழே கிடந்த இடைநிலப்பரப்பு, தும்பி தொடர் கதுப்ப தும்பி வாங்கி தொடர் ஆட்டி - யானைப்பாகர்கள் மதமுண்ணும் பொருட்டு வண்டுகள் தொடராநின்ற கவுளையுடைய யானைகளை வழியினின்றும் அகற்றி அவற்றின் காலின்கட் சங்கிலியை ஆட்டி, வம்பு அணி பூங்கயிற்று மரன் அசைப்பார் - கச்சணிந்த புரசைக்கயிற்றாலே மரங்களிலே கட்டுவர், கண்டக்கரும்பு கவழம் மடுப்பார் - அவற்றிற்குக் கண்டமாக முறித்த கரும்பினை உணவாக ஊட்டாநிற்பர், வண் தார்ப்புரவி வழிநீங்க வாங்குவார் - குதிரைப்பாகர் வளவிய மாலைகளையுடைய குதிரைகளை வழியினின்று அகலும்படி அகற்றாநிற்பார், திண்தேர் வழியின் செல நிறுப்பார் - தேர்ப்பாகர் திண்ணிய தேர்களை வழியினின்றும் அப்பாற்செல்லும்படி ஊர்ந்து கொடுபோய் நிறுத்துவர், நிரந்து பரி நிமிர் தானையான் பாசறை நீர்த்து - அவ்வியானை முதலியன இவ் வாற்றால் யாண்டும் பரக்கப்பட்டுப் பகைமேற் செலவின்கண் மிக்குச் செல்லும் படைப்பெருக்கினையுடைய அப் பாண்டியனது பாசறையினது தன்மையினை உடையதாயிற்று, யாம் ஏத்தும் ஆறு - யாம் அவ் விடைநிலத்தை உவமையால் உயர்த்துக் கூறுமுறை இம் முறையே பிறிது கண்டிலேம்;

(வி - ம்.) வேலோய் நின் குன்றின்கீழுள்ள இடைநிலம் யானைகளைக் கட்டலானும், குதிரைகளை வாங்குதலானும், தேர்களை நிறுத்தலானும், அவை யாண்டும் பரக்கப்பட்டுப் பாண்டியனுடைய பாசறையே ஒத்தது என்றவாறு.

தும்பி இரண்டனுள் முன்னது வண்டு; பின்னது யானை. தொடர்-சங்கிலி. வம்பு - கச்சு. கயிறு - புரசைக்கயிறு. கவழம் - கவளம்: யானைக்கிடும் உணவு. பரி - செலவு: போர்மேற் செல்லும் செல வென்க. நிமிர்தல் - மண்டிச்சேறல். ஒன்றற்கு உவமை கூறுங்கால் பொருளினும் உவமை உயர்ந்ததாதல் வேண்டும் எனச் சான்றோர் கூறுவர். யாங்கள் இவ் விடைநிலக் காட்சிக்கு உவமை தேர்ந்து கூறுங்கால் அதுவும் அப் பாண்டியனது பாசறைக்காட்சியல்லது உயர்ந்த உவமை பிறிது காணாமையின் அதனையே உவமைகூறினேம் என்பார், 'யாம் இடைநிலம் ஏத்தும் ஆறு இதுவே' என்றார்.

(பரிமே.) அவை கூடலினின்றும் போந்து குன்றின்மேல் ஏறுவாய் இடையே நிற்றலின் இடைநிலம்..............பு.

௩௬. குருகு: ஆகுபெயர்.

௩௭. 'யாம் அவ் விடைநிலத்தை உயர்த்துக் கூறுமாறு இது' என்றது உவமையால் உயர்க்குங்கால் அதுவும் அவன் பாசறையல்லது பிறிதில்லை என்னும் நினைவிற்று. இது என்னும் சொல் வருவிக்கப்பட்டது.

இனி முருகவேளைப் படர்க்கையாக்கி மேல் வழுதியுடன் ஏறியோரது விநோதம் கூறுவாராய் மலைச்சிறப்புக் கூறுகின்றார் :—

௩௮ - ௪௩ : குரங்கு.....................ஒலி செய்வோரும்

(இ - ள்.) குரங்கு அருந்தும் பண்ணியம் கொடுப்போரும்- இனிப் பாண்டியனோடு மலைமேலேறி வலம்வந்த மாந்தருட் சிலர் குரங்குகள் உண்ணும் இயல்புடைய பண்ணிகாரங்களை அவற்றிற்குக் கொடாநிற்பார், கருமுகம் கணக்குக் கரும்பு அளிப்போரும் - சிலர் கரிய முகமுடைய முசுக்கலைத்திரளுக்கு உணவாகக் கரும்பினைக் கொடுப்பார், தெய்வப்பிரமம் செய்குவோரும்- வேறுசிலர் தெய்வத்தன்மையுடைய பிரமவீணையினின்றும் இசையெழுப்பாநிற்பர், கைவைத்து இமிர்பு குழல் காண்போரும்- சிலர் விரல்களைத் துளையிடத்தேவைத்து ஊதி வேய்ங்குழலின் இசையை அளவாநிற்பர், யாழின் இளிகுரல் சமம்கொள்வோரும்- சிலர் யாழின்கண் இளிவாய்ப்பாலையையும் குரல்வாய்ப்பாலையையும் வலியவும் மெலியவுமாகத் தாக்காமல் சமனாகத் தாக்கி அதன் இன்பத்தை நுகராநிற்பர், வேள்வியின் அழகு இயல் விளம்புவோரும் - சிலர் முருகவேளுக்கு நிகழ்த்தாநிற்கும் பூசையினது அழகினது தன்மையைப் புகழாநிற்பர், கூரம் நாண் குரல் கொம்மென ஒலிப்ப ஊழ்உற முரசின் ஒலிசெய்வோரும் - வேறுசிலர் யாழினது நரம்பின் இசை கொம்மென்று ஒலித்த அளவிலே அத் தாளத்தோடு பொருந்தும்படி முரசின் ஒலியை எழுப்பாநிற்பர் ;

(வி - ம்.) பண்ணியம் - பண்ணிகாரம். முசு - ஒருவகைக் குரங்கு. கணத்திற்கு எனற்பாலது அத்துச்சாரியை பெறாமல் 'கணக்கு' என நின்றது. கணம் - திரள். பிரமம் - ஒருவகை வீணை. இமிர்பு - ஊதி. கேட்போரும் என்னாது காண்குவோரும் என்றமையால் "இசையை அளப்போரும்" என்றார் உரையாசிரியர். இளிகுரல் என்பன எழுவகை இசைகளுள் இரண்டிசைகள்.

இளிகுரல் என்பன அவற்றாலாய பண்களுக்கு ஆகுபெயர்.

இளி - இளி குரலாகப்பிறந்த அரும்பாலை என்னும் பண் என்க. குரல் - குரல் குரலாகப் பிறந்த செம்பாலைப்பண் என்க. இதனை,

"இனி, வட்டப்பாலை இடைமுறைத் திரிபு கூறுகின்றார்:- "குன்றுக் குரல் பாதி தாரத்திலொன்று, நடுவண் இணை கிளை யாக்கிக்- கொடியிடையாய், தாரத்தில் ஒன்று விளரிமேல் ஏறடவந் நேரத் ததுகுரலா நின்று, என்-னின், உழை குரலாகிய கோடிப்பாலை நிற்க இடமுறை திரியுமிடத்துக் குரல் குரலாயது செம்பாலை ; இதனிலே குரலிற்பாதியும் தாரத்தில் ஒன்றும் இரண்டின் அந்தரத்திலே கிளை யாக்கித் தாரத்திலே நின்ற ஓர் அலகை விளரியின்மேல் ஏறட விளரி குரலாய்ப் படுமலைப்பாலையாம் ; இம்முறையே துத்தம் குரலாயது செவ்வழிப்பாலையாம் ; இளி குரலாயது அரும்பாலையாம் ; கைக்கிளை குரலாயது மேற்செம்பாலையாம் ; தாரம் குரலாயது விளரிப்பாலையாம் என அந்தரம் ஐந்தும் நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க. இவ்விடத்தில் தாரநரம்பின் அந்தரக்கோலைத் தாரம் என்றது, 'தன்னமுந் தாரமுந்

தன்வழிப் படர' என்னும் சூத்திரவிதியான் என்க. இவ்வேழு பெரும் பாலையினையும் முதலடுத்து நூற்றுமூன்று பண்ணும் பிறக்கும்; அவற்றுள் செம்பாலையுட் பிறக்கும் பண்கள் :-

பாலையாழ், நாகராகம், ஆகரி, தோடி, கௌடி, காந்தாரம், செந்துருத்தி, உதயகிரி என இவை.'' எனவரும் அடியார்க்கு நல்லார் உரையானும் உணர்க. (சிலப் - வேனிற் - ௩௫. விளக்கவுரை)

தாக்குதல் - இசைத்தொழில் எட்டனுள் ஒன்று. வலிவு மெலிவு சமன் என்பன ஆளத்தியின் பாகுபாடுகள் பதினொன்றனுள் சில. இவை பற்றிப் பதினேழாம்பாடல் ௧௮-ஆம் அடியின் விளக்கத்தின் கூறிப்போந்தாம் ஆண்டுக் கண்டுகொள்க.

வேள்வி - பூசனை. கூரம் - யாழ். 'கொம்' இசைக்குறிப்பு.

(பரிமே.) ௬௨. யாழின்கண் இளிவாய்ப்பாலையையும் குரல் வாய்ப் பாலையையும் வலியவும் மெலியவுமாகத் தாக்காது சமனாகத் தாக்கி அதன் இன்பத்தைக் கொள்வோரும்.

௬௪ - ௭௭ : என்றூழ்..............................மருங்கு

(இ - ள்.) (௭௭) மால்மருகன் பரங்குன்றத்து துணி எழுத்து நிலை மண்டபம் துன்னுநர் - இவர்கள் செயல் இங்ஙன மாக அவருள் சிலர் திருமால் மருகனாகிய முருகன் எழுந்தருளிய அத் திருப்பரங்குன்றத்துத் தெளிந்த ஓவியம் வரைந்து நிற்றலையுடைய மாடத்தின் பக்கம் சென்றாராக அவருட் சிலர், இருசுடர் நேமி ஒன்றிய என்றூழ் உறவரும் சுடர்நிலை உள்படு வோரும் - நாண்மீன்களையும் தாரகைகளையும் உடைய சுடர்ச் சக்கரத்தைப் பொருந்தி ஞாயிறு முதலாக வரும் கோள் களினது நிலைமையை விளக்கி ஆண்டுத் தீட்டப்பட்ட ஓவியத் தைக் கண்டு உணர்ந்து கொள்ளாநிற்பர், விரகியர் வினவ - காமவேட்கை யுடைய தம் மனைவிமார் ஆண்டுத் தீட்டப் பட்ட ஓவியங்களைக் காணுந்தோறும் இப் பெண்ணுருவம் யாருடையது இவன் யார் இது யாது என்று தம்மை வினவுந் தோறும் கணவன்மார், இவள் இரதி இவன் காமன் - இவ் வோவியம் இரதியின் ஓவியம் இவன் அவள் கணவனாகிய காம வேள், இந்திரன் பூசை - இப் பூனையுருவம் இந்திரன் மேற் கொண்ட பூனையுருவம், இவள் அகலிகை - இதோ நிற்பவள் அவ் விந்திரனாற் காமுறப்பட்ட கௌதமன் மனைவியாகிய அகலிகையாவள், இவன் சென்ற கௌதமன் - இதோ சிறிது சேய்மையினிற்கின்ற இத் துறவிதான் இந்திரனுடைய சூழ்ச்சி யாலே அகலிகையைத் தனியேவிட்டு யாற்றிற்குச்சென்ற கௌதமன் என்பவன், இது சினன் உறக் கல் உரு ஒன்றிய படி எனஅ - இதோ வீழ்ந்து கிடக்கின்ற பெண்ணுருவம் அக் கௌதமன் சினந்து சாபமிடுதலானே அவ் வகலிகை கல்லா

இக் கிடந்ததனைக் காட்டுவதாம் என்று அவ் வகலிகை தன் கணவனுக்குத் தவறிழைத்தமையாலே உண்டான தண்டத்தை விளக்கிக் கூறுநிற்பர், இன்ன பலபல எழுத்துநிலை சுட்டவும் சுட்டு அறிவுறுத்தவும் - இத்தகைய வரலாறுகள் பற்றி எழுதப்பட்ட ஓவியங்கள் பற்பலவற்றையும் கண்டோர் இவ் வாறு அவற்றைக் கையாற் சுட்டி வினவாநிற்குந்தோறும் அவர்க்கு அவ் வரலாறறிந்தோர் அவற்றை விளக்கிக் கூறி அறிவுறுத்தாநிற்பர், இன்ன பலபல எழுத்து நிலை மண்டபம் - இத்தகைய ஓவியமண்டபங்கள் பற்பல அப் பரங்குன்றத்திலே, நேர்வரை விரி அறை வியல் இடத்து இழைக்க - செவ்விய மூங்கில்களையும் விரிந்த பாறைகளையும் உடைய அகன்ற இடங்களிலே இயற்றலாலே அப் பரங்குன்றம், சோபன நிலையது - பெரிதும் மங்கல நிலைமையினை உடைத்து;

(வி - ம்.) ஓவியங்கள் மக்களாகச் சுட்டப்பட்ட விடத்தே உயர்திணையாய் இவன் இவள் எனச் சுட்டப்படுதல் வழுவன்மை உணர்க. 'விரகியர் வினவ' என்ற குறிப்பால் வினவுவோர் காதலி மாரும் விடையிறுப்போர் அவர்தம் காதலரும் என்பது பெறப்படும். என்றூழ் - ஞாயிறு. இருசுடர் என்றது, நாண்மீனும் பிறமீனுமாகிய இருவகை மீன்களும் என்றவாறு. நாண்மீன் - அசுவனி முதலியன. பிறமீன் ஆவன :- இவற்றையன்றி விண்ணின்கண் எண்ணிறந்தன வாய் மின்னி மிளிரும் பெயரறியா மீன்கள் என்க உரையாசிரியர் இவ் வேற்றுமை தெரித்தோதுவார் 'நாண் மீன்களையும் தாரகைகளையு முடைய சுடர்ச்சக்கரம்' என்றார். உள்படுதல் - உளங்கோடல்; உணர் தல் என்க. என்றூழ் உறவரும் - ஞாயிறு முதன்மையாகப் பொருந்த இயங்கும். இவ் வடிகளானே பண்டைக்காலத்துத் தமிழ்ச் சான்றோர் வானின்கண் உள்ள நாள் கோள் முதலியவற்றை ஆராய்ந்து அவற் றைப் பொதுவிடங்களிலே ஓவியமாகவும் வரைந்து மாந்தர்க்கு அறி வுறுத்துவந்தமை உணரப்படும். மேலும் ஓவியங்கள் வாயிலாய் மக்க ளுக்கு இதிகாச முதலியவற்றையும் அறிவுறுத்தமையும் உணர்க.

இந்திரன்............படியிது என்னுந் துணையும் கௌதமன் மனைவி யாகிய அகலிகையை இந்திரன் காமுற்றமையும் அதனால் விளைந்த நிகழ்ச்சிகளையும் காட்டும் ஓவியச் செய்தி கூறப்பட்டது.

திருமாலின் தொடர்புடைய இவ் வரலாறு முருகன் திருக்கோயி லின்கண் எழுதப்பட்டுள்ளமைக்குக் குறிப்பாக ஏதுக்காட்டுவார் 'மால்மருகன் மாடமருங்கு' என்றார் போலும்.

நேர்வரை - செவ்விய மூங்கில். விரியறை - விரிந்த பாறை. சோபனம் - மங்கலம். துணி - என்பதனை எழுத்து நிலைக்கு அடை யாக்கித் தெளிந்த எழுத்துநிலை என்க.

(பரிமே.) ௬௬. விரகியர் என்றதனால், வினவுகின்ற மகளிர் பிரியாமைக் குறிப்பினராதலும் அவ் வினாவிற்கு இறை சொல்லுவார் கணவராதலும் பெற்றாம்.

௬௨. கொண்டோற் பிழைத்த தண்டங் கூறுவாருமாய்.

௫அ - ௬௬ : **பிறந்த..................................வகை**

**(இ - ள்.)** ஒரு பேதை பிறந்த தமரில் பெயர்ந்து - பேதைப்பருவ முடையாளொரு சிறுமி பிறத்தலால் ஆகிய தன் சுற்றத்தாரிடத்தினின்று பிரிந்து, பிறங்கல் இடை இடை புக்குப் பிறழ்ந்து - பிறங்காநின்ற கற்களின் இடையே இடையே நெறிதவறிப் புகுந்து திகைத்து, யான் வந்த நெறியும் மறந்தேன் - யான் இங்கு வந்த வழியையும் மறந்தொழிந்தேனே என்று வருந்தி, சிறந்தவர் - அவளுக்குத் தமரிற் சிறந்தவராகிய இரு முதுகுரவரையும், ஏஎ ஓஒ என விளி ஏற்பிக்க - அன்னையேஎ ! அப்பாவோஒ ! என்று தனது விளியை அவர்கேட்கும்படி கூவா நிற்ப, முழை அவ்விளியேலா அவ் இசை ஏற்று - அவ் விடத்துள்ள அம் முழைகள் அவ் விளியைக் கேளாதனவாய அவ் வொலிதம்மையே ஏற்று, ஏஎ ஓஒ என அழைப்ப - அன்னையேஎ ! அப்பாவோஒ ! என்று கூவா நிற்ப, அழைத்துழிச் செல்குவள் - அப்பேதைப்பெண் இவ்வொலி முழைஞ்சினின்றெழும் எதிரொலி என்றறியாமல் அத் தமரே தன்னை அழைக்கின்றாராகக் கருதி அவ் விளிவருமிடத்திற்குச் செல்கின்றவள், ஆங்குத் தமர்க் காணாமை மீட்சியும் - அவ்விடத்தும் தன் உறவினரைக் காணாது மீளுமிடத்தும், கூஉக் கூஉ மேவும் - கூவுதலைக் கூவுதலை மேற்கொள்ளாநின்றாள், வாழ்த்து உவப்பான் குன்றின் வகை மடமைத்து - அன்பரது வாழ்த்தினை விரும்பும் முருகவேளினது திருப்பரங் குன்றத்தின்கண் அமைந்த இட வேறுபாடு இவ்வாறு சிறுவர்களுக்கு மடமை செய்தலை உடைத்து ;

**(வி - ம் )** பிறந்த தமர் - தான் பிறந்த காரணத்தானே உண்டான உறவினர். பேதை - பேதைப் பருவத்தினள் ; சிறுமி. பெயர்ந்து - நீங்கி. பிறங்குதல், பிறங்தல் என நின்றது பிறங்குதல் - விளங்குதல். பிறழ்ந்து - திகைத்து. 'யான் வந்த நெறியும் மறந்தேன் சிறந்தவர் ஏஎ ஓஒ' என்னுந்துணையும் அச் சிறுமியின் கூற்றைக் கொண்டு கூறியவாறு. சிறந்தவர் - ஈண்டுத் தமரிற் சிறந்தோராகிய அன்னையும் அப்பனும் என்க. அன்னையேஎ அப்பாவோஒ என விளியேற்பிக்க என்க. அம் முழைகள் விளியின் பொருளை உட்கொள்ளாமல் ஒலியைமட்டும் ஏற்று எதிரொலி செய்ய என்க. மீட்சியும் - மீளுங்காலத்தும். குன்றின்வகை - குன்றின் இடக் கூறுபாடென்க. மடமைத்து - இத்தகைய மடைமையைச் செய்தலையுடைத்து.

(பரிமே.) இனி அவனை எதிர்முகமாக்கிக் கூறுகின்றார்.

௬எ - எ௪ : **நனிநுனி..................................மருள**

**(இ - ள்.)** (அ௪) நெடியாய் நின்குன்றின் மிசை - புகழான் நீண்டோனே நினது திருப்பரங் குன்றத்தின்கண், நுனி சாய்ப்

பின் சினைபோழ் நனி நயவரு நாறு இணர்ப் பல்லவம் தீம் சுனை உதிர்ப்ப - சிலமகளிர் சுனையினருகே நின்று சுனைப்பக்கமாகத் தலைசாய்த்தலை யுடையவாகிய மரக்கிளைகளிலே ஏறி அக்கிளைகளைப் போழ்ந்து புறப்பட்ட மிக விரும்பத்தகுந்த மணங்கமழா நின்ற பூங்கொத்துக்களோடு கூடிய தளிர்களைக் கீழ் உள்ள காட்சிக்கினிய சுனைநீரிலே விளையாட்டு வகையானே உதிர்ப்ப, உதிர்த்த அவை சுனையின் அலர் முகிழ் உற எடுத்த தலைய கிடப்ப - அங்ஙனம் உதிர்க்கப்பட்ட அவை அச் சுனையின்கண் உள்ள நீர்ப்பூவினையும் அரும்புகளையும் பொருந்தி எடுத்த தலையினை உடையவாய்க் கிடப்ப, தெரிமலர் (உறுவது) அவிர் பொறி ஐந்தலை அரவம் என - அவற்றுள் விரிந்த மலரைப் பொருந்திக் கிடந்த தொன்றனை இது விளங்குகின்ற படப் பொறியினையும் ஐந்து தலைகளையு முடையதொரு பாம்பு என்றும், அருகு நனை உறுவ ஒன்று மூத்த மைந்தன் ஒன்று இளம் பார்ப்பு என - அதன் பக்கத்திலே முதிர்ந்த பேரரும்பினையும் முதிராத சிற்றரும்பினையும் பொருந்திக் கிடந்தன வாகிய இரண்டினுள் ஒன்று அவ் வைந்தலையரவின் மூத்த பிள்ளையாகும் என்றும் மற்றொன்று அதன் இளையபிள்ளை யாகும் என்றும் கருதி, இளமகளிர் - அவ் விளைமையுடைய மகளிர், மருள - மயங்காநிற்ப;

(வி - ம்.) நுனிசாய்ப்பின் சினைபோழ் நனிநயவரு நாறுஇணர்ப் பல்லவம் என மாறுக. சாய்ப்பினைப் பல்லவத்திற் கேற்றுவர் பரிமேலழகர். சாய்ப்பு - சாய்த்தல்: இனி அலர் முகிழ்உற என்பதற்கு சுனையின்கண் உள்ள மலரும் அரும்பும் என்னாது பூவோடு கூடிய பல்லவத்தையும் அரும்போடுகூடிய பல்லவத்தையும் என்று கோட்டுப் பூவும் அரும்புமாகவே கொள்ளினும் அமையும். உதிர்த்த - உதிர்க்கப் பட்ட. தெரிமலர் - விரிந்தமலர் என்றவாறு. நனை - அரும்பு: தெரிமலர் உறுவது என ஒருசொல் வருவித்துக்கொள்க. மூத்தமைந்தன் இளம் பார்ப்பு என்றதற்கியைய பேரரும்பு சிற்றரும்பு என வேறுபடுத் தோதப்பட்டன. மைந்தன்: மரபு வழுவமைதி. இளமகளிர் என்றது மருள்வதற்குக் குறிப்பேதுவாய் நின்றது.

(பரிமே.) சாய்ப்பிற் பல்லவம் என்க.

எச - அச: பாங்கர்.......................குன்றின்மிசை

(இ - ள்.) பாங்கர் - அச் சுனையின்கண்ணும் பக்கத்தினும், பசும்பிடி இளமுகிழ் - பச்சிலையது இளைய கொழுந்தும், வாய் நெகிழ்ந்த ஆம்பல் - மகளிர் வாய்போல மலர்ந்த அரக்காம்பலும் பிற நீர்ப்பூக்களும், கைபோல் பூத்த கமழ்குலைக் காந்தள் - அம் மகளிர் கைபோன்று மலர்ந்த நறுமணங்கமழும் பூங்கொத்துக் களையுடைய காந்தளும், எருவை நறுந்தோடு - பஞ்சாய்க் கோரையின் நறியமலர்களும், எரியிணர் வேங்கை-தீப்போன்று

மலரும் பூங்கொத்துக்களையுடைய வேங்கையும், உருவம் மிகு தோன்றி - நிறமிக்க தோன்றியும், ஊழ் இணர் நறவம் - ஊழ்த்த பூங்கொத்துக்களையுடைய நறவமும், பருவம்இல் கோங்கம் - பருவம் பாராமல் எப்பொழுதும் பூக்கு மியல்புடைய கோங்கும், பகைமலர் இலவம் - அக் கோங்கமலரோடு நிறத்தால் மாறுபட்ட இலவமும் ஆகிய இவைகள் எல்லாம், நிணந்தவை போல நிறைந்தும் - தெற்றின மாலைகள்போல மலர்நிறைந்தும், கோத்தவைபோல உறழ்ந்தும் - கோத்த மாலைகள் போல நிறம் மாறுபட்டும், நெய்தவைபோல நிமிர்ந்தும் - தொடுக்கப்பட்ட மாலைகள்போல இடையிட்டும், தூக்க மணந்தவை போலத் தொடர்ந்தும் - தூக்கிக்கட்டின மாலைகள்போல நெருங்கியும் பூத்தலானே, வரைமலை எல்லாம் விடியல் வியல் வானம்போலப் பொலியும் - சிகரமும் மலையுமாகிய இடமெல்லாம் விடியற் காலத்துப் பலநிறத்து மேகம் பொருந்திய வானம்போன்று பொலிவுற்றுத் திகழாநிற்கும் ;

(வி - ம்.) (அச) நெடியாய் நின்குன்றின் மிசை (எச) இள மகளிர் மருளப் பசும்பிடி ஆம்பல் முதலியன பூத்தலால், வரையும் மலையுமாகிய இடமெல்லாம் அம் மலர்களானே வானம்போலப் பொலியும் என இயைத்துக்கொள்க.

பசும்பிடி - பச்சிலை என்னும் பெயரையுடையதொரு கொடி. "பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா" (எ0) எனக் குறிஞ்சியினும் வருதல் காண்க. இதற்குப் 'பச்சிலைப்பூ' எனப் பொருள் கூறினர் நச்சினார்க்கினியர். ஈண்டு மருக்கொழுந்துபோல இப் பசும்பிடி கொழுந்திலே சிறப்புடையது என்று கருதிப்போலும் பசும்பிடி இள முகிழ் என்பதற்குப் 'பச்சிலையது இளைய கொழுந்து' எனப் பொருள் கூறினர் ஆசிரியர் பரிமேலழகர். இலையிலேயே மணமுடையது என்பது கருதிப்போலும் இதற்கும் பச்சிலை என்பது பெயராயிற்று. "எல்லா வற்றிலும் பசுத்திருத்தலிற் பச்சிலை என்று பெயர்பெற்றது" என்பர் நச்சினார்க்கினியர். எருவை - பஞ்சாய்க்கோரை : கொறுக்கைச்சியுமாம். எரியிணர் - தீப்போன்று மலரும் பூங்கொத்து. உருவம் - நிறம். ஊழ் இணர் : வினைத்தொகை. ஊழ்த்தல் - மலர்தல். பருவம்இல் கோங்கம் என்றது, பருவமின்றி எப்பொழுதும் மலரும் கோங்கம் என்றவாறு. பகைமலர் - அக் கோங்கமலரோடு மாறுபட்ட நிறமுடைய மலர் (இலவம்) என்க. ஆகிய இவையெல்லாம் என வருவித்தோதுக.

நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்கமணந்தவை என்னும் நான்கனோடும் நிறைந்தும் உறழ்ந்தும் நிமிர்ந்தும் தொடர்ந்தும் என்னும் நான்கனையும் (முறை நிரல் நிரையாகலின்) முறையே ஒட்டுக. மணந்தவை போல என்புழி உள்ள போல என்பதனையும் அந் நான்க னிடையும் ஒட்டுக.

நிணத்தல் முதலிய நான்கும் மாலைபுனையும் தொழில் வகைகள். அவையாவன : 'தெற்றுதல் கோத்தல் தொடுத்தல் கட்டுதல்' என்பன. தூக்க : பலவறிசொல். மணந்தவை - மாலைகள் எனவே,

தூக்கவாகிய மணந்தவை; தூக்கிக் கட்டப்பட்டனவாகிய மாலைகள் என்றவாறு.

(பரிமே.) எ௫. மகளிர் வாய்போல் மலர்ந்த ஆம்பல்.

எஎ. எருவையது நறுந்தோட்டையுடைய பூ. எருவை என்பது "எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை" (குறிஞ்சிப் - ௬அ) எனக் கபிலர் பாடிய பெருங் குறிஞ்சியினும் வந்தது.

எ௯. காலங்குறியாது பூக்கும் கோங்கு.

பூத்தலாலென்பது வருவிக்கப்பட்டது. மலர் பொலியும் என்க.

அ௩. வரைமலையெங்கும் விடியற்காலத்துப் பலநிலத்து மேக மார்ந்த வானம்போலப் பொலியும்.

அ௫ - ௯௪ : நிலையானை...............சிறப்புணுக்கால்

(இ - ள்.) (௯௩ - ௪) நின்குன்றம் குறுகி - முருகவேளே நின்னுடைய திருப்பரங்குன்றத்தை அடைந்து, நின் வாரணங் கொடியேற்றும் நிலையானை - நினது கோழிச்சேவல் எழுதப்பட்ட கொடியை ஏற்றுதற்குரிய நினது யானையினது, சென்னி நிறம் குங்குமத்தால் புனையா - மத்தகத்தின் நிறத்தினைக் குங்குமத் தாலே கோலஞ்செய்து, பூநீர் ஊட்டி - மலரொடு நீரையும் இனிதாக ஊட்டி, புனைகவரி சார்த்தா - செவியின்கண் ஒப்பனை செய்தற்குரிய கவரியைச் சார்த்தி, பொன் பவழப் பூங்காம்பின் பொன்குடை யேற்றி - பொலிவுடைய பவழத்தாலாய அழகிய காம்பினையுடைய பொன்றுகில் போர்த்த குடையினை அவ் வியானையின் மேலே ஏற்றி அதனோடு, மலிவு உடை உள்ளத் தான் வந்துசெய் வேள்வியுள் - அன்பர்கள் உவகைமிக்க நெஞ்சத்தோடே நின் திருக்கோயிலை வலம்வந்து நினக்குச் செய்யும் பூசையின்கண், கொள்கவழம் மிச்சில் சிறப்பு உணுக் கால் - அந்த யானைக்கிடும் கவளத்தில் அஃதுண்டெஞ்சிய மிச்சிலைச் சிறப்புடையதாகக் கருதி மகளிர் உண்ணுகிற்பர், அங்ஙனம் அவர் உண்ணுதொழியின், பல்மணம் மன்னும் பின் இருங் கூந்தலார் - பல்வேறு நறுமணங்களும் நிலைபெற்ற பின்னலையுடைய கரிய கூந்தலையுடைய மடந்தைமகளிர், மணந்தார் முறுவல் தலையளி எய்தார் - தம்மை மணந்து கொண்ட காதலருடைய புன்முறுவலொடு கூடிய தலையளியைப் பெறமாட்டார், கன்னிமை கனிந்த காலத்தார் - மணமாகாத கன்னிமைத்தன்மை முதிர்ந்த பருவத்தினையுடைய மகளிர், மறுவற்ற மைந்தர் தோள் எய்தார் - குறைவு அற்று நிரம்பிய நல்லிலக்கணமமைந்த காதலரைப் பெறுவாரல்லர், உண்ட மகளிர் அந் நலங்களைப் பெறுதல் ஒருதலை;

(வி - ம்.) நின யானை என்புழி ஆருவதன் பன்மையுருபு ஒருமைக்கண் மயங்கிற்று. ஈண்டு யானை திருக்கோயிலின்கண் உள்ள யானை என்க. இவ் வியானையை ஒப்பனை செய்து அதன் பிடரில் கொடியுயர்த்துத் திருக்கோயிலை வலம்வந்து செய்யும் பூசனை என்க. அப் பூசனைக்கண் அவ் வியானைக்கிடும் கவளமிச்சிலை மணமான மகளிரும் ஆகாத கன்னியரும் கடவுட்டன்மையுடையதாகக் கருதி உண்பர் உண்டவிடத்து அம் மகளிர் நிரலே காதலர் அன்பையும், சிறந்த காதலரையும் பெறுவர்; உண்ணுதார் பெறுதலிலர் என்ற படியாம். சென்னி - மத்தகம். புனையா - புனைந்து. பூநீர் : உம்மைத் தொகை. புனைகவரி - வினைத்தொகை. யானையின் செவிகளைக் கவரி கொண்டு ஒப்பனைசெய்யும் வழக்கத்தை,

"மெய்ச்செவிக் கவரிதூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்கரக் கணபதிக் கன்பு செய்வாம்."

(கந்தபு. காப்பு - ௨)

என்புழியும் காண்க.

சார்த்தா-சார்த்தி பொன்பவழம் என்புழி, பொன்-பொலிவு என்னும் பொருட்டு. பூங்காம்பு - பூத்தொழில் செய்யப்பட்ட காம்புமாம். மலிவு - உவகைமிகுதி. அன்பர் என வருவித்துகொள்க. வாரணக் கொடி என மாறுக. கிடந்தவாறே கொடியேற்றும் அவ் வாரணம் எனக் (யானை) கோடலுமாம். பன்மணமன்னு பின்னிருங் கூந்தலர் என்றது மணமான மகளிரை. கூந்தலர் தலையளி எய்தார்; கன்னிமை கனிந்த காலத்தார் தோள் எய்தார் என்க : எதிர் நிரனிறை.

மறுவற்ற மைந்தர் என்றது தலைவனுக்கோதிய நலன் எல்லாம் நிரம்பிய காதலர் என்றவாறு. அவையாவன,

"பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோடு
உருவு நிறுத்த காம வாயின்
நிறையே அருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே."

என்னும் இந் நூற்பாவிற் கூறப்பட்ட நலங்கள் என்க.

(பரிமே.) இவ்வாறு மலைச்சிறப்புக் கூறி, மேல் வாழ்த்துவான் முகம் புகுகின்றார்.

கூ௫ - க௦௫ : குறப்பிணை......................தொழுதே

(இ - ள்.) குறப்பிணைக் கொடியைக் கூடியோய் - குறப் பெண்ணாகிய பூங்கொடியை ஒத்த வள்ளியை மணந்தருளிய பெருமானே, வாழ்த்துச் சிறப்பு உணா - அம் முறையானே எளியேங்கள் வாழ்த்தும் நினக்குச் சிறந்த செவியுணவாக அமையும் ஆதலால், செவி கேட்டி - இவ் வொவ்வா வாழ்த்தினையும் நினது திருச்செவி சாய்த்துக் கேட்டருள்க, உடையும் ஒலியலும் செய்யை - பெருமானே நீ உடையானும் மாலையானும் சிவந்த நிறமுடையை, ஆங்கே படையும் பவழக்கொடி நிறங்

கொள்ளும் - அந் நிறத்திற்கேற்பவே நினது வேற்படையும் பகைவர் தம் குருதி தோயப்பெற்றுப் பவளக்கொடியினது நிறம் போன்ற செந்நிறத்தை உடைத்தாகும், உருவும் உருவம் தீ ஒத்தி- திருமேனியானும் எரியாநின்ற அழகிய செந்தீயை ஒப்பை, முகனும் - திருமுகமண்டிலத்தானும், விரிகதிர் முற்று விரிசுடர் ஒத்தி - விடியற்காலத்தே விரியாநின்ற கதிர்கள் முதிராத இளைய ஞாயிற்றுமண்டிலத்தை ஒப்பை, எவ்வத்து ஒவ்வா மா முதல் தடிந்து - உலகிற்குத் துன்பஞ்செய்தலானே அறத் திற்குப் பொருந்தாத சூர்மாவினை வேரோடு வெட்டியொழித்து, தெவ்வுக் குன்றத்துத் திருந்து வேல் அழுத்தி - பகைமை பொருந்திய கிரௌஞ்ச மலையினூடே திருந்திய வேற்படையினைச் செலுத்தி, அவ் வரை உடைத்தோய் - அந்த மலையினை உடைத் தொழித்த கடவுளே!, நீ இவ் வரை மருங்கின் கடம்பு அமர் அணி நிலை பகர்ந்தேம் - நீ "அருமுனி மரபின் ஆன்றோர் நுகர்ச்சி மன் இருநிலத்தோரும் இயைகென"த் திருவுளத் தடைத்து இத் திருப்பரங்குன்றத்தின்கண் புலவரையறியாத புகழ்பூத்த இக் கடப்பமரத்தின்கண் எழுந்தருளிய அழகிய அருள் நிலைமையை வாழ்த்தாநின்றேம் எம் வாழ்த்து இது; உடங்கு அமர் ஆயமொடு தொழுது ஏத்தினம - எம்மொடு அமர்ந்த எம் சுற்றத்தாரோடு நாள்தோறும் நின் திரு வடியைக் கைகூப்பிக் கும்பிட்டு ஏத்தாநின்றேம் எளியேங் களுக்கு அருள் தருக.

**(வி-ம்.)** மானிடராகிய எம்மை உய்யக் கொள்ளத் திருவுளங் கொண்டு தேவர்மகள் தேவசேனையை மணந்தமைக்கு மாறாக எம் மானிட மகளாகிய வள்ளியையும் மணந்தருளினை அன்றே! அத்தகைய அருட்கடலாகிய நினக்குச் சிற்றறிவினேமாகிய யாங் கூறும் ஒவ்வா வாழ்த்தும் நின் செவிக்கு இன்பந் தருதல் இயல்பே ஆதலாற் கேட் -ருள்க என்பார், 'குறப்பிணைக் கொடியைக் கூடியோய்! வாழ்த்துச் சிறப்புணா செவி கேட்டி' என்றார்.

பிணா - பெண். "பெண்ணும் பிணாவும் மக்கட்குரிய" (மரபி - சுஉ.) என்பது தொல்காப்பியம் உணா - உணவு. சிறப்புணா - விருந் துணவு; இன்பந்தருவது என்றவாறு. உடையானும் ஒலியலானும் செந்நிறமுடையை என்க. ஒலியல் - மாலை; ஈண்டுக் கடப்பமாலை. படை - வேற்படை. அது குருதி தோய்ந்த வழியே செந்நிறமுடைத் தாதலின் 'பவழக்கொடி நிறம் கொள்ளும்' என்றார். உரு - திருமேனி. மேனியான் தீ ஒத்தி என்க. ஒத்தி - ஒக்கின்றாய். விரிசுடர்: அன் மொழித்தொகை ஞாயிறு என்னும் பெயர் குறித்து நின்றது. எவ்வத்து - உலகிற்குத் துன்பஞ் செய்தலுடைமையானே 'அறத்திற் கொவ்வா மாமுதல் தடிந்து' என்க. எனவே, நீ அறநெறியிற் றப் பியவரை மறத்திருவருளாலே ஒறுத்துத் திருத்துமியல்புடையை என்று ஏத்தியவாறாயிற்று. அறத்திற்றப்பியோரை இறைவன் ஒறுத்துத் திருத்தும் இயல்புடையன் என்பதனை,

"நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது
அக்கிர மத்தால் குற்றம் அடித்துத் தீர்த்து அச்சம் பண்ணி
இக்கிர மத்தி னாலே ஈண்டறம் இயற்றி டென்பன்
எக்கிர மத்தி னாலும் இறைசெயல் அருளே என்றும்"
(சிவ. சித். சுப : ௧0௫)

எனவும்,

"தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தம்சொல் ஆற்றின்
வந்திடா விடின் உறுக்கி வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடின் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவு மென்றும்"
(சிவ - சித் - சுப : ௧0௬)

எனவும் வரும் மெய்கண்டவித்தகர் மெய்ம்மொழியானும் உணர்க.

தெவ்வுக் குன்றம் என்றது கிரௌஞ்ச மலையை. தெவ்வு - பகை. "தெவ்வுப் பகையாகும்" (உரி - ௪௮.) என்பது தொல்காப்பியம் "குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை" என ௫-ம் பாடலினும் வந்தது. இதனால் இறைபணி நிற்போர்க்கு மலைபோன்ற தடைகள் எதிர்நின்று தடுப்பினும் அவற்றை இறைவன் தன் அருளாலே அகற்றி அவரை உய்யக் கொள்ளும் இயல்புடையன் என்பது உணர்த்தப்பட்டது. இதனை,

"யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான் என்னும்
　இக்கோணை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செய்வே னின்றிடஅத் தத்துவன்தான் நேரே
　தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும்"
(சிவ - சித் : சுப : ௩0௫)

எனவரும் மெய்ம்மொழியான் உணர்க.

ஒருவரையை உடைத்து ஒருவரையின் கடம்பமர்ந்தோய் என்பதன்கண் நயம் உணர்க. தீயோரை ஒறுத்தொழித்து நல்லோரின் மனமலர்மிசை ஏகுவை என்பது கருத்து. அருள்புரிக என்பது இசையெச்சம்.

(பரிமே.) அன்புடைமையின்......னம் எய்தினையன்றே அது போல அருளுடைமையின் ஒவ்வா வாழ்த்தும் கேட்டல் வேண்டும் என்றவாறு.

௬௭. ஒலியல் - கடப்பமாலை. செய்யை என உடையது தொழில் உடையான் மேனின்றது.

குருதி தோய்ந்துழியல்லது அந்நிறம் இயல்பன்மையின் கொள்ளும் என்றார்.

௬௯. பண்பின் தொழில் பொருண்மேனின்றது.

௧00. சினைவினை முதன்மேனின்றது.

'எம் வாழ்த்து இது' என்பது சொல்லெச்சமாயிற்று.

# இருபதாம் பாடல்

## வையை

**பொருட் சுருக்கம்**

இப் பாடல், கார்ப்பருவம் வந்தமை கண்டு தலைவி பிரிவாற்றுமையால் பெரிதும் வருந்திஞளாக, தோழி தலைவன் பால் பாணனைத் தூது விட்டாள். அப் பாணன் தலைவனிடம் சென்று கார்ப்பருவமும், வையை நீர் விழவணியும், கூறுமுகத் தால் தலைவியின் ஆற்றுமையைக் கூறுவதாக அமைந்துள்ளது.

**க - கரு :** சூல் முதிர்ந்த முகில் புலியைக் கொன்ற யானையின் மருப்பில் உள்ள குருதிக்கறை நீங்கும்படி மழை பெய்தது; முகில் கடல்நீரை முகந்து மலையிலே மிகவும் பெய்தலாலே வையையாறு மலர்மணமும், வெங்கார் மணமும், கனி மணமும் கலந்து கொணர்ந்து பிறர்க்குக் கொடாநின்றது; அவ் வையைக் கரையிலுள்ள சோலையின்கண் ஆற்றினது வெம்மையால் உண்டான வேசனை நாற்றமும் கலந்தது; ஊர்கள் தோறும் பறையறையப்பட்டது; சுருங்கையில் நீர் ஓடுகின்ற முழக்கத்தாலே மதுரையில் உள்ளோர் துயில் நீங்கி வையையில் நீராடும் பொருட்டு விரைந்தனர்.

**கசு - கக :** தாம் தாம் முற்படுதல் விருப்பத்தாலே அவர்களிற் சிலர் தேர் ஏற எண்ணிக் குதிரைகளைப் பள்ளி யோடத்திற் பூட்டி, அதன்மிசை ஏருநிற்பவும், சிலர் வங்கத்தில் ஏற எண்ணி அதற்குரிய எருதுகளைத் தேரிற் பூட்டி அதன்கண் ஏருநிற்பவும், சிலர் குதிரைகளுக்கு இடும் கலனை முதலிய வற்றை யானைகளுக்கிடாநிற்பவும், சிலர் மறதியாலே யானைகளை ஒப்பனை செய்யாது ஏறி நடத்தாநிற்பவும் இங்ஙனம் தடுமாரு நின்றனர்.

**உ0 - உசு :** மகளிர்க்குரிய கோதைகளை மைந்தர் புனைந் தனர்; மைந்தர்க்குரிய தார்களை மகளிர் அணிந்தனர்; இங் ஙனம் தாம் தாம் முந்துதல் வேண்டும் என்னும் விருப்பத்தாலே முறைமை மறந்து அணிந்தவரெல்லாம் வையையாற்றை எய் தினர்; அணிந்து கொள்ளாத சிலர், தெருக்களில் வந்து நின்று வருந்தினர்; இவ்வாறு வையை மதுரையில் உள் ளோரால் பெரிதும் விரும்புந் தன்மையுடையதாயிற்று.

௨௭ - ௩௨ : அப்போது கோதைகளும், தார்களும், சூட்டும், கண்ணியும், வலையமும் ஆகிய இவற்றால் அணிசெய்து கொண்ட கூட்டத்தினர் வையைக் கரைக்கண் வந்து குழுமினர். சிலர், பிறர் அணிந்துள்ள அணிகலன்களைப் பார்த்துக் கொண்டே வந்தனர்.

௩௩ - ௪௩ : ஒரு தலைவியுடன் வந்த தோழியர், தலைவன் தலைவியோடே இருப்பவும் தலைவியினிடத்திலிருந்து காணாமற் போயினவாகக் கருதப்பட்ட வளையலையும் ஆரத்தையும் கூட்டத்திலே வந்ததொரு பரத்தை அணிந்திருத்தலைக் கண்டார்; அதனால் இப் பரத்தை நந்தலைவியின் மாற்றாள் போலும் என்று கருதி அத் தோழியர் அவளை உற்று நோக்கினர்; அஃதறிந்த தலைவன் நாணினன்; அத் தோழியர் நந்தலைவியினுடைய அணிகலனைக் களவாடி இப் பரத்தைக்குக் கொடுத்த கள்வனுடைய முகத்தைப் பாருங்கள் என்றனர்; அது கேட்ட பரத்தை தன் ஆயத்துட் புகுந்து மறைந்து கொண்டாள்; அத் தோழியர், அப் பரத்தையைத் தொடர்ந்து மணற்பரப்பிலே கண்டனர்.

௪௪ - ௬௫ : அதுகண்ட பரத்தை "நீயிர் என்னை ஏன் தொடர்கின்றீர்" என்று சினந்து எதிர்த்தாள்; தலைவி திகைத்து ஒன்றும் சொல்லாமல் நின்றாள்; தோழியர் அப் பரத்தையை நோக்கிக் காமத்தைப் பொய்யொடு கலந்து விற்கும் கணிகையே! பொதுமகளே! காமுகப் பன்றிகள் நுகரும் தொட்டியே! வனப்பாகிய வயலிலே கள்ளாகிய நீரைவிட்டுக் காமமாகிய கலப்பையாலே எம்முடைய எருது சோம்பிக் கிடவாமல் உழுகின்ற பழைய சாலே! பொருள் வழங்குவோரைக் கண்ணாகிய கயிற்றாலே தோளாகிய தறியில் கட்டி காமவின்பம் மிகும் பொருட்டு இசையினையும், எம்பாற் களவுகொண்ட அணிகளை அணிந்துகொண்ட அவ்வழகையும், ஊட்டாநின்ற பொதுமகளே!, முன்னர்க் கெட்டுப்போன எம் எருதினைத் தேடிக் கண்டுபிடித்து வணக்கி இவ்வையையாகிய தொழுவத்திற் புகவிட்டு அடித்து இடித்து இவ் வழக்குரைக்கும் அவையத்தார்க்கு அஃது எம்மெருதாதலை அறிவிக்க நின்னைத் தொடர்ந்தேம்; வேளாளர்க்குத் தம் எருதைத் தொழில் செய்யாது ஓடவிடுதல் முறைமையன்றன்றோ? எம் தலைவியின் ஆரத்தை நீ அணிதற்கு அவள் மார்பும் நின் மார்பும் ஒரு தன்மையுடையன ஆய்விட்டனவோ! என்று வைவாராயினர்.

௬௬ - ௭௩ : அப் பரத்தை, தலைவியைச் சில சொல்லி ஏசினாள்; அதுகேட்ட முதுமகளிர் வெறுத்து அப் பரத்தையை

நோக்கி, 'ஏடி! நீ சிந்தித்த அளவிலே பாவம் நீங்குதற்குரிய கற்புடைய இத் தலைவியைச் சினந்து சில சொல்லிப் பாவம் செய்தனை; அது நீங்க இவளை வணங்க வருவாயாக' என்றனர். அது கேட்ட பரத்தை, 'இஃது என்றும் ஒழியாததொரு துன்பமாக முடிந்தது' என்று மனத்துள் எண்ணி, அம் முதுமகளிருள் ஒருத்தியை நோக்கி 'அன்னையே! மாற்றாளை மாற்றாள் வணங்குதல் பெருமையன்று', என்று கூறினள்.

**எச - எஅ :** பின்னர்த் தலைவி பரத்தையை நோக்கி "ஏடி நீ நினது பெருமையை எமக்குச் சொல்லிக் காட்ட வேண்டா! என் தந்தை எனக்கிட்ட இவ் வளையலும் ஆரமும் நினக்கு வந்தவழி களவுவழி யன்றாயின், நினக்கு இவற்றைத் தந்தவனை எமக்குக் காட்டிப் பின்னர் நின் பெருமையைக் கூறுக" என்றாள்.

**எகூ - அ௩ :** அதுகேட்ட பரத்தை "அதிரற்கண்ணியை உடையோய்; நின் அன்பன் எனக்கும் அன்பன்; ஆதலால் இவ் வணிகளை எமக்கு விலையாக அவன் தந்தான், இன்னும் நின் சிலம்புகளையும் கழற்றி எனக்குத் தருவான்; யான் கள்வி அல்லேன்; அவனே கள்வன்! அவனைத் தொடர்க" என்றாள்;

**அச - கூஎ :** அப்பொழுது ஆண்டுவந்த மகளிருட் சிலர் அப் பரத்தையை நோக்கி, "மானே! நும்மை விரும்பிக் காமுகர் நுமக்கு வழங்கிய பொருள் நும்முடையனவே" என்று அவள் சினத்தைத் தணித்துப் பின்னர்த் தலைவியை நோக்கி, "பூங்கொடியே! பரத்தையர் இன்பம் விரும்பிச் செல்வானைச் செல்லாமற் றடுத்தலும், சென்றான் என்று நீக்கி ஒழுகுதலும், மனைவியர்க்குக் கூடுமோ? கூடா, குலமகளிர் கணவன் தம்மை இகழினும் அவனைத் தாம் போற்றும் இயல்புடையர் அல்லரோ! பரத்தையர்பாற் செல்லும் கணவரொடு அளவளாவாமல் இருப்பேம் என்றிருத்தலும் முடிவு போகாது அன்றோ? ஆடவர் காமம் தக்கவிடத்தேமட்டும் நிற்கும் தன்மையுடையதன்று' என்று தேற்றினர். இத்தகைய துனியும் புலவியும் உண்டாகும் படி செய்தது வையை.

**கூஅ - க0எ :** மகளிர் கைபோன்ற முகையினையும், பாம்பு படம்விரித்தாற் போன்றும் குடைவிரித்தாற் போன்றும் மலரும் மலர்களையும் உடைய காந்தளினையும், நீர்ப்பூக்களையும், பிற பூக்களையும் அருவி கொணர்ந்து தர, அவற்றைத் திரைக் கையாலே தள்ளிக் கொணர்ந்த வையை, மதுரை மதிற் சுருங்கையினூடு புக்கு நீரைச்சொரியும் தோற்றம், களிறுகள் தம் கையை உயர எடுத்து நீர்சொரிவதை ஒக்கும்.

௧0அ - ௧௧௧ : இவ்வாறு, ஊடலும் புணர்தலும் பிரிதலு மாகிய இக் காமத்தையும் கள்ளையும் கலந்து மகளிர் யாவரும் பாராட்ட, அவர் விரும்பின தம் காதலரோடு நீராடும்படி பிரிந்த தலைவர்களைக் கொணர்ந்துவந்து கூட்டுதல் இவ் வையைக்கு இயல்பு.

கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந்
துடலே றுருமின மார்ப்ப மலைமாலை
முற்றுபு முற்றுபு பெய்துசூன் முதிர்முகில்
பொருதிகல் புலிபோழ்ந்த பூநுதல் எழிலியானைக்
குருதிகோட் டழிகறை தெளிபெறக் கழீஇயின்று
காலைக் கடல்படிந்து காய்கதிரோன் போயவழி
மாலை மலைமணந்து மண்துயின்ற கங்குலான்
வானாற்று மழைதலைஇ மரனாற்று மலர்நாற்றம்
தேனாற்று மலர்நாற்றஞ் செறுவெயில் உறுகால
கானாற்றுங் கார்நாற்றங் கொம்புதிர்த்த கனிநாற்றம்
தானாற்றங் கலந்துடன் தழீஇவந்து தரூஉம் வையை
தன்னாற்ற மீது தடம்பொழில் தான்யாற்று
வெந்நாற்று வேசனை நாற்றங் குதுகுதுப்ப
ஊரூர் பறையொலி கொண்டன் றுயர்மதிலில்
நீரூர் அரவத்தாற் றுயிலுணர் பெழீஇத்
திண்டேர்ப் புரவி வங்கம் பூட்டவும்
வங்கப் பாண்டியில் திண்டேர் ஊரவும்
வயமாப் பண்ணுந மதமாப் பண்ணவும்
கயமாப் பேணிக் கலவா தூரவும்
மகளிர் கோதை மைந்தர் புனையவும்
மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்
முந்துறல் விருப்பொடு முறைமறந் தணிந்தவர்
ஆடுவார் பொய்தல் அணிவண் டிமிர்மணற்
கோடே றெருத்தத் திரும்புன லிற்குறுகி
மாட மறுகின் மருவி மறுகுறக்
கூடல் விழையுந் தகைத்துத் தகைவையை
புகைவகை தைஇயினார் பூங்கோதை நல்லார்
தகைவகை தைஇயினார் தார் ;
வகைவகை தைஇயினார் மாலை மிகமிகச்

சூட்டுங் கண்ணியு மோட்டு வலயமும்
இயலணி அணிநிற்ப வேறி யமர்பரப்பின்
அயலய லணிநோக்கி ஆங்காங்கு வருபவர்
இடுவளை ஆரமோ டித்தா னுடனாகக்
கெடுவளை பூண்டவள் மேனியிற் கண்டு
நொந்தவள் மாற்றாள் இவளென நோக்கத்
தந்த கள்வன் சமழ்ப்புமுகங் காண்மின்
செருச்செய்த வாளி சீற்றத் தவையன்ன
நேரிதழ் உண்கணார் நிறைகா டாக
ஓடி யொளித்தொய்யப் போவா னிலைகாண்மின்
எனவாங்கு
ஒய்யப்போ வாளை யுறழ்ந்தோளிவ் வாணுதல்
வையை மடுத்தாற் கடலெனத் தெய்ய
நெறிமண னேடினர் செல்லச்சொல் லேற்று
செறிநிறைப்பெண் வல்லுறழ் பியாது தொடர்பென்ன
மறலினாள் மாற்றாண்மகள் ;
வாய்வாளா நின்றாள்
செறிநகை சித்தந் திகைத்து ;
ஆயத் தொருத்தி யவளை யமர்காம
மாயப்போய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை
பெண்மைப் பொதுமைப் பிணையிலி யைம்புலத்தைத்
துற்றுவ துற்றுந் துணையிதழ் வாய்த்தொட்டி
முற்றா நறுநறா மொய்புன லட்டிக்
காரிகைநீர் ஏர்வயற் காமக் களிநாஞ்சில்
மூரி தவிர முடுக்கு முதுசாடி
மடமதர் உண்கண் கயிறாக வைத்துத்
தடமென்றோள் தொட்டுத் தகைத்து மடவிரலால்
இட்டார்க் கியாழார்த்தும் பாணியில் எம்மிழையைத்
தொட்டார்த்தும் இன்பத் துறைப்பொதுவி கேட்டதைப்
போய்தன் மகளிர்கண் காண இகுத்தந்திவ்
வையைத் தொழுவத்துத் தந்து வடித்திடித்து
மத்திகை மாலையா மோதி அவையத்துத்
தொடர்ந்தேம் எருது தொழில்செய்யா தோட
விடுங்கடன் வேளாளர்க் கின்று படர்ந்தியாம்

தன்மார்பந் தண்டந் தருமாரத் தாள்மார்பு
நின்மார்பு மோரோத்த நீர்மையகோ லென்னுமுன்
தேடினள் ஏசச் சிலமகளிர் மற்றதற்
கூடினர் வையை யகத்து;
சிந்திக்கத் தீரும் பிணியாட் செறேற்க
மைந்துற்றாய் வெஞ்சோன் மடமயிற் சாயலை
வந்திக்க வாரென மனத்தக்க நோயிது
வேற்றுரை வேற்றூர் தொழுதல் இளிவரவு
போற்றாய்காண் அன்னை புரையோய் புரையின்று
மாற்றனை மாற்றாள் வரவு;
அ..................சொல் நல்லவை நாணுமற்
றந்து முழவின் வருவாய்நீ வாய்வாளா
எந்தை எனக்கீத்த இடுவளை ஆரப்பூண்
வந்தவழி நின்பான் மாயக் களவன்றேல்
தந்தானைத் தந்தே தருக்கு;
மாலை யணிய விலைதந்தான் மாதர்நின்
கால சிலம்பு கழற்றுவான் சால
அதிரலங் கண்ணிநீ அன்பனேற் கன்பன்
கதுவாய் அவன்கள்வன் கள்விநா னல்லேன்
எனவாங்கு
வச்சிய மானே மறலினை மாற்றுமக்கு
நச்சினர் ஈபவை நாடறிய நும்மவே
சேக்கை இனியார்பாற் செல்வான் மனையாளாற்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா
தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்
இகழினுங் கேள்வரை யேத்தி இறைஞ்சுவார்
நிகழ்வ தறியாது நில்லுநீ நல்லாய்
மகளிரை மைந்தற் றமர்புற்ற மைந்தர்
அகலங் கடிகுவே மென்பவை யார்க்கானும்
முடிபொரு ளன்று முனியல் முனியல்
கடவரை நிற்குமோ காமங் கொடியியலாய்
எனவாங்கு
இன்ன துனியும் புலவியு மேற்பிக்கும்
தென்னவன் வையைச் சிறப்பு;

கோடியியலார் கைபோற் குவிந்த முகை
அரவுடன் றவைபோல் விரிந்த குலை
குடைவிரிந் தவைபோலக் கோலு மலர்
சுனைகழிந்து தூங்குவன நீரின்மலர்
சினைவிரிந் துதிர்ந்தவீப் புதல்விரி போதோடும்
அருவி சோரிந்த திரையிற் றாரந்து
நெடுமால் சுருங்கை நடுவழிப் போந்து
கடுமா களிறணத்துக் கைவிடுநீர் போலும்
நெடுநீர் மலிபுன னீண்மாடக் கூடற்
கடிமதில் பெய்யும் பொழுது;
நாமமா ரூடலு நட்புந் தணப்புங்
காமமுங் கள்ளுங் கலந்துடன் பாராட்டத்
தாமமர் காதலரோ டாடப் புணர்வித்தல்
பூமலி வையைக் கியல்பு.

*என்பது, பருவவரவின்கண் தலைமகளது ஆற்றுமை கண்டு தூதுவிடச் சென்ற பாணன் தலைமகற்குக் கார்ப்பருவமும் வையை நீர் விழவணியுங் கூறியது.*

ஆசிரியன் நல்லந்துவனார் பாட்டு; நல்லச்சுதனார் இசை;
பண் காந்தாரம்.

## உரை

க - ரு : கடல்.....................கழீஇயின்று

(இ - ள்.) *சூல் முதிர் முகில் - சூல் முற்றிய முகில், மலை மாலை முற்றுபு முற்றுபு - மலை ஒழுங்கினைச் சூழ்ந்து சூழ்ந்து, உடல் உரும் ஏறு இனம் ஆர்ப்ப - சினவாநின்ற இடியேற்றுத் திரள் ஆரவாரிக்கும்படி, கடல் குறை படுத்த நீர் கல் குறைபட எறிந்து பெய்து - கடல் வற்றும்படி முகந்து கொணர்ந்த நீரை அம்மலையினது கற்கள் துணிபடும்படி வீசிப் பொழிந்து, பொருது இகல் புலி போழ்ந்த பூ நுதல் எழில் யானைக் கோட்டுக் குருதி அழிகறை தெளிபெறக் கழீஇயின்று - தன்னோடு போரிட்டு மாறுபட்ட புலியைக் குத்திப் பிளந்த பொலிவுடைய நெற்றியையுடைய யானையது கோட்டின்கண் உள்ளதாகிய குருதியினாலாகிய மிக்க களங்கத்தை அக்கோடு தெளிவு பெறும்படி கழுவிற்று;*

(வி - ம்.) முகில் மலைமாலையை முற்றுபு அதன் கல் குறைபட நீரை எறிந்து, யானைக் கோட்டின் கறையைக் கழுவிற்று என்க. உருமேற்றினம் எனமாறுக; இடியேற்றுத்திரள். உடலுதல் - சினத்தல். முற்றுபு-முற்றி, சூழ்ந்து. மலைமாலை - மலைஒழுங்கு. அழி-மிக்க. கறை - களங்கம். புலியைப் போழ்ந்தமையாலே உண்டான கறை என்க. மழைத்துளியின் விசைமிகுதி கூறுவார் கறைகழீஇயின்று என்றார். மழைமிகுதி கூறுவார், கடல் குறை படுத்த நீர் என்றார். பெரிய கடலும் வற்றும்படியாக முகக்கப்பட்ட மிக்கநீர் என்றவாறு. கழீஇயின்று - கழுவிற்று.

(பரிமே.) பூநுதல் - புகர்நுதல். அழிகறை - இகப்பரிய கறை.

௬ - ௧௧ : காலை..................................வையை

(இ - ள்.) வையை - வையையாறு; வான் காலை கடல் படிந்து - மேகம் காலைப்பொழுதிலே கடலிலே படிந்து அது குறைபட முகந்த நீரோடு, காய் கதிரோன் போய வழி - சுடாநின்ற ஞாயிறு போனவழியே மேலைத்திசையிற்போய், மாலை மலைமணந்து - மாலைப்பொழுதிலே மலையை அடைந்து, மண் துயின்ற கங்குலான் - இம் மண்ணுலகத்து வாழும் உயிரினமெல்லாம் உறங்காநின்ற இராப்பொழுதெல்லாம் தானுறங்காதே, ஆற்றும் மழை தலைஇ - வழங்கிய மழைபெய்தலாலே அந் நீரினோடு, மரன் ஆற்றும் மலர் நாற்றம் - மரங்கள் தரும் மலர் மணமும், மலர் ஆற்றும் தேன் - மலர்கள் தரும் தேன் மணமும், செறு வெயில் உறுகால கான் ஆற்றும் கார் நாற்றம் - சினந்து சுடும் வெயிலையும் மிக்க காற்றையும் உடையவாகிய காடுகள் தரும் வெங்கார் மணமும், கொம்பு உதிர்த்த கனி நாற்றம் - மரக்கொம்புகள் உதிர்த்த கனிகளின் மணமும், நாற்றம் உடன் கலந்து தழீஇ வந்து தான் தரூஉம் - ஆகிய இம் மணங்களை ஒருசேரக்கலந்து கொணர்ந்துவந்து தான் பிறர்க்குக் கொடாநின்றது;

(வி - ம்.) வான் தரும்மழை பெய்தலால் வையை மலர் முதலிய வற்றின் மணங்களை ஒருங்கே கலந்து கொணர்ந்து தான் பிறர்க்குக் கொடாநின்றது என்க.

காய்கதிரோன் : வினைத்தொகை. கதிரோன் போயவழி என்றது மேற்றிசையை. எனவே, கடல் குணகடல் என்பது பெற்றாம். மலை சையமலை. மணந்து - சேர்ந்து. மண் - உயிர்கள். ஆகுபெயர்: தலைஇ - பெய்து; இவ் வெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக. கங்குலான் - இரவின்கண் : உருபுமயக்கம். ஆற்றுதல் - தருதல். மரன் - மரம். மலர் ஆற்றும் தேன் என மாறுக. செறுவெயில் : வினைத்தொகை; சுடும் வெயில் என்க. உறு - மிகுதி. கால - காற்றையுடையவாகிய. இதனால் முதுவேனிற் பருவத்திறுதியிற் பெய்த மழை என்பது பெறப்பட்டது. என்னை? முறுகிய வெயிலானும் பெருங்காற்றானும் சுட்டலைக்கப்பட்ட காடு என்றமையான் என்க. இஃது

பாணன் தலைவனுக்கு அவன் தலைவிக்குக் கூறிவந்த கார்ப்பருவ வரவினைக் குறிப்பாக உணர்த்தியபடியாம். வெங்கார் மணம் - நீண்டநாள் மழை வறந்துவிட வெயிலானே பெரிதும் சுடப்பட்ட நிலத்தின்மேல் புதுவதாக மழை பொழிந்தவுடன் அந் நிலத்திலுள்ள வெப்பத்தானே நிலத்தின்கண் ஒருவகை ஆவி எழுந்து பரவாநிற்கும்; அந்த ஆவி ஒருவகை மணமும் உடைத்தாம்; அந்தமணமே வெங்கார் மணம் என்று கூறப்பட்டது. இக் காலத்தாரும் கோடை வெயிலான் உலர்ந்து கிடக்கும் நிலத்தை வெங்கார் கிடந்தநிலம் என்றும், அந் நிலத்தே மழைபெய்து விடின், நிலம் வெங்கார் அழிந்து கெட்டது என்றும் வழங்குதல் காணலாம். இந்த மணம் கற்புடைய மகளிரின் மேனிமணத்திற்கு உவமை கூறப்படுதலுண்டு. இதனை,

"சுடுமண் மிசைமாரி சொரியச்சூழ்ந்து சுமந்தெழுந்து
நெடுநன் னிமிராவி நாறுநெய்தோய் தளிர்மேனி
துடிநுண் ணிடைப்பெருந் தோட்டுவர்வாய் ஏழை மலர்மார்பன்
கடிநன் மலர்ப்பள்ளி களிப்பக்காமக் கடலாழ்ந்தான்."

எனவரும் சீவக சிந்தாமணியானும் (உ௫0௩.) உணர்க.

கஉ - உஉ : தனறுறறம....................அணிந்தவர்

(இ - ள்.) தடம் பொழில் தன் நாற்றம் மீது யாற்று வெம் நாற்று வேசனை நாற்றம - வையையினது இருகரைகளினும் உளள பெரிய பொழிலினது மணத்தின் மேலாக அவ் வையையினது வெம்மையாலே தோற்றுதலையுடைய பரவுதலையுடைய வெங்கார் மணத்தை, குதுகுதுப்ப ஊர் ஊர் தோறும்- நுகர்ந்து குதுகுதுப்பனவாகிய ஊர்கள் தோறும், பறை ஒலி கொண்டன்று - அப் புதுநீர் வருகையை மக்கட்கு உணர்த்தும் பொருட்டு முழக்கும் பறை முழங்கிற்று, (உசு) கூடல் - மதுரை மாநகரத்தின்கண் உள்ள மக்கள், உயர் மதிலில் நீர் ஊர் அரவத்தால் துயில் உணர்பு எழீஇ - அந் நகரத்து உயரிய மதிலிடத்திலுள்ள சுருங்கையில் அவ்வையை நீர் புக்கு ஓடாநின்ற முழக்கததாலே உறக்கம் நீங்கி எழுந்து, திண் தேர்ப் புரவி வங்கம் பூட்டவும் - திண்ணிய தேரின்கண் ஏறக்கருதுவார், அத் தேரிற் பூட்டுதற்குரிய குதிரைகளை பள்ளியோட வண்டிகளிலே பூட்டி அதன்கண் ஏறுநிற்பவும், வங்கம் பாண்டியில் திண் தேர் ஊரவும் - பள்ளியோடவண்டியில் ஏறக் கருதுவோர் அவ்வண்டியிற் பூட்டுதற்குரிய எருதுகளைத் தேரின்கட் பூட்டி அதன்கண் ஏறிச் செலுத்தாநிற்பவும், வயமாப் பண்ணுந மதமாப் பண்ணவும் - வலிய குதிரைகளை ஒப்பனை செய்தற்குரிய கலனை முதலியவற்றால் யானைகளை ஒப்பனை செய்யாநிற்பவும், கயம் மா பேணிக் கலவாது ஊரவும் - சிலர் யானை குதிரை என்னுமிவற்றைப் போற்றி ஒப்பனை சேர்த்தாமல் வறிதே ஊராநிற்பவும், மகளிர் கோதை மைந்தர்

புனையவும் - மகளிர் சூடிக்கொள்ளும் மரபினவாகிய மாலையை ஆராயாமல் ஆடவர் அணிந்து கொள்ளாநிற்பவும், மைந்தர் தண் தார் மகளிர் பெய்யவும் - அங்ஙனமே ஆடவர் அணியு மரபினவாகிய மாலையை ஆராயாமல் மகளிர் சூடிக்கொள்ளா நிற்பவும், முந்துறல் விருப்பொடு முறை மறந்து அணிந்தவர் - இவ்வாறாகப் புதுப்புனல் வருகை காணுதற்குத் தாம் தாம் முந்துதல் வேண்டும் என்னும் ஆசையாலே ஊரு மரபும் மறந்து அணியு மரபும் மறந்து மாறாக ஊர்ந்தவரும் அணிந் தவருமாகிய மாந்தர் எல்லாம்;

(வி - ம்.) தடம் பொழில் தன் நாற்றம் மீது யாற்று வெம் நாற்று வேசனை நாற்றம் குதுகுதுப்ப ஊர் ஊர் என இயைத்துக் கொள்க. பொழில் ஈண்டு வையையின் இருகரையிடத்தும் உள்ள சோலைகள். சோலையினின்றும் வரும் மணத்தினுங் காட்டில் யாற்றின் கண் புதுநீர் புகுந்துழி அம் மணல் வெப்பத்தானே தோற்றுதலை யுடைய நாற்றத்தை நுகர்ந்து பெரிதும் குதூகலிப்பனவாகிய ஊர்கள் என்க. வேசனை - புகுதல்; புதிதாக வந்து புகுந்து பரவுதலையுடைய நாற்றம் என்க. ஈண்டு யாற்றின் வெம்மையால் தோற்றுதலையுடைய நாற்றம் எனவே வெங்கார் நாற்றம் என்பது பெற்றாம். குதுகுதுப்ப: பலவறி சொல். குதுகுதுத்தல் - பெரிதும் மகிழ்தல். புதுப் புனல் வருகையை மக்கட்கு உணர்த்தும் பொருட்டு முழக்கும் பறை முழங்கிற்று என்க. ஒலிகொண்டன்று - ஒலித்தது.

இனி (கரு) மதுரையிலுள்ள மாந்தர் செயல் கூறுகின்றார். கூடலின் உயர் மதில் என்க. சுருங்கை - குழாய். வையை நீர் பெருகி மதுரை மதிலிடத்துள்ள சுருங்கையின் வழியாகப் பாயும் ஒலியினாலே அம் மதுரை மக்கள் துயிலுணர்ந்து எழுந்தனர் என்க.

உணர்பு - உணர்ந்து. எழீஇ - எழுந்து. திண்டேர் பூட்டவும் என்பது தொடங்கிப் பெய்யவும் என்னுந் துணையும், புதுநீர் வருகையை உணர்ந்த மதுரை மக்களின் மகிழ்ச்சியாலே உண்டான மருட்கைச் செயல்களை (உக) நகைச்சுவைபட ஓதுகின்றார்.

ஆக்கமாதல், இழப்பாதல், ஞெரேலென மனிதர்க்கு உண்டாகும் பொழுது அவர் மனம் முழுவதையும் அவ்வாக்கம் அல்லது இழப்பே கவர்ந்து கொள்ளாநிற்கும்; ஆதலால் அப்பொழுது அவர் செய்யும் செயலெல்லாம் முறையற்றதாகவே காணப்படுதல் இயல்பு. ஆகலின் வையைக்கண் நீர் வந்தது என்றதனை உணர்ந்தவுடன் பெரிதும் மகிழ்ந்து தாம் தாம் முந்துற வேண்டும் ஆசையானே இங்ஙனம் தடுமாறினர் என்க.

தேரை ஊரக் கருதிக் குதிரைகளை வங்கவண்டியிற் பூட்டி அதனை ஊர்வர் ; வங்கவண்டியிற் பூட்டற்குரிய எருதுகளைத் தேரிற் பூட்டிச் செலுத்துவர்; யானை குதிரைகளைப் பண்ணுறுத்தாமல் வறிதே செலுத்துவர்; யானைக்குரிய ஒப்பனையைக் குதிரைக்குச் செய்வர்; ஆடவர் மாலையை மகளிர் புனைவர்; மகளிர் மாலையை ஆடவர் புனைவர்; குதிரைக்குச் செய்யும் ஒப்பனையை யானைக்குச் செய்வர்; இங்ஙனமாக முறை மறந்தோராகிய மக்கள் எல்லாம் என்க. இதனோடு,

" ................. சோழன்
எமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்டு
இலம்பா டுழந்தவென் இரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின மிடற்றியாக் குநரும்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்
அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்
மிடற்றமை மரபின அரைக்கியாக் குநரும்
கடுந்தெறல் இராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாஅங்கு
அறாஅ வருநகை இனிதுபெற் றிகுமே
இருங்கிளைத் தலைமை எய்தி
அரும்படர் எவ்வம் உழந்ததன் தலையே" (புறநா - ௩௭௮.)

எனவரும் புறப்பாட்டையும் ஒப்பு நோக்குக.

வங்கம் - பள்ளியோடம் என்னும் வண்டி. பாண்டி - எருது. வயமா - குதிரை. பண்ணுந - பண்ணுறுத்துதற்குரிய பொருள். மதமா - யானை. கய மா: உம்மைத்தொகை. கயமும் மாவும் என்க. கலவாது - ஒப்பனை சேர்த்தாமல்.

உ௩ - உ௬: ஆடுவார்..................வையை

(இ - ள்.) ஆடுவார் பொய்தல் அணி வண்டு இமிர் மணல் கோடு எருந்தத்து இரும் புனலின் குறுகி - விளையாடும் பருவத்து மகளிருடைய சிற்றில் அழகு செய்யப்பட்ட வண்டு பாடும் மணலாகிய கரையது பிடரியை வந்து தொடப்பெருகிய பெரிய வெள்ளத்தைச் சென்று அணுகாநிற்கவும், மாட மறுகின் மருவி மறுகுற-முன் கூறியாங்கு முறைமறந் தணிந்த முந்திச் சென்றோர் ஒழிய ஏனையோர் மாடங்களையுடைய தெருவின்கண்ணே வந்து மேலே செல்லுதற்கு வழி பெறாராய் வருந்தாநிற்பவும், தகை வையை விழையும் தகைத்து - இங்ஙனமாக அழகிய வையையாறு அம் மதுரையில் வாழும் மக்கள் பெரிதும் விரும்புமொரு தன்மையுடைத்தாயிற்று;

(வி - ம்.) ஆடுவார் - விளையாட்டுப் பருவமுடைய மகளிர். பொய்தல் - சிற்றில், மணல் வீடு. வையைக் கரையின்கண் சிறுமிகள் சிற்றில் இழைத்து ஆடலின் அச் சிற்றில் அக் கரையை அணிசெய்த என்க. வண்டு இமிர் மணற்கோடு என்றது, தடம்பொழிலுடைய மணற்கோடு என்றவாறு. கோடு - கரை. எருத்தென்றது அக் கரையுச்சியினின்று சிறிது கீழுள்ள கரைப்பகுதியை. இரும்புனல் - வெள்ளம். மறுகு - தெரு. மறுகுற - வருந்த

௨௭ - ௩௬ : புகைவகை................. காண்மின்

(இ - ள்.) பூங்கோதை புகை வகை தைஇயினர் நல்லார்- பூமாலைகளை மேலும் மணமுடைத்தாக்குதல் கருதி நறுமணப் புகை சூழ்வித்த வகையாலே அணிந்த மகளிரும், தார் தகை வகை தைஇயினர் - பூமாலைகளை அணிந்துகொள்ளும் தொழிலானும் அழகு மிகும் வகையாலே அணிந்துகொண்ட மைந்தரும், வகை வகை மாலை தைஇயினர் - நிறத்தானும் மணத்தானும் கட்டுதற் றொழிலானும் பல்வேறு வகைப்பட்ட மாலைகளை அணிந்தவரும், சூட்டுங் கண்ணியும் மோட்டு வலயமும் இயல் அணி அணி மிக மிக - உச்சிச் சூட்டும் கண்ணியும் பெரிய வளையமுமாய் இயன்ற அணிகளையுடையோருமாகிய திரள் வந்து மேலும் மேலும் மிகுந்தொறும், அமர் பரப்பின் ஏறி நிற்ப - விரும்புதற்குக் காரணமான கரைப் பரப்பில் ஏறிநிற்ப, அயல் அயல் அணி நோக்கி ஆங்கு ஆங்கு வருபவர் - அங்ஙனம் நின்றோருட் சிலர் பிறர் பிறர் அணிந்துள்ள ஆடை அணிகலன்களைப் பார்க்கும் பொருட்டு அவ்வவ் விடங்களிலே சுற்றி வருபவர்களுள், இடுவளை ஆரமோடு ஈத்தான் உடனாக - ஒருதலைவன் தலைவிக்குரிய பூணும் வளையலையும் முத்து மாலையையும் ஒரு பரத்தைக்கு அத்தலைவி யறியாமல் கொடுத்திருந்தானாக அத் தலைவியோடும் அத் தலைவனும் இருக்கும் பொழுதே, கெடுவளை பூண்டவள் மேனியிற் கண்டு - அத் தலைமக்களோடு வந்த தோழியர் காணமற்போனதாகக் கருதப்பட்ட தம் தலைவியின் வளையலை அப் பரத்தையிடத்தே கண்டு, நொந்தவள் மாற்றாள் இவள் எனநோக்க-இவ் வளையலை இழந்து வருந்திய நந் தலைவியின் மாற்றாள் போலும் இவள் என்று அப் பரத்தையைச் சுட்டித் தம்முள் உரையாடி அவளைக் கூர்ந்து நோக்காநிற்ப, (அதுகண்ட தலைவன் நாணினனாக,) தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின் - அது கண்ட தோழியர் மீண்டும் தம்முள் இதோ இவ் வணிகலன்களைக் களவு செய்து இவட்குக் கொடுத்த கள்வனுடைய ஒளி மழுங்கிய முகத்தையும் காணுங்கள் இவை நம்முடைய தலைவியின் அணிகலன்களே ஐயமில்லை என்றார்.

(வி - ம்.) நல்லார் - கோதைகளை நறுமணப் புகையினால் மேலும் மணமூட்டித் தைஇயினர் என்க. தைஇயினர் - அணிந்தார். தார் என்ற குறிப்பாலே மைந்தர் தகைவகை தைஇயினர் என்பது பெற்றாம். தகைவகை தையுதல் - அணியும் வகையானும் அழகுற அணிதல். சூட்டு கண்ணி வலயம் என்பனவும் மலர்மாலை வகைகளே என்க. மோட்டு வலயம் - பரிய மாலையாகிய வளையம் என்க. இயலணி-அணி இயன்ற அணிகளையுடைய கூட்டம்; ஆகுபெயர். அமர் பரப்பு - தங்குதற்குரிய கரைப்பரப்புமாம். மாற்றாள் - தன் கணவ

னுடைய மற்றொரு காதலி. நொந்தவள் - அவ் வணிகலன் களவு போயின என்று வருந்திய தலைவி என்க. சமழ்ப்பு-நாணம்; சமழ்ப்பு முகம் என்றது நாணத்தால் ஒளிமழுங்கிய முகம் என்றவாறு. "தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின்" எனத் தோழியர் தம்முள் உரையாடிய அளவில் அஃதறிந்த பரத்தை பக்கத்தே நின்ற மகளிர் குழுவினூடே மறைந்துகொள்ளக் கருதி விரைந்தாளாக அங்ஙனம் விரைவாளை நோக்கிய தோழியர் "உண்கணூர் நிறை காடாக ஓடி யொளித்து ஒய்யப் போவாளைக் காண்மின்" என ஏனையோர்க்குக் கூறினராகக் கருதுக.

இடுவளை : வினைத்தொகை. ஆரம் - முத்துமாலை. ஈத்தான் - ஈண்டுத் தலைவன். கெடுவளை - காணமற்போன வளையல். மேனி - கைக்கு ஆகுபெயர்.

(பரிமே.) பூங்கோதைகளைப் புகைத்த வகையால் அணிந்தாரும், தாரைத் தகைந்த வகையால் அணிந்தாரும் சூட்டும் கண்ணியும் வளையுமாகிய இவற்றான் மிக மிக இயன்ற அணிகளையுடைய திரளும்.

௩௫. நொந்தவள் - அதற்கு நொந்து அவளுக்கு.

௩௭ - ௩௯ : செரு.............................காண்மின்

(இ - ள்.) சிற்றத்தவை செருச்செய்த வாளி அன்னநேர் இதழ் உண் கண்ணூர் நிறைகாடு ஆக - அங்ஙனம் தலைவனிலை பற்றித் தோழியர் உரையாடி நிற்கும்பொழுதே அஃதறிந்த அப் பரத்தை சினமுடையன வாய்ப் போர்செய்து பகைவர் குருதி தோய்ந்த அம்புகளை ஒத்த நேரிய இமைகளையுடைய மையுண்ட கண்களையுடைய மகளிரது கூட்டமே தான் மறைதற்குரிய காடாகக்கொண்டு, ஓடி ஒளித்து ஒய்யப் போவாள் - அத் தோழியர் தன்னைக் காணமல் அவர்பால் நின்று ஓடி ஒளித்துத் தப்பப்போகின்றவளை அத் தோழியரிற் கண்டோர் ஏனையோர்க்குக் காட்டி, நிலைகாண்மின் என - அப் பரத்தையின் நிலைமையையும் காண்மின் அவ் வளையல் நந் தலைவியுடையதே என்பதனை இதனானும் காண்மின் என்று கூறுநிற்ப ;

(வி - ம்.) அவ் வணிகலன் நந் தலைவியுடையதே என்னுமளவில் தலைவன் நாணினமையும் இதுபற்றி உரையாடுமளவில் கூட்டத்துள் அப் பரத்தை ஓடி ஒளிதலும் ஆகிய இவ்விரண்டு ஏதுக்களானும் அவை நம்முடையன என்பது உறுதியே என்பார், 'கள்வன் முகம் காண்மின்; ஒய்யப் போவாளைக் காண்மின்' என்றும், தோழியர் தம்முள் உரையாடாநின்றனர் என்க. சிற்றத்தவை செருச் செய்வாளி என மாறுக. சிற்றத்தவை - சினமுடையன. 'கள்வர் தம்மை உடையார் காணதபடி காட்டினுள் புகுந்து மறைதல்பற்றி அம் மகளிர் திரளே காடாக' என்றார். ஒய்ய - தப்புதற்கு.

(பரிமே.) ௪0. என - எனத் தம்முட் காட்டி.

௪0 - ௪எ : ஆங்கு..........................திகைத்து

(இ - ள்.) ஆங்கு-அவ்விடத்தே, வையை கடல் மடுத்தால் என-வையையாறு கடலிலே சென்று புகுந்தாற்போன்று, செறி பெண் நிரை ஒய்யப் போவாளை - செறிந்த அம் மகளிர் திரளிலே புக்கு மறைந்து தப்பப் போகின்ற அப் பரத்தையை, இவ் வாணுதல் உறழ்ந்தோள் என - அத் தோழியர் இவ் வொளி யுடைய நெற்றியினையுடைய பரத்தை நந் தலைவிக்கு மாற்றாளே என ஐயமறத் தெளிந்து, நெறிமணல் செறிபெண் நிரை நேடினர் செல்ல - அவளைக் காணும்பொருட்டு நெறிந்த அம் மணற் பரப்பிலே குழுமிய அம் மகளிர் திரளினூடே புகுந்து அவளைத் தேடினராய்த் தொடர்ந்து செல்லாநிற்ப, மாற்றாள் மகள் - மாற்றாளாகிய அப் பரத்தை அங்ஙனம் தன்னை அவ் வாயத்தார் தொடர்வதனை அறிந்து, வல் உறழ்பு - அவரோடு மிக மாறு பட்டு, சொல் ஏற்று - பேசுதலைத் துணிந்து மேற்கொண்டு யாது தொடர்பு என்ன மறலினாள் - நீயிர் என்னை இங்ஙனம் தொடர்ந்து வருதற்குரிய காரணந்தான் என்னையோ என்று கூறி எதிர்த்தாள், செறிநகை சித்தம் திகைத்து வாய்வாளாது நின்றாள் - அங்ஙனம் அப் பரத்தை எதிர்த்த அளவிலே அத் தோழியரைப் பின்தொடர்ந்துசென்ற செறிந்த பற்களையுடைய தலைவி நெஞ்சம் திகைத்து யாதொன்றும் சொல்லமாட்டாத வளாய் வாளாநிற்பாளாயினள்;

(வி - ம்) உறழ்ந்தோள் - மாற்றாள். என (௪௨) என்பதனை உறழ்ந்தோள் என எனவும் கூட்டுக. வையை கடல் மடுத்தால் என எனமாறுக. வையை பரத்தைக்கும் கடல் மகளிர்திரளுக்கும் உவமை. தெய்ய: அசைச்சொல். நெறி - நெறித்தல்: அறல்படுதல். நேடினர் - தேடினர். செறிபெண்நிரை எனமாறி நெறிமணல் செறிபெண்ணிரை நேடினர் என்று இயைத்துக்கொள்க. செறிநகை : அன்மொழித் தொகை; தலைவி என்னும் பொருட்டு. அப் பரத்தை மாறுபட் டெதிர்த்து உரையாடத் தொடங்குமுன் குலமகளாகலின் சித்தம் திகைத்து நிற்பாளாயினள் என்க.

(பரிமே.) ௪௪. பெண்சாதி நிரைந்த நிரைக்கண்ணே.

௪௪ - ௫. அத் தலைவி சித்தந்திகைத்து ஒன்றுஞ் சொல்லாது நின்றாள்.

(௪அ - முதல் ௬௬, ஏச என்னுந் துணையும் ஒரு தோழி கூற்று.)

௪அ - ௫௪ : ஆயத்தொருத்தி......................முதுசாடி

(இ - ள்.) ஆயத்து ஒருத்தி-அங்ஙனம் எதிர்ந்தபொழுது அத்தோழியருள் வைத்து ஒருதோழி, அவளை-அப் பரத்தையை, அமர் காமம் மாயப் பொய்கூட்டி மயக்கும் விலைக் கணிகை - விரும்பப்படும் காமவின்பத்தைப் பெரிய பொய்யோடு கலந்து

அதனைக் கொள்ளவரும் காமுகரை மயக்கும் விலைத்தொழிலை யுடைய கணிகையே!, பெண்மைப் பொதுமை பிணை இலி-நினது பெண்மையின்பம் பலர்க்கும் பொதுமை உடையதாதல் பற்றி ஒருவரானும் பேணப்படுதல் இல்லாதவளே, ஐம்புலத்தைத் துற்றுவ துற்றும் துணையிதழ் வாய்த்தொட்டி - ஐம் பொறிகளானும் நுகரப்படும் ஐந்து புலத்தைமட்டுமே நுகரும் இயல்புடையவராகிய காமுகப் பன்றிகள் நுகர்தற்குரிய இரண்டு உதடுகளையுடைத்தாகிய தொட்டிபோல்வாளே, காரிகை நீர் ஏர் வயல்-காரிகை நீர்மையினையுடைய வனப்பாகிய வயலிலே, முற்றா நறுநறா மொய்புனல் அட்டி - முதிராத நறிய கள்ளாகிய வலிய நீரைப்பாய்ச்சி, காமக்களி நாஞ்சில் - காம வெறியாகிய கலப்பையைக் கட்டி, மூரி தவிர முடுக்கும் முது சாடி - எம்முடைய எருது சோம்பிக்கிடவாமல் உழுகின்ற பழைய படைச்சாலே;

(வி - ம்.) அமர்காமம் - விரும்பப்படும் காமவின்பம். மாயப் பொய் - பண்புத்தொகை. "மாயப் பொய்பல கூட்டும் மாயத்தாள்" (சிலப். கானல். கட்டுரை) என்றான் கோவலனும். மயக்கும், அதனைக் கொள்ளவரும் காமுகரை மயக்கும் என்க. தன்னின்பத்தை விலைப் பொருட்டால் விற்கும் கணிகையே! பெண்மை, ஈண்டுப் பெண்மை யின்பம். பொதுமை - யாவர்க்கும் பொதுவாந்தன்மை. பிணை - பிணைப்புடையோர்: ஆகுபெயர். தன்னோடு தொடர்புடைய காதலரை இல்லாதவளே என்றவாறு.

ஐம்புலம் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. "கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் இவ் வைம்புல"னுகர்ச்சி யொன்றே கருதிவந்து காமுகப் பன்றிகள் நுகர்தற்குரிய தொட்டியே என்க. எனவே விலங்குகட்கும் மக்களுக்கும் பொதுவாகிய புலனுகர்ச்சி மாத்திரையே ஆகிய காமவின்பம் அன்றிக் காதலின்பம் அறியாத காமுகர் எனப் பரத்தமையுடையோரை இகழ்ந்தவாறாயிற்று. இவ்வாற்றால் மாயமேயன்றி அன்பில்லாதவளே எனப் பரத்தையை இகழ்ந்தாளுமாயிற்று. துற்றுவ - உண்பன: பலவறிசொல் தொட்டி என்னும் குறிப்பானே பன்றிகள் எனப்பட்டது. "பன்றிக் கூழ்ப் பத்தர்" என்றார் நாலடியினும். 'தொட்டிக்கும் உதடுண்மையால் இணையிதழ்த் தொட்டி' என்றாள். தொட்டி என்றது இடக்கரடக்கு. புனலட்டி - நீர்பாய்ச்சி. காரிகை, ஏர், என்பன அழகின் கூறு பாடுகள். களி - வெறி. நாஞ்சில் - கலப்பை. மூரி - சோம்பல். சாடி - சால்: உழுபடைச்சால். எம்மெருது என்பது அவாய் நிலையான் வருவித்துக் கூறப்பட்டது. முதுசாடி - பழைய படைச்சால்.

(பரிமே.) 'பலகால் உழப்படுதலின் முதுசாடி' என்றார். சால் என்னும் பெயருடைமையாற் சாடி எனப்பட்டது.

௫௫ - ௫௮ : **மடமதர்......................பொதுவி**

(**இ - ள்.**) மடம் மதர் உண்கண் கயிறு ஆக வைத்து - மடப்பமுடைய மதர்த்த மையுண்ட கண்ணையே கயிறாகக்

கொண்டு, தடம் மெல்தோள் தொட்டு-தமது பெரிய தோளாகிய தறியிலே கட்டி, தகைத்து - தடுத்துக்கொண்டு, இட்டார்க்கு மடவிரலால் யாழ்ஆர்த்தும் பாணியில் - நிரம்பப் பொருள் வழங்குவார்க்குக் காமவின்பத்தை மிகுவிக்கும் பொருட்டு இளமையுடைய விரல்களாலே யாழினை வருடி இசையெழுப்பி அதன் இன்பத்தை ஊட்டும்பொழுதே, எம் இழையைத் தொட்டு ஆர்த்தும் - எம்முடைய வளையும் ஆரமுமாகிய அணிகலன் களையும் அணிந்துகொண்டு அவற்றாலாய அழகினையும் அக் காமுகருக்கு ஊட்டும், இன்பத் துறைப்பொதுவி - இன்பம் வழங்குதலிலே இவ் வையையின் நீராடுந்துறைபோலப் பொதுமையுடையவளே ;

(வி - ம்.) மடம் - பெண்மைக்குணம் நான்கனுள் ஒன்று. மதர் - களிப்பு : கண்பார்வை பட்டவுடன் காமுகர் மயங்கித் தன்பால் வரச் செய்தலால் கண்ணைக் கயிறாக உருவகித்தார்.

"ஆடலும் பாடலும் அழகுங் காட்டிச்
சுருப்புநாண் கருப்புவில் அருப்புக்கணை தூவச்
செருக்கயல் நெடுங்கண் சுருக்குவலைப் படுத்துக்
கண்டோர் நெஞ்சம் கொண்டகம் புக்கு."

(கஅ : ௧0௬ - ௭)

என்றார் மணிமேகலையினும்.

கயிறு என்றதற்கேற்பத் தோளாகிய தறி என்க. தொட்டு - கட்டி. மடவிரல் - இளமைத்தன்மையுடைய விரல் என்க; மெல்விரல் என்றவாறு. இசை காமக்குணத்தை மிகுவிக்கு மியல்புடையதாகலின், யாழிசை எழுப்பி நுகர்வித்து என்பது கருத்து.

இட்டார் - பொருள் நிரம்ப வழங்கியோர்க்கு என்க. 'பொரு ளிலாதாரைக் கண்ணாலும் நோக்காது இட்டார்க்கே ஆர்த்தும் பொருட் பெண்டிர் என்பார் இட்டார்க்கு ஆர்த்தும்' என்றார். என்னை ?

"நறுந்தா துண்டு நயனில் காலை
வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்."

(மணி. கஅ : ௧௯ - ௨0)

என்றும்,

"பண்டேர் மொழியிற் பயன்பல வாங்கி
வண்டிற் றுறக்கும் கொண்டி மகளிரை."

(மணி. கஅ : ௧0௮ - ௯)

என்றும் வருதல் காண்க.

பாணி - காலம் : ஆர்த்தும் காலத்தே என்க. ஆர்த்துதல் - நுகர் வித்தல். எம்மிழை - எமது அணிகலன். தலைவிக்கும் தனக்கும் வேற்றுமை கருதாமல் 'எம்மிழை' என்றாள். நின்னுடைய புற அழகு தானும் எம்மிழை யணிந்தமையானே உண்டாவதாம் என்று இகழ்ந்த படியாம்.

புற அழகையும் ஆர்த்தும் என்க. துறை என்றது வையையின் கண் உள்ள நீராடுந் துறையை என்க. இத்துறை பலர்க்கும் நீராட லின்பத்தை வரையாது அளிக்குமாறு நீயும் காமவின்பம் வழங்கும் பொதுமகள் என்றவாறு. பொதுவி - பொதுவாக உள்ளாய்.

(பரிமே.) ஆர்த்தும் பொதுவி என்க.

ருஅ - சுரு: கெட்டதை................படர்ந்தியாம்

(இ - ள்.) கெட்டதை - ஏடி முன்னே கெட்ட எம்முடைய எருதினை யாம் தேடித்திரிந்து கண்டு பிடித்து, பொய்தல் மகளிர் கண் காண இருத்தந்து - இவ்விளையாட்டு மகளிருடைய கண்கள் காணும்படியாக அதனை வணக்கிக் கொணர்ந்து, இவ்வையைத் தொழுவத்துத் தந்து - இவ் வையையாகிய கொட்டிலிலே புகுதவிட்டு, அடித்து இடித்து - நன்றாக அடித்து உரப்பி, மாலை மத்திகையா மோதி - மாலையையே சம்மட்டியாகக் கொண்டு புடைத்து, அவையத்து-இவ்வழக்கினை உரைத்தற்குரிய அறவோர் அவையத்திலுள்ளோர் எல்லாம் அஃது எம்முடைய எருதாதல் அறியும்படி செய்ய, யாம் படர்ந்து தொடர்ந்தேம் - யாம் நின் பின்வந்து நின்னைத் தொடரா நின்றேம், வேளாளர்க்கு எருது தொழில் செய்யாது ஓடவிடும் கடன் இன்று - வேளாளர்க்குத் தம் எருதைத் தொழில் செய்யாமல் பிறர்பால் சென்று தொழில்செய்யும்படி ஓட விடுவது முறைமை இன்றாகலான்.

(வி - ம்.) என்னை நீயிர் தொடர்தற்குக் காரணம் யாதென வினவிய பரத்தைக்குக் காரணம் கூறுவாள், கணிகையே! பிணையிலீ! தொட்டியே! முதுசாடியே! கெட்ட எம் மெருதைக் கண்டு வணக்கி, அடித்து, உரப்பி, மோதி, அவையத்தார் அறியச் செய்யும்படி நின்னைத் தொடர்ந்தேம் காண் என்று விடையிறுத்தபடியாம்.

கெட்டதை - கெட்டுப்போன எம்முடைய எருதை என்க. பொய்தல் மகளிர் - விளையாட்டு மகளிர். இருத்தல் - தாழச் செய்தல். தொழுவம் - ஈண்டுப் பட்டிமாடடைக்கும் கொட்டில் என்றவாறு. இடித்து - உரப்பி; அதட்டி. மத்திகை - சம்மட்டி. அவையத்தார் அறியும்படி தொடர்ந்தேம் என்க. தலைவனை எருதென்றவள் தம்மை வேளாளர் என்றமை சாலப் பொருந்துமாறறிக.

(பரிமே.) சுக: அவையத்து - இவ் வழக்குரைக்கும் அவயத்திலே எம் எருதாதல் யாரும் அறிய.

௬௩. கடன் - முறைமை.

௬௪ - ௭0: தன்மார்பம்...................வாரென

(இ - ள்.) தன் மார்பம் தண்டம் தரும் ஆரத்தாள் மார்பும்- தனக்கு உரிய தலைவன் மார்பினை நினக்குத் தண்டமாகத் தரும்

முத்துமாலையை உடைய எந்தலைவியின் மார்பும், நின் மார்பும்- அம் முத்துமாலையைக் களவு கொண்டணிந்துள்ள பொது மகளாகிய நின்னுடைய மார்பும், ஓர் ஒத்த நீர்மைய கொல் - தம்முள் ஒரு தன்மையவாக ஒத்த நீர்மையினை உடையனவாய் விட்டனவோ, என்னுமுன் - என்று வைது சொல்லுமுன்னரே, தேடினாள் ஏச - தேடப்பட்ட அப் பரத்தை அத்தோழியின் வசை பொருளாய் மேலும் எதிர்ப்பாளாய்த் தலைமகளைக் குறித்துச் சில வசைகளைக் கூறாநிற்ப, வையை அகத்துச் சில மகளிர் அதற்கு ஊடினார்-அப்பொழுது வையையின்கண் அது கேட்டு நின்ற முதுமகளிருட் சிலர் பரத்தையை வெறுத்தாராய், சிந்திக்கத் தீரும் பிணியாள் செறேற்க - அப் பரத்தையை நோக்கி ஏடி கற்புடைமையால் நினைக்கும் அளவிலே பாவம் நீங்கும் தன்மையுடைய அக் குலமகளை இவ்வாறு சினவாதே கொள், வெஞ்சொல் மைந்துஉற்றாய் - நீ கொடுமைமொழி கூறிப் பேதைமை உடையை ஆயினாய், மடமயில் சாயலை வந்திக்க வார் என - இப் பாவந் தீர்தற்பொருட்டு மடப்பமுடைய மயில் போலும் மென்மையுடைய அத் தலைவியை வணங்க வருவாயாக என்று சொல்ல;

(வி - ம்.) தன் மார்பு - தனக்கே உரிமையுடைத்தாகிய தலைவன் மார்பு. தலைவன் மார்பு தலைவிக்கு உரிமையுடையதென்பதனை, "நாடன் மார்பு உரித்தாகிய மறுவில் நட்பே" (உசச) எனவரும் குறுந்தொகையானும் உணர்க. தண்டம் தருதல் என்பது வீணாகக் கொடுத்தல் என்னும் பொருளிற் கூறப்படுவதொரு உலகவழக்கு. அவ் வழக்கு இக் காலத்தாரும் வழங்குதல் காணலாம்.

ஆரத்தாள் என்றது, அவ்வாரத்தினை நீ களவு கொண்டனை என்னும் நினைவிற்று. ஓர் ஒத்த - ஒரு தன்மையாக ஒத்த. நீர்மைய- தன்மைய. கொல் : வினாவின்கண் வந்தது.

தேடினாள், தேடப்பட்ட பரத்தை என்க. அதற்கு - அங்ஙனம் ஏசுதற்குப் பரிந்து என்க. செறேற்க - சினவாதே கொள். சிந்திக்கத் தீரும் பிணியாள் என்றது, தன்னை நினைத்தவருடைய பாவத்தைத் தீர்க்கும் தெய்வக் கற்புடைய குலமகளை என்றவாறு. பத்தினிப் பெண்டிர் தெய்வத்தன்மையுடையர் என்பதனை,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (குறள் - ருரு.)

எனவரும் திருவள்ளுவனார் பொய்யாமொழியானும்.

"இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது

நீணில வேந்தர் கொற்றம் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடென்னும்
அத்தகு நல்லுரை அறியாயோ நீ'' (கடு: கஎ௨ - அ.)

எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க.

சிந்திக்கத் தீரும் பிணியாள் என அத் தலைவியின் தெய்வத்தன்மை குறித்து அத்தகையாளை வசை கூறித் தீவினை செய்தாய்; அத் தீவினைக்குக் கழுவாயும் அவளை வந்தித்தலே ஆதலால் அப் பத்தினித் தெய்வத்தை "வந்திக்க வார்'' என்றார் என்க வார் - வருதி. "வார் அடா உனக்கு யாதுதானர்தம் மகள் அடுக்குமோ'' (வேத்திரகீ - க௨) எனவரும் வில்லிபாரதத்தானும் அஃதப் பொருட்டாதலறிக. முன்னிலை ஒருமை.

ஆண்டுக் கூடிய மகளிரும் குலமகளிராதலின், அப் பரத்தை தீவினை செய்தற்கிரங்கி அவள் தீவினை தீர்தற்குமோருபாயம் கூறுவதனை நினைக்குங்கால் தன்பாற் பிழை செய்து சாபமேற்றவம்பப் பரத்தைக்கும் வறுமொழியாளனுக்கும் இரங்கி "நெறியினீங்கியோர் நீரல கூறினும், அறியாமை என்று அறிதல் வேண்டும்'' என்ற கண்ணகியார் அருள் மொழியும் நினைவில் எழுகின்றது.

(சிலப். க௦ : ௨௩எ - அ.)

(பரிமே.) ௬௬ : தேடப்பட்ட அப் பரத்தை ஏன்று கொண்டு அத் தலைவியைச் சில வெய்யவாகச் சொல்ல.

௬௯. மைந்து - அறியாமை.

எ௦. வாரெனச் சொல்ல

மேல் பரத்தை :

எ௦ - எ௩: மனத்தக்க................வரவு

(இ - ள்.) இது மனத்தக்க நோய் - அம்மகளிர் அங்ஙனம் தலைவியை வணங்குக என்றமை கேட்ட அப் பரத்தை இது என்றும் நிலைபெறுவதொரு துன்பாக முடிந்தது எனத் தன்னுள்ளே சொல்லிக்கொண்டு பின்னர் அம் முதுமகளிருள் ஒருத்தியை நோக்கி, அன்னை வேற்றுரை வேற்றூர் தொழுதல் இளிவரவு - அன்னையே பகைவரைப் பகைவர் வணங்குதல் இழிந்த செயலாகும், புரையோய் போற்றாய்காண் - உயர்ந்தோய் நினது உயர்வுடைமையானே அவ் விளிவரவினை நீ அறிந்திலை காண், மாற்றாளை மாற்றாள் வரவு புரையின்று - அங்ஙனமே மாற்றாளை மாற்றாள் வழிபடுதலும் பெருமையில்லாததொரு செயலே ஆகும் என்று சொல்ல;

(வி - ம்.) மன்னத்தக்க எனற்பாலது மனத்தக்க என, னகரமெய் கெட்டு நின்றது. மன்னத் தக்க நோய் என்றது, மாற்றாளை வணங்குஞ் செயலை. அச் செயல் என் செய்தேம் என் செய்தேம் என நெடுங் காலம் நினைந்து நினைந்து வருந்துதற்குக் காரணமாய் நினைவிலே

பதிந்து நிற்கத் தக்கது என்பாள் மனத்தக்க நோய் இது என்று தனக்குள்ளே கூறிக்கொண்டாள் என்க. வேற்றூர் - பகைவர். இளிவரவு - இழிவு. போற்றாய் - அறிந்திலை. புரையோய் - உயர்ந்தோய். "புரை உயர்வாகும்" (உரி - ச.) என்பது தொல்காப்பியம். புரையோய் என்றது, அவ் விழிவினை அறியாமைக்குக் குறிப்பேதுவாய் நின்றது. என்னை; சிறியன சிந்தியாமை சான்றோர் இயல்பாகலின்; அச் சான்றாண்மையுடைமையின் இதன்கண் உள்ள இழிவினை நீ அறிந்தாயில்லை என்பது அவள் கருத்தாகலின். 'புரையின்று' என்றது, இளிவரவுடைத்தென்றபடியாம். வரவு - வழிபாடு. மாற்றாள் - தன் காதலனுடைய காதலியாகிய மற்றொருத்தி.

(பரிமே.) மேல் தலைவி :

எச - எஅ : அ....சொல்....................தருக்கு

(இ - ள்.) நல்லவை அ..............சொல் நாணுமல் தந்து முழவின் வருவாய் நீ - நல்லனவாகிய மெல்லிய இனிய சொற்களை நாணமின்றிப் பல அவையிடத்தும் சொல்லிக் கூத்தாடுதற்கு மத்தளத்துடனே வருமியல்புடைய நீ, வாய் வாளா - நினது பெருமையை எடுத்துக் கூறவேண்டா அது கிடக்க, எந்தை எனக்கு ஈத்த இடுவளை ஆரம பூண் நின்பால் வந்த வழி மாயக் களவு அன்றேல் - எம் தந்தை எமக்குச் சீதனமாக வழங்கிய இடப்படும் கைவளையலும் முத்துமாலையும் ஆகிய இவ் வணிகலன்கள் எம்மிடத்தினின்று நின்னிடத்திற்கு வந்தவழி வஞ்சனையுடைய களவு வழி இல்லை என்பாயாயின், தந்தானைத் தந்து தருக்கி - இவற்றை நினக்குத் தந்தவன் ஒருவன் உளனுதல் வேண்டுமன்றே அவனை எமக்குக் கூறிப் பின்னர் நீ மேம்பாடுடையை ஆயின் ஆகுக;

(வி - ம்.) எச-ம் அடியில் சில சொற்களின் முன்னும் பின்னும் ஒவ்வோர் எழுத்து நிற்ப ஏனைய எழுத்துக்கள் அழிந்தொழிந்தன; அவை: 'பல அவையிடத்தும் மெல்லிய இனிய' என்னும் பொருளுடையனவாக இருத்தல் வேண்டும் என்பது பரிமேலழகர் உரையால் விளங்கும். நல்லவை - நன்மை தருவன. நல்லனவாகிய சொல் என்றது காதலிருவர் தனியிடத்தேயிருந்து உரையாடுங்கால் இன்பந் தருவனவாகிய சொற்கள் என்றவாறு. அவற்றைப் பல்லோரவைக்கண் சொல்ல மகளிர் நாணுவர். அத்தகைய சொல்லை நீ நாணாது பலர்முன் சொல்லி ஆடுவாய் என்றவாறு. முழவு - மத்தளம். தலைமை பற்றி முழவொடு வருவாய் என்றாளாகலின் முழவு முதலிய இசைக் கருவிகளோடும் வருவாய் என்பது கருத்தாகக் கொள்க. முழவு - மத்தளம் இஃது இசைக் கருவிகளிற் றலைசிறந்தது என்பதனை,

"இவை அகமுழவு, அகப்புற முழவு, புற முழவு, புறப்புற முழவு பண்ணமை முழவு நாண்முழவு காலை முழவென எழுவகைப்படும்.

அவற்றுள் அக முழவாவன முன் சொன்ன உத்தமமான மத்தளம் சல்லிகை இடக்கை கரடிகை பேரிகை படகம் குடமுழா என இவை

இனி இவற்றுள், மத்தளம் - மத்து ஓசைப்பெயர்; இசையிட னுகிய கருவிகட்கு எல்லாம் தளமாதலான் மத்தளம் என்று பெய ராயிற்று." எனவரும் அடியார்க்கு நல்லார் உரையானும் (சிலப் - அரங்: உஎ. உரை.) உணர்க.

மாற்றுளை மாற்றுள் வணங்குதல் பெருமையின்று எனமுன் அப் பரத்தை கூறினுளாகலின், நினது பெருமையை நீ கூறிக்காட்டல் வேண்டா யாம் அறிவேம் என்பாள், நீ வாய்வாளா (நீ சொல்லாதமைக) என்றுள் என்க.

இவ்வணிகலன் நினக்குத் தந்த தலைவனுடையனவும் அல்ல எனக்குவந்த சீதனப் பொருள் என்பாள். "எந்தை எனக்கீத்த" என்றுள். இடுவளை: வினைத்தொகை. தருக்கு - மேம்படுவாயாக. மாயம் - வஞ்சனை.

(பரிமே.) மேல்பரத்தை:—

எகூ - அரு: மாலை..............................எனவாங்கு

(இ - ள்.) அதிரல் அம் கண்ணி - அழகிய மோசி மல்லிகை மலர் மாலையணிந்த நங்கையே, நீ சால அன்பன் எற்கு சால அன்பன் - நீ பெரிதும் அன்பு பூண்டவன் என்பாற் பெரிதும் அன்புடையன் ஆதலால், மாலை அணிய விலைதந் தான் - இவ் வளையலையும் முத்துமாலையும் புணர்தற்கு விலையாக எனக்குத் தந்தான், மாதர் - அழகுடையாய், நான் கள்வி அல்லேன் - யான் உனது அணிகலன்களைக் களவு கொண்ட கள்வி அல்லேன் என்று அறிந்து கொள்க, நின்கால சிலம்பு கழற்றுவான் - இவையேயன்றி நினது காலின்கண்ணவாகிய சிலம்புகளையும் எனக்குத் தரும்பொருட்டுக் கழற்றுந்தன்மை யுடையன், அவன் கள்வன் - அவனே கள்வன் ஆவான், கதுவாய் - அவனைப் பற்றுவாயாக, என ஆங்கு - என்று அப் பரத்தை கூறிய அளவிலே;

(வி - ம்.) அதிரல் - மோசிமல்லிகை. கண்ணி - தலையிற் சூடும் மாலை. நீ அன்பு பூண்டவன் என்றுள், நின்பால் அவன் அன்பு பூண்டவன் அல்லன் என்று தலைவியை இகழ்ந்தற்கு. எற்கு - எனக்கு. கதுவுதல் - பற்றிக்கோடல்.

(பரிமே.) மேல் தலைமகற்கு வையைநீர் விழவு தான் கூறி, அதனுள் அணிநோக்கி வருவார் தம்முள் உவந்தவை காட்டிக் கூறியன கொண்டு கூறிய பாணன் 'ஒய்யப் போவானை' (சுக) என்பது முதல் இவ்வளவும் நிகழ்ந்தவை கூறி, அவ்வளவிற் பரத்தையை வெகுளி யாற் சொல்லியனவும் அத்தலைவியைக் கழறியனவும் கொண்டு கூறு கின்றுன்.

அச - ரு: வச்சியமானே!..............................நும்மவே

(இ - ள்.) வச்சியமானே - இந் நிகழ்ச்சியைக் கண்டுநின்ற மகளிருட் சிலர் இடையேவந்து பரத்தையைநோக்கி கண்

டோரை அழகானே கவரும் இயல்புடைய மான் போன்றவளே, மறலினை மாற்று - நீ இனி எதிர்த்தலை ஒழிவாயாக; நச்சினார் ஈபவை நாடு அறிய நும்மவே - நும்மை விரும்பின காமுகர் நுமக்குத் தந்த பொருள்கள் உலகமறிய நுமக்கு உரிமையுடையனவே ஆகும். என்று அவள் சினத்தை இனிதிற் றணித்துப் பின்னர்த் தலைவியை நோக்கி;

**(வி - ம்.)** இப் பகுதி இந் நிகழ்ச்சியைக் கண்டு நின்ற ஏதிலராகிய மகளிர் கூற்றென்க. கலாம் நிகழுமிடத்தே நிற்போர் இருவரிடையேயும் புகுந்து அக்கலகத்தைத் தவிர்ப்பது உலகவியல் ஆதலறிக. இங்ஙனம் நடுநிற்போர் இருதிறத்தார் சினமும் தணிதற்கியன்றன கூறுதலும், உலகியலிற் காணலாம். அங்ஙனமே பரத்தையின் சினந் தணியுமாறு கூறி, மேல் தலைவியை இடித்துரைக்குமாற்றானே தெருட்டுகின்றார் என்க. இடித்துரையைக் குலப்பிறப்புடையோரே கேட்குந்தகுதியுடையர் ஆதலும் நினைக.

(பரிமே.) அ௪. வச்சியம் - வசிகரித்தல், என்று பரத்தையைத் தணித்துப் பின் தலைவியை நோக்கி:-

அ௬ - கூ௫ : சேக்கை ந......................எனவாங்கு

**(இ - ள்.)** நல்லாய் நிகழ்வது அறியாது முனியல் முனியல் - நங்கையே உலகியல்பினை அறியாமல் அப்பரத்தையைச் சினவாதேகொள் சினவாதேகொள்; நீ நில்லு - நீ அமைக, கொடியியலாய் - பூங்கொடி போல்வாளே, காமம் கடவரை நிற்குமோ - மைந்தருடையகாமம் நிற்கக்கடவ இடத்தேயே நிற்ப தொன்றுமோ? சேக்கை இனியார்பால் செல்வான் காக்கை கடிந்து ஒழுகல் மனையாளால் கூடுமோ கூடா - புணர்ச்சி இனிமைமிக்குடைய பரத்தையரிடத்தே செல்லும் இயல்புடையானொரு கணவனைச் செல்லாமற் காத்தலும் சென்றான் என்று நீக்கி ஒழுகுதலும் அவன் மனைவியால் கூடுமோ? கூடா, சான்றாண்மை சான்றார் தகவு உடையர் - சால்புடைமை மிக்கவராகிய கற்புடைய மகளிர், இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார் - தம்மைக் கணவர் இகழ்ந்தவிடத்தும் தாம் அவரை ஏத்தி வணங்குவர்; மைந்துற்று மகளிரை அமர்பு உற்ற மைந்தர் அகலம் கடிகுவேம் என்பவை- தாம் காமத்தால் மயக்கமுற்றுப் பரத்தையரை விரும்பி அவரைச் சேர்ந்த மைந்தருடைய மார்பினை இனித் தோயேம் என்று இருத்தல், யார்க்கானும் முடிபொருள் அன்று - குலமகளிர் யார்க்கும் முடிவுபோக மேற்கொள்ளு மொருசெயல் அன்று. என - என்று தலைவியைத் தெருட்டாநிற்ப;

**(வி - ம்.)** சேக்கை இனியார் - புணர்ச்சியின்பத்தைப் பெரிதும் இன்பமுடைத்தாக்கி நுகர்விப்பாராகிய பரத்தையர் என்க. என்னை?

பரத்தையர் இயற்கையாகிய காமவின்பத்தோடே, ஆடலும் பாடலு மாகிய கலையின்பத்தையும் அளாவி நுகர்வித்த லுடையராதலும், குலமகளிர்பால் அஃதின்மையும் பற்றிப் பரத்தையரைச் சேக்கை யினியார் என்றார் என்பது. இனிப் பரத்தையர் தங் காதலரைப் பெரிதும் மகிழ்விக்கும் இயல்புடையர் என்பதனைக் கோவலன் அநுபவ அறிவானே,

"திலகமும் அளகமுஞ் சிறுகருஞ் சிலையும்
குவளையுங் குமிழுங் கொவ்வையுங் கொண்ட
மாதர்வாண் முகத்து மதைஇய நோக்கமொடு
காதலிற் றோன்றிய கண்கூடு வரியும்
புயல்சுமந்து வருந்திப் பொழிகதிர் மதியத்துக்
கயலுலாய்த் திரிதருங் காமர் செவ்வியிற்
பாகுபொதி பவளந் திறந்து நிலாவுதவிய
நாகிள முத்தி னகைநலங் காட்டி
வருகென வந்து போகெனப் போகிய
கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமும்
அந்தி மாலை வந்ததற் கிரங்கிச்
சிந்தைநோய் கூருமென் சிறுமை நோக்கிக்
கிளிபுரை கிளவியும் மடவன நடையும்
களிமயிற் சாயலுங் கரந்தன ளாகிச்
செருவே னெடுங்கட் சிலதியர் கோலத்து
ஒருதனி வந்த உள்வரி யாடலும்
சிலம்புவாய் புலம்பவும் மேகலை ஆர்ப்பவும்
கலம்பெறா நுசுப்பினள் காதல் நோக்கமொடு
திறத்துவே றுயவென் சிறுமை நோக்கியும்
புறத்துநின் றாடிய புன்புற வரியும்
கோதையுங் குழலுந் தாதுசேர் அளகமும்
ஒருகாழ் முத்தமுந் திருமுலைத் தடமும்
மின்னிடை வருத்த நன்னுதல் தோன்றிச்
சிறுகுறுந் தொழிலியர் மறுமொழி யுய்ப்பப்
புணர்ச்சியுட் பொதிந்த கலாந்தரு கிளவியின்
இருபுற மொழிப்பொருள் கேட்டன ளாகித்
தளர்ந்த சாயல் தகைமென் கூந்தல்
கிளர்ந்துவே றாகிய கிளர்வரிக் கோலமும்
பிரிந்துறை காலத்துப் பரிந்தன ளாகி
என்னுறு கிளைகட்குத் தன்னுறு துயரம்
தேர்ந்துதேர்ந் துரைத்த தேர்ச்சிவரி யன்றியும்
வண்டலர் கோதை மாலையுண் மயங்கிக்
கண்டவர்க் குரைத்த காட்சி வரியும்
அடுத்தடுத் தவர்முன் மயங்கிய மயக்கம்

எடுத்தவர் தீர்த்த எடுத்துக்கோள் வரியும்
ஆடல்மகளே ஆதலின் ஆயிழை
பாடுபெற் றனஅப் பைந்தொடி தனக்கு."

(சில. வேனி - எ௪ - ௧௧0)

எனக் கூறுமாற்ருனே உணர்க.

காக்கை - காத்தல். காக்கையும் கடிந்தொழுகலும் எனும் எண்ணும்மை தொக்கன. தகவு - கற்பு. சான்ருண்மை சான்ருர் - சால்புடைமை மிக்கவர். சால்புடைமையாவது: நற்குணங்கள் பலவற்ருனும் நிறைந்து அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுதல். இன்னுசெய்தார்க்கும் இனியவே செய்யும் இயல்புடைய குலமகளிர் தங்கேள்வர் இகழினும் தங்கடமையிற் பிறழாது ஏத்தி இறைஞ்சுவர் என்பது கருத்து.

நிகழ்வது - நிகழ்ச்சி; என்றது உலகியலே. அமர்பு - விரும்பி. அகலம் - மார்பு. முடிபொருள்-கடைபோக மேற்கொள்ளும் பொருள். நிற்கக்கடவ இடம் என்றது மைந்தர்காமம் கற்புடைமகளிர்பால் மட்டும் நிற்குமோ என்றவாறு. ஆங்கு : அசை.

(பரிமே.) அடுக்கு பன்மைபற்றி வந்தது.

௬௪. காமம் தக்குழி நிற்குமோ?

௬௫. என - என்று அவ்வணிநோக்கி வருவார் சொல்ல.

௬௬ - ௬௭ : **இன்ன.........................சிறப்பு**

**(இ - ள்.)** இன்ன துனியும் புலவியும் - இத்தன்மைய வாகிய துனியையும் ஊடலையும், தென்னவன் வையை ஏற்பிக்கும் - பாண்டியனது வையையாறு ஏற்கச்செய்யும்; சிறப்பு - இப் பண்பு இவ் வையை யாற்றிற்கே சிறந்துரிமை யுடைய தொருபண்பாகும்;

**(வி - ம்.)** துனி - முதிர்ந்த கலாம். புலவி - இளையகலாம். "துனியும் புலவியும் இல்லாயிற் காமம் கனியும் கருக்காயும் அற்று" (குறள் - ௧௩0௬.) என்பவாகலின் வையை காதலர்க்குத் துனியும் புலவியும் தந்து அவர்தம் காமவின்பத்தைச் செவ்வியுற மிகுவிக்கும் என்று பாராட்டியபடியாம்.

இனி (௬அ) கொடியியலார் என்பது தொடங்கிப் பாணன் தலைவனுக்குக் கார்ப்பருவ வரவினை நினைவூட்டுகின்ருன்.

௬அ - ௧0அ : **கொடி..............................பொழுது**

**(இ - ள்.)** கொடியியலார் கைபோல் குவிந்த முகை - பூங்கொடிபோன்ற அழகினையுடைய மகளிரினது குவிந்த கைபோலக் குவிந்த காந்தள் அரும்புகளும், அரவு உடன்றவை போல் விரிந்த குலை-நாகப்பாம்பு சினந்து படம் விரித்தவற்றைப் போல இதழ்விரிந்த காந்தள் மலர்களும், குடைவிரிந்தவை

போல மலர் கோலும் சுனே கழிந்து தூங்குவன - குடை விரித்தாற்போன்று விரிந்த அக் காந்தள்மலராலே சூழப்பட்ட சுனேகளினின்றும் கழிந்து கீழே விழுவனவாகிய, நிரின் மலர் - நீர்ப்பூக்களும், சினேவிரிந்து உதிர்ந்த வி - மரக்கோடுகளிலே மலர்ந்துதிர்ந்த மலர்களும், புதல்விரி போதொடும்-புதல்களிலே மலர்ந்த மலர்களும் ஆகிய, அருவி சொரிந்த - மலேயினின்றும் வீழும் அருவி கொணர்ந்து தன்பாற் சொரிந்த இன்னோரன்ன மலர்களே, திரையில் துரந்து - வையையாறு தன் அலேகளாலே தள்ளிக்கொண்டு, நீள்மாடக் கூடல் கடிமதில் நெடுமால் சுருங்கை நடுவழி போந்து-நீண்ட மாடங்களேயுடைய மதுரைக்கு அரணுக அமைந்த மதிலின்கண் உள்ள நெடிய பெரிய சுருங்கையினூடே வந்து, நெடுநீர் மலிபுனல் பெய்யும்பொழுது - பெருந்தன்மை மிக்க நீரைச் சொரியும்பொழுது அந் நீர், கடுமா களிறு கை அணத்து விடு நீர்போலும் - கடிய விலங்காகிய களிற்றியானே தன் கையை உயர எடுத்து விடாநின்ற நீரினே ஒத்துத் தோன்று நிற்கும் ;

(வி - ம்.) மாதர் கைபோற் குவிந்தமுகை என்றது குறிப்பால் காந்தள் முகையை உணர்த்தியது. அரவுடன்றவைபோல் விரிந்த குலே என்பதுமது. குடைவிரிந்தவைபோலும் மலர் என்பதுமது. சுனேநீரினின்று உயர்ந்து வளேந்து தொங்குவனவாகிய நீர்ப்பூ என்க. புதல் - குறுஞ்செடிகள். புதலின் மலரும் என்றதனுல், புதன்மேற் படர்ந்து விரியும் கொடிமலருங் கொள்க எனவே, கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகை மலரும் என்பதாயிற்று.

சொரிந்த - பலவறிசொல். துரந்து - தள்ளி. சுருங்கை - குழாய். நெடுமால் சுருங்கை - நீண்ட பெரிய குழாய் என்க. நடு என்றது உள் என்னும் பொருட்டாய் நின்றது. கடுமா - யானே : கடுமாவாகிய களிறென்க. அணத்து - மேலே எடுத்து : நான்மாடக்கூடல் என்ப வாகலின் 'நீண்மாடக் கூடல்' என்ருர். மதுரையின்கண், நான்கு மாடங் கூடலின் நான்மாடக்கூடலாயிற்று. அவை : திருவாலவாய் திருநள்ளாறு திருமுடங்கை திருநடுவூர் ; இனி, கன்னி கரியமால் காளி ஆலவாய் என்றுமாம். எனக் கலித்தொகையின்கண் "நான்மாடக் கூடன் மகளிரும் மைந்தரும்" (௬௨-௬௫) என்ற தொடர்க்கு ஆசிரியர் நச்சினுர்க்கினியர் வகுத்த விளக்கவுரையானும் உணர்க. நல்லிசைப் புலவர் பலரும் மதுரையை மாடத்தாற் சிறப்பித் தோதுதலும் காணலாம். "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" (மதுரைக்-௪௨௯) எனவும், "மாடமலி மறுகிற் கூடல்" (திருமுரு - ௭௧) எனவும், "கொடிமாடக் கூடல்" (சிலப். குன்றக். பாட்டுமடை - ௨௪) எனவும் வரும்.

நெடுநீர் - பெருந்தன்மை. கடிமதில் - காவலாகிய மதில்.

௧௦௮ - ௧௧௧ : நாமமர்............................இயல்பு

(இ - ள்.) ஊடலும் - ஊடுதலும், நட்பும் - புணர்தலும், நாம் அமர் தணப்பும் - தலைவியினது அச்சந் தங்குதற்கு

இடமான பிரிவும் என்னும் இவற்றையுடைய, காமமும் கள்ளும் உடன்கலந்து - காமத்தையும் இதற்குச் செருக்கினையளிக்கும் கள்ளினையும் ஒருசேரக் கலந்து, பாராட்ட - மகளிரெல்லாம் யாவரும் பாராட்டும்படி, தாம் அமர்காதலரோடு ஆடப் புணர் வித்தல் - தாம் விரும்பின காதலரோடு தன்பால் நீராடும்படி முன்னர்ப் பிரிந்தவரைக் கொணர்ந்து கூட்டுதல், பூமலி வையைக்கு இயல்பு - மலர்கள் மிக்க இவ் வையையாற்றிறகு இயல்பாகும்;

(வி - ம்.) நாம் - அச்சம்: நாம் அமர் தணப்பு எனக் கூட்டுக. பிரிவு - தலைவிக்கு அச்சந்தருவதொரு ஒழுக்கம் ஆதல் உணர்க. ஊடல் புணர்தல் பிரிதல் என்னுமிவற்றையுடைய காமத்தையும் கள்ளையும் உடன்கலந்து மகளிர் யாவரும் பாராட்டத் தம் காதலரோடு ஆடப்புணர்வித்தல் வையைக்கு இயல்பு என்பதாம்.

இதனால் கார்ப்பருவத் தொடக்கத்தே மீண்டுவருவேன் எனத் தலைவிக்குக் கூறிவந்த தலைவனுக்குப் பாணன் அக் கார்ப்பருவ வருகையைக் குறிப்பாக உணர்த்தினமை உணர்க.

(பரிமே.) ௧0௯. இதற்கு(காமத்திற்கு)ச் செருக்கினை விளைக்கும் கள்ளும்.

௧௧0. முன்பிரிந்தவரைக் கொண்டுவந்து கூட்டுதல்.

## இருபத்தொன்றும் பாடல்

---

## செவ்வேள்

பொருட் சுருக்கம்

(கஎ) *வெற்றிக்கொடி யுயர்த்திய செல்வனே!*

**க - உ :** *நீ ஊர்தியாகக்கொண்டு எழுந்தருள்வது தீப் போன்று விளங்கும் முகபடாத்தையும், போர் வென்றியா லுண்டாய புகழினையும் உடைய பிணிமுகம் என்னும் களிற்றி யானையாம்.*

**௩ - எ :** *நினது தாமரைபோன்ற திருவடிகளிலே அணிந்தது, தைத்தல் அமைந்த பீலிப்போழால் ஒப்பனை செய்யப்பட்ட அடையற் செருப்பு.*

**அ - கூ :** *நீ நினது கையிலே ஏந்தியது, சூரபன்மாவினைத் தடிந்து, கிரௌஞ்சமலையைத் துளைத்த வேற்படை.*

**கO - கக :** *பெருமானே நீ அணிந்தமாலை, வள்ளிப்பூவை விரவித்தொடுத்த கடப்பமலர்மாலை.*

**கஉ - கரு :** *நீ எழுந்தருளி வீற்றிருக்கும் திருப்பதி, உயர்ந்தோர் தம் செந்நாவானே புகழப்பட்ட ஏழிலைப்பாலை மரமடர்ந்ததும் அருவி இடையறுதொழுகுவதும் வானைத் தீண்ட வளர்ந்ததுமாகிய திருப்பரங்குன்றம்.*

**கசு - கஎ :** *அடியேங்கள் அத் திருப்பரங்குன்றத்தடியிலே உறைந்துவாழும் பேறு அருள்க! என்று நின் திருவடியைத் தொழுது வேண்டாநின்றேம்; எமக்கு அப் பேற்றினை அருளுக!*

**கஅ - உகூ :** *பெருமானே! நினது பரங்குன்றத்தின்கண் ஆடல்மகளொருத்தி, தன் காற்சிலம்பு ஒலிக்கத் துடியோசைக் கியைய அடிபெயர்த்துத் தோளசைத்துக் கள்வெறி தடுப்பவும் கூத்தாடாநின்றாள்; அவள் அழகு காரணமாக ஒருதலைவி தன் கணவனொடு ஊடினாள்; மற்றொரு தலைவி தன் கணவன் கண்ணிற்கு அவ் வாடல் மகள் அழகினும் தன்னழகு மேம்படும் பொருட்டுக் கண்ணுடியில் தன்னுருவங்கண்டு தனது அணிகலன்களை அழகுறத் திருத்தினாள்; பின்னொருத்தி தன் கணவன் தன்னையன்றி அப் பரத்தையை விரும்பாதிருக்கச் செய்யும் பொருட்டுத் தன் கொங்கைகளில் சந்தனத்தைப் பூசி*

உதிர்த்துப் பின்னும் பின்னும் பூசி மணமேற்றுநின்றுள்; இவ்வாறு அவ் வாடலரங்கின்கண் பற்பலவாக நிகழ்ந்த மகளிர் செயலை யாங்கள் மீண்டும் நினைவுக்குக் கொண்டுவரும்பொழுது அக் காட்சிகள் கைவல்லான் தீட்டிய ஓவியக்காட்சிபோல எங்கள் அகக்கண்முன்னே தோன்றுகின்றன.

**௩௦ - ௩௯ :** தண்பரங்குன்றத்தின்கண் முகில்முழக்கங் கேட்ட மயில்கள் ஆலவட்டம் அசைத்தாற்போலத் தம்மிரு சிறகையும் விரித்து ஆடாநின்றன; வண்டுகள் வேய்ங்குழ லிசைபோல முரன்றன; அருவி முழவுபோல முழங்கிற்று; இவ்வாறு இயற்கை இசைகள் ஒருங்கே எழுந்து யாண்டும் ஒலித்தன.

**௩௧ - ௪௫ :** திருப்பரங்குன்றத்துள்ள சுனையின்கண், நீராடிய ஒருத்தி நீரினுள் முழுகி எழுந்தாள்; அவ்விடம் அருநிலையாக இருந்தமையால் கரையில் நின்ற தன் கணவனை மூங்கிற்புணை தரும்படி வேண்டினுள்; அவன் புணைகொடாது, அரக்குநீர் வட்டிலை அவள்பால் எறிந்தான்; புணை பெருமை யாலே அந் நீரிடை அவள்படும் அல்லல் கண்டு அக் காதலன் மிகமகிழ்ந்து செவ்வியறிந்து அச் சுனைநீரிற் பாய்ந்து அவளைத் தழுவினன்; இத்தகைய இன்பம் நல்கும் இயல்புடையது அப் பரங்குன்றம்.

**௪௬ - ௫௩ :** பசிய அணிகலன் அணிந்த செவ்வேளே! நினது பரங்குன்றம் எப்பொழுதும் மைந்தர் அணிந்த சந்தன மணமேற்ற காற்றும், மகளிருடைய மணப்பொடி தூவிய கூந்தலினை அசைத்து அந் நறுமணமேற்ற காற்றும், நின் பூசைக்கண் எழுந்த நறும்புகையூடு புகுந்து அந் நறுமணத்தை ஏற்ற காற்றும் உலவாநிற்கும்.

**௫௪ - ௬௫ :** ஒரு விறலி, கோதையசையக் களிமகிழ்ச்சி தடுப்பத் துகில்நெகிழக் கண்சிவப்ப ஆடாநின்றுள். அத் தோற்றம் அழகிய பூங்கொடியொன்று ஆடையணிந்து அணி கலன் அணிந்து வாடையாலே அசைவதுபோல இருந்தது; மற்றொருத்தி தாளத்திற்கேற்ப ஆடினுள்; அவள் கண் அம்பு போலப் பிறழ்ந்தன.

**௬௬ - ௭௦ :** பகைவரை வென்ற வேலையுடையை; பன்னிரு தோளையும் ஆறுமுகங்களையும் உடையை; வெற்றிச் செல்வனே! அடியேங்கள் எம் சுற்றத்தோடு என்றென்றும் நினது திருவடி நீழலிலே உறைதலை விரும்பி நின்னைத் தொழுது வேண்டு கின்றேம்; அப் பேற்றினை எமக்கு அருள்வாயாக.

ஊர்ந்ததை, எரிபுரை யோடை யிடையிமைக்குஞ் சென்னிப்
பொருசமங் கடந்த புகழ்சால் வேழம்
தோட்டதை, தைப்பமை சருமத்திற் றுளியை தாமரை
துப்பமை துவர்நீர்த் துறைமறை யழுத்திய
வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த
வரிமலி யரவுரி வள்புகண் டன்ன
புரிமென் பீலிப் போழ்புனை அடையல்
கையதை, கொள்ளாத் தெவ்வர்கோள் மாமுதல்தடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்புடை திறந்தவேல்
பூண்டதை, சுருளுடை வள்ளி இடையிடு பிழைத்த
உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடக் கமழ்தார்
அமர்ந்ததை, புரையோர் நாவிற் புகழ்நல முற்றி
நிரையே ழடுக்கிய நீளிலைப் பாலை
அரைவரை மேகலை அணிநீர்ச் சூழித்
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம்
குன்றத் தடியுறை யியைகெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வநிற் றொழுது ;
சுடுபொன் ஞெகிழத்து முத்தரிசென் றார்ப்பத்
துடியின் அடிபெயர்த்துத் தோளசைத்துத் தூக்கி
அடுநறா மகிழ்தட்ப ஆடுவாள் தகைமையின்
நுனையிலங் கெஃகெனச் சிவந்த நோக்கமொடு
துணையணை கேள்வனைத் துனிப்பவ ணிலையும்
நிழல்காண் மண்டில நோக்கி
அழல்புனை அவிரிழை திருத்துவாள் குறிப்பும்
பொதிர்த்த முலையிடைப் பூசிச் சந்தனம்
உதிர்த்துப் பின்னுற ஊட்டுவாள் விருப்பும்
பல்லூழ் இவையிவை நினைப்பின் வல்லோன்
ஓவத் தெழுதெழில் போலு மாதடிந்
திட்டோய்நின் குன்றின் மிசை ;
மிசைபடு சாந்தாற்றி போல எழிலி
இசைபடு பக்கம் இருபாலுங் கோலி
விடுபொறி மஞ்ஞை பெயர்புட னாட
விரல்செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப
முரல்குரல் தும்பி அவிழ்மலர் ஊத

யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப்
பாணி முழவிசை அருவிநீர் ததும்ப
ஒருங்கு பரந்தவை யெல்லாம் ஒலிக்கும்
இரங்கு முரசினான் குன்று;
தாழ்நீர் இமிழ்சுனை நாப்பட் குளித்தவண்
மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை
வேய்நீர் அழுந்துதன் கையின் விடுகெனப்
பூநீர்பெய் வட்ட மெறியப் புனைபெறு
தருநிலை நீரின் அவள்துயர் கண்டு
கொழுநன் மகிழ்தூங்கிக் கொய்பூம் புனல்வீழ்ந்து
தழூவுந் தகைவகைத்துத் தண்பரங் குன்று;
வண்டார் பிறங்கன் மைந்தர் நீவிய
தண்கமழ் சாந்தந் தைஇய வளியும்
கயல்புரை கண்ணியர் கமழ்துக ளுதிர்த்த
புயல்புரை கதுப்பக முளரிய வளியும்
உருளிணர்க் கடம்பின் நெடுவேட் கெடுத்த
முருகு கமழ்புகை நுழைந்த வளியும்
அசும்பு மருவி அருவிடர்ப் பரந்த
பசும்பூண் சேஎய்நின் குன்றநன் குடைத்து;
கண்ணொளிர் திகழட ரிடுசுடர் படர்கொடி மின்னுப்போல்
ஒண்ணகை தகைவகை நெறிபெற இடையிடை யிழைத்தியாத்த
செண்ணிகைக் கோதை கதுப்போ டியல
மணிமருள் தேன்மகிழ் தட்ப வொல்கிப்
பிணிநெகிழப் பைந்துகில் நோக்கஞ் சிவப்பூரப்
பூங்கொடி போல நுடங்குவாள் ஆங்குத்தன்
சீர்தகு கேள்வன் உருட்டுந் துடிச்சீரால்
கோடணிந்த முத்தாரம் ஒல்க ஒசிபவளேர்
ஆடை யசைய அணியசையத் தானசையும்
வாடையுளர் கொம்பர் போன்ம்;
வாளி புரள்பவை போலுந் துடிச்சீர்க்குத்
தோளூழ் பெயர்ப்பவள் கண்;
மாறமர் அட்டவை மறவேல் பெயர்ப்பவை
ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை
நன்றமர் ஆயமோ டொருங்குநின் அடியுறை

இன்றுபோல் இயைகெனப் பரவுதும்
எ0 ஒன்றார்த் தேய்த்த செல்வநிற் றொழுதே.

### கடவுள் வாழ்த்து

நல்லச்சுதனார் பாட்டு; கண்ணகனார் இசை; பண் காந்தாரம்.

## உரை

க - எ : ஊர்ந்ததை..........................அடையுல்

(இ - ள்.) ஊர்ந்ததை - முருகப்பெருமானே! நீ ஊர்ந்த ஊர்தி, எரிபுரை இடை ஓடை இமைக்கும் சென்னி - விளக்கத்தாலே நெருப்பை ஒக்கும் நெறிப்பட்டம் இடையே கிடந்து விளங்காநின்ற மத்தகத்தையுடைய, பொருசமம் கடந்த புகழ்சால் வேழம் - பொராநின்ற போர்கள்தோறும் பகைவரை வென்றமையால் உண்டான புகழ்நிறைந்த பிணிமுகம் என்னும் களிற்றியானையாகும், தொட்டதை - நீ நின் திருவடிகளிலே அணிந்தது, தாமரைதாள் இயை துப்பு அமை துவர்நீர்துறை மறையழுத்திய - செந்தாமரைமலர் போன்ற அத் திருவடி நிறத்திற்குப் பொருந்திய பவளம்போலும் நிறமுடைய துவரிட்ட நீர்த்துறையிலே முழுதும் மறைய அழுத்திப் பதனிட்ட, சருமத்தின் தைப்பு அமை வெரிநத்தோலொடு - தோலால் தைத்தல் அமைந்த முதுகின் தோலோடே, வரிமலி அரவுஉரி வள்பு கண்டன்ன - வரிகள்மிக்க பாம்பினது தோலைக் கிழிச் செய்த வாரை ஒத்த, முழுமயிர் மிடைந்த - மயிர்முழுதும் செறிந்த, புரிமென் பீலிப் போழ்புனை அடையல் - விரும்புதற்குரிய மெல்லிய மயிற்பீலிப் பிளவுகளும் கொண்டு இயற்றப்பட்ட அடையலாகிய செருப்பு;

(வி - ம்.) ஊர்ந்ததை - ஊர்ந்தது. ஐ - பகுதிப்பொருள் விகுதி. எரி - தீ. புரை - ஒக்கும். ஓடை - நெற்றிப்பட்டம். இமைக்கும் - விளங்கும். சமம் - போர். வேழம் - யானை. தொட்டது - காலின்கண் அணிந்ததென்க: நூலானும் தைத்தல் உண்டாகலின், தோலாலே தைத்தலமைந்த 'அடையல்' என்றார். சருமம் - தோல். வெரிநத் தோல் - முதுகின்றோல்: இஃது உறுதியுடைமை கூறிற்று. தோலாலே தைக்கப்பட்ட முதுகின்தோலோடு பீலிப்பிளவுகளும் கொண்டியற்றிய அடையல் என்க. துவர்நீர் - மணநீர்: துவர்நீரிலே முழுகவைத்துப் பதனிட்ட தோல் என்க. தோலின்கண் நறுமணமேற்றுதற் பொருட்டுப் பதனிட்ட தோலை துவர்நீரில் அழுத்துவர் என்க. 'துவர்ப்பெருஞ் செருப்'பென்றார் (திருநா. தே. சாய்க்காடு) பிறரும். 'நீர்மிகுதிகூறுவார் துவர்நீர்த்துறை அழுத்தியதோல்' என்றார்.

வெரிந், என்னும் நகரவீற்றுச் சொல் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் "நகர இறுதியும் அதனோரற்றே" "வேற்றுமைக்கு உக்கெட அகரம்

நிலையும்'' என்னும் விதிகளானே, அகரம்பெற்று வருமொழி வல்லெழுத்து மிக்கு வெரிநத்தோல் என்றாயிற்று.

அரவுரி வள்பு கண்டன்ன பீலிப்போழ்; முழுமயிர்மிடைந்த பீலிப்போழ் எனத் தனித்தனிக் கூட்டுக. வள்பு - வார்: அடையற் செருப்பு-பண்புத்தொகை. அடையல் - செருப்புவகையினுள் ஒன்று.

பவளம்போலும் நிறமுடைய அடையல், தைப்பமை அடையல், வெரிநத் தோலோடு பீலிப்போழும் கொண்டு புனைந்த அடையல் எனத் தனித்தனிக் கூட்டுக.

(பரிமே.) தாளியை தைப்பமை என்பனவும் அடையலென்பதனோடு இயையும். அடையல் - அடையற்செருப்பு.

அ - கரு : **கையதை..............................குன்றம்**

(**இ - ள்.**) கையதை - பெருமானே நினது கையின்கண் ஏந்தியது, கொள்ளாத் தெவ்வர் கொள் மாமுதல் தடிந்து - நின்னைத் தலைவனாகக்கொள்ளாத நின் பகைவராகிய அவுணர் தமக்குத் தலைவனாகக்கொண்ட சூரபன்மாவினை வேரொடு துணித்தொழித்து மேலும், புள்ளொடு பெயரிய பொருப்புப் புடைதிறந்த வேல் - கிரௌஞ்சம் என்னும ஒரு பறவையினது பெயரையுடைய மலையினது பக்கத்தைக் குடைந்து வழிதிறந்த வேற்படையாகும்; பூண்டதை - நீ அணிந்துகொண்டது, சுருள் உடை வள்ளிஇடை இடுபு இழைத்த - சுருளுதலையுடைய வள்ளிப்பூவினை இடையிடையே இட்டுத் தொடுத்த, கடம்பின் ஒன்றுபட கமழ் உருள் இணர் தார் - கடம்பினது ஒருசேர மலர்ந்து நறுமணங் கமழாநின்ற தேருருள் போன்ற பூவினாலியன்ற மாலையாகும்; அமர்ந்ததை - பெருமானே நீ விற்றிருந்தது, புரையோர் நாவின் புகழ்நலம் முற்றி - உயர்ந்தோருடைய செந்நாவானே புகழப்படும் நன்மை நிறைந்து, ஏழ் நிரை அடுக்கிய நீள்இலை பாலை - ஏழுஏழாக நிரல்பட அடுக்கிய இலைகளையுடைய பாலைமரத்தினையுடைய, அரைவரை மேகலை - இடைமலையாகிய இலகடத்தினையும், அணிநீர்ச் சூழி - அழகிய அருவிநீர் ஆகிய முகபடாத்தினையும் உடையதொரு (யானை போன்ற), தரை விசும்பு உகந்த தண்பரங்குன்றம் - நிலத்தின் கணின்று வானுற உயர்ந்த தண்ணிய திருப்பரங்குன்றம் என்னும் திருப்பதியாகும்;

(**வி - ம்.**) கொள்ளாத் தெவ்வர் - நின்னை இறைவனாகக் கருதாத பகைவராகிய அவுணர் என்க. மாமரம் என்பதற்கேற்ப 'முதல்தடிந்து' என்றார். புள்-கிரௌஞ்சம்; அன்றில். புள்ளொடு பெயரிய பொருப்பு என்றது, கிரௌஞ்சமலையை. புடை - பக்கம். பூண்டதை - பூண்டது; பூண்டது கடம்பின் இணர்த்தார் என்க. கடப்பமாலை முருகனுக்கு அடையாளப் பூமாலை. இதனை,

"இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்." (முருகு. ௧0-௧)

எனவும், "கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி.........முருகே" (நற். ௩௪) என்றும், "கார் நறுங் கடம்பின்.........தெரியற் சூர்நவை முருகன்" (புறநா-௨௩) என்றும், "கார்க் கடப்பந்தாரெங் கடவுள்" (சிலப் - ௨௪. பாட்டுமடை) என்றும், "காரலர் கடம்பன்" (மணி. ௪ - ௪௬) என்றும் பிற சான்றோரும் பன்னாறிடங்களினும் ஓதுத லானும் உணர்க.

சுருளுடை - சுருளுதல் உடைய. வள்ளி - பூவிற்கு ஆகுபெயர். இழைத்த - தொடுத்த. இணர் - மலருக்கு ஆகுபெயர். உருள்இணர்: உவமத்தொகை. தேர் உருள் போன்ற மலர் என்க. தார் - மார்பி லணியும் மாலை. ஒன்றுபடக் கமழ்தார் - ஒருசேரமலர்ந்து கமழும் மலரையுடைய தார் என்க. அமர்ந்தது - வீற்றிருந்தது, புரையோர் - உயர்ந்தோர். என்றது மெய்க்காட்சியாளரை. நா என்றது - செந்நா என்பது படநின்றது. நிரை ஏழடுக்கிய நீளிலைப்பாலை என்றது ஏழிலைப் பாலையை. ஏழிலைப்பாலை யானைமதம் நாறுமியல்புடையது. எனவே ஏழிலைப்பாலையின் நாற்றமாகிய மதநாற்றத்தையும் இல கடத்தையும் சூழியையும் உடைய குன்றம் என்க. எனவே யானையை ஒத்த குன்றம் என்பது குறிப்பாற் பெற்றும். ஏழிலைப்பாலை யானை மதம் கமழும் என்பதனை,

"பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாறக்
காத்த அங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த ஏழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்திரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு."
(வரைக்காட்சி - ௬.)

எனவரும் கம்பராமாயணச் செய்யுளானும் உணர்க.

'அரைவரை' என்றது மலையிடைமலையாகிய குவட்டினை. மேகலை - இலகடம். அஃதாவது: யானையின் பிடரிலிடப்படும் தவிசு. நீர் - அருவிநீர். சூழி - முகபடாம். உகந்த - உயர்ந்த.

வேழம் முதல் குன்றம் ஈறாகக் கூறப்பட்டவை ஊர்திமுதல் திருப்பதி ஈறாக உள்ளன பிறவும் உளவாயினும் இவை சிறந்தன என்பதுபட விதந்து ஓதியபடியாம்.

(பரிமே.) அ. நின்னை மதியாத அவுணர் தமக்குத் துணையாக மதித்தமா.

௬. புள் - அன்றில். புடை - பக்கம்.

௧௬ - ௧௭: குன்றத்து...................தொழுது

(இ - ள்.) வென்றிக் கொடி அணி செல்வ - பகைவரை வென்ற வெற்றியாலே கோழிக்கொடியை அழகுறச் செய்த செல்வனே, நின் குன்றத்து அடி இயைக்க என - நினது திருப்பரங் குன்றத்தின் அடியிலே இருந்து வாழும் பேற்றினை

இம்மையிற் போல எளியேங்கட்கு மறுபிறப்பினும் கூட்டுக என்று, நின் தொழுது பரவுதும - நின் திருவடிகளைக் கை குவித்துக் கும்பிட்டு வேண்டாநின்றேம்; அருள்புரிவாயாக;

**(வி - ம்.)** குன்றம் - அத் திருப்பரங்குன்றம் என்றவாறு. இம்மையில் மேலைச்செய்த தவத்தால் இயைந்தது; மறுமையினும் இங்ஙனமே இயையச் செய்வாய் என்பதுபட இயைக்க என்றார்.

வெற்றியில்வழி கொடிக்கு அழகின்மையால் வென்றிக் கொடியணி செல்வ என்றார். வென்றியாற் கொடியை அணிந்த செல்வ என்க. செல்வ - எம்மனோர்க்குச் செல்வமாக இருப்பவனே என்க.

**௧௬ - ௨௧ : சுடுபொன்..............................குன்றின்மிசை**

**(இ - ள்.)** மாதடிந்திட்டோய் நின் குன்றின்மிசை - சூர்மாவைத்தடிந்த வேற்படையையுடைய பெருமானே நினது திருப்பரங்குன்றின்கண், சுடுபொன் ஞெகிழத்து முத்து அரி சென்று ஆர்ப்ப - சுட்டுத்தூய்மை செய்யப்பட்ட பொன்னாலியற்றிய சிலம்பின் அகத்தேயிடப்பட்ட முத்தாகியபரல் எங்கும் கேட்ப ஆரவாரஞ் செய்ய, அடி துடியின் பெயர்த்து - அடிகளைத் துடியினது இசைக்குப் பொருந்துமாறு பெயர்த்திட்டு, தோள் தூக்கி அசைத்து - கைகளை எடுத்து அசைத்து, அடு நறு மகிழ் தட்ப - சமைத்தகள்ளினது களிப்புத் தன்னைத் தடாநிற்கவும், ஆடுவாள் தகைமையின் - கூத்தாடாநின்ற விறலியினது அழகு காரணமாக, இலங்கு நுனை எஃகு எனச் சிவந்த நோக்கமொடு - விளங்குகின்ற நுனையினையுடைய வேல் போலச் சிவந்த பார்வையோடே, துணை அணை கேள்வனைத் துனிப்பவள் நிலையும் - தனக்குத் துணையாய்த் தன்பக்கலிலே இராநின்ற தன் கணவனோடு ஊடுவாளுடைய மெய்ப்பாட்டின் நிலைமையினையும்; நிழல் காண் மண்டிலம் நோக்கி அழல் புனை அவிர் இழை திருத்துவாள் குறிப்பும், இவ் விறலியினும் மிக்க அழகு தனக்கு உண்டாயவிடத்துத் தன்கேள்வன் இவ்வாடல் மகளை நோக்கான் என்று கருதித் தன் உருவத்தின் நிழலைக் காண்டற்குரிய கண்ணாடி வட்டத்தை நோக்கித் தீப்போலச் சுடரும் தனது அணிகலன்களை அழகுறச் சீர்திருத்துவாளொருத்தியின் மெய்ப்பாடும், பொதிர்த்த முலையிடை சந்தனம் பூசி உதிர்த்துப் பின் உற ஊட்டுவாள் விருப்பும் - பொங்கிய முலையின்மேல் சந்தனத்தைப்பூசி இவற்றின்கண் மணம் நிலைபெற்றவிடத்துத் தன் கணவன் அப்பரத்தையைக் கருதாது என்னையே தழுவுவன் என்னும் கருத்தால் மேலும் மணமுடைத் தாக்குதற்குப் பூசப்பட்ட அச் சந்தனத்தை உதிர்த்து மீண்டும் மீண்டும் பூசாநிற்கும் இவளுடைய காமவிருப்பந்தோன்றும் மெய்ப்பாட்டினையும், பல்லூழ் இவை இவை - இவ்வாறே பல

முறையும் நிகழாநின்ற இத்தன்மைய இத்தன்மையவாகிய நிகழ்ச்சிகளைக் கண்ட யாங்கள், நினைப்பின் - மீண்டும் அக் காட்சிகளைத் தனித்தனியே எங்கள் நினைவின்கட் கொணர்ந்து காணுங்கால், வல்லான் எழுது ஓவத்து எழில்போலும் - அக் காட்சிகள் கைவல்லான் எழுதிய ஓவியத்தின் அழகுக் காட்சியை ஒக்கின்றன ;

(வி - ம்.) சுடுபொன் : வினைத்தொகை. தீயிற் பெய்து தூய்மை செய்யப்பட்ட பொன் என்றவாறு. 'சுடச் சுடரும் பொன்' என்றார் வள்ளுவனாரும். ஞெகிழம் - சிலம்பு. முத்தரி - முத்தாகிய பரல். சிலம்பினுள் ஒலித்தற் பொருட்டு முத்து, மாணிக்கம் முதலியவற்றை இடும் வழக்கத்தை,

"என்காற் சிலம்பு மணியுடை அரியே, எனத்
தேமொழி உரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே." (வழக் - சுஎ - சுக.)

எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க.

துடி - ஒருவகைத் தோற்கருவி. நறு - கள். மகிழ் - களிப்பு. தட்ப - தடைசெய்ய. தகைமையின் - அழகு காரணமாக. எஃகு - வேல். சிவந்த - சினந்த எனினுமாம். துணையணை - துணையாகப் பக்கலிலிருக்கின்ற. கேள்வன் - கணவன். துனி - பெரிதும் ஊடுதல். நிழல்காண் மண்டிலம் - கண்ணாடிமண்டிலம். அழல் புனை - அழல் போன்று. இழை - அணிகலன். பொதிர்த்த - பருத்து விம்மிய என்னும் பொருட்டு. ஊழ் - முறை. இவை இவை - இத்தன்மையவாகிய பற்பல காட்சிகளையும். நினைப்பின் - எம் நினைவிற் கொணருங்கால். வல்லான் - ஓவியம் எழுதுதல் வல்லான். ஓவம் - சித்திரம்.

மாதடிந்தோய் நின்குன்றின்மிசை ஆடுவாள் அழகுகாரணமாக ஒருத்தி துனித்தமையும், ஒருத்தி திருத்தினமையும், ஒருத்தி ஊட்டின மையும் இன்னோரன்ன பற்பல நிகழ்ச்சிகளையும் கண்டயாம் மீண்டும் அவற்றை நினைக்கும்போது ஓவியம் போலத் தோன்றுகின்றன என்பதாம்.

(பரிமே.) உ0. அடுநறவுண்ட மகிழ்ச்சி தடுப்ப ஆடுவாள் அழகுகாரணமாக.

உஉ. துனித்தலாவது : இவளழகு எமக்குங் கூட வியப்பாயிற்று. இனி இவற்குச் சொல்ல வேண்டுமோ என உட்கொண்டு கேள்வன் துணையாய் அமராநிற்கவும் அவனை வெகுளி மிக்க நோக்கமொடு துனித்தல்.

உ௩. இவளினும் எனக்கு அழகுண்டாய வழி இவனை நோக்கானென்று கருதிக் கண்ணாடியை நோக்கி.

உ௪. அழல் போல் அவிராநின்ற இழை.

௨௫ - ௬. பொங்கின முலையிடத்தே சந்தனத்தைப் பூசியுதிர்த்து நாற்றம் நிலைபெற்றவழி என்னைத் தழுவுமென்று கருதி அதனைப் பின்னும் பின்னும் ஊட்டுவாள்.

௨௮. ஓவியத்து அழகுபோலும் என்றார், அவ்வொரு தொழிற் கண்ணே நிற்றலான்.

௩௦ - ௩௮: மிசைபடு......................குன்று

(இ - ள்.) இரங்கும் முரசினான் குன்று - முழங்கும் வெற்றி முரசினையுடைய முருகவேளினது திருப்பரங்குன்றத்தில், எழிலி இசைபடும் பக்கம் - முகில் முழக்கம் உண்டாயவிடத்து, விடு பொறி மஞ்ஞை - சுடர்விடாநின்ற புள்ளிகளையுடைய மயில்கள், மிசைபடு சாந்தாற்றி போல - மேலே எடுத்து அசைக்கப்பட்ட ஆலவட்டத்தைப் போன்று, இருபாலும் கோலி - தம் இரண்டு இறகுகளையும் விரித்துக் கொண்டு, உடன் பெயர்பு ஆட - பலவும் ஒன்றுகூடி எழுந்து கூத்தாடாநிற்ப, முரல் குரல் தும்பி - இசைபாடுகின்ற குரலையுடை தும்பிகள், - விரல் செறி விடு தூம்பின் துளைக்கு ஏற்ப - விரலைச்செறித்தும் விட்டும் இசை யெழுப்புகின்ற குழலின் துளையினின்று எழா நின்ற இசைக்குப் பொருந்தும்படி, அவிழ் மலர் ஊத - மலர்ந்த மலரிடத்தே பாடாநிற்ப, யாணர் வண்டு இனம் யாழ் இசை பிறக்க - மலராகிய புதுவருவாயினையுடைய வண்டினது திரள் யாழினது இசைபோலும் தமது இசையை மேன்மேலும் மிகுவிப்ப, அருவி நீர் பாணி முழவு இசை ததும்ப - அருவிநீர் தாளத்தையுடைய மத்தள முழக்கம் போன்று முழங்காநிற்ப, பரந்தவை எல்லாம் ஒருங்கு ஒலிக்கும்-இவ்வாறாகப் பலவிடத்தி னின்றும் பரவிய இசைகள் எல்லாம் ஒருங்கே ஒலிக்கும் ;

(வி - ம்.) முரசினான் குன்றின்கண் மஞ்ஞை ஆட, தும்பிபாட, வண்டுபாட, அருவிநீர் முழங்க, இங்ஙனமாகப் பலவிடத்தும் பிறந்த பலவேறு இசைகளும் ஒருங்கே ஒலிக்கும் என்க. எனவே திருப்பரங் குன்றம் இயற்கையிலேயே ஆடல் பாடலாகிய கலையின்பங்களை எஞ்ஞான்றும் உடைத்து என்பதாயிற்று.

எழிலி - முகில். எழிலி இசைபடுபக்கம், மஞ்ஞை மிசைபடு சாந்தாற்றிபோல இருபாலும் கோலி ஆட என இயைத்துக் கொள்க. முகில் முழக்கம் கேட்டவுடன் மயில்கள் களித்து ஆடுதல் இயல்பு. இசைபடு பக்கம், முழக்கம் உண்டாய விடத்தென்க. சாந்தாற்றி - மயிற்பீலியாற் செய்ததொரு ஆலவட்டம். இருபால் - இரண்டு இறகும். கோலுதல் - வளைய விரித்தல். மஞ்ஞை - மயில். பெயர்பு - எழுந்து. விரலைச் செறித்தும் விட்டும் இசையெழுப்பும் தூம்பின் துளை என்க. தூம்பு - குழல். துளை - ஆகுபெயர்; முரல் குரல்: வினைத்தொகை. ஊத - பாட. யாணர் - புதுவருவாய், வண்டிற்குப் புதுவருவாயாவது மேன்மேலும் மலர்கள் மிக்கு மலர்தல். தும்பி, வண்டு என்பன, வண்டின் வகை. பிறக்க - மிகுவிக்க. பிறக்குதல் -

மிகுவித்தல். "பிறங்கு நீர்ப்பண்ணை" (சிலப். கசு: க.) என்புழி அடியார்க்கு நல்லார் "பிறங்குதல் மிகுதலுமாம்" என்றமையானும் அஃதப் பொருட்டாதல் உணர்க. பாணி - தாளம். ததும்ப - முழங்க. இரங்கும் முரசு - முழங்கும் முரசு. முரசினான் - முருகவேள். குன்று - திருப்பரங்குன்றம்.

(பரிமே.) ௩௬. யாழினது இசையை மேன்மேலு...........

௩௭. இவ்வாற்றால் தம்முள் வேறுபட்டன பலவும் ஒருங் கொலிக்கும்.

௩௮ - ௪௬ : தாழ்நீர்..............தண்பரங்குன்று

(இ - ள்.) தண் பரங்குன்று - அன்பராயினார் உளம் நினைத்த மாத்திரையானே குளிர்தற்குக் காரணமான திருப் பரங்குன்றம், தாழ் நீர் இமிழ்சுனை நாப்பண் - தன்கண் வீழா நின்ற அருவிநீர் முழங்குதற்கு இடமான சுனையின் நடுவே, குளித்து அவண் நீர் மீ நிவந்த விறல்இழை - முழுகி அவ் விடத்தே நீரின் மேலே எழுந்த வெற்றியையுடைய அணிகலன் அணிந்தாளொரு மடந்தை, கேள்வனை நிரழுந்து தன் கையின் வேய் விடுகென - கரையில் நின்ற தன் கணவனை நோக்கி நீரிலே அழுந்துகின்ற தனது கையின்கண் புணையாகிய மூங்கிலைத் தருக என்று கேட்ப, பூநீர் வட்டம் எறிய - அவன் அவளுக்கு இன்றியமையாத அப் புணையைக் கொடாதே மலர்மண முடைய அரக்குநீர் நிரப்பிய வட்டினை எறிதலாலே, புணை பெறாது - புணைபெறாமல், அருநிலை நீரின் அவள் துயர் கண்டு - அருநிலையான நீரின்கண் அவள் படுகின்ற அல்லலைக் கண்டு, கொழுநன் மகிழ் தூங்கி கொய் பூம் புனல் வீழ்ந்து தழுவும் தகை வகைத்து - கணவன் இன்புற்றுப் பின்னர்க் கொய்தற் குரிய நீர்ப்பூக்கள் மிக்க அச் சுனை நீரிற் பாய்ந்து அவளை தழுவும் தன்மையினையுடைத்து;

(வி - ம்.) குன்றம், தன்கட் சுனையில் முழுகி எழுந்தாள் ஒருத்தி கரை நின்ற கணவனைப் புணை கேட்ப, அவன் வட்டெறிய, அவள் புணை பெறாது அவ் வருநிலை நீரிற் படும் துயர்கண்டு மகிழ்ந்து, பின் அச் சுனைநீரிற் பாய்ந்து அவளைத் தழுவிக் கொள்வதாகிய நீர் விளையாட்டின்பத்தை நல்கும் இயல்புடைத்து என்பதாம்.

தாழ்நீர் என்றது அருவியை. அருவி சுனையின்கண் வீழ்ந்து முழங்கும் என்க. இமிழ் - முழக்கம். நாப்பண் - நடு. அவண் - அவ்விடத்தே, நீர்மீ என்பது, மீநீர் என முன்பின் மாறிநின்றது. விறலிழை - அன்மொழித் தொகையாய் ஒருத்தி என்னும் பொருள்பட நின்றது. விறல் - வெற்றி. இழை - அணிகலன். அணிகலனுக்கு வெற்றியாவது ஏனை அணிகலன்களினும் சிறந்திருத்தல். கேள்வன் - கணவன். வேய் - புணையாகிய மூங்கில். பூநீர் - மலர்மணமுடைய அரக்கு நீர். அருநிலை-நீர் நிலைத்தும் நிலையாததுமாகிய நீர். காதலருள் -

விளையாட்டு வகையானே தம்முள் ஒருவர் துயரை ஒருவர் கண்டு இன்புறு மியல்புடையராதலை,

"புல்லா திராஅப் புலத்தை யவருறும்
அல்லல்நோய் காண்கஞ் சிறிது" (௧௩௦௩.)

எனவருந் திருக்குறளானும் உணர்க. மகிழ் - இன்பம். புனல் வீழ்ந்து என்றமையால் கேள்வன் கரைக்கண் நின்றான் என்பது பெற்றாம்.

(பரிமே.) ௪௪. மகிழ்தூங்கி - இன்புற்று.

௪௫. தகைவகைத்து - தன்மையினையுடைத்து.

௪௬ - ௫௩: **வண்டார்...............நன்குடைத்து**

(இ - ள்.) (௫௩) பசும்பூண் சேஎய்-பசிய பொன்னணிகலன் அணிந்த செவ்வேளே!, அசும்பும் அருவி அரு விடர்ப் பரந்த நின் குன்றம் - இடையறாது ஒழுகாநின்ற அருவிநீர் அரிய முழையின்கண்ணே பரந்த நின்னுடைய திருப்பரங்குன்றம், மைந்தர் - ஆடவர், வண் தார் பிறங்கல் நீவிய - வளவிய மலர் மாலையணிந்த தமது மலையை யொத்த மார்பின்கண் பூசிய, சாந்தம் தண் கமழ் தைஇய வளியும் - சந்தனத்தினது குளிர்ச்சியையும் நறுமணத்தையும் தடவி ஏற்றுவரும் காற்றும், கயல் புரை கண்ணியர் கமழ்துகள் உதிர்த்த புயல்புரை கதுப்பகம் உளரிய வளியும் - கயல்மீனை ஒத்த கண்ணையுடைய மகளிருடைய நறுமணங்கமழ் தாது உதிர்க்கப்பட்ட முகிலை ஒத்த கூந்தலினூடே புக்கு அசைத்த மணக் காற்றும், உருள் இணர் கடம்பின் நெடுவேட்கு - தேருருள் போன்ற பூக்களையுடைய கடம்பின்கண் மேவிய நெடிய வேளாகிய நினக்கு, எடுத்த புகை முருகு கமழ் வளியும் - பூசையின்கண் காட்டும் பாத்திரத்தே எடுத்த நறுமணப் புகையினூடே புக்கமையாலே அந் நறுமணத்தை ஏற்றுக் கமழா நின்ற காற்றும் ஆகிய இந் நறுமணக் காற்றுக்களை, நன்கு உடைத்து - மிகவும் உடைத்து.

(வி - ம்.) சேஎய் நின்குன்றம் சாந்தம் தைஇய வளியும், கதுப்பகம் உளரிய வளியும், நினக்கு எடுத்த புகை நுழைந்த முருகுகமழ் வளியும் மிகவும் உடைத்து என்பதாம்.

வண்டார் - வளவிய தார்; வண்டுகள் ஆரவாரித்தற்கிடமான எனினுமாம். பிறங்கல் - மலை. மார்பிற்கு ஆகுபெயர். சாந்தம் தண் கமழ் தைஇயவளி என மாறுக. வளி - காற்று. கயல் - ஒருவகை மீன். புரை : உவமவுருபு. கமழ்துகள் என்றது, நறுமணப்பொடியை. இஃது அக்காற்று மணமுடைத்தாதற்குக் குறிப்பேதுவாய் நின்றது. நெடுவேட்கு - நெடுவேளாகிய நினக்கு.

எடுத்த புகை நுழைந்த முருகு கமழ் வளி என மாறுக. அசும்பும்-ஒழுகும். விடர் - வெடிப்பு; முழை. முருகு-மணம். நன்குடைத்து -

மிகவும் உடைத்து. நன்கு என்பது மிகுதிப்பொருள் தருதலை, இந் நூலின்கண் ௧௯-ம் பாடலின்கண் (௧௫) "நரந்த நறுமலர் நன்கு அளிக்கும்மே" என்புழியும் காண்க.

(பரிமே.) ௪௬. பிறங்கற்கண்.

௪௭. சந்தனத்தைத் தடவிப் புலர்த்தும் காற்றும்.

௪௮ - ௯. கமழ்தாது திர்த்த கதுப்பகத்தை ஊடுபுக்கு அசைத்த காற்றும்.

௫௦ - ௫௧. கடம்பின்கண் மேவிய நினக்குப் பூசைக்கட் காட்டும் பாத்திரத்தெடுத்த கமழ்புகையூடு நுழைந்த காற்றும்.

௫௦. நெடுவேள்: முன்னிலைப் பெயர்.

௪௭ - ௫௩. பலவகை நறுநாற்றமுடைமை கூறியவாறு.

௫௪ - ௬௫: கண்ணொளிர்....................கண்

(இ - ள்.) இடு சுடர்படர் கொடி மின்னுப்போல் கண் ஒளிர் திகழ் அடர் இடை இடை நெறிபெற ஒண்ணகை தகை வகை இழைத்து யாத்த சென்னிகை - முகில் இடாநின்ற ஒளி படர்ந்த மின்னற்கொடி போன்று காண்போர் கண்ணுக்கு ஒளிவீசித்திகழும் பொற்றகட்டின் இடையிடையே அறல் படும்படி ஒள்ளிய சுடரும் அழகின் கூறுபாடும் பெற இழைத்துச் செய்த தலைக்கோலங்களாகிய, கோதை கதுப்போடு இயலமாலை கூந்தலோடே அசையவும், மணி மருள் தேன் மகிழ் தட்ப - மாணிக்கம்போன்ற சிவந்த நிறமுடைய தேனாற் சமைத்த கள்ளினையுண்டமையால் உண்டாய களிப்புத் தடை செய்யாநிற்பவும், பைந்துகில் பிணி நெகிழ நோக்கம் சிவப்பு ஊர - பசிய ஆடை கட்டவிழாநிற்பவும் கண்கள் சிவக்கவும், பூங்கொடிபோல ஒல்கி நுடங்குவாள் - பூங்கொடிபோல அசைந்து ஆடுபவளாய், ஆங்குத் தன் சீர்த்தகு கேள்வன் - அவ்விடத்தே தனது அழகுக்கு ஏற்ற தன் கொழுநன், துடி உருட்டும் சீரால் - துடியென்னும் தோற்கருவியை இசைக்கும் தாளத்திற்குப் பொருந்த, கோடு அணிந்த முத்தாரம் ஒல்க - தனது முலைக்கண் அணிந்த முத்துமாலை அசையவும், ஒசிபவள் ஏர் - ஆடுவாளது அழகு, வாடையுளர் ஆடை அசைய அணியசையத் தான் அசையும் கொம்பர் போன்ம் - வாடையால் உளரப்பட்டுத் தனது ஆடை அசையவும் அணிகலன் அசையவும் ஆடுவதொரு பூங்கொம்பு உலகின் உளதாயின் அதன் அழகினையே ஒக்கும், துடிச்சீர்க்கு ஊழ் தோள் பெயர்ப்பவள் கண் - அவன் கொட்டுந் துடியினது தாளத்திற்கியைய முறையாகத் தனது தோளை அசைப்பவளது கண்கள்,

புரள்பவை வாளிபோலும் - புடைபெயர்வனவாகிய அம்பு களேயே ஒப்பனவாகும்.

(வி - ம்.) அடர் - தகடு. படர் - படர்ந்த. கொடிமின்னு - மின்னற்கொடி. கண்ணுக்கு ஒளிரும்திகழும் அடர் என்க. ஒண்ணகை - ஒள்ளிய சுடர். தகை வகை - அழகின் கூறுபாடு. நெறி - நெறிப்பு; அறல். செண்ணிகைக் கோதை - தலைக்கோலங்களாகிய மாலை. செண்ணித்தல் - ஒப்பனை செய்தல் அகநானூற்றின்கண் (களிற்றி - ௫௧.) தண்கயத்த மன்ற என்னும் செய்யுளில் (௧௪) "தண்ணறுங் கழுநீர்ச் செண்ணியில் சிறுபுறம்" என்னும் அடியில், செண்இயல் என்பதற்கு அதன் உரையாசிரியர் (திரு. ந. மு. வே. நாட்டார் அவர்கள்) "கொண்டை அசைதலையுடைய" எனப் பொருள் கூறி "செண் - ஒப்பனை செய்யப் பெறுவதால் கொண்டைக்குப் பெய ராயிற்று" என விளக்கிச் சேறலானும் அஃதிப்பொருட்டாதல் உணர்க. இனிச் "செண்ணச் சிவிகை" ஒப்பனை செய்யப்பட்ட சிவிகை (பெருங்கதை க - ௩௭ : ௨௬௬.) என்றும், "செண்ண அம் சிலம்பு" அணிந்த அழகிய சிலம்பு" (சீவகசிந் - ௧௩௩௩.) என்றும் பிற சான்றோரும் ஓதுமாற்றானும் உணர்க. இச்சொல் பிற்றை நாள் சண்ணித்தல் என வழங்கப்பட்டமை "சாந்தம் நீறெனச் சண்ணித்த புண்ணியத் தனிமுதல்" (மாறியாடிய - செ. ௨) எனவரும் திருவிளை யாடல் செய்யுளான் உணரலாம். கதுப்பு - கூந்தல். இயல - அசைய. மணிமருள் தேன் - மாணிக்கம் போன்ற சிவந்த நிறமுடைய தேன், கள்ளிற்கு ஆகுபெயர். பைந்துகில் - பிணி நெகிழ என மாறுக. நுடங்குவாளாய் ஒசிபவள் ஏர், கொம்பர் அழகு போன்ம் என்க. போன்ம் - போலும். ஆடையசைய அணியசைய ஆடுவதோர் கொம் புளதாயின் அதனழகு போலும் என்க. இஃதில்பொருள் உவமை. ஊழ் - முறை. வாளி - அம்பு. புடை பெயருவனவாகிய வாளி என்க.

௩௨-ம் அடி தொடங்கி இதுகாறும் மலைச்சிறப்புக் கூறி மேலே முருகப் பெருமானை முன்னிலையாக்கி வாழ்த்தி முடிக்கின்றார்.

(பரிமே.) மின்னுப்போற் கோதை என இயையும்...........

௫௪. ஒளிர்திகழ்: வினைத்தொகை யடுக்கு.

௫௬. அக்கோதை கதுப்போடசைய

௫௭ - அ. மாணிக்கத்தை யொக்கச் சிவந்த......கள்ளை நுகர்ந்த மகிழ்ச்சி தடுப்பப் பசுமையுடைய துகிலுடை நெகிழ (௫௧) ஆங்கு - அசை.

௬௯ - ௭௦: மாறமர்.

(இ - ள்.) மாறு அமர் அட்ட வை மற வேல் பெயர்ப் பவை - பகைவரைப் போரின்கட் கொன்ற கூரிய வீரவேலைச் சுழற்றுதலுடையை, ஆறு இரு தோளவை-பன்னிரண்டு திருக் கைகளை உடையை, அறுமுகம் விரித்தவை - ஆறு திரு முகங்களையும் விரித்தல் உடையை, ஒன்றார் தேய்த்த செல்வ -

பகைவரை அழித்து இல்லையாக்கிய இறைவனே! நன்று அமர் ஆயமொடு - பெரிதும் விரும்பின எம் சுற்றத்தாரோடு, ஒருங்கு நின்தொழுது - ஒருசேர நின் திருவடியைத் தொழுது, நின் அடியுறை இன்றுபோல் இயைக எனப் பரவுவதும் - நினது திருவடி நீழலிலே தங்குதல் இன்றுபோல என்றும் இயைக என்று வேண்டிக்கொள்கின்றேம். அருள்வாயாக!

பெயர்ப்பவை-பெயர்த்தலுடையை. தோளவை-தோளினை உடையை. விரிப்பவை - விரித்தலுடையை. நன்று - பெரிது. ஆயம் - சுற்றம். ஒன்றார் - பகைவர். பரவுதும் - வேண்டு கின்றேம்.

# இருபத்திரண்டாம் பாடல்

## வையை

பொருட் சுருக்கம்

க - கக: பொதியில் மலைக்குரியவனான பாண்டியனுடைய போரின்கண் அவன் பகைமன்னர் திறையாகக் கொடுத்த களிற்றுயானைகள் ஓரிடத்தே குழுமினாற்போன்று வானத்தே முகில்கள் குழுமி, அப் பாண்டியன் போர்முரசம்போன்று முழங்கி யிடித்து, அவன் பகைப்படையின்மேல் விடும் அம்புகள் போன்று துளித்து, அவன் வண்மைபோன்று நீரைப் பொழிந்தன; அதனால் வையையிற் பெருகிய நீர், அப் பாண்டியன் படை பகைநிலத்திற் புகுமாறுபோல அப் பாண்டியன் நாட்டிலுள்ள கழனிகளிலெல்லாம் புகுந்து பெருகிற்று.

கஉ - உரு: அதுகண்ட மதுரைப் பெருமக்கள் தம் பணியாளர் துவர்களையும், புகைப்பொருள்களையும், சந்தனத்தையும், நீர்விளையாட்டிற்குரிய துருத்தி முதலியவற்றையும், கள்ளையும், துகில்களையும், ஏந்திக்கொண்டு தம்மைப் பின்தொடர முற்பட்டு, வையைக்கரையிலும் ஆண்டுள்ள பொழில்களிலும், போந்து நெருங்கினர்.

உசு - ங௫: வையைப் புதுநீராடற்கு இம் மகளிரும் மைந்தரும் செய்த தவப்பயன் பெரிதெனச் சான்றோர் கூறும்படி, வையையின் வந்து குழுமிய மகளிர் மைந்தர்களால் ஆண்டு கட்புலனாய்த் தோன்றிய அழகு, அம் மக்களால் வையைக்கு உண்டாயதோ அன்றி, வையையால் அம் மக்கட்கு உண்டாக்கப்பட்டதோ என்று தெளிதற்கு அரிதாயிருந்தது.

ஙசு - சரு: அப்பொழுது அவ் வையைக் கண்ணதாகிய திருமருத முன்றுறைக்கண் முழவிற்கு மாறாக முகில்கள் முழங்கின; யாழிற்கு மாறாக பூங்கொம்பிடத்தே வண்டுகள் இசைத்தன; தும்பிகள் குழலுக்கு மாறாக முரன்றன; விறலியர் ஆட்டத்திற்கு மாறாகப் பூங்கொடிகள் ஆடின. இவ்வாறு ஒன்றற்கொன்று மாறாகிய நிகழ்ச்சிகள் பற்பல நிகழ்ந்தன.

**ஒளிறுவாள் பொருப்பன் உடல்சமத் திறுத்த**
**களிறுநிரைத் தவைபோற் கொண்மூ நேரிதர**
**அரசுபடக் கடந்த ஆனைச் சீற்றத்தவன்**

முரசதிர் பவைபோன் முழங்கிடி பயிற்றி
ஒடுங்கார் உடன்றவன் தானை வில்விசை
விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறூஉக்
கண்ணொளி எஃகிற் கடிய மின்னியவன்
வண்மைபோல் வானம் பொழிநீர் மண்மிசை
ஆறுது வந்து தொகுபீண்டி மற்றவன்
தானையி னூழி........... தாவூக் கத்திற்
போன நிலமெல்லாம் போரார் வயல்புகுத
.............. ....நீக்கி படு....... ...............
கான மலைத்தரை கொனறு மணல பினறி
வான மலைத்த .........வ........ ...............
....... லைத்தவ மணமுர செறிதரத்
தானைத் தலைத்தலை வந்துமைந் துற்றுப்
பொறிவி யாற்றுறி துவர்புகை சாந்தம்
எறிவன எக்குவ வீரணிக் கேற்ற
நறவணி பூந்துகி னன்பல வேந்திப்
பிறதொழின....ம் பின்பின் தொடரச்
செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணியர்
ஈரமை வெட்சி யிதழ்புனை கோதையர்
தாரார் முடியர் தகைகெழு மார்பினர்
மாவுங் களிறு மணியணி வேசரி
காவு நிறையக் கரைநெரி பீண்டி
வேலாற்று மொய்ம்பனின் விரைமலர் அம்பினோன்
போலாற்று முன்பிற் புனைகழன் மைந்தரொடு
தாரணி மைந்தர் தவப்பயன் சான்மெனக்
காரணி கூந்தல் கயற்கட் கவிரிதழ்
வாரணி கொம்மை வகையமை மேகலை
ஏரணி இலங்கெயிற் றின்னகை யவர்
சீரணி வையைக் கணிகொல்லோ வையைதன்
நீரணி நீத்தம் இவர்க்கணி கொல்லெனத்
தேருநர் தேருங்காற் றேர்தற் கரிதுகாண்
தீரமும் வையையுஞ் சேர்கின்ற கண்கவின்
மண்கணை முழவின் இன்கண் இமிழ்விற்
கெதிர்வ பொருவி........ ........மேறுமா றிமிழ்ப்பக்

கவர்தோடை நல்யாழ் இமிழக் காவிற்
புகர்வரி வண்டினம் பூஞ்சினை இமிர
ஊதுசீர்த் தீங்குழல் இயம்ப மலர்மிசைத்
தாதூது தும்பி தவிர்பல வியம்ப
....துடிச்சீர் நடத்த வளிநடன்
மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க
ஆங்கவை தத்தந் தொழின்மாறு கொள்ளும்
தீம்புனல் வையைத் திருமருத முன்றுறையாற்
கோடுளர் குரற்போலி யோலிதுயல் இருங்கூந்தல்
........... ........... புரைதீர் நெடுமென்
தோடாழ்பு தழைமலர் துவளா வல்லியின்
நீடாழ்பு தோக்கை நித்தில வரிச்சிலம்பு.

(இப் பாடலின் இறுதிப் பகுதி கிடைத்திலது.)

## உரை

க - கக : ஒளிறு..................................வயல் புகுத

(இ - ள்.) கொண்மூ ஒளிறுவாள் பொருப்பன் உடல் சமத்து இறுத்த களிறு நிரைத்தவை போல் நெரிதர - முகில் விளங்காநின்ற வெற்றிவாளை யேந்திய பாண்டியமன்னன் தன் பகைவரோடே பொருதுகின்ற போரின்கண் அப் பகைவர் இறைப்பொருளாகக் கொடுத்த களிற்றுயானைகளை வரிசையாக நிறுத்திய அணியைப் போன்று வானத்தின்கண் நெருங்கி, ஒடுங்கார் அரசுபடக் கடந்த ஆனுச் சீற்றத்தவன் அதிர்பவை முரசுபோல் முழங்கு இடி பயிற்றி - ஓடாநின்ற அம் முகில்கள் தன் பகை வேந்தர்கள் மாளும்படி கொன்று வென்ற அமையாத சினத்தையுடைய அப் பாண்டியனுடைய முழங்குவனவாகிய வெற்றிமுரசங்கள் போன்று முழங்காநின்ற இடியை எறிந்து, அவன் தானை உடன்று வில்விசை விடும் கணை ஒப்பின் கதழ் உறை சிதறூஉ - அம் மன்னன் தன் பகைப் படையைப் பொருது தன் வில்லினின்றும் விசையுடன் ஏவாநின்ற அம்பிற்கு ஒப்பாகும்படி விரைந்த துளிகளைச் சிதறி, கண் ஒளிர் எஃகின் கடிய மின்னி - அவன் ஏந்திய கண்ணுக்கு ஒளிரும் வேல்போன்று கடிதாக மின்னுதலைச் செய்து, அவன் வண்மை போல் வானம் பொழிந்த நீர் - அப் பாண்டியனது வள்ளன்மையைப் போன்று அவ் வானத்தினின்றும் பொழியப்பட்ட மழைநீர், ஊக்கத்தின் ஊழிபோன மற்றவன் தானையின் - மனவெழுச்சியாலே பகைவர் நாட்டிற்

போர் முறைமையாலே சென்ற அப் பாண்டியனுடைய படைகளைப் போன்று, மண்மிசை ஆறுது வந்து ஈண்டி தொகுபு - அப் பாண்டியனது நாட்டின்கண் அமையாது மேன்மேலும் வந்துகூடிப் பெருகி, நிலம் எல்லாம் போர்ஆர் வயல் புகுத- அந்நாட்டின்கண் உள்ள நிலம் எங்கும் வைப்போர்வு பொருந்திய கழனிகளிலே புகுதாநிற்ப ;

(வி - ம்.) கொண்மூ பொருப்பன் பொருத போரின்கண் பகைவர் திறையிறுத்த களிற்றின் நிரைபோன்று வானின்கண் நெரிதந்து, ஓடாநின்ற அக்கார் அவன் முரசுபோல முழங்கு இடிபயிற்றி, அவன் பகைத்தானையின்மேல் விடும் கணைபோல உறை சிதறி, அவன் வேல் போல் மின்னி, அவன் வண்மைபோல வானத்தினின்றும் பொழிந்த நீர், பகைநாட்டிற்போன அவன் தானைபோல் அப் பாண்டியன் மண்மிசை நிலனெங்கும் உள்ள கழனிகளிலே புகுதாநிற்ப என்க.

ஒளிறுவாள் : வினைத்தொகை. பொருப்பன் - பாண்டியன். பொருப்பு - பொதியிலுக்குரிய ஒருபெயர். பொதியிலையுடைய பாண்டியன் என்க. "காமர்க் கடுந்திண்டேர்ப் பொருப்பன்" (கலி - ௩௫: ௨௪.) எனவும், "வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின் மேல்" (கலி - ௫௭ : ௧௬) எனவும், "பொருப்பிலே பிறந்து" (வில்லிபார - சிறப்புப்பா - ௧.) எனவும் பிறசான்றோரும் பாண்டியனைப் பொருப்பன் என்றும், பொதியிலைப் பொருப்பு என்றும் ஓதுதல் உணர்க.

உடல் சமம் - பொருதாநின்ற போர். இறுத்த - பகைவர்திறையாக இறுத்த என்க. நிரைத்தவையாகிய களிறு போல் என்க. களிற்று நிரை - முகிற் கூட்டத்திற்கு உவமை. கொண்மூ - முகில். நெரிதர என்னும் செயவெனெச்சத்தை நெரிதந்து எனச் செய்தெனெச்சமாக்குக. ஓடும் அக்கார் என்க. கார் - முகில். அவன் உடன்ற தானை என்க. வில்லினின்றும் விசையாக விடும்கணை என்க. எஃகு - வேற்படை. கடிய - கடியவாக. மண் - பாண்டிநாடு என்பதுபடநின்றது. பாண்டிநாட்டின் நிலமெல்லாம் வயல்புகுத. போர் - வைக்கோல் போர்வு. போர்வு கூறியது, நிலவளம் தெரித்தவாறு. என்னை ? இறந்தயாண்டிற் குவித்த வைப்போர் கழனிகளிலே வரும் யாண்டுத் தொடக்கத்தேயும் கிடந்தன என்பது கருத்தாகலின்.

இப் பகுதிக்குப் பரிமேலழகர் உரை கிடைத்திலது.

இச் செய்யுளில் எஞ்சிய பகுதிக்கும் அவ்வுரை நன்குகிடைத்திலது.

இப் பாடலும் இறுதிவரையிற் கிடைத்திலது.

இப் பாடலின் ௧௨-ஆம் அடிமுதல், ௧௭-ஆம் அடியின் முதவிரண்டு சீர்முடியவுள்ள சொற்கள் பெரிதும் சிதைந்தும் அழிந்தும் திரிந்தும் போயின. ஆதலால் அவற்றிற்கு உரை காணமாட்டாமல் விடப்பட்டன. இப் பகுதிக்குரிய பழைய உரையும் கிடைத்திலது.

கஎ - உ௫ : துவர்புகை....................நெரிபீண்டி

(இ - ள்.) துவர் புகை சாந்தம் - பத்துவகைத்துவரானும் ஆக்கப்பட்ட நீரும் அகில் முதலிய நறுமணப்புகைக்குரிய பொருள்களும் சந்தனம் குங்கும முதலியவற்றின் குழம்பும் ஆகிய மணப் பொருள்களையும், எறிவன எக்குவன ஈரணிக்கு ஏற்ற - வீசுவனவும பிலிற்றுவனவும் ஆகிய நீராடற்கு ஏற்ற கருவிகளையும், நன்பலபிற நறவு அணி பூந்துகில் ஏந்தித் தொழில்........ - நன்மைமிக்க பல பிறபொருள்களையும் கள்ளும் அணிகலன்களும் பூத்தொழிலுடைய துகில்களும் ஆகியவற்றையும் பணி (மைந்தரும் மகளிரும்) ஏந்தி, பின் பின் தொடர - தத்தமக்குப் பின்னே பின்னே தொடர்ந்து வாராநிற்ப, செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணியர் - செறிந்த தொடுத்தற் றொழிலாலே பொலிவுற்ற சிவந்த மலர் மாலைகளை அணிந்தோரும், ஈர் அமை வெட்சி இதழ்புனை கோதையர் - குளிர்ச்சி பொருந்திய வெட்சிமலராலே தொடுக்கப்பட்ட மாலையினை அணிந்தோரும், தார் ஆர் முடியர் - மாலைபொருந்திய முடியினை யுடையோரும், தகைகெழு மார்பினர் - அழகு பொருந்திய மார்பினையுடையோரும் ஆகிய மதுரையிலுள்ள மைந்தரும் மகளிரும், மணி அணி மாவும் களிறும் வேசரி - மணி முதலியவற்றாலே ஒப்பனைசெய்யப்பட்ட குதிரையும் யானையும் கோவேறுகழுதையும் ஆகிய இன்னோரன்ன ஊர்திகளில் ஏறி ஊர்ந்து, கரை நெரிபு காவு நிறைய ஈண்டி - வையையாற்றினது கரை நெறியும்படிவந்து பொழில்களின் கண்புக்கு நிரம்ப ;

(வி - ம்.) துவர் - பத்துவகைத் துவரால் இயற்றிய மணநீர். புகை : ஆகுபெயர் ; அகில் சந்தனம் குங்குலியம் முதலியன. எறிவன - அரக்கு நீர் வட்டு முதலியன. எக்குதல் - பிலிற்றுவித்தல். எக்குவன - எக்குதற்குரிய முழுங்கிற்சிவிறிகள் ; துருத்திகள் ; ஈரணி - ஈர அணி. ஆகுபெயரால் நீராடலைக்குறித்து நின்றது. ஈரணிக் கேற்ற நன்பல என்னும் தொடர் எறிவனமுதல் பூந்துகில் ஈறுகவுள்ள அனைத்திற்கும் பொது. இவற்றைப் பணியாளர் ஏந்தித் தத்தம் பின்னே பின்னே தொடர முற்பட்டு என்க. இதனால் அம் மைந்தர் மகளிர்களின் நீராடல் விருப்பம் தெரித்தோதப்பட்டது.

செறிவினை - மலரைச் செறிய வைத்துத் தொடுக்குந் தொழில். செம்பூ - சிவந்தபூ. செம்பூங்கண்ணி - மைந்தர்க்கும் மகளிர்க்கும் பொது. கோதையர் என்றது, மகளிரை. தாரார்முடியர், மார்பினர் என்றது, மைந்தரை. எனவே இருபாலாரும் மா முதலியவற்றை ஊர்ந்து, காவின்கண் நிறைய என்பதாயிற்று. மா - குதிரை. தலைமை பற்றிக் களிறு என்றாரேனும் பிடியானையும் கொள்க. மணியணி மாவும் களிறும் வேசரியும் எனமாறுக. வேசரியும் எனற்பாலதாகிய உம்மை, செய்யுள் விகாரத்தால் தொக்கது. வேசரி-கோவேறுகழுதை. காவு - கா ; பூம்பொழில். நெரிபு - நெரிய.

(பரிமே.) ௧அ - ௯. .........ய நறவு.

௧௯. அணி - ஆபரணம்...........

௨0. பின்னே பின்னே தொடர முற்பட்டு.

௨௧ - ௨. மகளிர் செறிந்த தொடைத் தொழிலால் பொலிந்த... மாலையராய் வாடாமை அமைந்த...சக...கோதையராய்.

௨௩. மைந்தர், தாரார்ந்த முடியராய்ச் சுற்றிய மாலை பொருந்திய மார்பினராய்.

௨௫. நெரிய ஈண்டி......காவின்கண் நிறைய.

௨சா - ௩௫: வேலாற்று.................................கவின்

(இ - ள்.) வேல் ஆற்றும் மொய்ம்பனின் ஆற்று முன்பின் புனை கழல் மைந்தரொடு - வேற்போரைச்செய்யும் தோளினையுடைய முருகனைப் போலப் போர் செய்யும் வலியினையும் வீரக்கழல் கட்டிய கால்களையும், உடைய மைந்தரும், விரை மலர் அம்பினோன் போல் தார் அணி மைந்தர் - மணமுடைய மலர்களை அம்பாகக் கொண்ட மதவேளைப் போன்று மாலையினையும் அழகினையும் உடைய மைந்தரும், கார் அணி கூந்தல் கயல் கண் கவிர் இதழ் வார் அணி கொம்மை வகை அமை மேகலை ஏர் அணி இலங்கு எயிற்று இன் நகையவர் - முகிலினது அழகைக் கொண்ட கூந்தலினையும் கயல்மீன் போன்ற கண்ணினையும் முருக்கம்பூப் போன்று சிவந்த உதடுகளையும் கச்சணிந்த இளமுலைகளையும் வகைவகையாகக் கோத்த மேகலையினையும் அழகிய வரிசையமைந்து விளங்காநின்ற எயிற்றினையும் இனிய புன்முறுவலினையும் உடைய இம் மகளிரும், தவப்பயன் சான்ம் என - செய்த தவத்தினது பயன் பெரிதென்று கண்டோர் கூறுநிற்ப, தீரமும் வையையும் சேர்கின்ற கண் கவின் - கரையினிடத்தும் வையையினிடத்தும் கூடுவதனாலே கட்புலனாய்த் தோன்றுநிற்கும் அழகு, இவர் சீர் அணி வையைக்கு அணி கொல்லோ - இம் மைந்தரும் மகளிரும் இயற்கையழகினையுடைய இவ் வையையாற்றிற்கு அழகு தந்தாரோ, வையை தன் நீர் அணி நீத்தம் இவர்க்கு அணி கொல்லோ என - அல்லது இவ்வையையினது நீரானே அழகுற்ற வெள்ளம் இவர்க்கு அழகு தந்ததோ என்று, தேருநர் தேருங்கால் தேர்தற்கு அரிது - ஐயுற்றுத் தெளிய முயல்வோர் ஆராயுங்கால் இரண்டில் ஒன்றனைத் தெளிந்து கொள்ளுதற்கு அரிதாகும்;

(வி - ம்.) வேற்போர் ஆற்றும் மொய்ம்பினை உடையான் என்க. ஆற்றுதல் - செய்தல். மொய்ம்பு - தோள்; வலிமையுமாம்.

மொய்ம்பனின் - மொய்ம்பனைப்போல. ஆற்றும் முன்பு-போர்செய்யும் வலிமை. முருகனைப்போல ஆற்றலுடைய மைந்தர் என்க. விரை மலர் அம்பினோன் - மதவேள். மதவேள் போலத் தாரினையும் அணியையும் உடைய மைந்தர் என்க. எனவே, முருகனை ஆற்ற லானும் மதவேளை அழகானும் ஒத்த மைந்தர் என்றவாறும்.

"இதநலம்பெறும் அழகினும் திறலினும் இலங்கி
மதனனும்கலை முருகனும் எனும்படி வளர்ந்தான்."

(வில்லிபார.)

என்றார் பிறரும்.

கார் அணி கூந்தல் - காரினது அணியினைக் கொண்ட கூந்தல் என்க.

கவிர் - முருக்கு. அதன் பூ உதட்டிற்கு உவமை. வார் - கச்சு. கொம்மை - இளமுலை. வகை வகையாகக் கோத்த மேகலை என்க. அணி - வரிசை. எயிறு - பல். நகை - புன்முறுவல். மைந்தரொடு இன்னகையவரும் தீரமும் வையையும் சேர்கின்றதனால் கட்புலனும் அழகு என்க. பரிமேலழகர் இங்ஙனம் கூறாது வேறு கூறுவர் அதனைக் கீழே காண்க. இவர் வையைக்கு அழகளித்தாரோ வையை நீத்தம் இவர்க்கு அழகளித்ததோ என்று ஐயுற்றுத் தெளிய முயல்வோர் ஆராயுங்கால் தெளிதற்கு அரிதாம் என இயைக்க. தீரம் - கரை. கவின் - அழகு. சான்ம் - சாலும். இவ்வையைக்கண் நீராடும் பேறு பெற்றமையால் இவர் செய்த தவப்பயன் பெரிதாதல் வேண்டும் என்று கண்டோர் கூற என்க.

(பரிமே.) உசு - அ. வேற்போரைச் செய்யும் மொய்ம்பினை யுடையோனாகிய முருகனைப் போல ஆற்றலோடு கூடிய வலியினையும் புனைகழலையுடைய மைந்தரும் செய்த தவத்துப் பயன் பெரிதென்று கண்டோர் கூற உகூ. கவிர் - முருக்கு. ௩0. கொம்மை-இளமுலை. வகை வகையாகக் கோத்த மேகலை.

(உஅ) சான்மென என்னும் வினையெச்சம்.........இனிய நகை யினையும் (௩௧) உடைய என இரண்டாவதனொடு விரிந்த பெயரெச்ச வினை கொண்டது.

௩உ - ரு. அவ் விருதிறத்தாரையும் கரையையும் வையையையும் சேர்கின்ற கட்புலனாகிய அழகு தேர்தற்கு அரிது. (௩௪) காண் என்பது முன்னிலையசை.

௩௬ - சரு : மண்...............முன்றுறையால்

(இ - ள்.) (சரு) தீம் புனல் வையைத் திருமருத முன் றுறையால் - இனிய நீரையுடைய வையை யாற்றின் கண்ண தாகிய திருமருத முன்றுறையின்கண், மண் கணை முழவின் இன் கண் இமிழ்விற்கு - மண்ணுலாகிய திரண்ட குடமுழா வினது இனிய கண்ணிற் பிறக்கும் முழக்கத்திற்கு, எதிர்வ பொருவி...........ம் ஏறு மாறு இமிழ்ப்ப எதிர்வன போன்று ............இடியேறு மாறாக முழங்கா நிற்பவும், கவர் தொடை

நல் யாழ் இமிழ் - கேட்போர் உள்ளம் கவரும் இயல்புடைய பாலைப்பண்ணைக் கோவையையுடைய நல்ல யாழ் இசையா நிற்ப அவ் விசைக்கு மாருக, பூஞ்சினை புகர் வரி வண்டு இனம் இமிர - பூத்த மரக்கொம்புகளிலே புள்ளிகளையும் வரிகளையும் உடைய வண்டுக் கூட்டங்கள் இசைபாடாநிற்பவும், ஊதுசீர்த் தீங்குழல் இயம்ப - இசைவாணர்களாலே ஊதப்படுகின்ற இனிய இசையை யுடைய வேய்ங்குழல் ஒலியாநிற்ப அதற்கு மாருக, மலர்மிசைத் தாது ஊது தும்பி தவிர்பல இயம்ப - மலர்களின் மேலே மகரந்தத்தை ஊதா நின்ற தும்பிகள் ஒழியாதனவாய் ஒலியா நிற்பவும், ..............துடிச்சீர் நடத்த - (ஆடன் மகளிர்) துடியினது தாளத்திற்கேற்ப (கூத்தாடுதலை) நிகழ்த்தாநிற்ப அதற்கு மாருக, வளிநடன் மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க - காற்ருகிய கூத்தன் (நட்டுவன்) மெல்லிய கொத்துக் களையுடைய மலர்க்கொடியைக் கண்டோர்க்கு விருப்பம் வருமாறு ஆடச் செய்யவும், ஆங்கு அவை தத்தம் தொழில் மாறுகொள்ளும் - அவ்விடத்துள்ள அக்கலைகள் ஒவ்வொன்றும் தத்தம் தொழிலுக்கு மாருய தொவ்வொன்றினைக் கொள்ளா நிற்கும்.

(வி - ம்.) திருமருத முன்றுறையின்கண் இசை கூத்து ஆகிய கலைகள் தத்தமக்கு மாருயவற்றைக் கொள்ளாநிற்கும் என்பதாம்.

மண் கணை முழவம் - மண்ணுலாய திரண்ட குடமுழா என்க. இது பிங்கல நிகண்டிற் கண்டது. இனி, மார்ச்சனையையுடைய முழவுமாம்.

முழவிற்கு மாருக இடியேறு முழங்கும், யாழிசைக்கு மாருக வண்டினம் இமிரும், குழலிசைக்கு மாருகத் தும்பி இயம்பும், விற லியர் ஆட்டத்திற்கு மாருக வளிநடன் பூங்கொடியை ஆடச்செய்வன், இவ்வாற்ருல் இக் கலைத் தொழில்கள் தத்தமக்கு மாறு கொள்ளும் என்க.

எனவே, திருமருதந்துறையில் இயற்கையின்பமும் செயற்கை யின்பமும் செறிந்து திகழும் என்றவாரும்.

இன்கண் - முழவினது காண்டற்கினிய கண். இமிழ்வு - முழக்கம். ௩௭-ஆம் அடிக்கண் அழிந்த சொற்கள் விண்ணின்கண் முகில்கள் என்னும் பொருளுடையன போலும். கவர்தொடை - விரும்பப்படும் பாலைக் கோவை. புகர்வரி வண்டினம் - புள்ளிகளையும் வரிகளையு முடைய வண்டுத்திரள். தவிர்பல - ஒழியாதனவாய். இயம்ப - பாட. துடிச்சீருக்கு இயைய விறலியர் ஆட என்க வளிநடன் - காற்ருகிய ஆடலாசிரியன். நுடக்குதலால் பூங்கொடி நுடங்க என்க. தீம்புனல் காண்டற்கும் ஆடற்கும் உண்ணற்கும் இனிய நீர் என்க. துறைமுன் எனற்பாலது முன்றுறை என மாறித் தொக்கது. முன்றுறையால் என்புழி மூன்ருவது ஏழாவதன் பொருட்டாய் மயங்கிற்று.

(பரிமே.) மார்ச்சனையையுடைய முழவின் இனிய கண்ணின் இமிழ்விற்கு எதிரே விண்ணின்கட் டம் மிற்..............மறுதினகண் உருமேறு மாறாய் முழங்க. (இவ்வுரையை நோக்குமிடத்து ௬௭ - இவ் விடத்தே ஒரு அடி முழுதும் அழிந்தது கொல் என்ற ஐயம் தோன்று கின்றது.)

௬அ. கவர் தொடை - விரும்பப்படும் பாலைக்கோவை.

௬௯. பூக்களையுடைய சினைக்கண்ணே இமிர.

தாளத்தி...........னமகளிரா...........நத.

௭௨. வளியாகிய நடன்.

இவ்வாற்றான் ஆண்டுள்ள..............ஞென்றோடொன்று மாறு கொள்ளு நதி..................

௭௬ - ௭௯ : கோடு..................சிலம்பு

(இ - ள்.) கோடு உளர் குரல் பொலி ஒலி துயல் இருங் கூந்தல் - மரக்கொம்பிற் றோன்றி அசையாநின்ற பூங் கொத்துக்களாலே பொலிந்து தழைத்த அசைகின்ற கரிய கூந்தலையுடைய; ...........புரைதீர் நெடு மெல் தோள் தாழ்பு தழை மலர் துவளா வல்லியின் - ...........குற்றமற்ற நெடிய தோளின்கண் தாழ்ந்து தளிரும் பூவுமுடைய ஆடாநின்ற கொடிபோல, நீள் தாழ்பு தோக்கை நித்தில அரி சிலம்பு - நீண்டு தாழ்ந்த தொங்கலுடனே முத்தாகிய பரலையுடைய சிலம்பு............

(வி - ம்.) கோடு - மரக்கொம்பு. உளர் - அசையாநின்ற. பொலி - பொலிந்த. குரல் - பூங்கொத்து. ஒலி - தழைத்த. துயல் - அசையாநின்ற. புரை - குற்றம். தழை - தளிர். துவளா - துவள் கின்ற; அசைகின்ற. வல்லி - கொடி. தாழ்பு - தாழ்ந்து. தோக்கை - தொங்கல். நித்தில அரி - முத்தாகிய பரல்.

(பரிமே.) ௭௬. கொத்துக்களாற் பொலிந்து தழைத்து அசை கின்ற கரிய கூந்தலையுடைய.

௭௭ - அ. பொருந்திய விறை......தோளிற்றாழ்ந்து தழையும்... ......கொடி.........

இப்பகுதி பொருள் முடிபும் சொன்முடிபும் தோன்றாதபடி இடை இடையே சிதைந்து கிடத்தலுணர்க.

இப் பாடலின் இறுதிப் பகுதி பண்டைக் காலத்தேயே அழிந்தது. எழுபது பரிபாடல் எனப்பட்ட இத் தொகை நூலில், இக் காலத்தே கிடைத்த நூலிற் கண்ட பாடல்கள் இவ்வளவே.

இப் பாடலின் இறுதிப் பகுதி அழிந்தொழியவும் இப் பகுதிக் குரிய பரிமேலழகர் உரை இடையிடையே சிதைந்து எஞ்சியது கீழே காண்க.

"வாடாத மாலை......லை சூடாத நறவு வெளிப்படை.

நறவால் இனிதாக மகிழ்ந்து கண்ணுராயத்து நின்றதம் தங் காதலனை.

தாங்கள் தாங்கள், தவிராது தவிராது, செல்லும் புனல் ஈர்த் திர்த்துக் கொண்டு செல்ல மிக ஒழுகுவாளைத் தன் மார்பத்து அணைத்து நீந்துதற்குரிய கைகளுள் ஒரு கை தாங்கத் தோள்மேல் வைத்து மற்றைக் கையால் நீரை நீங்கத் தள்ளி வருவான்.........

........மெடுத்தவன்பனுமென்னும் உம்மை, இசைநிறை.

கலைஇ - கலாய்த்து. தேற்றுதல் - வெகுளி நீக்குதல். அக் கங்கை நீர்க்கு நடுவே என்றதனால் வெகுண்டது பு.........யாயிற்று.

புங்கவம் - ஏறு. திளைப்பின்கட் சேராமை பொருடானுடை....... ......வல்குற்கலங்காரமாகாத வேற்றுரமுகுடனே.........வளை ஈர்த்துக் கொணடாமத்தைப் பொருந்த - எமக்கு அவலத்தைச் செய்ய

அடுத்தடுத்தென்னும் அடுக்கு அவள் துயர மிகுதியும் அதற்கு ஆயம் ஒரு செயலின்றி நின்றமைய...............

............கொளவைத்த பொழுது எவ்விடத்தும் கடிப்பிடுகின்ற துடியினது ஒலிகெ...............

**இருபத்திரண்டாம் பாடலும் உரையும் முற்றின.**

**எட்டுத்தொகை நூலினுள் ஒன்ருகிய பரிபாடலும் அதற்குப் பரிமேலழகர் உரையைத் தழுவிப் பெருமழைப் புலவர். பொ. வே. சோமசுந்தரனர் எழுதிய உரையும் விளக்கமும் முற்றின.**

# பரிபாடல் திரட்டு



## முதற் பாடல்

## திருமால்

பொருட் சுருக்கம்

**க - கூ :** முகில் மலையின்கண் மழையை மிகுதியாகப் பொழியாநிற்ப அந் நீர் மதுரையில் உள்ள மாந்தர் விரும்பி எதிர் கொள்ளும்படி வருகின்ற துறையினிடத்தேயுள்ள இருந்தையூர் என்னும் திருப்பதியிலே எழுந்தருளியிருக்கின்ற திருமாலே! நின் திருவடியைத் தொழுது வாழ்த்துகின்றேம்.

**எ - உக :** பெருமானே! நினது திருப்பதியின் ஒருபக்கத்தே வேங்கையும், வெண்கடம்பும், மகிழும், செயலையும் ஓங்கிவளர்ந்த மலையுளது. மற்றொருபால் விண்ணென விரிந்த நீர்நிலைகள் உள்ளன ; மற்றொருபால் உழவரும் உழத்தியரும் ஆடிப்பாடித் தொழில்செய்யும் கழனிகள் உள்ளன ; மற்றொருபால் ஒழுக்கந் தவறாத அந்தணர் சேரியையுடைய அறம்பிறழாத நகரம் உளது.

**உஉ - உகூ :** அந் நகரத்திலே ஒருசார் பல்வேறு பண்டங் களையும் விற்கும் வணிகர்தெரு வுள்ளது ; அதன்கண் மற்றொரு சார் உழவர்தெரு வுளது. அந் நகரம் நல்ல இன்பந்தரும் இயல்புடைய பல்வேறு தெருக்களையும் உடையது.

**ஙo - சகூ :** அந் நகரத்தின்கண் துறக்கத்தையொத்த ஆதிசேடனார் திருப்பதியும் உளது; அத் திருப்பதியின்கண் மகளிரும், மைந்தரும், இளைஞரும், முதியரும் அவிப்பொருளையும், மலர், நறுமணப்புகைப் பொருள் முதலியவற்றையும் ஏந்திவந்து இடையறாது தொழுது இன்புறுகிற்பர்.

**ருo - ருகூ :** அச் சேடனார் திருப்பதியின்கண் வண்டும் தும்பியும் யாழ்போல இசைபாடும் ; யானைகள் முகில்போல முழங்கும் ; முழவுபோல அருவியிசை முழங்கும் ; ஆடலும் பாடலும் நிகழும்.

௬௦ - ௬௩ : குளவாய் என்னுமிடத்தே எழுந்தருளிய அவ் வாதிசேடனார் திருக்கோயிலில் மகளிரும் மைந்தரும் வந்து வழிபடுவர்; அவர்க்குத் தீயன கழிந்து நல்லனவெல்லாம் வந்து பொருந்தும்.

௬௪ - ௭௮ : அவ் வாதிசேடனார், திருமால் மந்தரமலையை எடுத்துத் திருப்பாற்கடலில் இட்டுக் கடைந்தபொழுது, அம் மலைமத்திற்குக் கடைகயிறாக இருந்தவர்; வலிமைக்கெல்லாம் இருப்பிடமானவரும் அவரே; உலகத்தைச் சுமந்தவரும் அவரே; சிவபெருமான் திரிபுரமெரித்தபொழுது அவர் ஏந்திய மலைவில்லிற்கு நாணாக இருந்து அச் சிவபெருமானுக்கு வெற்றிப் புகழ் அளித்தவரும் அவ் வாதிசேடனாரே.

௭௯ - ௮௨ : அத்தகைய பெருமையுடையவரும், ஆயிரந் தலையையுடையவருமாகிய அவ் வாதிசேடனாரை வணங்கித் திருமாலே! யாம் எப்பொழுதும் நினது திருவடியைப் பிரியே மாகுக என்று நினது திருவடிகளை ஏத்திப் புகழாநின்றேம்.

வானார் எழிலி மழைவள நந்தத்
தேனார் சிமைய மலையின் இழிதந்து
நான்மாடக் கூடல் எதிர்கொள்ள ஆனா
மருந்தாகுந் தீநீர் மலிதுறை மேய
இருந்தையூர் அமர்ந்த செல்வநின்
திருந்தடி தலையுறப் பரவுதுந் தொழுது

(இது தரவு)

ஒருசார், அணிமலர் வேங்கை மராஅ மகிழம்
பிணிநெகிழ் பிண்டி நிவந்துசேர் போங்கி
மணிநிறங் கொண்ட மலை;
ஒருசார் தண்ணறுந் தாமரைப்பூவி னிடையிடை
வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரிதகையிற்
கண்வீற் றிருக்குங் கயம்;
ஒருசார், சாறுகொள் ஓதத் திசையொடு மாறுற்
றுழவி னோதை பயின்றறி விழந்து
திரிநரும் ஆர்த்து நடுநரும் ஈண்டித்
திருநயத் தக்க வயல்:
ஒருசார், அறத்தொடு வேதம் புணர்தவ முற்றி
விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்

திறத்திற் றிரிவில்லா அந்தணர் ஈண்டி
அறத்திற் றிரியா பதி ;

(இவை நான்கும் கொச்சகம்)

ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை
மணணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்
விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்
களமர் உழவர் கடிமறுகு பிறசார்
ஆங்க, அனையவை நல்ல நனிகூடு மின்பம்
இயல்கொள நண்ணி யவை ;

(இது கொண்டுநிலை)

வண்டு பொரேரென எழ
வண்டு பொரேரென எழும்
கடிப்புகு வேரிக் கதவமிற் றேட்டிக்
கடிப்பிகு காதிற் கனங்குழை தொடர
மிளிர்மின் வாய்ந்த விளங்கொளி நுதலார்
ஊர்களிற் றன்ன செம்ம லோரும்
வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்
தொளியிழை யொதுங்கிய வொண்ணுத லோரும்
புலத்தோ டளவிய புகழணிந் தோரும்
நலத்தோ டளவிய நாணணிந் தோரும்
விடையோ டிகலிய விறனடை யோரும்
நடைமட மேவிய நாணணிந் தோரும்
கடனிரை திரையிற் கருநரை யோரும்
சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரும்
மடையர் குடையர் புகையர்பூ வேந்தி
இடையொழி வின்றி யடியுறையார் ஈண்டி
விளைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்கும்
துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையும்
இருகேழ் உத்தி அணிந்த எருத்தின்
வரைகெழு செல்வ னகர் ;
வண்டொடு தும்பியும் வண்டொடை யாழ்ஆர்ப்ப
விண்ட கடகரி மேகமொ டதிரத்

தண்டா அருவியோ டிருமுழ வார்ப்ப
அரியுண்ட கண்ணாரோ டாடவர் கூடிப்
புரியுண்ட பாடலோ டாடலுந் தோன்றச்
சூடு நறவொடு காமமுகிழ் விரியச்
சூடா நறவொடு காமம் விரும்ப
இனைய பிறவு மிவைபோல் வனவும்
அனையவை எல்லா மியையும் புனையிழைப்
பூமுடி நாகர் நகர் ;

(இவையும் கொச்சகம்)

மணிமருள் தகைவகை நெறிசெறி யொலிபொலி
அவிர்நிமிர் புகழ்கூந்தற்
பிணிநெகிழ் துணையிணை தெளியொளி திகழ்ஞெகிழ்
தெரியரி மதுமகிழ் பரிமலர்
மகிழுண்கண் வாணுதலோர்
மணிமயிற் றொழிலெழி லிகலிமலி திகழவிழ
திகழ்கடுங் கடாக்களிற்
றண்ண லவரோ
டணிமிக வந்திறைஞ்ச அல்லிகப்பப் பிணிநீங்க
நல்லவை எல்லா மியைதருந் தொல்சீர்
வரைவாய் தழுவிய கல்சேர் கிடக்கைக்
குளவாய் அமர்ந்தா னகர்;

(இது முடுகியல்)

திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தஞ் சீர்ச்சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பின் இருதிறத் தோர்க்கும்
அமுது கடைய இருவயி னாகி
மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க
உகாஅ வலியின் ஒருதோழங் காலம்
அறாஅ தணிந்தாருந் தாம்;
மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்
புகாஅவெதிர் பூண்டாருந் தாம்;
மணிபுரை மாமலை ஞாறிய ஞாலம்
அணிபோற் பொறுத்தாருந் தாஅம் பணிவில்சீர்ச்

செல்விடைப் பாகன் திரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி இமயவில் நாணுகித்
தோல்புகழ் தந்தாருந் தாம்;

(இவையும் கொச்சகம்)

அணங்குடை யருந்தலை ஆயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி
நல்லடி யேத்திநிற் பரவுதும்
எல்லேம் பிரியற்கெஞ் சுற்றமோ டொருங்கே.

(என்பது ஆசிரியச்சுரிதகம்)

## கடவுள் வாழ்த்து

குறிப்பு :— இப் பாடல் தொல்காப்பியச் செய்யுளியல் ௧௨௪-ம் நூற்பாவிற்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் மேற்கோளாக எடுத்தாண்டது.

## உரை

௧ - ௬ : வான்........................தொழுதே

(இ - ள்.) வான் ஆர் எழிலி தேன் ஆர் சிமைய மலையின் மழைவளம் நந்த - விசும்பின்கண் நிறைந்த முகில்கள் தேன் இறால்கள் பொருந்திய குவடுகளையுடைய சைய மலையி னிடத்தே மழையை மிகுதியாகப் பெய்தலானே உலகின்கண் செல்வம் பெருகும்படி, ஆறு மருந்து ஆகும் தீநீர் - இன்றியமையாத ஆருயிர் மருந்தாகிய இனிய அம்மழை நீர், இழி தந்து நான்மாடக் கூடல் எதிர்கொள்ள - அச் சைய மலையினின்றும் இறங்கி மதுரையில் வாழும் மக்கள் விருப் பத்தோடே எதிர்கொள்ளா நிற்ப, மலி துறை மேய இருந் தையூர் அமர்ந்த செல்வ - வந்து பெருகுதற்கு இடமான வையைத்துறையிடத்தே பொருந்திய திருவிருந்தையூர் என் னும் திருப்பதியிலே எழுந்தருளியிருக்கின்ற உயிர்களுக்குச் செல்வமாக விளங்கும் திருமாலே! நின் திருந்தடி தலையுறத் தொழுது பரவுதும் - அடியேங்கள் நினது திருந்திய இலக்கண முடைய திருவடிகள் எமது தலையிலே பொருந்தும்படி வீழ்ந்து வணங்கி வாழ்த்தா நின்றேம்.

(வி - ம்.) வானிடத்தே ஆரவாரிக்கும் எழிலி எனினுமாம். எழிலி. முகில்; மழைவளமாகிய நீர் பெருக எனினுமாம். தேன் - தேனடை. சிமையம் - மலைக்குவடு. அம் மலையினின்று அருவியாக வீழ்ந்து என்க. இழிதந்து - இழிந்து. நான்மாடக் கூடல் - மதுரை. இஃது ஆகுபெயராய் ஆண்டு வாழும் மக்களை உணர்த்தி நின்றது. ஆறு - இன்றியமையாத. மருந்து - ஆருயிர் மருந்து. மருந்து - அமிழ்தமுமாம்.

"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது" (குறள் - ௧௬)

என்றும்,

"வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்தம் என்றுணரற் பாற்று" (குறள் - ௧௧)

என்றும், ஆசிரியர் திருவள்ளுவனாரும் மழை "ஆறு மருந்தாதல்" குறித்தமையுணர்க.

மலிதுறை - வினைத்தொகை. துறை - வையைத்துறை. இருந் தையூர் - வையைத் துறையிடத்தே உளதாகியதொரு திருமால் திருப்பதி. இதனை "நீடு நீர் வையை நெடுமால் அடியேத்த" எனவரும் சிலப்பதிகார அடிக்கு (துன்ப - ௪) அரும்பதவுரைகாரர், நெடுமால் - ஸ்ரீ இருந்த வளமுடையார் எனக் குறிப்பதனானும் உணர்க.

திருந்தடி - பிறக்கிடாத அடியுமாம். செல்வன் - உயிர்கட்குச் செல்வமாக உள்ளவன்; உலகமெல்லாம் தன்னுடைமையாகப் பெற் றவன் எனினுமாம். தொழுது பரவுதும் என மாறுக.

வையைத் துறையில் மேய இருந்தையூரமர்ந்த செல்வ நின் அடி தொழுது பரவுதும் என முடிக்க.

எ - ௯ : ஒருசார்............................மலை

(இ - ள்.) ஒருசார் - எம்பெருமானே! நீ எழுந்தருளி யிருக்கும் இத் திருப்பதியின் ஒரு பக்கத்தே, அணி மலர் வேங்கை மராஅம் மகிழம் பிணி நெகிழ் பிண்டி நிவந்து - அழகிய மலர்களையுடைய வேங்கையும் வெண்கடம்பும் மகிழ மரமும் அரும்புகள் கட்டலர்ந்த செயலையும் இன்னோரன்ன பிற மரங்களும், சேர்பு நிவந்து ஓங்கி - ஒன்றுகூடி மிகவும் வளர்ந்து நிற்பதனாலே, மணிநிறம் கொண்ட மலை - நீல மணியினது நிற முடைத்தாய்த் திகழும் மலை விளங்கா நிற்கும்.

(வி - ம்.) அணி-அழகு. வேங்கை-ஒருவகை மரம். மராஅம் - வெண் கடம்பு பிணி நெகிழ் - மலர்ந்த. பிண்டி - செயலை; அசோகமரம் முதலிய இன்னோரன்ன மரங்கள் என்க. சேர்பு - அடர்ந்து. நிவந்து ஓங்கி, ஒரு பொருட் பன்மொழி - மிக வுயர்ந்து. வளப்பமுடைய மலை சேய்மையினின்று நோக்குவோர்க்கு நீலநிற முடைத்தாய்த் தோன்றுதல் இயல்பாகலின் மணி நிறங் கொண்ட மலை என்றார். இதனால் நானிலத்துள் முதனிலமாகிய குறிஞ்சி வளம் கூறினாராயிற்று.

ஒருசார் மலை நின்று திகழும் என்க.

௧௦ - ௧௩ : ஒருசார்..........................நயம்

(இ - ள்.) ஒருசார் - பெருமானே! நினது திருப்பதியின் மற்றொரு பக்கத்தே, கயம் - நீர் நிலைகள், தண் நறு தாமரைப்

பூவின் இடை இடை இதழ்ப் போதின்வாய் வண்ண வரி வண்டு ஆர்ப்ப - தம்பால் உள்ள தண்ணிய நறிய தாமரைப் பூக்களின் இடையிடையே உள்ள அன்றலரும் இதழ்களை யுடைய நாளரும்புகளின் வாயிடத்தே தேன் பருகும் பொருட்டு நிறமும் வரியும் அமைந்த வண்டினங்கள் முரலா நிற்ப, கயமீன் வீற்றிருக்கும் விண் விரி தகையில் கண் வீற்றிருக்கும் - பரிய நாண் மீன்கள் பொருந்தியிருக்கும் வானம் விரிந்து கிடக்கு மாறுபோல விரிந்து கிடக்கும் இடமுடைத்தாய்க் கிடக்கும்.

(வி - ம்.) மலர்ந்த முதிய பூக்களின் இடையிடையே உள்ள நாண்மலரின் வாயிடத்தே வண்டுகள் பாட என்பார், தாமரைப்பூவின் 'இடைஇதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப' என்றார். இதழ்ப்போது என்றது அன்றலரும் செவ்வியிதழையுடைய நாளரும்பு என்பதுபட நின்றது

கயமீன் - பரிய விண்மீன் : மெல்லென மெல்லென மிளிரும் விண்மீன் எனினும் பொருந்தும். என்னை? கய என்னும் உரிச்சொல் பெருமை, மென்மை என்னும் இருபண்பும் குறிப்பதாகலான். உவமைக்குக் கூறப்பட்ட கயமீன் மிளிர்தலைக் கயத்திற்கும் கொண்டு நாண்மீன்போன்று மிளிரும் பரிய மீன்களையுடைய கயம் என்க. கயமீன் வீற்றிருக்கும் விண் விரிதகையில் கண் விரிதகைக் கயம் என்க. கண் இடம் - விண்போன்று விரிந்த இடமுடைத்தாகிய கயம் என்க. கயம் - நீர்நிலை, குளம், ஓடை, வாவி, ஏரி முதலியன. விரிதகையின் - விரிந்த அழகுபோன்று என்க.

இதனால் மருதநிலத்தின் மாண்பு கூறப்பட்டது. நீர்வளம் கூறவே ஏனைவளம் கூறாமலே அமையும் என்பதுபற்றி முதலில் நீர்வளம் ஓதினார்.

கச - கஎ : ஒருசார்.....................வயல்

(இ - ள்.) ஒருசார் - பெருமானே! நின் திருப்பதியின் மற்றொரு பக்கத்திலே, சாறுகொள் ஓதத்து இசையொடு மாறு உற்று உழவின் ஓதை பயின்று - மருதநிலத்தின் கண்ணே ஆலைகளிலே கருப்பஞ் சாற்றைப் பிழிந்து கொள்ளுத லானே எழும் ஓசையாகிய ஆரவாரத்தோடு மாறுபட்டுக் களமர்கள் உழுங்கால் ஏரைப் பாடும் ஏர்மங்கலப் பாடல்கள பாடும் ஆரவாரத்தை எழுப்பி மேலும், அறிவு இழந்து - கள் ளுண்டமையானே அறிவு மயங்கி, திரிநரும் - யாண்டும் திரியா நிற்போரும், ஆர்த்து நடுநரும் - உழத்தியர் குரவைபாடி நாற்று நடுவோரும் ஆகி, ஈண்டி - தம்பால் குழுமா நிற்ப, திரு நயத்தக்க வயல் - திருமகளும் விரும்பி வீற்றிருக்கும் தகுதியுடைய கழனிகள் உள்ளன;

(வி - ம்.) பெருமானே! நினது திருப்பதியின் மற்றொருசார், ஆலையின் ஆரவாரத்தோடு மாறுபட்டு ஏர்மங்கலம் பாடுவோரும்

கள்ளுண்டு களிப்போரும் குரவை பாடுவோரும் ஆகிய உழவர் உழத்தியர் நிறைந்து திருமகளும் விரும்பத்தக்க வயல்கள் திகழா நிற்கும் என்பதாம்.

ஆலையின்கண் கரும்பினையிட்டு அதன் சாற்றினைப் பிழிந்து கோடலாலே உண்டாகும் இசை என்க. சாறு - விழாவுமாம். இங்ஙனம் பொருள்கோடல் சிறப்பின்று.

உழவன் ஓதை, உழுநர் எடுத்த ஏர்மங்கலப்பாட்டின் ஆரவாரம். கள்ளுண்டலாலே அறிவிழந்து மனம்போனவாறு ஆரவாரம் செய்து திரிவோரும், நாற்றினை நடுவோரும் ஆகிய உழவரும் உழத்தியரும் தம்பாற் கூடாநிற்ப என்க. திரு - திருமகள்.

இப் பகுதியோடு,

"கருங்கை வினைஞரும் களமரும் கூடி
ஒருங்குநின் றார்க்கும் ஒலியே யன்றியும்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறுடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கயல் நெடுங்கண் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியும்
கொழுங்கொடி யறுகையும் குவளையும் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
ஏரொடு நின்றோர் ஏர்மங் கலமும்."

(நாடுகாண். ௧௨௫ - ௧௩௫)

எனவரும் சிலப்பதிகாரப் பகுதியையும் நினைக.

"ஆறுபாய் அரவம் மள்ளர் ஆலையாய் அமலை ஆலைச்
சாறுபாய் ஓசை வேலைச் சங்குவாய் பொங்கு மோதை
ஏறுபாய் தமரம் நீரில் எருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகித் தம்மின் மயங்குமா மருதவேலி."

(நாட்டுப் - ௩)

என்றார் கம்பநாடரும்.

௪௮ - ௫௧ : ஒருசார் ..........................பதி

(இ - ள்.) ஒருசார் - பெருமானே! நினது திருப்பதியின் மற்றொரு பக்கத்தே, அறத்தொடு வேதம் புணர்தவம் முற்றி - தத்தமக்குரிய அறநெறிக்கட் பிறழாது நின்று வேதங்களைக் கடைபோக நன்கு பயின்று இவற்றாலே பொருந்துவதாகிய தவவொழுக்கத்திலே முதிர்ந்தமையாலே எய்தாநின்ற, விறல் புகழ் நிறப விளங்கிய - வெற்றிப் புகழ் யாண்டும் பரந்து நிலைத்து நிற்பத் திகழாநின்ற, கேள்வித்திறத்தில் திரிவு

இல்லா அந்தணர் ஈண்டி - வேதங்கூறிய ஒழுக்கத்தே ஒரு சிறிதும் பிறழ்தல் இல்லாத அந்தணர் மிக்கு வாழ்தலானே, அறத்தில் திரியா பதி - ஏனையோரும் தத்தமக்குரிய அறவொழுக்கத்தே பிறழா தொழுகுதற் கிடமான நகரம் உளது;

(வி - ம்.) அறத்தொடு வேதம் தவம் முற்றிய அந்தணர், விறற் புகழ் விளங்கிய அந்தணர், கேள்வித்திறத்தில் திரிவில்லா அந்தணர் எனத் தனித்தனிக் கூட்டுக.

ஈண்டி என்னும் செய்தெனெச்சத்தை ஈண்ட எனச் செயவெனெச்சமாக்கி ஏதுவாக்குக.

அந்தணர் ஈண்டுதலானே ஏனையோரும் அறத்திற் றிரியாது ஒழுகுதற்கு இடமான பதி என்க. பதி - நகரம்.

அறத்தொடு என்புழி அறம், அந்தணர்க்கு நூலோர் வகுத்த அறுவகைப்பட்ட ஒழுக்கம் என்க. அவையாவன: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல் என்பனவாம். இதனை,

"ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி அந்தணர் வழிமொழிந் தொழுகி." (௨௪)

எனவரும் பதிற்றுப்பத்தானும் உணர்க.

வேதம் முற்றி என்றது வேதங்களைப் பொருளுணர்ச்சியோடே கசடறக் கற்று நிரம்பி என்றவாறு. தவம் முற்றி என்றது கற்றதனால் உணர்வு பெருகிப் பொறிபுலனடங்க நின்று என்க.

விறற்புகழ் என்றது, இவ் வறவொழுக்கத்தும், வேதப் பயிற்சியினும், தவவொழுக்கத்தினும் இவரை ஒப்பார் பிறரிலர் என உலகம் புகழும்படி விளங்கிநிற்றல். இவ் வெற்றிகளைத் தமிழ்நூலோர் வாகை என்பர். ஈண்டுக் கூறப்பட்ட புகழ் பார்ப்பன வாகை எனப்படும். அஃதாவது,

"ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினுள்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கும்—ஏதம்
சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து." (புறப்பொருள் வெ - கசுரு)

எனவரும்.

பார்ப்பனர் தம் அறத்திலே பிறழாது நிற்பவே, அவர் வழிப்பட்ட ஏனை அரசர் வணிகர் வேளாண்மாந்தர் ஆகியோரும் தத்தம் அறத்திலே பிறழாது நிற்றல் ஒருதலையாகலின், 'அந்தணர் ஈண்ட அறத்திற் றிரியாபதி' என்றார். ஈண்டு அறம் என்றது.

"ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்."

(தொல். புற. சூ. கக)

என வகுக்கப்பட்ட அரசரும் வணிகரும் வேளாளருமாகிய ஏனையோர்க் குரிய ஒழுக்கங்களை என்க.

உஉ - உகூ: ஆங்கொருசார்......................நண்ணியவை

(இ - ள்.) ஆங்கு ஒருசார் - அந்நகரத்தே ஒருபக்கத்தே, உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை மண்ணுவ மணி பொன் மலைய கடல பண்ணியம் மாசு அறு பயம தரு காருகப் புண்ணிய வணிகர் புனை மறுகு - உண்பதற்குரிய பொருள்களும் பூசுவதற்குரிய பொருள்களும் பூண்டு கொள்ளுதற்குரிய பொருள்களும் உடுத்தற்குரிய பொருள்களும் மஞ்சளாடுதற் குரிய பொருள்களும் மணி பொன் முதலிய மலைபடு பொருள் களும் கடற்படு பொருள்களும் ஆகிய குற்றமற்ற பயன்படு பொருள்களை அக நாட்டினின்றும் பிற நாட்டினின்றும் கொணர்ந்து தருகின்ற தொழிலையும் அறச்செயலையும் உடைய வணிகர்கள் இருந்து வாழாநின்ற ஒப்பனை செய்யப்பட்ட தெருக் கள் உள்ளன; ஒருசார் விளைவதை வினைபொவன் (?.)............ மென்புல வன்புலக் களமர் உழவர் கடி மறுகு - மற்றொரு பக்கத்திலே மருதமும் நெய்தலுமாகிய மென்புலத்தினும் குறிஞ்சியும் முல்லையுமாகிய வன்புலத்தினும் தொழில் செய்வோ ராகிய களமர் தெருக்களும் உழுவித்துண்போ ராகிய வேளா ளர்கள் இருந்து வாழும் காவலையுடைய தெருக்களும் உள்ளன; அனையவை நனி கூடும் நல்ல இன்பம் இயல் கொள நண்ணியவை - தத்தம் அறத்திற்றிரியா அந்தணர் வணிகர் வேளாளர் முதலிய மாந்தர் இருந்து வாழுதலானே அத் தெருக்கள் நன்கு பொருந்தாநின்ற நல்லனவாகிய இன்பப் பலவும் இயல்பாகவே கூடப்பட்டன வாகும்;

(வி - ம்.) ஆங்கு - அந்தணர் ஈண்டுதலானே அறத்திற் றிரியாபதி என்று முற்கூறப்பட்ட அந்த நகரத்தின்கண் என்க.

உண்ணுவ - நெல், முதிரை நெய், பால், தயிர், காய், கனி, இலை, நிஞ்சோறு பல்வேறுருவிற் பண்ணிகாரம் நறவு இன்னோரன்ன உணவுப்பொருள்கள். இதனை,

"சேறு நாற்றமும் பலவின் சுளையும்
வேறுபடக் கவினிய தேமாங் கனியும்
பல்வே றுருவிற் காயும் பழனும்
கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி
மென்பிணி அவிழ்ந்த குறுமுறி யடகும்
அமிர்தியன் றன்ன நிஞ்சேற்றுக் கடிகையும்
புகம்படப் பண்ணிய பேருன் சோறுங்
கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்
இன்சோறு தருநர் பல்வயி னுகர." (ருஉஎ - ருஙரு)

எனவரும் மதுரைக்காஞ்சியானும் உணர்க.

பூசுவ - சந்தன முதலியன.

பூண்ப - அணிகலன்கள் (மாலைகள்).

உடுப்பவை - பட்டு, துகில் முதலியன.

மண்ணுவ - பத்துத் துவரும், ஐந்து விரையும், முப்பத்திருவகை ஓமாலிகையும் பிறவுமாம். என்னை?

"பத்துத் துவரினும் ஐந்து விரையினும்
முப்பத் திருவகை யோமாலி கையினும்
ஊறின நன்னீர் உரைத்த நெய்வாசம்
நாறிருங் கூந்தல் நலம்பெற ஆட்டி." (சிலப். ௬: எ௪ - ௬)

என இளங்கோவடிகளார் கூறுமாற்றானும் உணர்க.

மணி பொன் முதலிய மலைபடு பொருளும் கடல்படு பொருளும் என்க. இப் பொருள்கள் தூயனவாகவே விற்கப்படும் என்பார். 'மாசறுபயம்' என்றார். பயம் - பயன்: ஆகுபெயர்; பயன்றரும் பொருள்கள்.

காருகம் - காருகத்தொழில். அஃதாவது, பருத்திநூல் பட்டுநூல் அமைத்து ஆடை நெய்தலும், தைத்தலும், சுமந்து விற்றலுமாகிய தொழில் என்க. இத் தொழிலும் வணிகர் தொழிலே யாதலின், 'காருக வணிகர்' என்றார். இதனை,

"பட்டினு மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்."
(சிலப். ரு: ௧௬ - எ)

என்பதனானும் உணர்க.

புண்ணிய வணிகர் என்றது, அறச்செயலையே குறிக்கோளாக வுடைய வணிகர் என்றவாறு. இது, வாணிக வாகை; என்னை?

"உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து—முழுதுணர
அழல்வழிபட் டோம்பாத ஈகையான்
ஆதிவணிகர்க் கரசு." (புற. வெ - ௧௬௪)

என்றோதுபவாகலான்.

சிற்பம், ஓவியம் முதலியவற்றானும் கொடிகளானும் ஒப்பனை செய்யப்பட்ட தெரு என்பார், 'புனைமறுகு' என்றார்.

உ௬ - ஆம் அடிக்கண் "விளைவதை வினையெவன்' என்னுந் தொடர் பொருள் காண்டற்கியலாதபடி திரிந்ததுபோலும்; ஆராய்க

மென்புலம் - மருதநிலமும் நெய்தனிலமுமாம்.

வன்புலம் - குறிஞ்சிநிலமும் முல்லைநிலமுமாம்.

களமர் - உழுதுண்ணும் வேளாளர். உழவர் என்றது உழுவித்துண்ணும் வேளாளர் என்க. களமர் என்பதற்கு, 'மருதநிலமாக்கள்' 'உழவர்க்கீழ்க் குடிகள்' என்பர் அடியார்க்கு நல்லார்.

கடி - காவல். ஆங்க - இசை. அனையவை - அத்தகைய தெருக்கள் என்க.

இதுகாறும் ஸ்ரீ இருந்தவளமுடையாராகிய திருமால் திருப்பதியின் சிறப்புக் கூறி இனி, அத் திருப்பதியின்கண் எழுந்தருளியிருக்கும் ஆதிசேடனின் திருக்கோயிற் சிறப்பும், அதனை மக்கள் வழிபடுதற் சிறப்பும் ஓதுகின்றார்.

௩௦ - ௩௫ : வண்டு......................செம்மலோரும்

(இ - ள்.) கடிப்புஇகு காதின் - கடிப்பு என்னும் அணியிட்டுத் தாழ வளர்த்திய தஞ் செவியின்கண், கனங்குழை தொடர - கனவிய குழையென்னும் அணியை இடும்பொருட்டு, வண்டு பொரேர் என எழு-மகளிர் வளையலையுடைய தம் கையினை மேலே உயர்த்துங்கால் அக் கையிலிடப்பட்ட வளையல் கலீர் என்ற ஒலியுடன் எழுதலாலே, வண்டு பொரேர் என எழும் - அவர்தம் மலர்மாலைகளிலே மொய்த்துள்ள வண்டினங்கள் பொரேர் என்னும் ஒலியோடே எழாநிற்கும். இங்ஙனம் அணியப்பட்ட குழையினது, மிளிர்மின் வாய்ந்த - மிளிருகின்ற ஒளிச் சுடர் பாய்தலாலே, விளங்கு ஒளி நுதலார் - விளங்காநின்ற ஒளியினையுடைய நுதலையுடைய மகளிரும் அவர்தம் கணவரும் ஆகிய, ஊர் களிற்று அன்ன செம்மலோரும் - தாம் ஊர்ந்து செல்லும் களிற்றுயானையை ஒத்த தலைமைத்தன்மை யுடையோரும் ;

(வி - ம்.) வண்டு இரண்டனுள் முன்னையது வளையல். பின்னது வண்டு. பொரேர் - ஒலிக்குறிப்பு. கடிப்பு - மகளிர் காதினை வளர்த்தற்கு இடப்படுவதொரு அணி : கடிப்பிட்டு இகுத்த காதின் என்க. இகுத்தல் - தாழச்செய்தல். கனங்குழை - ஒருவகைக் காதணி. இது பொன்னாற் செய்யப்படுவதாம். இதன் ஒளிபாய்ந்து விளங்கும் ஒளியினையுடைய நுதலாரும் அவர்தம் கணவராகிய செம்மலோரும் என்க.

செம்மலோர் - தலைமைத்தன்மையுடையோர்.

௩௦. வண்டு பொரேர் என என்பது தொடங்கி ௩௪ நுதலார் என்னுமளவும் கிடந்த அடிகட்குப் பொருள் நன்கு விளங்கவில்லை. இவற்றிற்குப் பொருள் வேறு தோன்றுமாயிற் கொள்க. இவற்றுள், ௩௩. கடிப்புகு வேரிக் கதவமிற்றேட்டி என்னும் தொடர் வாளா விடப்பட்டது.

௩௬ - ௪௧ : வாயிருள்...................நாணணிந்தோரும்

(இ - ள்.) வாய்இருள் பனிச்சை வரிசிலைப் புருவத்து - தன்னிடம் இருண்ட கூந்தலையும் வரிந்த வில்லினை ஒத்த புருவத்தினையும், ஒளிஇழை ஒதுங்கிய ஒண் நுதலோரும் - ஒளியுடைய தலைக்கோல அணிகள் தங்கிய ஒளிபொருந்திய

நெற்றியையும் உடைய மகளிரும், புலத்தோடு அளவிய புகழ் அணிந்தோரும் - அறிவோடு கூடிய புகழினை அணிகலனாக உடையோரும், நலத்தோடு அளவிய நாண் அணிந்தோரும் - கற்புடைமையோடு பொருந்திய நாணத்தினை அணிகலனாக வுடைய மகளிரும், விடையோடு இகலிய விறல் நடையோரும் - ஆனேற்றின் நடையோடு மாறுபட்ட வெற்றியையுடைய பீடு நடையினை உடையவரும், மடம்நடை மேவிய நாண் இழந் தோரும் - மடப்பமுடைய ஒழுக்கத்தினையுடைய நாணத்தினை இழந்த பரத்தையரும், கடல் நிரைதிரையின் கருநரையோரும் - கடலின்கண் நிரலாக வரும் வெள்ளிய அலைகளைப்போன்று இடையிடையே கருமை விரவிய நரையினையுடையோரும், சுடர் மதிக் கதிரெனத் தூநரையோரும் - ஒளிருகின்ற திங்களினது நிலாக்கற்றைபோன்று முழுதும் நரைத்த பருவத்தினையுடை யோரும், மடையர் குடையர் புகையர் பூஏந்தி - அவிப்பொருளை உடையராய்க் குடையை ஏந்தினராய் நறுமணபுகையை உடையராய்ப் பூ முதலியவற்றை ஏந்தினராய், இடை ஒழிவு இன்றி-இடையறுமல், அடியுறையார் ஈண்டி-திருவடியின்கண் வந்து பொருந்திக் குழுமித் தொழுது இன்புறுதற்கு இட மாதலானே, இருகேழ் உத்தி அணிந்த எருத்தின் வரைகெழு செல்வன்நகர் - இரண்டாகிய கருநிறம் பொருந்திய படப்பொறி கள் அழகுசெய்த எருத்தினையுடைய மலைபோன்ற ஆதிசேட னுடைய திருக்கோயில், விளைந்து ஆர் வினையின் விழுப்பயன் துய்க்கும் - விளைந்து முதிர்ந்த நல்வினையினது சிறந்த பயனை நுகர்தற்கு இடமான, துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையும் - நடுக்கமில்லாத சிறந்த புகழினையுடைய மேனிலை உலகத்தினையே ஒப்பதாம்;

(வி - ம்.) செல்வன்நகர் நுதலோர் முதலியோர் இடையறுது வந்து ஈண்டித் திருவடிதொழுது இன்புறுதலானே, நல்வினையின் விழுப்பயனை நுகர்தற்கு இடமான துறக்கத்தை ஒப்பதாகும் என்க.

இருள்வாய் பனிச்சை என மாறி இருளை ஒத்த கூந்தல் எனினுமாம். ஒதுங்கிய - தங்கிய. புலம் - அறிவு. புலத்தோளடவிய புகழணிந்தோர் என்றது நல்லிசைப்புலவர் துறவியர் முதலிய சான்றோரை. நலத்தோடளவிய நாணணிந்தோர் என்றது கற்புடைய குலமகளிரை. விடையோடு இகலிய விறனடையோர் என்றது மறவர்களை. நடைமடம் மேவிய நாணிழந்தோரும் என்றது வரைவின் மகளிரை. கடலின்கண் எழும் அலை வெண்மையும் கருமையும் விரவித் தோன்றுமாறு வெண்மயிரும் கருமயிரும் விரவித் தோன்றும் பருவத் தினர் என்க.

மடை - அவிப்பொருள். குடை - மங்கலப்பொருள். புகை - அகில், குங்குலிய முதலிய இட்டெழுப்பிய நறுமணப்புகை என்க. அடி யுறையார் - அடியுறைதலுடையராய் எனினுமாம். உவமைக்கோதிய

விழுப்பயன் துய்த்தலைப் பொருட்கேற்றி திருவடி தொழுது விழுமிய இன்பம் நுகர்தற்கு இடனாகலான் என்க.

துறக்கம் - அறஞ்செய்தோர் எய்தும் மேனிலையுலகம். கேழ் - நிறம். உத்தி - பாம்பினது படத்தின்கட் பொறி. இருகேழுத்தி அணிந்த செல்வன் என்றது ஆதிசேடனை. ஆதிசேடன் திருமாலின் அம்சம் ஆதலானும் திருமாலின் அறிதுயிற் பாயலாதலானும் ஆதிசேடனையும் வைணவர் வணங்குதல் வழக்கம்.

௫௦ - ௫௬ : வண்டொடு......................நாகர் நகர்

(இ - ள்.) புனையிழைப் பூமுடி நாகர் நகர் - ஒப்பனை செய்யப்பட்ட அணிகலன்களையும் நிலமகளையும் திருமுடியின்கண் கொண்டுள்ள அந்த ஆதிசேடனார் திருக்கோயிலின்கண், வண்டொடு தும்பியும் வண்தொடை யாழ் ஆர்ப்ப - வண்டினங்களும் தும்பியினங்களும் வளவிய நரம்புத் தொடையினையுடைய யாழினோடு ஒத்து இசை முரலா நிற்பவும், விண்ட கடகரி மேகமோடு அதிர - பிளிறுகின்ற மதயானை முகில் முழக்கத்தோடே ஒத்து முழங்கா நிற்பவும், இருமுழவு தண்டா அருவியோடு ஆர்ப்ப - பெரிய மத்தளம் அமையாத அருவி முழக்கத்தோடே ஒத்து முழங்கா நிற்பவும், அரி உண்ட கண்ணாரோடு ஆடவர் கூடி புரிவுண்ட பாடலும் ஆடலும் தோன்ற - செவ்வரி கருவரி படர்ந்த மை தீட்டப்பட்ட கண்களையுடைய விறலியரும் கூத்தரும் கூடி யாவரானும் விரும்பப்பட்ட பாட்டினையும் கூத்தினையும் தோன்றுவியா நிற்பவும், சூடும் நறவொடு காமம் முகிழ் விரிய - சூடுதற்குரிய நறவமொட்டோடே அதனைச் சூடிய மைந்தர் மகளிரின் காமப்பண்பும் அரும்பி மலராநிற்பவும், சூடா நறவொடு காமம் விரும்ப - அம் மைந்தரும் மகளிரும் கள்ளினோடே காமவின்பத்தையும் விரும்பா நிற்பவும், இனைய பிறவும் இவை போல்வனவும்-இவையும் இன்னோரன்ன பிற நிகழ்ச்சிகளுமாகிய, அனையவை எல்லாம் - அவையெல்லாம், இயையும் - தம்முள் பொருந்தாநிற்கும் ;

(வி - ம்.) புனையிழைப் பூமுடி நாகர் நகரின்கண் வண்டும் தும்பியும் யாழோடு இயைந்து முரலும், யானை முகிலோடியைந்து முழங்கும். முழவு அருவியோடு இயைந்து முழங்கும். கண்ணாரோடு ஆடவர் இயைந்து ஆடலும் பாடலும் நிகழ்த்துவர். நறவ மொட்டொடு அதனைச் சூடிய மைந்தர் மகளிரது காமக்குணம் இயைந்து மலரும். அம் மகளிரும் மைந்தரும் கள்ளோடே இயையக் காமவின்பத்தையும் விரும்பா நிற்பர். இவ்வாறாக ஆண்டுப் படும் நிகழ்ச்சிகள் ஒன்றனோடு ஒன்று இயைவதாம் என்றவாறு.

தும்பி - வண்டின் வகையினுள் ஒன்று, வண் தொடை யாழ் - வளப்பமுடைய நரம்பு தொடுத்தலையுடைய யாழ் என்க. நரம்பிற்கு வளமாவது, இன்னிசைத்தாதலென்க. விண்ட - பிளிறிய. விள்ளுதல் என்னும் வினையடியாகப் பிறந்த பெயரெச்சம். விள்ளுதல் -

திறத்தல். அது வாய்திறத்தல் என்னும் பொருள்பட்டு அதன் காரியமாகிய பிளிற்றொலியை ஈண்டுக் குறித்து நின்றது என்க. தண்டா அருவி - இடையறாத அருவி. இருமுழவு - பெரியமுழவு. அரியுண்ட கண்ணார் என்றது ஆடன் மகளிராகிய விறலியரை. விறலியர்க்குரிய ஆடலும் பாடலும் அழகுமாகிய மூன்றனுள் அழகுடைமையை அரியுண்ட கண்ணார் என்றதனால் உணர்த்தினார். அரி - வரி, செவ்வரி கருவரிபடர்ந்த கண்ணார் மையுண்ட கண்ணார் எனத் தனித்தனிக் கூட்டுக. ஆடவர் என்றது கூத்தரை. தோன்ற - தோன்றுவிக்க. சூடு நறவு, சூடா நறவு என்பன, வெளிப்படை - முன்னது நறவமொட்டு. பின்னது கள். அம் மைந்தரும் மகளிரும் சூடிய நறவ மொட்டலரும் போதே அவர் தம் உளத்தே காமம் முகிழ்த்து மலர என்க. "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் இந் நோய்" என்றார் வள்ளுவனாரும். கள் காம வின்பத்தை மிகுவித்தலின் கள்ளொடு காமம் விரும்ப என்றார். இனைய என்றது உவமம் கருதாமல் சுட்டுப் பெயர் மாத்திரையாய் நின்றது. அனையவை என்பது மது. புனையிழை முடிநாகர் பூமுடி நாகர் எனத் தனித்தனிக் கூட்டுக. பூ - பூமகள். நாகர் - ஆதிசேடனார். நகர் - அவர் தந் திருக்கோயில். இங்ஙனமன்றி நாகர் நகர் என்றது. உவமையாகக் கருதிப் "போகத்திற் சிறந்ததாகலின் நாகருடைய நகரை ஒக்கும் என்றார்" என உரை கூறினாருமுளர்.

௬௦ - ௬௫ : மணி......................................நகர்

**(இ - ள்.)** மணி மருள் தகை வகை நெறி செறி ஒலி பொலி அவிர் நிமிர் புகழ் கூந்தல் - நீலமணிபோன்ற நிறத்தினையும் அழகினையும் கூறுகூறாக அறல்பட்டுச் செறிந்து தழைத்துப் பொலிவுற்று விளங்கா நின்ற எழுச்சியினையும் கண்டோராற் புகழப்படுதலையும் உடைய கூந்தலினையும், நெகிழ் பிணி துணை இணை தெளி ஒளிதிகழ ஞெகிழ் - நெகிழ இடப்பட்ட இரண்டும் தம்முள் ஒத்த தெளிந்த ஒளியாலே விளங்கா நின்ற சிலம்பினையும், தெரி அரி மது மகிழ்பு மகிழ், அரிமலர் உண்கண் வாள் நுதலோர் - ஆராய்ந்து அரித்துச்செய்யப் பட்ட கள்ளை யுண்டமையானே களிப்புடைய கருவரி செவ்வரி படர்ந்த தாமரைமலர் போன்ற மையுண்ட கண்களையும் ஒளி பொருந்திய நெற்றியினையும் உடைய மகளிர், மணி மயில் தொழில் எழில் இகலி மலி திகழ் அவிழ - நீலமணி போன்ற நிறமுடைய மயிலைத் தொழிலானும் அழகானும் மாறுபட்டு மிக்க ஒளிவிட்டு விளங்கும்படி, திகழ் கடுங் கடாக் களிற்று அண்ணல் அவரோடு - விளங்குகின்ற கடிய மதத்தினையுடைய ஆண்யானை போன்ற தலைமைத் தன்மையுடைய தத்தம் கணவன்மாரோடு கூடி, அணி மிக வந்து - அழகுமிகும்படி வந்து, தொல் சீர் வரை வாய் தழுவிய கல்சேர் கிடக்கைக் குளவாய் அமர்ந்தான் நகர் இறைஞ்ச - பழைதாகிய புகழை யுடைய மலையிடத்தைச் சார்ந்த கன்னிலத்திலே பொருந்திக்

கிடத்தலையுடைய குளவாய் என்னும் திருப்பதியிலே எழுந்தருளிய அவ் வாதிசேடனுருடைய திருக்கோயிலை வணங்குமளவிலே அவர்க்கு, அல் இகப்பப் பிணி நீங்க நல்லவை எல்லாம் இயைதரும் - துன்பம் நீங்கா நிற்ப அறம் பொருள் இன்பம் ஆகிய நல்லன அனைத்தும் தாமே வந்து பொருந்தா நிற்கும் ;

(வி - ம்.) மணி - நீலமணி. இது கூந்தலுக்கு நிறம் பற்றி வந்த உவமம் தகை - அழகு. வகை - கூறுபாடு. நெறி - நெறிப்பு; அறல். செறி - செறிந்த, ஒலி - ஒலித்த ; தழைத்த. பொலி - பொலிவு. அவிர் - விளங்கும். நிமிர் - எழுச்சியுடைய. கண்டோராலே பாராட்டப் பட்ட கூந்தல் என்பார் புகழ் கூந்தல் என்றார்.

நெகிழ்பிணி என மாறுக. நெகிழப் பூட்டப்பட்ட (சிலம்பு) என்றவாறு. சிலம்பு இறுகப் பூட்டப்படாமல் நெகிழப் பூட்டப் படும் அணி கலனுதல் அறிக. துணை இணை - இரண்டும் தம்முள் ஒத்த என்க. தெளிரொளி - தெளிந்த ஒளி. ஞெகிழ் - சிலம்பு. "உக - ஆம் பாடலில் (௧௮) 'சுடுபொன் ஞெகிழத்து முத்தரி சென்றார்ப்ப' என்பதனுனும்" ஓடவைத்த பொன்னுற் செய்த சிலம்பில் முத்தாகிய அரி எங்கும் கேட்ப ஆர்ப்ப" என அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையானும் அஃதப் பொருட்டாதல் உணர்க.

தெரியரிமது - வினைத்தொகையடுக்கு. ஆராய்ந்து அரித்துச் சமைத்த கள் என்க. மயிலின் தொழிலோடும் எழிலோடும் மாறு பட்டு வந்து இறைஞ்ச என்க. மயில்போல நடையினையும் சாயலினையும் உடையராய் என்பது கருத்து. பிணி என்பது உடற்பிணி பிறவிப்பிணி என்னும் இருவகைப் பிணியையும் குறித்து நின்றது. அல்லல் எனற்பாலது, அல் என ஈறு கெட்டுநின்றது. அல் - இருள் எனக் கொண்டு துன்பத்திற்கு உவம ஆகுபெயராக்கினும் அமையும். குளவாய் - சேடன் கோயில் இருக்கும் இடப்பெயர் என்க

இத்துணையும் திருமால் திருப்பதிமாண்பும் அத் திருப்பதியில் குளவாய் என்னுமிடத்தே எழுந்தருளியிருக்கும் சேடனுர் திருக் கோயிற் சிறப்பும் கூறி மேல் அச் சேடனுருடைய பல்வேறு மாண்பு களையும் பாரித்து ஓதுகின்றார்.

௩௪ - ௭௧ : திகழொளி..................அணிந்தாருந்தாம்

(இ - ள்.) ஆழியான் - சக்கரப்படையையுடைய திருமால், புகழ்சால் சிறப்பின் இருதிறத்தோர்க்கும் - புகழ் நிறைந்த சிறப்பையுடைய தேவர்களும் அசுரர்களுமாகிய இருபாலார்க்கும், திகழ் ஒளி முந்நீர் கடைந்த அக்கால் - விளங்காநின்ற ஒளியையுடைய திருப்பாற்கடலைக் கடைந்த அக் காலத்தே, வெற்பு திகழ்பு எழ வாங்கி - மந்தரமலை விளக்கமுறும்படி மேலே எழ எடுத்து, மகரமறிகடல் தன் சிர் சிரத்து ஏற்றி வைத்து நிறுத்து - மகரமீனையுடைய அலைபுரள்கின்ற அப் பாற் கடலின்கண் ஆமை உருக்கொண்ட தனது அழகிய முதுகின்

ஏற்றிவைத்து நிலைபெறச் செய்து, அமுது கடைய - அமிழ்தம் திரண்டெழும்படி கடைதற்கு, இருவயின் நாணாகி - அம்மலையாகிய மத்தினை இழுப்பதற்கு அதன் இருபுறத்தினும் கயிறாகி, மிகாஅ இருவடம் வாங்க - தேவரும் அசுரரும் ஆகிய இரு திறத்தோரும் பற்ற எஞ்சிய இருபுறத்து அந்நாணை அத் திருமாலே தனது எண்ணிறந்த கைகளானும் பற்றி இழுப்ப, ஒரு தோழங் காலம் - இவ்வாறு அப் பாற்கடல் கடையக் கழிந்த ஒரு தோழம் காலமும், உகாஅ வலியின் - தமது அழியாத ஆற்றலாலே, அறாஅது - இடையறாமல், அணிநிந் தாரும் - அம் மத்தின்கண் நாணாகிக் கிடந்து அழகு செய்தவரும்;

(வி - ம்.) பாற்கடல் என்பது தோன்ற திகழொளி முந்நீர் என்றார். முந்நீர் என்றது மூன்று நீரினையுடையது அல்லது மூன்று தன்மையுடைய தென்னும் தன் பொருள் குறியாமல் வாளா கடல் என்னும் பெயர் மாத்திரையாக நின்றது.

சிரம் என்றது ஈண்டு உச்சி யென்னும் பொருட்டாய் ஆமையுருக் கொண்ட திருமாலின் முதுகினை உணர்த்தி நின்றது.

மிகாஅ - மிகுந்த. தேவரும் அசுரரும் பற்றி எஞ்சிய இருபுறத்து வடங்களையும் திருமாலே பலப்பல கைகளைத் தோன்றுவித்துப் பற்றி இழுத்துக் கடைந்தனர் என்ப இதனை,

"அழியும் பணிவெண் டிரைபுரட்டு மாழி வயிறு கிடங்கெழுந்து
கிழிய நெடுமால் வரை துளங்கிக் கீழ்வீழ்ந்திடலுந் தனிநின்று
சுழலும் பசும்பொற்கிரி முதுகுசொறிந்தாங்கு அணிதினிளநறவம்
முழுகுந் துளவோன் மோட்டாமை யுருவமெடுத்துத் தாங்கினனால்

என்றும்,

"தாங்கும் வரைப்பொற் குடுமிமிசைத்
தடக்கை யமைத்து நிலைநிறுவத்
தேங்கொள் கமல மலர்க்கைசில
தீவா யரவம் பணிகொள்ள
ஓங்குஞ் சுடர்ப்பூந் தொடியுடுத்த
வோராயிரந்தோள் உடைய பிரான்
ஏங்கும் பரவைக் கடல்கடைந்த
திறம்பூ தென்னென் றியம்புதுமால்."

(ஆ-பு-பாக. கடல்கடை: ௧௮. ௧௬.)

என்றும் வரும் பாகவதத்தானும் உணர்க.

தோழங்காலம் என்றது தோழம் என்னும் பேரெண்ணின் அளவிற்றாகிய ஊழிக்காலம் என்றவாறு. இதனை,

"உண்ணற் கரிய நஞ்சையுண்டு ஒருதோழந் தேவர்
விண்ணிற் பொலிய அமுதளித்த விடைசேர் கொடியண்ணல்."
(திறப்புறவம்.)

எனவரும் திருஞானசம்பந்த அடிகளார் தேவாரத்தானும் உணர்க.

மந்தரமலையிற் சுற்றி ஒருதோழங்காலம் கடைதற்கு நாணுகிக் கிடத்தற்கு அவர் தம் சிந்தாத வலிமையே காரணம் என்பார் உகாஅ வலியின் என்றார். அருஅது - இடையருமல். அணிதல் - நாணுகி அப் பொன்மலைக்கும் அழகுண்டாக்குதல்.

எஉ - எஅ : மிகாஅ.........................தந்தாருந்தாம்

(இ - ள்.) மிகாஅ மறலிய மேவலியெல்லாம் - மேருமலையினைப் பேர்ப்பல் என்று மிக்கு வந்து மோதிய காற்றுத் தேவனுடைய மேம்பட்ட வலிமை யெல்லாம் தம்மைக் கடந்து, புகாஅ - அம் மலையிற் புகுதாதபடி, எதிர் பூண்டாரும் - அக் காற்றிற்கு மாருக அம் மலையினைச் சுற்றிக் கொண்டவரும் அவ் வாதிசேடனுரே ஆவர். மணிபுரை மாமலை ஞாறிய ஞாலம் - மேலும் மணியை நிறத்தாலே ஒத்த பெரிய மலைகள் தோன்றிய இம் மண்ணுலகத்தையே அணிபோல் பொறுத் தாரும் தாஅம் - தமது தலையின்கண் சூட்டப்பட்டதொரு அணிகலனைத் தாங்கும் அத்துணை எளிதாகவே தாங்கியவரும் அவ்வாதிசேடனுரேயாவர், பணிவு இல் சீர் செல்விடைப் பாகன் திரிபுரம் செற்றுழி - தன்னைப் பிறர் பணிதல் அன்றித் தான் பிறரைப் பணிதல் இல்லாத தலைமைத் தன்மையினையும் விரைந்து செல்லும் கானூர்தியினையும் உடைய பிறவாயாக் கைப் பெரியோன் முப்புரத்தை அழித்த காலத்தே, கல்லுயர் சென்னி இமயவில் நாண் ஆகி - ஏனை மலைகளினுங் காட்டில் உயர்ந்த சிகரத்தினையுடைய இமயமலையாகிய அப்பெருமான் கொண்ட வில்லிற் கேற்ற நாணுகி, தொல்புகழ் தந்தாரும் தாம் - அப் பெருமானுக்குப் பழைதாகிய புகழினை அளித்த வரும் அவ்வாதிசேடனுரே ஆவர் ;

(வி - ம்.) ஆதிசேடனைக் குண்டலினி சத்தி என்பர் அளவை நூலோர். அஃதாவது உலகத்துள்ள பல்வேறு சக்திகளை எல்லாம் ஒன்றற்கொன்று மிக்கு ஒன்றனை ஒன்று அழிக்காதபடி சமனிலைப் படுத்து அவற்றை அடக்கி நடத்துவதொரு சக்தி என்பதாம். இங்ஙன மாகவின் மிகாஅ மறலிய மேவலியெல்லாம் புகாஅ எதிர்பூண்டா ருந்தாம் என்றதற்கு, ஐம்பெரும் பூதங்களின் வலியெல்லாம் தம்முள் ஒன்றனை ஒன்று மிகாது தன்கண் அடங்க அவற்றைச் சமனிலைப் படுத்து அடக்கிப் பொறுத்தாரும் தாம் எனினுமாம். நிலந்தாங்குங் கால் மிக எளிதாகவே தாங்குவர் என்பார் "ஞாலம் அணி போல் பொறுத்தார்" என்றார். அணிகலனைப் பொறுக்கு மத்துணை எளிதாகப் பொறுத்தார் என்றவாறு.

பணிவு இல் சீர் - தான்பிறரைப் பணிதல் வேண்டாத சிறப்பு என்க. அஃதாவது தனக்கோர் தலைவனின்றி அனைவர்க்கும் தானே தலைவன் ஆகும் சிறப்பு என்க. "சேர்ந்தறியாக் கையானை" என மணிவாசகப் பெருமான் இயம்பியதும் இக் கருத்துடையதே யாகும்.

விடைப்பாகன் - காளையூர்தியுடையோன்; சிவபெருமான், கல் - மலை. மலைகளிலெல்லாம் உயர்ந்த சென்னியையுடைய இமயம் என்க.

இமயவில்லுக் கேற்ற நாணாகிச் சிவபெருமானுக்குப் புகழ்தந்தார். எனவே, மந்தரமலைக்குக் கடைகயிறாகித் திருமாலுக்குப் புகழ்தந்தாரும் இமயத்திற்கேற்ற நாணாகிச் சிவபெருமானுக்குப் புகழ்தந்தாரும் நாமே என முதற் கடவுளர் புகழ்க்குக் காரணமான சிறப்புடையர் எனப் புகழ்ந்தவாறுதல் உணர்க.

என்றிவ்வாறு ஆதிசேடனாரைப் படர்க்கையிற் பரவிப் பின்னர் இருந்தையூரமர்ந்த எம்பெருமானை முன்னிலையாக்கி வாழ்த்தி முடிக்கின்றார்.

எக - அஉ : அணங்குடை.............................ஒருங்கே

(இ - ள்.) அணங்கு உடை ஆயிரம் அருந்தலை விரித்த கணங்கொள் சுற்றத்து அண்ணலை வணங்கி - எம்பெருமானே! இவ்வாறு பல்வேறு சிறப்புடையோரும் கண்டார்க்கு அச்சஞ் செய்தலையுடைய ஆயிரமாகிய அரிய தலைகளைப் பரப்பி நினக்கு நிழல் செய்வோரும் திரண்ட சுற்றத்தினையுடையாரும் தலைமைத் தன்மையுடையோருமாகிய அச் சேடனாரை வணங்கி, நின் நல் அடி எம் சுற்றமொடு ஒருங்கே ஏத்திப் பரவுதும் - நினது நல்ல திருவடியை எமது சுற்றத்தாரோடு ஒருசேர ஏத்தி வாழ்த்தா நின்றேம், எல்லேம் பிரியற்க - அஃதெற்றுக் கெனின் நின் னடியேமாகிய யாமெல்லேமும் நினது திருவடி நீழலை எப் பொழுதும் பிரியாதிருக்க வேண்டும் என்று கருதியேயாம்.

(வி - ம்.) அணங்கு - அச்சம்; வருத்தமுமாம். கணம் - திரள். சுற்றம் என்றது சேடனாரின் இளைஞர்கள் தொண்ணூற்றென்பதின் மரையும் என்க. அண்ணல் - தலைமைத்தன்மையுடையோன். நினது திருப்பாயலும் குடையுமாய்ச் சிறந்த அண்ணலை முதலில் வணங்கிப் பின்னர் நின்னை ஏத்திப் பரவுதும் என்றவாறு. இதனால் நின் அடியார் எமக்கு நின்னையே ஒப்பவர் ஆவர் என்று அடியார் பெருமை உணர்த்தினமையும் உணர்க.

உயிர்களின் பிறவிப்பிணி அகற்றுவது திருவடியே ஆகலின் நின் னினும் நல்லனவாகிய திருவடி என்பார் "நல்லடி" என்றார். மாயோயே மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடி எனவும், "நின்னிற் சிறந்த நின் றாளிணையவை" எனவும் இந் நூலின்கண் முன்னும் போந்தமை உணர்க.

எல்லேம் - யாமெல்லோரும்.

எல்லேம் பிரியற்க எனவே என ஒருசொல் வருவித்து முடிக்க.

எல்லேம் பிரியற்க என்றது. "பொருளும் பொன்னும் போகமு மல்ல நின் திருவடியைப் பிரியாமையே" என்பதுபட நின்றது.

## இரண்டாம் பாடல்

## வையை

### பொருட் சுருக்கம்

இப் பாடல் தலைவன் பரத்தையரோடு வையையின்கண் நீராடினன் எனக்கேட்ட தலைமகள் ஊடியிருந்தாளாக, அவள் ஊடலைத் தீர்க்கும் பொருட்டுத் தலைவன் தோழியை வாயில் வேண்டினன். அத் தலைவனுக்குத் தோழி வையை நீரணியும் ஆண்டுப்பட்ட செய்தியும் கூறி வாயில் மறுப்பாள் கூற்றாக அமைந்துளது.

**க - உஎ.** பெரிய நிலம் காணப்படாதபடி மழை பொழிந்தமையாலே வையை யாற்றில் வெள்ளம் பெருகி மதுரையை விரைந்து எய்தியது. அந்நீர் வருகையினைக் கேட்ட மதுரை மாந்தர் தம்மை அணி செய்து கொண்டு குதிரை தேர் முதலிய ஊர்திகளில் ஏறி வையை நோக்கிச் சென்றனர். அவர்கள் ஊடுவாரும் ஊடலொழிப்பாரும் உணர்வாரும் ஆடுவாரும் பாடுவாரும் நகைப்பாரும் ஓடுவாரும் ஆகிச் சென்றனர். இவ்வாறு கற்றாரும் கல்லாதவரும் கயவரும் மக்கட்பெற்ற சான்றோரும் கற்புடை மகளிரும் பாண்டிய மன்னன் உட்பட மதுரையிலுள்ளார் எல்லோரும் வையையை எய்தினர்.

**உஅ - சுா.** வையையின்கண் மகளிரும் மைந்தரும் பலவாறாக நீராட்டயர்ந்தனர். அவர்கள் அணிந்திருந்த மாலைகளும் மணப்பொருள்களும் அந் நீரிற் கலந்தமையால் அந் நீர் தூய்மையற்றதாயிற்று. அந்தணர் அந் நீரில் ஆடாது அகன்றனர்.

**சுச - அச.** அம் மதுரை மாந்தர் திருமருத முன்றுறையை அடைந்து நீராடினர். பாணர் மருதப்பண் பாடினர். அவர்கள் பாடப்பாடத் தாமும் பாடிக்கொண்டும் ஊடியும் உணர்ந்தும் கூடியும் சிதைந்தும் சூடியும் தொழுதும் அம் மக்கள் நீராடினர். அந்நீர் அம்மக்கள் அணிந்த சந்தனமும் மாலைகளும் மலர்களும் நெகிழ்ந்து நிறைந்தமையாலே தன்னிறம் தோன்றாது மறைந்தது.

**அரு - கூசு.** இவ்வாறு பாண்டியன் மதுரை மக்களொடு வையையில் நீராடியது இந்திரன் தேவர்களொடு ஆகாய கங்கையில் நீராடியதனையே ஒத்திருந்தது.

மாநிலந் தோன்றாமை மலிபெயல் தலைஇ
ஏமநீர் எழில்வான மிகுத்தரும் பொழுதினான்
நாகநீள் மணிவரை நறுமலர் பலவிரைஇக்
காமரு வையை கடுகின்றே கூடல்
நீரணி கொண்டன்று வையை யெனவிரும்பித்
தாரணி கொண்ட வுவகை தலைக்கூடி
ஊரணி கோல மொருவ ரொருவரிற்
சேரணி கொண்டு நிறமொன்று வெவ்வேறு
நீரணி கொண்ட நிறையணி அங்காடி
ஏரணி கொண்டார் இயல் ;
கைபுனை தாரினர் கண்ணியர்
ஐயெனு மாவியர் ஆடையர்
நெய்யணி கூந்தலர் பித்தையர்
மெய்யணி யானை மிசையராய் ஒய்யெனத்
தங்காச் சிறப்பிற் றளிரியலார் செல்லப்
பொங்கு புரவிப்புடைப் போவோரும் பொங்குசீர்
வையமுந் தேரும் அமைப்போரும் எவ்வாயும்
பொய்யாம்போய் என்னாப் புடைகூட்டிப் போவநர்
மெய்யாப்பு மெய்யார முடுவார் வையத்துக்
கூடுவார் ஊடல் ஒழிப்பார் உணர்குவார்
ஆடுவார் பாடுவார் ஆர்ப்பார் நகுவார்நக்
கோடுவார் ஓடித் தளர்வார்போ யுற்றவரைத்
தேடுவார் ஊர்க்குத் திரிவார் இலராகிக்
கற்றாருங் கல்லா தவருங் கயவரும்
பெற்றாரும் பெற்றாற் பிழையாத பெண்டிரும்
பொற்றேரான் றானும் பொலம்புரிசைக் கூடலும்
முற்றின்று வையைத் துறை ;
துறையாடுங் காதலர் தோள்புணை யாக
மறையாடு வாரை யறியார் மயக்கிப்
பிறையேர் நுதலியர் எல்லாருந் தம்முன்
நிகழு நிகழ்ச்சி யெம்பாலென் றாங்கே
இகல்பல செல்வம் விளைத்தவட் கண்டிப்பால்
அகல் அல்கும் வையைத் துறை ;
காதலான் மார்பிற் கமழ்தார் புனல்வாங்கி

ஏதிலாள் கூந்த லிடக்கண்டு மற்றது
தாதாளென் றூளுக்குத் தானே புனல்தந்து
வேய்தந்த தென்னை விளைந்தமை மற்றது
நோதலே செய்யே னுணங்கிழையா யிச்செவ்வி
போதலுண் டாங்கோ லறிந்து புனல்புணர்த்த(து)
ஓஒ பெரிதும் வியப்பு ;
கயத்தக்க பூப்பெய்த காமக் கிழமை
நயத்தகு நல்லாளைக் கூடுமா கூடும்
முயக்குக்குச் செவ்வி முலையு முயக்கத்து
நீரு மவட்குத் துணைக்கண்ணி நீர்விட்டோய்
நீயு மவட்குத் துணை ;
பணிவி லுயர்சிறப்பிற் பஞ்சவன் கூடல்
மணியேழின் மாமேனி முத்த முறுவல்
அணிபவளச் செவ்வாய் அறங்காவற் பெண்டிர்
மணியணிந்த தம்முரிமை மைந்தரோ டாடித்
தணிவின்று வையைப் புனல் ;
புனலாடு போவதோர் பூமாலை கொண்டை
எனலூழ் வகையெய்திற் றென்றேற்றுக் கொண்டை
புனலாடு நாடறியப் பூமாலை யப்பி
நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்யுங் கனல்புடன்
கூடாமு னூடல் கொடியதிறம் கூடினல்
ஊடாளோ ஊர்த்தலர்வந் தூர்ந்து ;
எனவாங்கு
ஈப்பாய் அடுநறாக் கொண்டதிவ் யாறெனப்
பார்ப்பார் ஒழிந்தார் படிவு ;
மைந்தர் மகளிர் மணவிரை தூவிற்றென்
றந்தணர் தோயலர் ஆறு ;
வையைதே மேவ வழுவழுப் புற்றென
ஐயர்வாய் பூசுறார் ஆறு ;
(விரைபிரை விரைதுறை கரையழி பிழியூர ஊர்தரும்புனல்
கரையொடு கடலிடை வரையொடு கடலிடை
நிரைநிரை நீர்தரு நுரை
நுரையுடன் மதகுதொ றிழிதரு புனல்கரை புரளிய
செலுமறி கடல்

புகுமள வளவியலிசை சிறைதணிவின்று வெள்ளமிகை
வரைபலபுரை யுயர்கயிறணி பயிற்றேழில்
மணியணி யானைமிசை மைந்தரு மடவாரும்
நிரைநிரை குழீஇயின ருடன்சென்று)
குருமணி யானை இயல்தேர்ப் பொருநன்
திருமருத முன்றுறை முற்றங் குறுகித்
தெரிமருதம் பாடுப பிணிகொள்யாழ்ப் பாணர்
பாடிப் பாடிப் பாய்புனல்
ஆடி யாடி யருளியவர்
ஊடி ஊடி உணர்த்தப் புகன்று
கூடிக் கூடி மகிழ்பு மகிழ்பு
தேடித் தேடிச் சிதைபு சிதைபு
சூடிச் சூடித் தொழுது தொழுது
மழுபொடு நின்ற மலிபுனல் வையை
விழுதகை நல்லாரு மைந்தரு மாடி
இமிழ்வது போன்ற திந்நீர் குணக்குச் சான்றீர்
முழுவது மிச்சிலா வுண்டு;
சாந்துங் கமழ்தாருங் கோதையுஞ் சுண்ணமும்
கூந்தலும் பித்தையுஞ் சோர்ந்தன பூவினு மல்லாற்
சிறிதானு நீர்நிறந் தோன்றாதிவ் வையையாறு
மழைநீர் அறுகுளத்து வாய்பூசி யாடும்
கழுநீர மஞ்சனக் குங்குமக் கலங்கல்
வழிநீர் விழுநீர் அன்று வையை;
வெருவரு கொல்யானை வீங்குதோள் மாறன்
உருகெழு கூட லவரொடு வையை
வருபுன லாடிய தன்மை பொருவுங்கால்
இருமுந்நீர் வையம் பிடித்தென்னை யானூர்க்
கொருநிலையு மாற்ற வியையா வருமாவின்
அந்தர வானியாற் றாயிரங் கண்ணினான்
இந்திரன் ஆடுந் தகைத்து.

என்பது வையையின்கண் தலைவன் பரத்தையரோடு நீராடினான் என அறிந்த தலைமகள் ஊடியிருப்ப அவ் வூட லுணர்த்தும்படி தோழியை வாயிலிரந்த அத் தலைவனுக்குத் தோழி வையையது வரவும் ஆண்டுப்பட்ட நிகழ்ச்சியும்

கூறுமுகத்தானே அவனது பரத்தமையை யுணர்த்தி வாயின் மறுத்தது.

குறிப்பு: இப் பாடல் தொல். செய்யுளியல்: ககஅ - ஆம் நூற்பா மேற்கோளாக இளம்பூரணத்திற் கண்டது.

## உரை

க - ச: மாநிலம்.......................கூடல்

(இ - ள்.) எழில் வானம் - அழகிய மேகம், மலி பெயல் தலைஇ - மிக்க மழையைப் பொழிந்து, மாநிலம் தோன்றாமை - இந்தப் பெரிய நிலம் தோன்றாமல் மறையும்படி, ஏம நீர் இருத்தரும் பொழுதினான் - உலகிற்குப் பாதுகாவலாகிய நீரினை வீழ்த்திய பொழுதிலே, கா மரு வையை - கண்டார்க்கு விருப்பம் வருதற்குக் காரணமான வையையாற்றின்கட் பெருகிய வெள்ளம், நாகம் நீள் மணிவரை - நாக முதலிய தருக்கள் ஓங்கி வளர்ந்த மணிகட்குப் பிறப்பிடமான சைய மலையின்கண் அத் தரு முதலியவற்றின்கண் உதிர்ந்த, பல நறு மலர் விரைஇ - பலவேறு நறிய மலர்களினது மணங்களையும் ஏற்று மணங் கமழ்ந்து, கூடல் கடுகின்று - நான்மாடக்கூடல் எனப்படும் மதுரைக்கு விரைந்து வந்தது.

(வி - ம்.) வானம்-ஆகுபெயர்; மேகம். மலிபெயல் - மிக்கமழை. தலைஇ - பொழிந்து. பொழிந்து இருத்தரும் பொழுதினான் என்க. இருத்தல் - வீழ்த்துதல். நிலம் யாண்டும் நீரானே மறையும்படி வீழ்த்திய பொழுது என்க. ஏமம் நீர் - உலகிற்குப் பாதுகாவலாகிய நீர் என்க.

> "வானின் றுலகம் வழங்கி வருதலாற்
> றானமிழ்த மென்றுணரற் பாற்று." (குறள் - கக)

என்றும்,

> "விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
> பசும்புற் றலைகாண் பரிது" (குறள் - கசு)

என்றும் ஓதுபவாகலான் ஏமநீர் என்றார்.

நாகம் - ஒருவகை மரம். இனம் செப்பு மாற்றான் நாக முதலிய மரங்கள் என்க. மணி வரை - அழகிய மலையுமாம். மலை - சையமலை. என்க. பல நறுமலரையும் சுமந்து அவற்றின் மணத்தையும் ஏற்றுக் கமழ்ந்து என்க.

> "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி
> ......... ......... .........
> புண்ணிய நறுமலர் ஆடை போர்த்துக்

கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி
புனல் யாறன்றிது பூம்புனல் யாறெனா ''
(சிலப். ௧௩ : ௧௭௨ - ௫.)

என்றார் இளங்கோவும்,

விரைஇ - மணந்து. காமரு - காமம் வரும் என்பது விகாரத்தால். காமரு என நின்று கண்டார்க்கு விருப்பம் வரும் என்முயிற்று. வையையின்கட் பெருகிய வெள்ளம் கடுகின்று என்க. கூடல் - மதுரை.

௫ - ௧௦ : நீரணி......................இயல்

(இ - ள்.) வையை நீர் அணி கொண்டன்று என - வையை யாறு புதுநீர் வருகையாலே பொலிவுற்றது என்று கண்டோர் கூறக்கேட்ட, ஊர் விரும்பி - அம் மதுரையிலுள்ள மாந்தரெல்லாம் அப் புதுநீர் ஆடலின்பத்தை விரும்பி, தார் அணி கொண்ட உவகை தலைக்கூடி - தூசிப்படையினது தன்மையை மேற்கொண்டதொரு மகிழ்ச்சி எய்தப்பெற்று. ஒருவர் ஒருவரின்-ஒவ்வொருவரும், அணி சேர் அணி கோலமகொண்டு-தத்தம் இயற்கை அழகிற்குப் பொருந்திய ஒப்பனைகளானும் அழகு செய்துகொண்டு, நிறம் ஒன்று நீர் அணி கொண்ட நிறை அங்காடி - நன்னிறம் பொருந்திய பல்வேறு வகைப்பட்ட நீராட்டிற்குரிய நெட்டிமுதலியவற்றுற் செய்த அழகுப் பொருள்கள் கொண்ட நிறைந்த நீரங்காடியினும் சென்று, இயல் ஏர் அணி கொண்டார் - தமது இயற்கையழகினை ஆணடுள்ள பொருள்களானும் அழகு செய்து கொள்வாராயினர்.

(வி - ம்.) நீர் அணி கொண்டன்று - நீரானே அழகுற்றது. கொண்டன்று - கொண்டது. என - என்று கண்டோர் கூற என்க. ஊர் விரும்பி எனக் கூட்டுக ஊர் ஆகுபெயர். அம் மதுரையிலுள்ளோரர் என்க. தாரணி - இருபெயரொட்டு. தாராகிய அணி என்க. அஃதாவது தூசிப்படை. தூசிப் படையினது தன்மையை மேற்கொண்டதொரு உவகை என்க. அஃதாவது - தாம் தாம் முந்திச் செல்லுதல் வேண்டும் என்ற விருப்பமுடையாராய் என்றவாறு இதனை, இந் நூலில் ஆறும் பாடல் ௩௧-ம் அடிக்கண் அணியணியாகிய தாரர்' என்புழி ஆசிரியர் பரிமேலழகர் "திரள் திரளாகிய தூசித்தன்மையராய்'' என நுண்ணிதிற் பொருள் கூறி மேலும் "தூசித்தன்மை - முன்செல்லுதல் '' என அரிதின் விளக்கிச் சேறலானும் உணர்க.

ஒருவர் ஒருவரின் - ஒவ்வொருவரும் என்றவாறு நிறமொன்று - நிறம் பொருந்திய என்றது, நெட்டி முதலியவற்றுற் செய்து நிற மூட்டிய என்றவாறு அவை வாள் வேல் தேர் முதலியன. நீர்அணி - நீராடற்குரிய அழகுப் பொருள்கள் என்க. அங்காடி - நீரங்காடி. அஃதாவது நீராடற்குரிய பொருள்கள் விற்கும் கடைத்தெரு. அப் பொருள்கள் முன்கூறிய நெட்டியாலியற்றிய படைக்கலன்களும் பொன்மீன் பொன்னண்டு மாலை மணப்பொருள் முதலியனவுமாம். இத்தகைய அங்காடி அக்காலத்திருந்தமையை,

"ஊரங் காடி யுய்த்துவைத் ததுபோல்
நீரங் காடி நெறிப்பட நாட்டிக்
கூல வாழ்நர் கோன்முறை குத்திய
நீலக் கண்ட நிரைத்த மருங்கின்
உண்ண மதுவும் உரைக்கு நானமும்
சுண்ணமுஞ் சாந்துஞ் சுரும்புமிர் கோதையும்
அணியுங் கலனும் ஆடையு நிறைந்த
கண்ணகன் கடைகள் ஒண்ணுது லாயத்துக்
கன்னி மாண்டுமிழ்த் துன்னுபு நசைஇய
தூதுவர் போல மூசின குழீஇ" (பெருங்-க-நஅ: ருசு-சுரு)

எனவரும் கதையானும் உணர்க.

கக - கஅ: கைபுனை.......................போவநர்

(இ - ள்.) கை புனை தாரினர் - தொழிற்றிறம்படத் தொடுத்த தாரினையுடையாராய், கண்ணியர் - தலையிற் சூட்டும் மாலையினையுடையராய், ஐ எனும் ஆவியர் ஆடையர் - நுகர்ந்தோர் ஐ என்று வியந்து பாராட்டுதற்குரிய நறுமணப புகையூட்டிக் கொண்டோராய் வியக்கத்தக்க நுண்ணிய ஆடையினை அணிந்தோராய், நெய்யணி கூந்தலர் பித்தையர் - கூந்தலிடத்தேயும் பித்தையினிடத்தேயும் மண நெய் பூசப்பெற்றோராய், தங்காச் சிறப்பின் தளிர் இயலார் செல அப் பொங்கு புரவிப் புடை - அவருள் தாழாத பெண்மை நலத்திணையும் மாந்தளிர் போன்ற நிற அழகினையும உடைய மகளிர் நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளை ஊர்ந்து செல்லா நிற்ப அக் குதிரைகளின் பக்கத்தே, மெய் அணி யானை மிசையரா ஒய்யெனப் போவோரும் - உடலினை ஒப்பனை செய்யப்பட்ட யானைகளை ஏறி ஆடவர்கள் செல்லா நிற்பவும், பொங்கு சீர் வையமும் தேரும் அமைவோரும் - மிக்க அழகுடைய வண்டிகளினும் தேர்களினும் ஏறியிருந்து ஊர்ந்து செல்வோரும், எவ்வாயும் போய்ப் பொய்யாம் என்னுப் புடை கூட்டிப் போவாரும் - சிலர், யாம் எவ்விடங்களினும் பிரிந்து போய் ஒருவர்க்கொருவர் காணப்படாதேமாகேம் என்று தம் சுற்றத்தாரைச் சேர வம்மின் எனத் தம் பக்கலிலே கூட்டி அழைத்துச் செல்லா நிற்போரும்,

(வி - ம்.) தொழிற்றிறம்படப் புனைந்த தார் என்பார், 'கைபுனை தார்' என்றார், கைபுனை என்பதனைக் கண்ணிக்கும் கூட்டியுரைத்துக் கொள்க. தார் - மார்பின் அணியும் மாலை. கண்ணி - தலையிற் சூடும் மாலை. இதனை,

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பின் தாருங் கொன்றை" (கடவுள் வாழ்த்து)

எனவரும் புறநானூற்றுச் செய்யுளானும் அதன் உரையில் "திருமுடி மேற் சூடப்படும் கண்ணி" என அதன் உரையாசிரியர் விரித்தோதிச் சேறலானும் உணர்க.

ஐ - வியப்பு. கண்டோர் ஐயெனக் கூறி வியப்பதற்குரிய என்க. ஆவி - மணப்புகை. புகையூட்டிக் கொண்டோர் என்க. ஐயென என்பதனை ஆடையர்க்கும் கூட்டுக. நெய் - மணநெய். கூந்தல் - மகளிர் மயிர். பித்தை - ஆடவர் மயிர்.

தளிரியலார் யானை மிசைச் செல்ல அவர் தம் கணவர் புரவியின் மேல் அவர் புடைப் போவார் எனினுமாம்.

பொங்குசீர் - மிக்க அழகு. வையம் - வண்டி. அமைப்போரும் என்றும் பாடம் இதற்கு வையம் தேர் இவற்றைப் பண்ணுறுத்தி அவற்றில் போவோரும் என்க. எவ்வாயும் போய்ப் பொய்யாம் என்னு என மாறுக. பொய்யாம் என்றது பொய்ப்படுவேம் அல்லேம் என்றவாறு. பொய்ப்படுதலாவது ஒருவர் ஒருவரிடத்தினின்றும் பிரிந்து போய்க் காணப்படாதவர் ஆதல். காணப்படாதேம் ஆகேம் என்று, புடை கூட்டிப் போவாரும் என்க. புடை கூட்டுதல் - ஓரிடத்தே சேரச் செய்தல் என்க,

போவநர் - போவார் ஈண்டு எண்ணும்மை தொக்கது.

தாரினருமாய்க் கண்ணியருமாய் ஆவியருமாய் ஆடையருமாய்க் கூந்தலருமாய்ப் பித்தையருமாய் மகளிரும் மைந்தரும் அணிசெய்து கொண்டு, அவருள் மகளிர் யானையிற் செல்ல, அவர்தம் கணவர் குதிரையில் அவர் புடைச் செல்ல, சிலர் வையத்தினும் சிலர் தேரினும் செல்வர் சிலர் பொய்யாம் என்று புடைகூட்டிப் போவர் என் இயைக்க.

கக - உஎ : மெய்யாப்பு..............................துறை

(இ - ள்.) மெய்யார மெய்யாப்பு மூடுவார் - உடலுக்குப் பொருந்தச் சிலர் மெய்ப்பை யிட்டுச் செல்லா நிற்பர், வையத்துக்கு ஊடுவார் - வண்டியின்கண் ஏறிச் செல்வோருட் சில தலைவியர் தங் கணவன்மாரோடு பிணங்கா நிற்பர். ஊடல் - ஒழிப்பார் - அத் தலைவன்மார்கள பணிமொழி பல கூறி அவர் தம் ஊடலை அகற்றா நிற்பர். உணர்குவார் - அங்ஙனம் ஊடல் தீர்த்துழி அம் மகளிர் ஊடல் தீர்ந்து அவரோடு அளவளாவி மகிழா நிற்பர். ஆடுவார் - சிலர் கூத்தாடா நிற்பர், பாடுவார் - சிலர் பாடா நிற்பர், ஆர்ப்பார் - சிலர் ஆரவாரியா நிற்பர், நகுவார் - சிலர் வாய்விட்டு நகைப்பர், நக்கு ஓடுவார் - சிலர் நகைத்துக்கொண்டே ஓடா நிற்பர், ஓடித் தளர்வார் - சிலர் ஓடியதனாலே இளைப்பர், உற்றவரைப் போய்த் தேடுவார் - சிலர் தமக்குரிய உறவினரை அங்குமிங்கும சென்று தேடா நிற்பர், ஊர்க்குத் திரிவு இலராகி - இவ்வாறு வையையை நோக்கிச் செல்பவரே அல்லது ஊர்நோக்கித் திரும்பிப் போவார் ஒருவரும் இலராய், கற்றாரும் கல்லாதவரும் கயவரும் - நன்கு

கற்றுணர்ந்த சான்றோரும் கல்லாமாக்களும் கயமாக்களும், பெற்றாரும் - மக்களைப் பெற்றவரும், பெற்றார்ப் பிழையாத பெண்டிரும் - தம்மை மணந்த கணவன் சொற்கடவாத கற்புடைப் பெண்டிரும், பொன் தேரான் தானும் - இவர்கட்கெல்லாம் வேந்தனாகிய பொன்னாலியற்றிய தேரையுடைய பாண்டியனும், பொலம்புரிசைக் கூடலும் - பொன் மதிலையுடைய அம் மதுரையிலுள்ள ஏனையோரும் ஆகிய மக்கட் கூட்டம், வையைத் துறை முற்றின்று - வையையாற்றினது நீராடற்றுறையைச் சென்று எய்தியது;

(வி - ம்.) மெய்யாப்பு - சட்டை. வையத்துக்கு - வேற்றுமை மயக்கம். ஆடலும் பாடலும் நகுதலும் நக்கு ஓடுதலும் ஓடியிளைத்தலும் அளவிகந்த மகிழ்ச்சியால் மாக்களிடையுண்டான நிகழ்ச்சிகள் என்க.

ஊர்க்குத் திரிவார் - ஊர்நோக்கித் திரும்பிச் செல்வோர். கயவர்-கீழ்மக்கள். பெற்றார் - மகப்பெற்ற சான்றோர். பெற்றார்ப் பிழையாத பெண்டிர் - கற்புடைமகளிர். பொற்றேரான் - பாண்டியன். பொலம் புரிசை - பொன்மதில். கூடலும் என்றது, கூடலிலுள்ள ஏனையோரும் என்றவாறு. ஆகிய கூட்டம் என ஆக்கச் சொல்லும் பயனிலைக்கு ஏற்ற கூட்டம் என்னும் ஒருமைச்சொல்லும் வருவித்துக் கூறுக. முற்றின்று முற்றியது - அடைந்தது.

இதுகாறும் தோழி வையை வரவும் மாந்தர் வரவும் கூறி மேலே தலைமகன் பரத்தையரோடு நீராடினமை உணர்ந்தமையைக் குறிப்பான் உணர்த்தி வாயின் மறுப்பாள் அதனைப் பிறர் மேலிட்டுக் கூறுகின்றாள்.

௨அ - ௩௩ : துறையாடுப்..........................துறை

(இ - ள்.) பிறையேர் நுதலியர் எல்லாரும் தம்முன் துறையாடுங் காதலர் தோள் புணையாக மறையாடுவாரை அறியார் மயக்கி - பிறைபோலும் அழகிய நெற்றியினை உடைய எல்லா மகளிர் தம்முன்பே தம் கணவன்மாருடைய தோள்களையே தெப்பமாகக் கொண்டு மறைவாக நீராடாநின்ற பரத்தையரை அறியாதவராக மயக்குவித்து, நிகழும் நிகழ்ச்சி - நிகழாநின்ற நீர் விளையாடல்களை, எம்பால் என்று ஆங்கே(?)...........அவண் விளைத்து கண்டு - அவ்விடத்தே நிகழச்செய்து பார்த்து, இப்பால் - இவ்விடத்தே, வையை அகல் துறை அல்கும்-வையைப் புதுப்புனல் அகன்ற துறையிடத்தே வாளாகிடக்கும்;

(வி - ம்.) இது, தலைவன் வேறு துறையிடத்தே பரத்தையருடன் நீராடினான் எனக் கேட்டிருந்த தோழி அந்நிகழ்ச்சியை வையைநீரின் மேலதாக்கி இவ்வையைநீர் பிற துறைகளிடத்தே பரத்தையரோடு தலைவர் நீராடும் நிகழ்ச்சியை விளைவித்து அத் தலைவர் தத்தம் தலைவியரோடு ஆடுதற்குரிய இப் பெருந்துறையில் வாளா பெருகிக் கிடக்கும் என்று தலைவன் பரத்தமையையும் அவன் தலைவி

யோடு நீராடாக் குற்றத்தையும் குறிப்பால் உணர்த்திய படியாம் ௩௧ - 'எம்பால் என்றுங்கே' என்னும் தொடர்க்குப் பொருள் விளங்கிற்றில்லை ஆராய்க.

௩௧ - ௨. "நிகழு நிகழ்ச்சி எம்பா லென்றுங்கே
இகலுவ செல்வ நினைத்தெவட் கண்டிப்பால்."

என்றும் பாடம்.

௩௩. 'அகலல்குற் பையேய்த்தது' என்றும் பாடம்.

நேரிழையார் மறையாடுவாரை அறியாதவராய் மயக்கி விளைத்து என இயைக்க. இதனால் நீ தலைவி அறியாள் என்று பரத்தையரோடு பிறதுறைக்கண் நீராடியதனைத் தலைவி கேட்டறிந்துள்ளாள் என்று உணர்த்தினளாயிற்று.

இனி, மேலும் காதற் பரத்தையரோடும் இற்பரத்தையரோடும் நீராடியபொழுது ஆண்டுப்பட்டதொரு நிகழ்ச்சியை ஏதிலார் மேலிட்டுக் கூறுகின்றாள்.

௩௪ - ௪௦: காதலான்......................வியப்பு

(இ - ள்.) காதலான் மார்பிற் கமழுதார் - காதற் பரத்தையோடு நீராடினன் ஒருதலைவன் ஆண்டுவந்த இற்பரத்தைக்குத் தன் மாலையை அக் காதற்பரத்தை யறியாதபடி கொடுக்கக் கருதித் தன் மார்பின் மாலையை ஒழுகும் புனலிலே விட்டானாக, ஏதிலாள புனல் வாங்கிக் கூந்தலிடக் கண்டு - அம் மாலையை அவ் விற்பரத்தை நீரினின்றும் எடுத்துத் தன் கூந்தலிலே சூடிக்கொண்டாளாக. அதனைக் கண்ட காதற் பரத்தை விரைந்து அவ் விற்பரத்தையை அணுகி, மற்று அது தாதா என்றாளுக்கு - ஏடி அம் மாலையை என்பாற் கொடு கொடு என்று கேட்ப அங்ஙனம் கேட்ட காதற் பரத்தையை நோக்கி இற்பரத்தை, புனல் தானே தந்து வேய் தந்தது - ஏடி இம்மாலை நின்னுடையதன்று இப் புதுப்புனல் எங்கிருந்தோ கொணர்ந்து என் கூந்தலிலே சேர்த்தியது என்று கூற, என்னை? - அது கேட்ட காதற்பரத்தை என்னிது! என்னிது! எனத்தன்னுட் கூறி அவளை நோக்கி, நுணங்கு இழையாய் மற்றது விளைந்தமை நோதல் செய்யேன் - நுண்ணிய தொழிற்றிறமமைந்த அணிகலன்களையுடைய அணங்கே அஃது அங்ஙனம் நிகழ்ந்தமைபற்றி யான் வருந்துகின்றிலேன் எனினும், புனல் இச் செவ்வி போதல் உண்டாம் அறிந்து புணர்த்தது ஓஒ பெரிதும் வியப்பு - இப் புதுநீர்தான் இப்பொழுது நினது செலவு இவ்விடத்தே நிகழ்வதாம் என்பதனை அறிந்து இம் மாலையினை நின்பாற் கொணர்ந்து சேர்த்ததாகிய செயல் ஓஒ ஓஒ மிகவும் வியத்தகுமொரு செயலேயாகும் அது நினைந்தே யான் வியவாநின்றேன் எனக் கூறி;

(வி - ம்.) காதற் பரத்தை தன் காதலான் மார்பின் கமழ் தாரை ஏதிலாள் புனல் வாங்கிக் கூந்தல் இடக்கண்டு என இயைத்துக் கொள்க. எனவே அக் காதலான் அவ் வேதிலாள் பொருட்டுத் தன் தாரைக் காதற்பரத்தை அறியாதபடி புனலிற் போக்கினுன் என்பதும், அதனை அறிந்த அவ் வேதிலாள் அதனை எடுத்துத் தன் கூந்தலிலே சூட்டுங்கால் காதற்பரத்தை கண்டனள் என்பதும் போதருதல் உணர்க.

ஏதிலாள் - என்றது, இற்பரத்தையை. 'ஏதிலாள் கூந்தலிடைக் கண்டு' என்றும் பாடம்; இதற்குக் கூந்தலிடத்தே கண்டென்க. 'புறன்றந்து' என்றும் பாடம். மற்றது - அங்ஙனம் நிகழ்ந்த அதற்கு என்க. போதல் - செலவு. இச் செவ்வி போதல் உண்டாம் என்று அறிந்து புனல் புணர்த்தது வியப்பு என்றது. தலைவனைக் குறிப்பானே கள்வனே இது நின் செயல் எனக் கடிந்து கொண்டபடியாம்.

என்று என ஒருசொல் வருவித்துக் கொள்க. கொல் - அசை.

இங்ஙனம் இற்பரத்தைக் கூறிப் பின்னர்த் தலைவனை நோக்கிப் பின்வருமாறு கடிந்து கூறுகின்றுள்.

சக - சரு : கயந்தக்க............................துணை

(இ - ள்.) பெய்த கயந்தக்க பூ காமக் கிழமை நயத்தகு நல்லாளை கூடுமாகூடும் முயக்குக்கு - ஐய நீரிலே பெய்யப்பட்ட மென்மைத்தன்மை தக்கிருந்த மலர்மாலை பிறர்பிறர் இடத்தே சேராமல் காமநுகர்ச்சிக்குரிய விரும்பத் தகுந்தவொரு அழகி யையே குறிக்கொண்டு சென்று கூடும்படி நிகழும் இப் புணர்ப் பிற்கு, செவ்வி முலையும் முயக்கத்து நிரும் அவட்குத் துணை - அந் நல்லாளுடைய இளமுலைகளும் அவளாலே பொருந்தி ஆடப்பட்ட இப் புதுப்புனலும் அவளுக்குத் துணைக் காரணங் களாயமைந்தன, கண்ணி நீர் விட்டோய் - மடா இவைகளே யன்றிச்செவ்வியும் இடனும் அறிந்து மாலையைப் புனலிலே விட்டவனே!, அவட்கு நீயும் துணை - அவள் அப் பூமாலையை அணிந்து கொண்ட செயலுக்கு நீயும் ஒரு துணைக்காரண மாகவே அமைகின்றனை என்று கூறி அவனோடு ஊடிக் கொண்டாள் ;

(வி - ம்) பெய்த பூ என மாறுக. கய - மென்மை, பெருமையு மாம். காமக்கிழமை - காமநுகர்ச்சிக்கு உரிமையுடைமை எனவே, இற்பரத்தை என்றுளாயிற்று. நயத்தகு நல்லாள் என்றது நீ என்னை நயப்பதினுங் காட்டில் அவளைப் பெரிதும் நயந்தனை என்பது பட

கூடுமாறு கூடும் எனற்பாலது ஈறுகெட்டுக் கூடுமா கூடும் என நின்றது. முயக்கு - புணர்ப்பு. செவ்விமுலை - இளமுலை. அவ் விள முலைப் போகம் விரும்பியே நீ மாலைவிட்டாய் ஆகலின் அவட்கு முலையும் ஒருதுணையாயிற்று என்றுள். கண்ணி நீர்விட்டோய் என்ற விளி நீ வேண்டுமென்றே நினது மாலையை நீரிற் போக்கினை என்பது

பட நின்றது. ஏதிலாள் கூந்தலிடத்தே சூட்டப்பட்டமையின் தார் என்றது கண்ணி நீர் விட்டோய் என்றாள். எனவே நினது தாரினை அவட்குக் கண்ணியாக விட்டனை என்றாளாயிற்று.

இனிமேலே தோழி தலைவனை நீ தலைவியோடு சென்று நீராடியின்புறுதொழிந்தனை என்று குறிப்பானே குற்றம் கூறுகின்றாள்.

௪௬ - ௫0 : பணிவில்......................புனல்

(இ - ள்.) பணிவு இல் உயர் சிறப்பின் பஞ்சவன் கூடல் - பிறமன்னர் தன்னைப் பணிதல் அன்றித் தான் ஒருவரைப் பணிதல் இல்லாத உயர்ந்த இறைமைத் தன்மையையுடைய பாண்டியனுடைய மதுரையின் கண்ணே வாழும், மணி எழில் மாமேனி முத்தம் முறுவல் அணி பவளம் செவ்வாய் அறம் காவல்பெண்டிர் - மணிபோன்ற அழகினையும் மாந்தளிர்போன்ற நிறத்தினையும் முத்துப்போன்ற பல்லொழுங்கினையும் அழகிய பவளம் போன்று சிவந்த வாயினையும் கற்புடைமையைக் காக்கும் காவலினையும் உடைய குலமகளிர், மணி அணிந்த தம் உரிமை மைந்தரோடு ஆடி வையை புனல் தணிவு இன்று - மணிகளாலியன்ற அணிகலன்களைத் தமக்கு அணிந்த உரிமையுடைய தத்தம் கணவன்மாரோடு நீராட இவ்வையை யாற்றுப் புதுநீர் வடிந்திலது ;

(வி - ம்.) என்றது, குலமகளிர் தங் கொழுநரோடு ஆடக் கழியாமல் அவர்தம் கொழுநர் பரத்தையரோடு ஆடக் கழிந்தது என்று இரங்கியவாறு.

பணிவு இல் சிறப்பு - தனக்கு இறைவராவார் ஒருவரும் இன்றித் தானே அனைவர்க்கு இறைவனும் சிறப்பு என்க. பஞ்சவன் - பாண்டியன். ஐந்துவகை நிலனும் தன்னாட்டிலமையப் பெற்றவன் என்பது கருத்து. மணி எழில் மாமேனி என்பதற்கு நீலமணி போலும் அழகிய மாமை நிறமுடையமேனி எனினுமாம், முறுவல் - பல். முத்து, பவளம் என்புழிச் செய்யுளின்பம் உணர்க. மணி - மங்கலவணி என்க. உரிமை மைந்தர் - கணவர். ஆடி என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.

மைந்தர் பரத்தையோடாடத் தணிந்தது என்பது குறிப்பெச்சம்.

இனி, தலைவன் பரத்தையரோடு ஆடினமை ஊரவராற் றலைவி கேட்டு ஊடியுள்ளாள் என்பதனைக் குறிப்பாற் கூறுகின்றாள்.

௫௧ - ௫௭ : புனலூடு......................எனவாங்கு

(இ - ள்.) புனலூடு போவது ஓர் பூமாலை ஊழ்வகை கொண்டை எய்திற்று என்று ஏற்று - புதுநீரின்கண்ணே செல்லாநின்றதொரு மலர்மாலை நீர்கொணர்ந்த முறைமையாலே எமது கொண்டையினை வந்து பொருந்திற்று என்று கூறி,

பூமாலே நாடு அறியக் கொண்டை அப்பி - அப் பூமாலையை உலகறியும்படி தனது கொண்டையிலே சூட்டிக்கொண்டனள், எனல் - என்று ஊரவர் கூறுமிச் செய்தியாகிய, நினைவாரை நெஞ்சு இடுக்கண்செய்யும் ஊடல் கொடிய திறம் - நினைக்கு மாத்திரையே நினைப்பவர் நெஞ்சிற்குத் துன்பந்தரும் ஊடற் கேதுவாகிய இக் கொடுந்தன்மை, கூடாமுன் - தனது தலைவியைப் பிரிந்துசென்ற அத் தலைவன் அத் தலைவியின்பால் வந்து சேர்தற்கு முன்னரே, ஊர்த்தலர் வந்து ஊர்ந்து கூடினல் - ஊரின்கண்ணதாகிய அலர்மொழி வாயிலாய் வந்து பரவித் தலைவியினது செவியையும் கூடுமாயின், கலவல்புடன் ஊடாளோ - சிலைத்தாற் கலவலும் கலாற்சியோடே அத் தலைவி ஊட மாட்டாளோ ஊடுதல் இயல்பே, என - என்று கூறும்படி புலவாட்டு நிகழாநிற்ப ;

(வி - ம்.) கள்வனே நினது செயலெல்லாம் தலைவியறிந்து ஊடியிருக்கின்றாள் ஆதலால் நினக்கு வாயிலாக யான் உடன்படேன் என்பாள் முன்னர் ஏதிலான்போலும் குறிக்கப்பட்ட தலைவன் மேலதாகவே இதனையும் கூறி வாயில் மறுத்தபடியாம். ஆங்கு அசை.

௯௨. 'என்றேற்றுக் கொண்ட' என்றும் பாடம்.

அத் தலைவன் தனது தலைவியின்பால் வந்து கூடாமுன் ஊடலுக்கு ஏதுவாகிய கொடிய திறம் ஊர்த்தலராய் வந்து ஊர்ந்து தலைவியின் செவியைக் கூடினல் ஊடாளோ என இயைத்துக்கொள்க. ஆங்கு - அசை.

௯௭ - ௧௦௨: ஈப்பாய்........................பூசுநர் ஆறு

(இ - ள்.) பார்ப்பார் இவ் யாறு ஈ பாய் அடுநறுக் கொண்டது எனப் படிவு ஒழிந்தார் - பார்ப்பனர் இவ் வையைப் புதுநீர் ஈக்கள் மொய்ப்பதற்குக் காரணமான சமைக்கப்பட்ட கள்ளைத் தன்பாற்கொண்டு தூய்தன்றாயிற்று என்று கருதி அதன்கண் ஆடுதலை ஒழிந்தனர், அந்தணர் ஆறு மைந்தர் மகளிர் மணவிரை தூவிற்று என்று தோயார் - பார்ப்பனர் இவ் வையை நீரின்கண் ஆடிய ஆடவர் மகளிர்கள் அணிந்திருந்த நறுமணப்பொருள்கள் தூவப்பெற்றுத் தூயதன்றாயிற்று என அதன்கண் குளித்தலை ஒழிந்தனர், ஐயர் வையை தேம்மேவ வழுவழுப்பு உற்றென ஆறு வாய்பூசுநர் - பார்ப்பனர் இவ் வையைநீர் தேன் கலக்கப்பெற்று வழுவழுப்புடைத்தாயிற்று என்று கருதி இவ் வையையாற்று நீரினாலே வாய்பூசுதலும் செய்யாதொழிந்தார் ;

**(வி - ம்.)** இவை மூன்றும் ஒரு பொருண்மேல் மூன்றடுக்கிவந்த தாழிசை என்னும் கலிப்பா உறுப்பு.

மதுரையிலுள்ள ஆடவரும் மகளிரும் பெரிதும் ஆடுதலானே வையைநீர் பருகவும் குளிக்கவும் தகுதியற்றதாயிற்று, என்றது நீராடன் மிகுதி கூறியபடியாம் என்க.

ஈக்கள் மொய்த்தற்குரிய சமைக்கப்பட்ட கள் என்க. படிவு - நீரிற்றோய்தல். தோயலர் - நீராடினரிலர். தேம் - தேன்: கள்.

வாயும் பூசுதல் உருர் எனற்பால உம்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது.

௬௪ - ௬௭ : விரை.................................மிகை

(இ - ள்.) புனல் விரைபு இரை துறை கரை அழிபு (ஊர?) இழியு - ஊர் தரும்வையைநீர் விரைந்து ஆரவாரித்துத் துறையும் கரையும் அழியும்படி இழிந்து ஒழுகாநிற்கும், நீர் (கரையொடு கடலிடை வரையொடு கடலிடை?) ................................நிரைநிரை நுரைதரும் - அந் நீர் வரிசை வரிசையாக நுரைகளைச் சுமந்து கொணரும், நுரையுடன் மதகுதொறு இழிதரும் புனல் - அந் நுரையோடே மதகுகள்தோறும் புகுந்து செல்லும் அந் நீர் மேலும், கரைபுரளிய செல்லும்-ஆண்டாண்டு கரை புரளும்படியும உடைத்தும் செல்லாநிற்கும, மறிகடல் புகும் அளவு அளவு இயலி இசை வெள்ளமிகை சிறை தணிவின்று-இவ்வாறு அந் நீர் அலைபுரளாநின்ற கடலிடத்தே புகும் அளவு அளவு மேலும்மேலும் வந்து புகுதலானே அவ் வெள்ளத்தின் மிகுதி கரையடங்கும்படி தணிந்திலது;

(வி - ம்.) விரியரை விரைநுரை என்றும் பாடம், வரையொடு கடலிடை என்பதற்குச் சையமலைதொடங்கிக் கடல்காறும் எனினுமாம் - நீர் மலை தொடங்கிக் கடல்வரையில் நிரைநிரை நுரைதரும் என்க.

மதகுதோறும் இழிதருதற்குரிய புனல் அவற்றினடங்காது கரை புரளும்படியும் செல்லும் என்க. அந் நீர் கடல்புகுமளவு மேலும் மேலும் வந்து புகுதலாலே வெள்ளமிகை தணிவின்று என்க. அளவு அளவு இயலி - அவ்வளவு அவ்வளவு வந்து புகுந்து என்றவாறு.

இதனல் வையைநீர் மிக்க நுரையோடே துறைகளையும் கரைகளையும் அழித்து மேலும்மேலும் பெருகிற்று என்றுணர்த்தப்பட்டது.

௬௮ - ௭௫ : வரை...............................ஆடியாடி

(இ - ள்.) வரைபுரை உயர் கயிறு அணி தொழில் பயில் மணி அணி பல யானை மிசை - மலையை ஒத்துயர்ந்த புரசைக் கயிறிட்டு ஒப்பனைசெய்யப்பட்ட தமது தொழிலை நனகு பயின்ற மணிகட்டப்பட்ட பலவாகிய யானைகளின்மேல் ஏறி ஊர்ந்து மைந்தரும் மடவாரும் நிரைநிரை குழீஇயினர் - ஆடவர்களும் மகளிரும் வரிசை வரிசையாக வந்து கூடி, குருமணி யானை

இயல் தேர்ப் பொருநன் திருமருத முன்துறை முற்றம்-நிறமிக்க மணிகளாலே ஒப்பனைசெய்யப்பட்ட யானைகளையும் ஓட்டமமைந்த தேரினையும் போர்த்தொழில் வன்மையையும் உடைய பாண்டிய மன்னனுடைய வையையாற்றின் கண்ணதாகிய திருமருத முன்றுறை எனப் பெயரிய நீராடுந்துறையினது முற்றத்தை, உடன்சென்று குறுகி - ஒருங்கே சென்றடைந்து அத் துறையிடத்தே, பிணி கொள் யாழ்ப் பாணர் தெரிமருதம் பாடப - கேட்டோரைப் பிணித்துக்கொள்ளும் இயல்புடைய யாழினையுடைய பாணர்கள் ஆராய்ந்த மருதப் பண்ணினைப் பாடுவாராக, பாடிப் பாடிப் பாய்புனல் ஆடி ஆடி - அப் பாட்டினைத் தாமும் பாடிப் பாடி பாய்ந்தொழுகும் அந் நீரின்கண் ஆடி ஆடி, மகிழாநிற்பர் ;

(வி - ம்.) புரை - உவமவுருபு : மலையை ஒத்த உயர்ச்சியினையுடைய யானை, கயிறுஅணி யானை, தொழில்பயில் யானை, பலயானை எனத் தனித்தனிக் கூட்டுக. கயிறு - யானைக்கிடும் புரசைக்கயிறு. அணி - ஒப்பனை. தொழில் - யானைக்குரிய நடைத்தொழில் (கதி) தொழில் நன்கு பயின்ற யானை என்றவாறு. குழீஇயினர் - முற்றெச்சம். குருமணி - நிறமிக்க மணி. இயல்தேர் - நல்ல ஓட்டமமைந்த தேர். இலக்கணமமைந்த தேருமாம். பொருநன் - போர்த்தொழில் வல்லான். பொருநன், ஈண்டுப் பாண்டியன். பிணிகொள் யாழ் - கேட்டார்ப் பிணிக்கும் பண்புகொண்ட யாழ் என்க. பாணர் மருதம் பாட அதனைத் தாமும் பாடிப்பாடி ஆடினர் என்க. பாய்புனல் - வினைத்தொகை.

எ௫ - அ௩ : அருளியவர்......................உண்டு

(இ - ள்.) அருளியவர் ஊடி ஊடி - தம்மை அருளியவராகிய தத்தம் கணவன்மாரோடு மகளிர் ஊடவும், உணர்த்த - அக் கணவன்மார் பணிமொழி கூறி அவ் வூடலை உணர்த்தாநிற்பவும், புகன்று கூடி கூடி - உணர்ந்தவிடத்து அவரை விரும்பிக் கூடியும், மகிழ்பு மகிழ்பு - மகிழ்ந்தும், தேடி தேடி - தங் காதலரைத் தேடியும், சிதைபு சிதைபு - அவரைக் காணப் பெறாது மனஞ்சிதைந்தும், சூடி சூடி - மலர்மாலைகளைச் சூடியும், தொழுது தொழுது - வையையைத் தொழுது வாழ்த்தியும், விழுத்தகை நல்லாரும் மைந்தரும் ஆடி - இவ்வாறாகச் சிறந்த அழகினையுடைய மகளிரும் ஆடவரும் ஆடுதலாலே, இழுமொடு நின்ற மலிபுனல் வையை - சேற்றோடு கலங்கிநின்ற மிக்க வெள்ளத்தையுடைய வையையின்கண்ணதாகிய, இந் நீர் - இப் புதுப்புனல், குணக்குச் சான்றீரே - குணத்தாலே நிறைந்த பெரியீரே !, முழுவது மிச்சிலா உண்டு இமிழ்வது போன்றது - முழுவதும் எச்சிலாம்படி பருகி உமிழ்ந்ததுபோன்றது காண்மின் எனக் கண்டோர் கூறும்படி ;

(வி - ம்.) கூறும்படி நீர்நிறந் தோன்றாது என மேலே சென்று முடியும். ஆடி ஆடி முதலிய அடுக்குகள் பன்மைபற்றி வந்தன. அருளியவர் - கணவன்மார் : சூடி என்ற வினைக்கேற்பப் பூ என்பது வருவித்துக் கொள்க. 'சிதை சிதைபூச் சூடி' என்றும் பாடம். 'மழுபொடு நின்ற' என்றும் பாடம். இழுது - சேறு : நெய்யுமாம். விழுதகை நல்லாரும் மைந்தரும் ஆடி என்புழி ஆடி என்னும் செய்தெனெச்சத்தை ஆட எனச் செயவெனெச்சமாக்குக. குணக்கு - குணத்திற்கு. குணக்குச்சான்றீர் - குணத்தானே சான்றீர் என்க: வேற்றுமை மயக்கம். என்று கூறும்படி என்பது இசையெச்சம்.

அச - அசு : சாந்தும்..........................வையையாறு

(இ - ள்.) சாந்தும் கமழ்தாரும் கோதையும் சுண்ணமும்- அங்ஙனம் நீராடிய மகளிரும் மைந்தரும் அணிந்திருந்த சந்தனமும் மணங்கமழ் தாரும் கோதையும் நறுமணப் பொடிகளும், கூந்தலும் பித்தையும் சோர்ந்தன - மகளிர் கூந்தலிடத்து நின்றும் மைந்தர் பித்தையிடத்தினின்றும் நழுவி வீழ்ந்தனவாகிய, பூவினும் அல்லால் - மலரும் ஆகிய இவற்றினலாகிய நிறந் தோன்றுதல் அல்லது, இவ் வையையாறு நீர் நிறம் சிறிதானும் தோன்றாது - இந்த வையைப் பேரியாறு தனது நீரினது நிறம் யாண்டும் ஒருசிறிதேனும் தோன்றப் பெற்றிலது ;

(வி - ம்.) சாந்து - சந்தனம் குங்குமம் முதலியவற்றின் குழம்பு. தார் - ஆடவர் அணிந்த மாலை; கோதை - மகளிர் அணிந்த மாலை. சுண்ணம் - மணப்பொடி. பித்தை - ஆடவர் தலைமயிர்.

அஎ - அகூ : மழை........................வையை

(இ - ள்.) வையை - இவ் வையையாறு, மழை நீர் அறு குளத்து - மழைநீர் அற்று வற்றிக்கிடக்கும் குளத்தின்கண், வாய்பூசி ஆடும் - ஊர்மாந்தரானே வாய் பூசப்பட்டும் ஆடப் பட்டும் கிடக்கும், கழுநீர மஞ்சனம் குங்குமம் கலங்கல் வழிநீர் - கழுவப்படும் நீர்மையுடைய மஞ்சனப் பொருள்களும் குங்குமக் குழம்பு முதலியனவும் கலந்து கலங்கலாகி வழிந்த நீர் போன்ற நீருடையதல்லது, விழு நீர் அன்று - சிறந்த நன்னீரையுடைத் தன்று.

(வி - ம்.) வையை வற்றிய குளத்தின்கண் மக்களால் ஆடப் பட்ட நீர்போன்ற நீரையுடைத்தாயிற்றன்றி நன்னீருடைத்தன்று என்க. 'மழைநீர் அறுகுளம்' என்றது, மழை வறந்த காலத்தே நீர் வற்றிய குளம் என்றவாறு. அக்காலத்தே ஊர்மக்கள் அனைவரானும் ஆடப்பட்டுக் கலங்கிய அதன் நீர் போன்ற நீரையுடைத்தாயிற்று என்க. குங்குமக் கலங்கல் - குங்குமச் சேறு. மஞ்சனம் - நீராடுதல், நீராடற்குரிய மணப்பொருட்கு ஆகுபெயர். அவை பத்துத் துவரும் ஐந்து விரையும் முப்பத்திருவகை ஓமாலிகையுமாம். 'மழைநீர்க் குளத்து' என்றும் பாடம். 'விழுநீரவன்று' என்றும் பாடம்.

௬0 - ௬௪ : வெருவரு..............................தகைத்து

(இ - ள்.) வெருவரு கொல் யானை வீங்கு தோள் மாறன் - பகைவர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான கொலைத்தொழிலையுடைய யானையையும் பருத்த தோளினையும் உடைய பாண்டியன், உரு கெழு கூடலவரொடு - அழகுபொருந்திய தனது மதுரையின்கண் உள்ள மாந்தருடனே, வையை வருபுனல் ஆடிய தன்மை பொருவுங்கால் - வையையாற்றின்கண் வருகின்ற புதுநீரின்கண் ஆடிய தன்மைக்கு உவமை கூறுமிடத்து, இரு முந்நீர் வையம் பிடித்து என்னை - பெரிய கடலாற் சூழப்பட்ட இவ்வுலகத்தே உவமை தேடினால் என்பயன், ஒரு நிலையும் ஆற்ற இயையா - இப் பேருலகத்தே ஒரு தன்மையும் நன்கு உவமையாகப் பொருந்தமாட்டாது, (யானோர்?) மாவில் வரு ஆயிரங் கண்ணினன் இந்திரன் - யானையிலே வருகின்ற ஆயிரங்கண்ணை உடையவனாகிய இந்திரன் தலைத்தார் வாழும் அமரர்கள் புடைசூழ, அந்தர வான் யாற்று ஆடுந்தகைத்து - அந்தரத்திலே உள்ள வானகங்கையின்கண் நீராடிய தன்மைத்து.

(வி - ம்.) மாறன் வையைப் புனலாடிய தன்மை இந்திரன் வான கங்கையில் ஆடியதனை ஒக்கும் என்றவாறு,

மாறன் - பாண்டியன். உரு - அழகு. பொருட்கண் கூடலவரொடு என்றதனால் உவமையினும் தனது அமராவதியிலுள்ள அமரரொடு எனக் கூறிக்கொள்க. வையம் பிடித்து - இவ்வுலகினைப் பற்றின். இவ்வுலகிடத்தே உவமை தேடின் என்க. என்னை என்ன பயனுடைத்தாம். உவமை அகப்படாது என்றபடி.

ஒரு நிலையும் இயையாது என நீபாலது ஈறுகெட்டதென்க.

௬௧. 'படித்தென்னை' என்றும் பாடம்.

௬௩. 'வருமரபின்' எனவும் பாடம்.

